# காதல் மேல் ஆணை

அவர்கள் இரண்டு பேரும் ளம் காதலர்கள்.

வாலிபத்தின் வாயிலில் நிற்கும் ன வயதுக்காரர்கள்.

அவன் பெயர் மைக்கேல். அவள் யர் நான்ஸி.

கல்லூரி வளாகத்துக்கு வெளியே நவரும் சைக்கிள்களில் புறப்படத் ாராக இருந்தார்கள்.

பெடலில் ஒரு காலும் தரையில் ந காலுமாக அவர்கள் நின்றிருந்தார் ர. வசந்த காலத்து விடிகாலை நேரம். ளம் வெய்யில் அவர்கள் முதுகை வருடிக் ாண்டிருந்தது.

ஒரு நிமிடம் அவர்களின் கண்கள் ன்றையொன்று சந்தித்துக் கொண்டன. வர்கள் உதடுகளில் புன்னகை பிறந்தது. லைச் சூரியனின் கிரணங்கள் பட்டு வளுடைய குட்டைக் கூந்தல் ஜொலித்து னுமினுத்தது.

அவன் கண்களை நோக்கியதும் வள் சிரிக்கத் தொடங்கினாள்.

''என்ன டாக்டர், எப்படி ருக்கிறது?'' என்றாள் அவள்.

அவன் படிப்பு முடித்து, கட்டிடக் லையில் டாக்டர் பட்டம் பறவிருந்தான்.

''இன்னும் இரண்டு வாரம் ருக்கிறது நான் இஞ்சினியர் ஆவதற்கு. தற்கப்புறம் கேள். எப்படியிருக்கிறது ன்று சொல்கிறேன்,'' என்றான் அவன்.

''நீயும் உன் பட்டமும்! அதையா ான் கேட்டேன்? நேற்றிரவைச் சொன்னேன்.'' அவள் கண்ணைச் சிமிட்டி பிட்டுச் சிரித்தாள் மறுபடியும்.

''இப்போது எப்படி இருக்கிறது என்று கேட்டேன்.''

''ச்சீ! வெட்கங்கெட்ட கழுதை!'' மைக்கேல் அவள் இடுப்பில் செல்லமாய் ஒரு தட்டுத் தட்டினான். ''அவ்விடத்திலே எப்படி இருக்கிறதுங்க? அதைச் சொல்லுங்க மிஸ்! நடக்க முடிகிறதுங்களா இப்போது?''

அவனைக் கேலியாகப் பார்த்தாள் நான்ஸி. ''ஏன், உன்னால் மட்டும் நடக்க முடிகிறதா?''

சொல்லிவிட்டு, சைக்கிளில் அவனைத் தாண்டிக் கொண்டு பறந்தாள் அவள்.

அழகான சிறிய சைக்கிள். சில மாதங்களுக்கு முன் அவளுடைய பிறந்த நாளுக்காக அவன் வாங்கிக் கொடுத்தது.

''ஏய்! இரு, இரு!'' அவனும் தன் சைக்கிளில் தாவி வேகமாகப் பின் தொடர்ந்தான்.

நான்ஸி! நான்ஸி! நான்ஸி! அவன் உதடுகள் திரும்பத் திரும்பத் திரும்பத் தித்திப்புடன் சொல்லிக் கொண்டன.

அவனுக்கு அவளிடம் காதல். கட்டுக்கடங்காத காதல். இரண்டு வருஷமாகிறது அவர்களுக்குள் பழக்கம் ஏற்பட்டு. இப்படியொரு பெண்ணின் காதலைப் பெற வேண்டுமென்றே ஆயுள் பூரா கனவு கண்டு வந்தவன் அவன்.

கல்லூரி வாழ்க்கை அவனுக்குப் போரடித்திருந்த சமயம் அது.

எப்படியோ முதலாண்டைத் தாண்டி இரண்டாம் ஆண்டுக்கு வந் திருந்த சமயம்.

**தமிழில்: ரா.கி.ரங்கராஜன்**

வாழ்க்கை இன்னும் பெரிய போராக இருக்கப் போகிறது என்ற பெரு மூச்சுடன் நாட்களைத் தள்ளிக்கொண்டிருந்த சமயம்.

மற்ற மாணவர்களைப் போலக் கல்லூரியில் படிக்கும் எந்தப் பெண்ணிடமும் அவன் மனம் செல்லாதிருந்த சமயம்.

பல பெண்களை மைக்கேலுக்குத் தெரியும். அவர்களிடமெல்லாம் ஏதோ ஒன்று இல்லை என்று தோன்றியது. பெண்ணென்றால் மென்மை இருக்க வேண்டும், சத்து இருக்க வேண்டும், ஆன்மா இருக்க வேண்டும் என்று எதிர்பார்த்தான்.

அவைகளை எந்தப் பெண்ணிடமும் அவன் காணவில்லை.

நான்ஸி—இவள் ஸ்பெஷல்.

என்றைக்கு அவளுடைய ஓவியக் கண்காட்சியில் முதன் முதலாக அவளைப் பார்த்தானோ, அந்த நிமிடமே அவனுக்குத் தோன்றிவிட்டது—இவள் ஸ்பெஷல், இவள் ஸ்பெஷல், இவள் ஸ்பெஷல்.

எதிர்பார்த்தது அத்தனையும் இவளிடம் இருக்கிறதென்று அந்த முதல் சந்திப்பன்றே தெரிந்துவிட்டது.

அவள் தீட்டியிருந்த இயற்கைக் காட்சிகளில் சோகம் பிழிந்த தனிமையொன்று புலப்பட்டது. அவள் வரைந்திருந்த மனித உருவங்களில் பூப் போன்ற தனித்தன்மை இருந்தது.

அந்த ஓவியங்களைக் கண்ட அந்த நிமிடத்திலேயே அவன் உள்ளத்தில்



ந பரிவு சுரந்தது. அவற்றைத் தீட்டிய லைஞனை ஓடிப் போய்க் கட்டிக் காள்ள வேண்டும் போல் அவன் உள்ளம் பித்தது.

அன்று அவள் ஒரு சாதாரணச் பப்பு உடை அணிந்து, கலைக் கூடத்தின் ஓரமாக உட்கார்ந்திருந்தாள்.

ஜாகையிலிருந்து கலைக் கூடம் ரையில் நடந்தே வந்திருந்ததால் அவள் டுப் போன்ற சருமம் பளபளவென்று நந்தது.

அவள் கண்களில் ஒரு பிரகாசம். கத்தில் ஒரு ஜீவன்.

பார்த்த மாத்திரத்திலேயே ரிந்துவிட்டது அவனுக்கு—எனக்காகப் ந்தவள் இவள்தான். இவளைப் ான்ற ஒருத்தியை நான் என் வாழ் நாளி யே பார்த்தது கிடையாது.

அன்று அவன் அவளுடைய ண்டு ஓவியங்களை விலை கொடுத்து ங்கிக் கொண்டான். அவளை ஓட்ட க்கு அழைத்துச் சென்றான். அவளுடன் ப்பிட்டான்.

ஆனால் அன்றைக்கு அத்தோடு அதற்கு மேல் நெருங்க நான்ஸி இடம் ாடுக்கவில்லை. தன் உடம்பையோ தயத்தையோ கொடுக்க அவளுக்கு கு நாட்களாயிற்று.

பல வருடங்களாகத் தனிமைக் வேதனைக்கும் பழக்கப்பட்டவள் ள். பத்தொன்பது வயதாகிறது, விவுள்ள பெண், வாழ்க்கையின் கேளை அறிந்தவள்.

ஒரு குழந்தை அனாதையாக ருக்கும்போது எப்படி வலிக்கும் என்று ளுக்குத் தெரியும். இன்று நேற்றல்ல, ன வயதிலிருந்தே. என்றைக்கு அவள் மா அனாதை விடுதியில் அவளைக் ாண்டு போய்ச் சேர்த்தாளோ அன்று லே அவளுக்குத் தனிமையின் வலி ரியும்.

அனாதை விடுதிக்கு வந்த ாஞ்ச நாளைக்கெல்லாம் அம்மா ந்து போனாள். அம்மா இறந்தது தத் தினத்தில் என்பது அவளுக்கு ந்துவிட்டது. ஆனால் விடுதியின் கூடங் ில் நிறைந்திருந்த சில்லென்ற குளிரை ளால் மறக்க முடியவில்லை. பழக்க லாத ஜனங்கள்—அவர்களிடமிருந்து த வினோதமான மணங்கள்—வைகளை அவளால் மறக்க முடிய வில்லை.

பொங்கி வரும் கண்ணீரை அடக்கிக் கொண்டு காலை வேளையின் ஓசைகளைச் செவி மடுத்தபடி எவ்வளவு நாள் படுக்கையிலேயே அவள் கிடந் திருக்கிறாள்!

ஆயுளுக்கும் மறக்க முடியாது அதையெல்லாம். தன் இதயத்துக்குள் இருக்கும் சூனியத்தை எதுவுமே நிரப்பப் போவதில்லை என்று அவள் நினைத் திருந்தாள்—

மைக்கேலைச் சந்திக்கும் வரை.

அவர்கள் காதல் வலுவானது. அன்பென்னும் சாந்து பூசி, பரஸ்பர மதிப்பினால் கோட்டை கட்டி, அவனுடைய உலகத்தையும் அவளுடைய உலகத்தையும் இணைத்து இரும்பு வேலி போட்டுக் கொண்டார்கள்.

அவர்கள் உலகம் அற்புதமான தாக, அபூர்வமானதாக இருந்தது.

மைக்கேல் தனது நிலையையும் அவள் நிலையையும் உணர்ந்திருந்தான். அந்தஸ்து, அந்தஸ்து என அவன் அம்மா அடிக்கடி சொல்வாளே, அது நான்ஸிக்குக் கிடையாது என்பதை உணர்ந்திருந்தான். சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் அவன் அம்மா அந்தஸ்தைப் பற்றிச் சொல வாள். அந்தஸ்து இல்லாத பெண்களிடம் காதல் கொள்வதில் பல அபாயங்கள் உண்டு என்பது அவனுக்குத் தெரிந்தது தான்.

ஆனால் நான்ஸியிடம் எந்த வித்தியாசமும் அவனுக்குத் தோன்ற வில்லை. ஒரே ஒரு வித்தியாசம் தெரிந்தது. அவள் ஓவியம் தீட்டுகிறவள். வெறும் மாணவி அல்ல. வாழ்க்கையை இப்படி அமைத்துக் கொள்வதா அப்படி அமைத் துக் கொள்வதா என்று தடுமாறிக் கொண் டிருக்காமல், எப்படிப்பட்ட வாழ்க்கை வேண்டும் என்பதைத் தீர்மானித்து அந்த வாழ்க்கையை அமைத்துக் கொண்டு விட்டவள்.

அவன் பல பெண்களைப் பார்த் திருக்கிறான். எல்லாப் பெண்களும் தாங்கள் பழகுகிற ஒவ்வொரு ஆணையும் இவன் நமக்கு ஏற்றவனா என்று பரிசோதனை பண்ணிக் கொண்டிருப்பார் கள். நான்ஸி அப்படிச் செய்யவில்லை.

மைக்கேல்தான் தன் காதலன் என்று தேர்ந்தெடுத்து விட்டாள். அவனும்

ஆகஸ்ட் 20 முதல்
மாதமிருமுறை

# சாணக்யன்

ஒரு சொல்

ஆசிரியர்: வசந்த்தன் பெருமாள்

'சாணக்யனின்
அன்றைய சபதம் மௌரிய சாம்ராஜ்யம்.
இன்றைய சபதம் ஊழலற்ற பாரத சாம்ராஜ்யம்'.

விபரங்களுககு;

3, துவாரகா காலனி,
மைலாப்பூர்,
சென்னை — 600 004.
போன் — 74232

இந்த இரண்டு வருட காலத்தில் அந்த நம்பிக்கைக்கு மோசம் பண்ணவில்லை. இனிமேலும் பண்ண மாட்டான் என்று அவளுக்குத் தெரியும்.

அவனை உள்ளும் புறமுமாய் அவள் அறிந்து கொண்டு விட்டாள். இதற்கு மேலும் தெரிந்து கொள்ள என்ன பாக்கி இருக்கிறது? அவனுடைய குறும்பு கள், கிறுக்குத்தனமான ரகசியங்கள், குழந்தைப் பிராயத்துக் கனவுகள், பயங்கர மான அச்சங்கள்—எல்லாவற்றையும் பற்றி அவளுக்குத் தெரியும். எனவே அவனுடைய குடும்பத்தை அவள் மதித்தாள். அவன் அம்மாவிடம் கூட அவளுக்கு மதிப்பு ஏற்பட்டிருந்தது.

மைக்கேல் பெரிய பணக்காரப் பரம்பரையில் வந்தவன். பிறந்தது முதலே அவனுக்காக ஒரு சிம்மாசனம் காத்திருந் தது.

அதில் அமருவதற்குத் தகுதி யுள்ளவனாக அவனைத் தயார் செய்து வந்தார்கள். அவனும் அதை விளையாட்டாக எடுத்துக்கொள்ள வில்லை. அதைப் பற்றி சீரியஸாக எண்ணினானே தவிர, தமாஷ் பண்ணிய தில்லை. சில சமயம் அவனுக்குப் பயம் கூட ஏற்படுவதுண்டு—குடும்பப் பெருமையை நம்மால் காப்பாற்ற முடியுமா என்று.

முடியும் என்று நான்ஸிக்குத் தெரியும்.

மைக்கேலின் பாட்டனார் ஹிலி யார்டு கட்டிடக் கலை விற்பன்னராக இருந்தவர். மைக்கேலின் அப்பாவும் அப்படியே. பாட்டனார்தான் கட்டிடக் கான்டிராக்ட் சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தவர்.

மைக்கேலின் அம்மாவும் ஒரு கான்டிராக்டர் குடும்பத்தைச் சேர்ந்தவள். அவர்கள் ஸ்தாபனத்துக்குக் காட்டர் என்று பெயர். மைக் கேலின் அம்மாவும் அப்பாவும் கல்யாணம் செய்து கொண்டதும் இரண்டு நிறுவனமும் இணைந்து காட்டர்—ஹிலியார்டு என்ற பெரிய சாம்ராஜ்யம் உருவாகிவிட்டது.

காட்டர் குடும்பத்துக்குப் பணப் பெருமை உண்டு. ஹிலியார்டு குடும்பத்தா ருக்குப் பரம்பரைப் பெருமை உண்டு. இப்போது இரண்டும் சேர்ந்து கொண்டன. மைக்கேலின் அப்பா இறந்த பிறகு அம்மா மரியம்தான் அந்தத் தொழில் சாம்ராஜ்யத்தை நிர்வகித்து வருகிறாள்.

அந்த மகுடத்தைத்தான். மைக்கேல் அணியவிருந்தான். மகுடம் மிகச் சுமையுள்ளது. ஆனால், அதை அவன் வெறுக்கவில்லை.

நான்ஸி அவனுடைய குடும்ப அந் தஸ்துக்கு மதிப்புக் கொடுத்தாள். பெரிய தொழில் சாம்ராஜ்யத்தின் தலைவனாக ஒரு நாள் வரப் போகிறவன் அவன் என்பதை அவள் அறிந்தேயிருந்தாள்.

காதல் ஆரம்பித்த புதிதில் இதைப் பற்றியே அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். காதல் வளர்ந்த பிறகும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

மைக்கேலுக்கு அவள்மீது அசாத்திய நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. குடும்பப் பொறுப்பு, பிஸினஸ் பொறுப்பு இரண்டையும் தாங்கக் கூடிய பெண்ணைத்தான் நாம் தேர்ந்தெடுத் திருக்கிறோம் என்று உறுதியாக எண்ணினான்.

இதோ தனக்கு முன்னே சைக்கிளில் பறந்து கொண்டிருக்கும் நான்ஸியைப் பார்த்தான் மைக்கேல்.

எவ்வளவு தன்னம்பிக்கை இவளுக்கு! என்ன ஒரு வலு! பெடலைச் சுறுசுறுப்பாக மிதிக்கும் அந்தச் சின்னப் பாதங்கள்—தோளுக்கு மேலாக நிமிர்ந்து நிற்கும் அந்த மோவாய்—நடுநடுவே அவனைத் திரும்பிப் பார்த்துச் சிரிக்கும் விஷமத்தனம்—அவனுக்குப் பெருமையா யிருந்தது, இப்படிப்பட்ட அழகியைக் காதலியாக அடைந்ததில்.

ஒரே எட்டில் அவளைப் பிடித்து... சைக்கிளிலிருந்து வாரியெடுத்து.... அதோ அந்தப் புல்வெளி



யில் படுக்க வைத்து.... நேற்றிரவைப் போல்... நேற்றிரவைப் போல்....

எண்ணங்களை ஒதுக்கித் தள்ளி விட்டு, பெடலை வேகமாய் மிதித்தான்.

''ஏய்! ஏய்! இரு, நானும் வரு கிறேன்!''

சில நிமிடங்கள்தான். அவளுக்கு இணையாக அவனும் வந்துவிட்டான்.

இருவரும் பக்கம் பக்கமாகச் சைக்கிளில் சென்றார்கள். இருவருக்கு மிடையே மிகக் கொஞ்சம்தான் இடைவெளி இருந்தது. ஒரு கையை நீட்டி அவள் இடையை அணைத்தான் மைக்கேல்.

''நான்ஸி! இன்றைக்கு நீ ரொம்ப அழகாயிருக்கிறாய் நான்ஸி!''

வசந்தத்தால் வருடிக் கொடுப்பது போலிருந்தது அவன் குரல். சுற்றிலுமுள்ள உலகம் புத்தம் புதிதாய், பச்சைப் பசேலென்று ஜொலித்தது.

''நான்ஸி! நான் உன்னை எவ்வளவு காதலிக்கிறேன் தெரியுமா?'' என்றான் மறுபடி.

''தெரியுமே, மிஸ்டர் ஹிலி யார்டு! நான் உங்களை எவ்வளவு காதலிக்கிறேனோ அதிலே பாதி!'' என்றாள் அவள் கிண்டலாக.

''அட, கரெக்டாய்ச் சொல்லி விட்டாயே!''

அவளுக்குச் சந்தோஷமாக இருந் தது. இப்போது மட்டுமில்லை. எப்போதும் அவளைச் சந்தோஷப்படுத்துகிறவன் அவன். எப்போதும் அவன் ஓர் அற்புதம்.

முதன் முதல் ஓவியக் கண்காட்சி யில் அவர்கள் சந்தித்துக் கொண்ட போதும் அப்படித்தான்.

கண்காட்சிக்கு வைக்கப் பட்டிருந்த அவளுடைய அத்தனை ஓவி யங்களையும் அவள் தனக்குத்தான் விற்க வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தான். விற்க மறுத்தால் தன் டிரெஸ்ஸை யெல்லாம் அவிழ்த்துப் போட்டு நிர்வாண நடனம் ஆடுவேன் என்று பயமுறுத்தினான்!

சைக்கிளில் இணைந்து வந்த மைக்கேல், ''ஏய், இதோ பார், நீ என்னை எவ்வளவு காதலிக்கிறாயோ அதைப் போல ஏழு மடங்கு நான் உன்னைக் காதலிக்கிறேனாக்கும்!'' என்றான்.

''கிடையாது! கிடையாது!'' அவள் ஆகாயத்தை நோக்கி மூக்கை நீட்டிக் கொண்டு, பெடலை அழுத்தி, சைக்கிளில் பறந்தாள்.

அவன் அவளைத் துரத்தினான். ''ஏய்! நில்! என் காதல் உன் காதலைப் போல் ஏழு மடங்கு இல்லை என்று எதை வைத்துச் சொல்கிறாய்?''

''ஒரு குட்டித் தேவதை என்னிடம் வந்து என் காதல் எவ்வளவு அதிகம், உன் காதல் எவ்வளவு குறைவு என்று சொல்லிவிட்டுப் போயிற்று!'' மறுபடியும் சைக்கிளில் பறந்தாள் நான்ஸி.

பாதை குறுகலாக இருந்தது. வேண்டுமென்றே அவளை முன்னே செல்ல விட்டான் மைக்கேல். இருவர் மனத்திலும் ஆனந்தம் சிறகடித்துப் பறந்தது.

பின்னாலிருந்து அவளைப் பார்ப்பது அவனுக்குப் பிடித்திருந்தது.

ஜீன்ஸ் அணிந்து இறுக்கமாக இருந்த அந்தக் குறுகிய இடை. கச்சித மான தோள்கள். அந்தத் தோள்களைத் தளர்வாக மூடிக் கொண்டிருக்கும் சிவப்பு ஸ்வெட்டர்...

எல்லாவற்றுக்கும் மேலாக, அந்த அற்புதமான கருங் கூந்தல்....

இந்த அழகு மாளிகையை ஆயுளுக்கும் பார்த்துக் கொண்டிருக் கலாமே!

பார்த்துக் கொண்டுதான் இருக்கப் போகிறான். அதற்கு அவன் மனத்தில் திட்டம் உருவாகியிருந்தது.

வேகமாய்ச் சென்று அவளுடன் சேர்ந்து கொண்டான். அவள் தோளை மெல்லத் தட்டினான்.

(தொடரும்)

## தான் காரணம்

பல்லவி நடத்தி வந்த 'சிங்ஹா' என்ற ஓட்டல் மூடப்பட்டு விட்டது. அவருடைய சகோதரர் சிங்கிடம் ஏன் என்று கேட்ட போது, தான் ஓட்டல் மூடியதற்குக் காரணமாக, சகோதரியின் உண்மைப் பெயரைச் சொல்கிறார். பல்லவியின் உண்மைப் பெயர் 'ராசி.'

—மீசை

## இருவேறு உலகத்து இயற்கை திருவேறு தெள்ளிய ராதலும் வேறு.

ஜெயராம் ஒரு வென்ட்ரிலாகிஸ்ட். அதாவது குரல் வித்தைக்காரன். வாயை மூடியபடி வைத்துக் கொண்டே குரல் கொடுக்கக் கூடியவன். கையில் வித்தை இருந்தாலும் பையில் பைசா சேரும் அதிர்ஷ்டம் இல்லாததால் மனைவி சாந்தாவுக்கு அவன் மீது வெறுப்பு.

ஆனால் அவனுக்கோ— சாந்தா இல்லாமல் படுக்கையில் தூக்கம் வராது.



'குவ்வா' என்று குழந்தை கத்துவதுபோல் குரல் கொடுத்தால் 'படுக்கைக்கு வா' என்று அர்த்தம்.

''குவ்வா!''

''இங்கே புவ்வாவுக்கே லாட்டிரி. என்னை ஒன்றும் தொட வேண்டாம். உங்க வித்தையும் நீங்களும். பிச்சைக்காரன் தேவலை உங்களைவிட!''

பல நாளைய அவமானம் ரோஷமாக வடிவெடுக்கக் கிளம்பி விட்டான். ரயில் முன் விழுந்து தற்கொலை பண்ணிக் கொள்வது என்று தீர்மானித்தான். 'ஒரு கமலஹாசன் சினிமாவில் இந்த வித்தையைப் பண்ணினால் கை தட்டுவாங்க. நான் பண்ணினால்... எவன் பார்க்கிறான். எவன் காசு தருகிறான்.'



அதே நேரம் சென்ட்ரல் ரயில் நிலையத்தில் இன்ஸ்பெக்டருக்குப் பரபரப்பான டெலிபோன் செய்தி:

''கோவை எக்ஸ்பிரஸ்— எஸ் ஸெவன் கம்பார்ட்மெண்ட் உஷார்!''

லட்ச ரூபாய் பெறுமான சிலையுடன் ஒரு கடத்தல்காரன் வருவதாகச் செய்தி.

## கீப் ஃபிட்

'படிச்ச புள்ள'
(சிலுக்—அர்ஜுன்)

'எங்க அண்ணன் வரட்டும்' படத்தில்:
மோகனப்ரியா—செந்தில்

## மனை மாட்சி

# ஒன்டர் ப  ரான்!

'முருகனுக்கு அம்மா யார்?' என்று கேட்டால் பட்டென்று 'பார்வதி' என்று பதில் கூறி விடுவோம். ஆனால் 'பாட்டி யார்?' என்று கேட்டால் உடனே கூற முடியாது. முருகனின் பாட்டி பெயர்: மேனை.

—வாரியார் கூறக் கேட்டவர்: சென்டர் ராமசாமி

வழைத்தாள். முதலில் பிரியமாகச் சொல்லிப் பார்த்தாள். செல்லமாய்ச் சொல்லிப் பார்த்தாள். வசியப்படுத்திப் பார்த்தாள்.

அதெல்லாம் பலிக்கவில்லை என்றானதும்—

புயலென வெடித்தாள். சீறினாள். பயமுறுத்தினாள். அவனை இழுக்கப் பல வகையான தூண்டில்கள் போட்டாள். பிறகு விட்டு விட்டாள். அதாவது, விட்டு விட்ட மாதிரி தோன்றுகிறது.

அம்மா மௌனமாக இருப்பதை அவளுடைய சம்மதத்துக்கு அறிகுறி என்று மைக்கேல் நினைக்கிறான். நான்ஸி அப்படி நினைக்கவில்லை.

மனத்துக்குள் மரியம் என்ன எண்ணியிருக்கிறாள் என்று அவளால் ஊகிக்க முடிந்தது. கொஞ்சம் விட்டுப் பிடிப்போம் என்று ஒரு திட்டத்தோடு தான் மரியம் காத்திருக்கிறாள் என்று நான்ஸிக்குத் தெரிந்தது.

கல்லூரியில் தங்கிப் படித்துக் கொண்டிருக்கும் பிள்ளையை இப்போதெல்லாம் மரியம் அடிக்கடி கூப்பிட்டு அனுப்புவதில்லை. குற்றம் சாட்டுவதில்லை.

நான்ஸி என்று ஒரு பெண் இருப்பதையே அவள் பொருட்படுத்தாத மாதிரி இருந்தது.

அந்த உதாசீனம் நான்ஸியின் மனதைப் புண்படுத்தியது.

அவளுக்கென்று அம்மாவோ அப்பாவோ உடன் பிறந்தவர்களோ யாரும் கிடையாது. மரியமாவது தன்னை உறவாக ஏற்றுக்கொள்ள மாட்டாளா என்று ஏங்கினாள். அதைப் பற்றி எத்தனை கனவுகள்! மரியமும் அவளும் சினேகிதிகளாக இருக்கப் போகிறார்கள். இருவரும் சேர்ந்து கடை கண்ணிக்குப் போகப் போகிறார்கள்.... விருந்து விசேடங்களுக்குப் போகப் போகிறார்கள்... அம்மா என்று எவளையும் இதுவரை நான்ஸி அன்பு காட்டியதில்லை. மரியம் அவளுக்குத் தாயாக இருக்கப் போகிறாள்.... இப்படிப் பல கனவுகள். ஏக்கங்கள்.

ஊகூம். அப்படியெல்லாம் உறவு கொண்டாடும் எண்ணம் மரியமுக்குக் கடுகத்தனையும் இருப்பதாகத் தெரியவில்லை. கடந்த இரண்டு வருடங்களில் நான்ஸி அதைப் புரிந்து கொண்டிருந்தாள்.

மைக்கேல்தான் பிடிவாதமாக நம்பினான். அம்மா மனம் மாறுவாள் என்று தீவிரமாக எதிர்பார்த்தான். வேறு வழியில்லாமல் இந்தத் திருமணத்துக்கு அம்மா ஒப்புக் கொண்டு விட்டால், பிறகு கொஞ்சம் கொஞ்சமாக நான்ஸியுடன் சினேகமாகி விடுவாள், இருவரும் பிரமாதமான சினேகிதிகளாக ஆகிவிடுவார்கள். இது மைக்கேலின் நம்பிக்கை. அந்த அளவு நம்பிக்கை நான்ஸிக்கு இருக்கவில்லை.

''மைக், இந்தக் கல்யாணம் ஒரு போதும் நடக்காது, நடக்கக் கூடாது என்று உன் அம்மா சொல்லி விட்டால்? அதற்கப்புறம் என்ன செய்வாய்?'' என்று நான்ஸி அவனை அடிக்கடி கேட்பது வழக்கம்.

''அவள் மட்டும் சொல்லட்டும், அடுத்த நிமிடமே நாம் காரில் ஏறிக் கொள்ள வேண்டியதுதான். எந்த ரெஜிஸ்திரார் ஆபீஸ் பக்கத்தில் இருக்கிறதோ அங்கே போக வேண்டியது தான். கல்யாணத்தை முடித்துக் கொள்ள வேண்டியதுதான். நான்ஸி, நாம் இருவருமே வயது வந்தவர்களாக்கும்! மறந்து விட்டாயா?'' என்று அவன் பதில் சொல்வான்.

சொல்கிறானே தவிர, இதெல்லாம் அவ்வளவு சுலபமில்லை என்று நான்ஸிக்குத் தெரிந்திருந்தது. ரெஜிஸ்திரார் ஆபீசில் கல்யாணம் செய்து கொள்வது ஒரு பிரமாதமில்லை.

இப்போதே அவர்கள் கணவன் மனைவி மாதிரிதானே இருந்து வருகிறார்கள்? ஆனால் அதற்கப்புறம்?

சைக்கிளைத் தள்ளியபடி அவர்கள் மௌனமாக நடந்தார்கள் சூழ்ந்திருந்த இயற்கைக் காட்சிகளைப் பார்த்தவாறு.

நீண்ட மௌனத்துக்குப் பின் அவன் அவள் கையைப் பற்றினான். ''நான்ஸி, ஐ லவ் யூ கண்ணே,'' என்றான்.

''நானும்தான்,'' என்றாள் அவள்.

கவலை படிந்திருந்த அவள் விழிகளை ஒரு முத்தத்தால் மூடினான் அவன்.

ஆனால் மனத்தில் அலைக்கழிக்கும் கேள்விகளை எதைக் கொண்டு மூட முடியும்? இருவருக்கும் அது புரியவில்லை.

இன்றிரவு!

இன்றிரவு அவன் தன் அம்மாவைப் பார்ப்பதில்தான் எல்லாம் இருக்கிறது.

சைக்கிளை மெல்லக் கீழே கிடத்தினாள் நான்ஸி. அவன் கைகளுக்குள் தஞ்சம் புகுந்து கொண்டாள்.

''மைக், எல்லாம் நல்லபடி முடியணுமே என்று கவலையாயிருக்கிறது.''

''நிச்சயமாய் நல்லபடிதான் முடியப் போகிறது.'' அவள் கூந்தலை வருடி விட்டான் அவன். ''இதோ பார், இரண்டு பேரும் இப்படியே இங்கேயே நாள் பூரா நின்று கொண்டிருக்க வேண்டுமா? வா.''

சைக்கிளை நிமிர்த்தி அவள் கையில் கொடுத்தான்.

அடுத்த நிமிடம் அவர்கள் மறுபடி சைக்கிளில் பறந்தார்கள். சிரிப்பு! பாட்டு! விளையாட்டு! மைக்கேலுக்கு அம்மா ஒருத்தி இல்லவே இல்லை போல அவர்கள் பாசாங்கு செய்து கொண்டார்கள்.

ஆனால் இருக்கிறாளே! மரியம் இருக்கிறாளே!

மரியம் வெறும் பெண் மட்டுமல்ல. அவள் ஒரு ஸ்தாபனம். மைக்கேலின் வாழ்க்கையில் எப்போதும் குறுக்கிட்டுக் கொண்டேயிருக்கும் ஸ்தாபனம். இப்போது நான்ஸியின் வாழ்க்கையிலும் குறுக்கிடப் போகிறாள்.

வானத்தில் வெய்யில் மெல்ல மெல்ல ஏறிக் கொண்டிருந்தது.

கிராமப் புறங்களின் வழியே அவர்கள் சைக்கிள் சென்று கொண்டிருந்தது. ஒரு நிமிடம் அவள் அவனை முந்திக் கொண்டு செல்வாள். மறு நிமிடம் அவன் அவளுக்கு இணையாகச் சேர்ந்து கொள்வான். ஒரு சமயம் அவன் அவளைக் கேலி செய்வான். இருவரும் விழுந்து விழுந்து சிரிப்பார்கள். மறு சமயம் இருவரும் திடீரென்று சிந்தனை வயப்பட்டு மௌனமாகி விடுவார்கள்.

எதிரே கடற்கரை தெரிந்தது. கூடவே அவர்களுக்குப் பழக்கமான முகமொன்றும் தெரிந்தது. பென்—அவர்களுடைய தோழன், சைக்கிளில் வந்து கொண்டிருந்தான், ஒரு பெண்ணுடன்.

ஒவ்வொரு தடவையும் ஒரு புது அழகியை அவன் சிநேகம் பிடிப்பான். இந்தத் தடவை ஒரு நீலக் கூந்தல் அழகி.

''எங்கே கிளம்பி விட்டீர்கள் இரண்டு பேரும்! சந்தை நடைபெறுகிறதே அங்கேயா?'' என்று சிரித்தான் பென். பிறகு தன்னுடனிருந்த பெண்ணை அறிமுகம் செய்து வைத்தான். அவள் பெயர் ஜீனட்.

ஹலோக்கள் முடிந்தன.

நான்ஸி கையை நெற்றிக்கு உயர்த்தி, சந்தை என்று ஏதோ சொன்னானே, அது எங்கே இருக்கிறது என்று பார்த்தாள். கண்ணுக்கெட்டிய தூரத்துக்கு எதுவும் தெரியவில்லை.

''போய்ப் பார்க்கும்படி இருக்கிறதா?'' என்று கேட்டாள்.

''ஓ! ஏகப்பட்ட அதிர்ஷ்டப் பரிசுகள் தருகிறார்கள். எங்களுக்கு ஒரு நாய்ப் பொம்மை கிடைத்தது.'' ஜீனட்டின் கூடைக்குள் இருந்த சகிக்க முடியாத ஒரு பொம்மையைக் காட்டினான் பென். ''ஒரு ஆமை கூடக் கிடைத்தது. அது எங்கேயோ காணாமல் போய்விட்டது. இனி ஐட்டங்கள் பிரமாதமாய் இருக்கிறது.''

நான்ஸியைப் பார்த்தான் மைக்கேல். ''என்ன, போகலாமா?''

''ஓ,'' என்ற நான்ஸி, பென்னிடம், ''அதற்குள் ஏன் நீங்கள்

திரும்பி விட்டீர்கள்? எங்களுடன் வாருங்களேன்.''

ஆனால் பென், அவனுடைய சினேகிதி இரண்டு பேருமே படு அவசரத்தில் இருக்கிற மாதிரி தோன்றியது.

''ஐயோ, நாங்கள் காலையில் ஆறு மணிக்கே புறப்பட்டு விட்டோமாக்கும். அடித்துப் போட்ட மாதிரி இருக்கிறது உடம்பு. நாங்கள் போகிறோம். என்ன மைக், ராத்திரி சாப்பாட்டுக்கு எங்கே போகப் போகிறாய்? என் ரூமுக்கு வந்துவிடுங்களேன். அருமையான சாப்பாடு வரவழைக்கிறேன்?''

மைக்கின் அறையிலிருந்து சில அறைகள் தள்ளி பென்னின் அறை இருந்தது.

நான்ஸியின் முகம் மலர்ந்தது. ஆசையுடன் மைக்கேலைப் பார்த்து, ''என்ன பெரியவரே, அழைப்பை ஏற்றுக் கொள்ளலாமா?'' என்றாள்.

ஊகூம். என்று தலையசைத்தான் மைக். ''இல்லை. இன்று ராத்திரி எனக்கு நியூயார்க்கில் ஒரு பிஸினஸ் மீட்டிங் இருக்கிறது. போயாகணும். இன்னொரு சமயம் வருகிறேன்.''

கசப்புடன் ஞாபகம் வந்தது நான்ஸிக்கு. ஆமாம், அவன் அவனுடைய அம்மாவைப் பார்க்கப் போகிறானே இன்று!

''ஓ.கே! ஸீ யா!'' —கைகளை வீசி டாடா காட்டிவிட்டு பென்னும் ஜீனட்டும் சைக்கிளில் பறந்தார்கள்.

நான்ஸி மைக்கேலை ஏறிட்டு நோக்கினாள். அவள் கண்களில் சுமை ஏறியிருந்தது. ''மைக்... இன்று நிஜமாகவே உன் அம்மாவைப் பார்க்கப் போகிறாயா?''

''ஆமாம். அதைப் பற்றிய கவலையை விடு. எல்லாம் ஜம்மென்று முடியப் போகிறது.''




''ஹலோ, மின்சார வாரியமா? எங்க ஏரியாவிலே கரெண்ட் கட் ஆயிருச்சு!''

''யோவ், கரெண்ட்டைக் கட் பண்ணினதே நாங்கதான்! வைய்யா ஃபோனை.''

—லெ.நா. சிவகுமார்

சந்தையை நோக்கிப் பெடலை மிதித்தார்கள் அவர்கள்.

''பார்த்தாயா? உன்னிடம் ஒன்று சொல்ல மறந்துவிட்டேன், நான்ஸி. அம்மா அவனுக்கு வேலை போட்டுக் கொடுத்து விட்டாளாம். சொன்னாள்.''

''யாருக்கு? பென்னுக்கா?''

''ஆமாம். நாங்கள் இரண்டு பேரும் எங்கள் கம்பெனியில் ஒரே நாளில் வேலையில் சேரப் போகிறோம். அவன் வேலை வேறே, என் வேலை வேறே. ஆனால் இரண்டு பேரும் ஒரே நாளில் சேரப் போகிறோம்.'' மைக்கின் குரலில் சந்தோஷம் இருந்தது. அவனும் பென்னும் ஒன்றாம் வகுப்பு முதல் சேர்ந்து படிக்கிறார்கள். சகோதரர்கள் மாதிரி பழகி வருகிறார்கள்.

''வேலை கிடைத்திருப்பது பென்னுக்குத் தெரியுமோ?'' என்று நான்ஸி கேட்டாள்.

ஒரு மர்மப் புன்னகையுடன் அவன் தலையசைத்தான். ''ஆபீசிலிருந்து அவனுக்கு நேரே ஆர்டர் வரட்டும் என்றிருக்கிறேன். அதுதான் அவனுக்கு த்ரில்லாக இருக்கும். என் வாயால் சொல்லி அதைக் கெடுப்பானேன்?''

புன்னகை செய்தாள் நான்ஸி. ''மைக், நீ அருமையான ஆள். அதனால்தான் உன் கிட்டே எனக்குக் காதல்.''

''தாங்க் யூ மிஸஸ் மைக்கேல்.''

''உஷ்! விளையாட்டுப் பண்ணாதே!'' என்றாள் அவள். 'திருமதி மைக்கேல்' என்ற வார்த்தையை அவள் புனிதமாகக் கருதினாள். அதைச் சும்மா சும்மா சொல்லி விளையாட்டுப் பண்ணுவது அவளுக்குப் பிடிக்கவில்லை—மைக்கேலே சொன்னால் கூட.

''நான் சொல்லத்தான் சொல்வேன். மிஸஸ் மைக்கேல், மிஸஸ் மைக்கேல், மிஸஸ் மைக்கேல்! இப்போது பிடித்தே அந்த வார்த்தைக்கு உன்னைப் பழக்கப்படுத்திக் கொள்!'' அவன் குரலில் ஒரு தீவிரம் இருந்தது.

''அதற்கான காலம் வரட்டும். பழக்கப்படுத்திக் கொள்கிறேன். அதுவரை மிஸ் நான்ஸி என்றே கூப்பிடு. போதும்.''

''இன்னும் எத்தனை நாளைக்கு, கண்ணு? இரண்டே இரண்டு வாரம்தான்! கமான்! என்னைப் பிடி பார்க்கலாம்!''

(தொடரும்)



மூலம்: டானியல் ஸ்டீல்

# 3

அவன் சைக்கிளில் பறந்தான். அவள் அவனுடன் சேர்ந்து கொண்டாள். இரண்டு பேரும் மூச்சு இரைக்க இரைக்கச் சிரித்தார்கள்.

சந்தைக் கண்காட்சியின் வாசலை முதலில் மைக்தான் அடைந்தான். சரியாய் முப்பது வினாடி கழித்துத்தான் அவள் வந்தாள்.

இருவரிடமும் அட்டகாசமான உல்லாசம். கவலையற்ற துள்ளல்.

சந்தையில் கூட்டத்தையே காணோம். தூங்கி வழிந்தது.

''ஏதாவது சாப்பிடப் போகலாம்,'' என்றான் மைக்.

இருவரும் ஒரு மரத்தடியில் தங்கள் சைக்கிள்களை நிறுத்தினார்கள். யாரும் திருடிக் கொண்டு போகப் போகிறார்கள்.!

கை கோத்துக் கொண்டு உள்ளே ஓடினார்கள். சில நிமிடங்களில் ஐஸ் போட்ட பானம் அருந்திவிட்டு, ஆளுக்கொரு பெரிய குச்சி மிட்டாயை வாங்கிக் கொண்டார்கள்.

''ஐய! நீ எப்படித்தான் இதைச் சாப்பிடுகிறாயோ! சகிக்கவில்லை,'' என்றான் மைக்கேல்.

''எவ்வளவு ஜோராயிருக்கு தெரியுமா?'' குச்சி மிட்டாய் அவ மோவாயில் ஒழுகி, அவள் பேச்சை சிதைத்தது. ஆனால் ஐந்து வயது குழந்தையின் ஆனந்தம் அவள் முகத்தி பரவியிருந்தது.

''இப்ப நீ எவ்வளவு அழக யிருக்கிறாய் தெரியுமோ?'' என்று அவ கேட்டதும், அவள் ஈயென்று இளிக்க அவன் தன் கைக்குட்டையை எடுத் அவள் வாயைத் துடைத்து விட்டான ''ஏய், முகத்தைச் சுத்தம் பண்ணி கொள். நாம் இரண்டு பேரும் சேர்ந்து ஒ போட்டோ எடுத்துக் கொள்ளலாம், என்றான்.

''ஹை! எங்கே?'' அவ துள்ளியபோது மறுபடியும் அந்தக் குச் மிட்டாய் அவள் மூக்கில் ஒட்டி கொண்டது.

''சீ! நீ ரொம்ப மோசம்!'' என் சொல்லிவிட்டு, அருகில் இருந்த போட டோக் கடையைக் காட்டினான மைக்கேல்.

அங்கே பல பழங்காலத்த டிரெஸ்களும் தலைக்கு ஒரு வளையமும வைக்கப்பட்டிருந்தன. தலையை மட்டு அதற்குள் புகுத்திக்கொண்டால் போதும்

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

அவர்கள் தேடித் தேடி இரண்டு பழங்கால உடைகளைத் தேர்ந்தெடுத்தார்கள்.

போட்டோ கடைக்காரன் படம் எடுத்து உடனேயே கையிலேயே கொடுத்தான். அப்படியொன்றும் கோமாளியாய்த் தோன்றவில்லை. நான்ஸியின் செதுக்கினாற் போன்ற அழகிய வதனமும் அந்தப் பழங்கால உடையும் ரொம்ப அற்புதமாய்ப் பொருந்தின.

''நீங்கள் இரண்டு பேரும் ரொம்ப அழகாக இருக்கிறீர்கள். என் கடையில் ஒரு போட்டோ மாட்டி வைக்கப்போகிறேன்,'' என்றான் கடைக்காரன்.

''தாங்க்யூ,'' என்றாள் நான்ஸி. அந்தப் புகழ்ச்சி அவளை நெகிழ வைத்தது.

மைக் புன்னகை மட்டுமே செய்தான். நான்ஸி எவ்வளவு அழகு என்று இந்தக் கடைக்காரன் சொல்லித்தான் தெரியணுமாக்கும்! அவனுக்கே தெரியாதா!

இன்னும் இரண்டே வாரம் தான். அதன்பின்....

நான்ஸி அவன் சட்டையை இழுத்து அவனுடைய கனவுகளைக் கலைத்தாள். ''அங்கே பார்! அதிர்ஷ்ட வளையம்!''

பல பரிசுப் பொருள்களைப் பரப்பி வைத்திருந்தார்கள். வளையத்தை எறிய வேண்டும். எதன் மீது விழுகிறதோ அந்தப் பரிசு அவர்களுக்குச் சொந்தம்.

சந்தையில் இதை விளையாட வேண்டும் என்று சின்ன வயதிலிருந்தே அவளுக்கு ஆசை உண்டு. ஆனால் அனாதை விடுதியிலிருந்து அவளை அழைத்துச் செல்லும் ஆயா இடம் கொடுப்பதில்லை. அனாவசியமான செலவு என்று சொல்லி விடுவாள்.

''மைக், வளையம் எறிந்து பார்க்கட்டுமா?'' என்றாள்.

''நிச்சயமாய், கண்ணே!''

ஒரு டாலர் கொடுத்தான். கடைக்காரர் நாலு வளையங்கள் எடுத்துத் தந்தார் மகிழ்ச்சியுடன். கால் டாலருக்கு மேல் அங்கு யாரும் விளையாடியது கிடையாது.

நான்ஸிக்கு இதில் அனுபவம் இல்லை. அவள் எறிந்த வளையங்கள் அத்தனையும் வெளியே விழுந்து வீணாகின.

மைக்கேல் புன்னகையுடன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவன், ''ஏய்! எந்தப் பொருளுக்கு நீ குறி வைக்கிறாய்?'' என்று கேட்டான்.

''அந்த மணி மாலை!'' குழந்தை மாதிரி அவள் கண்கள் ஆசையுடன் மின்னின. அவள் குரல் கிசுகிசுவென்று இருந்தது, ஏதோ பெரிய ரகசியம் சொல்கிற மாதிரி. ''அந்த மாதிரி பளபளப்பான மணி மாலை நான் போட்டுக்கொண்டதே இல்லை, மைக்.''

''உனக்கு எப்பவும் சின்ன ஆசை தான், டார்லிங். அதோ அந்த நாய்க் குட்டி பொம்மை? அது வேண்டாம்?'' ஜீனட் தன் கூடையில் வைத்திருந்த அதே பொம்மை.

நான்ஸி பிடிவாதமாய்த் தலையசைத்து, ''ஊகூம். அந்த மணிமாலைதான் வேண்டும்,'' என்றாள்.

''தங்கள் சித்தம் மகாராணி!''

கையிலிருந்த மூன்று வளையங்களையுமே அந்த மணிமாலை மீது கரெக்ட்டாய்ப் போட்டான் அவன்.

கடைக்காரன் புன்சிரிப்போடு மணி மாலையைக் கொண்டு வந்து தந்தான்.

உடனே அதை நான்ஸியின் கழுத்தில் போட்டான் மைக்கேல். ''இனி இது தங்களுக்கே சொந்தம், மகாராணி. இதை இன்ஷ்யூர் பண்ணலாமா?''

''இதோ பார், என் மணி மாலையைக் கிண்டல் செய்தால் எனக்குக் கெட்ட கோபம் வரும். எவ்வளவு பிரமாதமாயிருக்கு, தெரியுமா?'' மெல்லத் தடவிக் கொடுத்தாள் மாலையை. தன் கழுத்தில் அது மின்னிக் கொண்டிருக்கிறது

## உருளைக்கிழங்கும் மூக்கும்



17'ம் நூற்றாண்டில் ஜெர்மனியில் கடும் உணவுப் பஞ்சம் ஏற்பட்டது. அதைத் தீர்ப்பதற்கு உருளைக் கிழங்குகளைப் பயிரிட வேண்டுமென்று மன்னர் ப்ரெடரிக் வில்லியம் கட்டளை பிறப்பித்தார். உருளைக் கிழங்கு பயிரிட மறுக்கும் விவசாயிகளின் மூக்கையும் காதையும் வெட்டும்படி உத்தரவிட்டார்.

என்ற எண்ணுகையில் அவளுக்குப் பரவசம் ஏற்பட்டது.

''பிரமாதமாயிருப்பது மாலையில்லை, நீதான்! இன்னும் ஏதாவது வேண்டுமா?''

''ஆமாம். இன்னொரு குச்சி மிட்டாய்.''

அவன் வாங்கிக் கொடுத்தான். இருவரும் சைக்கிள் வைத்த இடத்தை நோக்கி நடந்தார்கள்.

''களைப்பாயிருக்கிறதா, நான்ஸி?''

''இல்லையே?''

''இன்னும் கொஞ்ச தூரம் போனால் ஒரு அருமையான இடம் இருக்கிறது. அங்கே பாறைகள் மீது கடல் அலை மோதுகிற அழகை நாள் பூரா பார்த்துக் கொண்டிருக்கலாம். வருகிறாயா?''

''ஓ!''

இருவரும் சைக்கிளை மிதித்தார்கள். ஆனால் இப்போது அவசரப்படாமல் நிதானமாய் ஓட்டினார்கள்.

சந்தையின் குதூகலச் சூழ்நிலை மறந்தது. இருவரும் தங்கள் தங்கள் சிந்தனைகளில் ஆழ்ந்து போனார்கள். இவனுக்கு அவளைப் பற்றிய சிந்தனை— அவளுக்கு இவனைப் பற்றிய சிந்தனை.

கடற்கரை தெரிந்தது. ஓங் வளர்ந்திருந்த அழகிய மரங்கள் தெ பட்டன.

''மைக், அற்புதமான இடம்!''

''அருமை! இல்லை?''

மிருதுவான புல் வளர்ந்திருந் இடத்தில் அவர்கள் உட்கார்ந் கொண்டார்கள்.

எட்டத்தில் தண்ணீருக் வெளியே தலை நீட்டிக் கொண்டிருந்த ஒரு பாறை. பெரிய பெரிய வெள்ளை அலைகள் அதன் மீது மோதி மோ உடைந்து கொண்டிருந்தன.

இருவரும் ஒருவர் கை ஒருவர் பற்றிக்கொண்டு மௌனமா உட்கார்ந்திருந்தார்கள்.

திடீரென்று அவள் எழுந் கொண்டாள்.

''என்ன நான்ஸி?''

''ஒரு வேலை!''

''அதோ அந்தப் புதருக்கு பின்னால் போ. மறைவாயிருக்கும்.''

''சீ, மடையா! அதில்லை.''

கடற்கரையில் ஏதோ ஓ இடத்தை நோக்கி அவள் ஓடினாள்.

அவன் மெதுவாகப் பி



மானேஜர்: இன்னிக்கு ஏன் முன்னாடியே கிளம்பி ஆபீஸ் வந்துட்டீங்க?

குமாஸ்தா: என் மனைவி வெண்ணெய் காய்ச்சறா, சார்!

—சீர்காழி எஸ். புவனா



...டார்ந்தான்—அவள் நோக்கம் என்ன ...க இருக்கும்? திகைப்பு ஏற்பட்டது.

ஒரு பாறையின் அருகே போய் ...ன்றாள் நான்ஸி. இரு கைகளாலும் ...தைத் தூக்க முயன்றாள்.

முடியவில்லை.

''ஏய், கிராக்கு! இரு, நான் ...ந்தாசை பண்ணுகிறேன். ஆமாம், ...தைத் தூக்கி என்ன செய்யப் ...ாகிறாய்!'' அவனுக்கு ஒரே திகைப்பு.

''தூக்கேன், சொல்கிறேன். ஆ! ...தோ.''

மைக்கேல் உறுதியாகக் கை ...காடுத்ததால் அந்தப் பாறை வெளியே ...ந்தது. எடுத்த இடத்தில் ஒரு பள்ளம் ...தரிந்தது.

நான்ஸி, தான் அணிந்திருந்த ...ணி மாலையை வேகமாய்க் ...ழற்றினாள். அதைக் கையில் வைத்துக் ...காண்டு ஒரு வினாடி தியானம் செய்கிற ...ாதிரிக் கண்களை மூடிக் கொண்டாள்.

பிறகு மாலையை அந்தப் ...ள்ளத்தில் போட்டாள். ''ஓகே, அந்தப் ...ாறையைப் பழையபடி மூடி விடு,'' ...ன்றாள்.

''மணி மாலையை வைத்தா ...டணும் என்கிறாய்?''

''ஆமாம்.'' ஜொலிக்கும் அந்தக் ...ண்ணாடி மாலையையே பார்த்தவாறு இருந்தன அவள் கண்கள்.

மெதுவே சொன்னாள்:

''மைக், இந்த மணிமாலைதான் ...ம்முடைய ஒப்பந்தம். நம்முடைய ...ாதலுக்கு ஒப்பந்தம். இந்தப் பாறையும், இந்தக் கடற்கரையும், இந்த மரங்களுமே ...ம் காதலுக்குச் சாட்சி. என்ன?''

''ஆல்ரைட்.'' அவன் மென்மை ...யாய்ப் புன்னகைத்தான். ''நம் காதல் ...கவிதையாய்ப் பிய்த்துக் கொண்டு ...போகிறது!''

''ஏன்? இருக்கக் கூடாதா? நம் காதல் உண்மையானதென்றால் அதற்கு ஒரு விழா இருக்க வேண்டாமா? நம் காதலுக்கு ஒரு மாளிகை கட்ட வேண்டாமா?''

''கரெக்ட். நீ சொல்வது ரொம்ப ரொம்பக் கரெக்ட். இதுதான் நம் காதல் மாளிகை!''

''இதோ பார், நமக்குள் ஒரு சத்தியம் செய்து கொள்வோம். இங்கே இந்த மணிமாலை இருப்பதை நான் மறக்கவே மாட்டேன். இந்த இடம் நம் காதலுக்குச் சாட்சி என்பதையும் மறக்கவே மாட்டேன். சத்தியம். இப்ப நீயும் சத்தியம் செய்.''

அவள் அவன் கையைப் பற்றினாள். அவளைப் பார்த்து அவன் மென்னகை புரிந்தான்.

இன்றைக்கு, இந்த வினாடி, இவளைக் காதலிக்கிற மாதிரி எப்போதுமே காதலித்ததில்லை என்று அவனுக்குத் தோன்றியது.

''சத்தியம்... சத்தியம்... உன்னை ஒரு நாளும் பிரிய மாட்டே னென்று சத்தியம் பண்ணுகிறேன்... காதல் மேல் ஆணை.''

இருவரும் ஒரு காரணமு மில்லாமல் சிரித்துக் கொண்டார்கள்.

இளமை ஆனந்தம்.

கவிதை ஆனந்தம்.

இந்தக் கிறுக்குத்தனமான காரிய மெல்லாமே ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம்தான்.

அன்றைய தினம் பூரா ஆனந்தம்... ஆனந்தம்...

''போகலாமா?'' என்றான் அவன்.

இரண்டு மணி நேரத்துக் கெல்லாம் அவர்கள் நான்ஸியின் ஜாகையை அடைந்தார்கள். அவனுடைய கல்லூரி வளாகத்துக்குப் பக்கத்திலேதான் அது இருந்தது.

உள்ளே நுழைந்ததும்

சோபாவில் பொத்தென்று படுத்தான் அவன்.

தூக்கம் கண்ணைச் சுழற்றியது.

நான்ஸியின் ஜாகை அவனுக்கு ரொம்பப் பிடித்திருந்த இடம். இங்கே வரும் ஒவ்வொரு முறையும் தன் சொந்த வீடு போல இருக்கும்.

வீடு என்று இதுவரை எதுவும் அவனுக்கு இருந்ததில்லை. அவன் அம்மா இருப்பது பிரம்மாண்டமான மாளிகை. அங்கே இருக்கும் போது வீட்டில் இருக்கிற மாதிரியே தோன்றாது.

ஆனால் நான்ஸியின் ஜாகை அப்படியல்ல. இதுதான் தன் வீடு போல அவனுக்குத் தோன்றுவது வழக்கம்.

இங்கே நான்ஸியின் கத கதப்பான ஸ்பரிசங்கள்...

பல வருடங்களாக அவள் வரைந்து வந்துள்ள ஓவியங்கள்...

அறைச் சுவர்களின் மென்மை யான வண்ணம்...

மெத்தென்ற வெல்வெட் சோபா... ஒரு சினேகிதியிடம் நான்ஸி வாங்கிய கம்பளி விரிப்பு...

எந்தப் பக்கம் திரும்பினாலும் பூக்கள்... நான்ஸி ஆசையுடன் வளர்க்கும் சின்னச் செடிகள்... வெள்ளைச் சலவைக்கல் பதித்த சிறிய சாப்பாட்டு மேசை. பளிச்சென்று சுத்தமாயிருக்கும் அந்த மேசையில்தான் இருவரும் சேர்ந்து சாப்பிடுவார்கள்.

பித்தளைப் பூண்கள் பதித்த படுக்கை. அவர்கள் காதல் புரியும்போது அது போடும் இன்பக் கிறீச்சு...

''நான்ஸி, இந்த இடத்தின் மீது எனக்கு எத்தனை பிரியம் தெரியுமா?''

''தெரியுமே?'' ஏக்கத்துடன் பார்வையைச் சுழற்றினாள் அவள். ''எனக்கும் ரொம்பப் பிரியமான இடம்... நமக்குக் கல்யாணமான பிறகு இந்த இடத்தை என்ன செய்வது?''

''எல்லாவற்றையும் நியூயார்க்கிற்கு எடுத்துக் கொண்டு போய் விடுவோம். இந்தச் சாமான்களுக்கெல்லாம் ஓரோர் இடம் பார்த்து வைத்துவிடலாம்...''

அவன் பார்வையை ஏதோ ஒன்று ஈர்த்தது.

''என்னது அது, புதிதாய்?''

ஸ்டாண்டில் இருக்கும் அந்த ஓவியம்...

அது இன்னும் முற்றுப் பெற வில்லை. ஆனாலும்கூட அதனிடம் ஒரு மயக்கும் சக்தி இருந்தது.

எழுந்து அருகில் சென்று பார்த்தான்.

மரங்களும் வயல்களும் நிறைந்த இயற்கைக் காட்சி அது.

ஒரு மரத்தின் மீது பாதி மறைந் தாற்போல் ஒரு சிறுவன் கால்களைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந் திருந்தான்.

''நான்ஸி, மரத்துக்கு இலை களெல்லாம் இன்னும் வரையவில்லையே? வரைந்த பிறகு இந்தப் பையனை இலைகள் மறைத்து விடாது?''

''அனேகமாய் மறைத்து விடும். ஆனால்கூட அங்கே ஒரு பையன் இருக்கிறானென்பது தெரியாமல் போகாது. படம் உனக்குப் பிடித்திருக்கிறதா மைக்?'' அவனை ஆவலுடன் பார்த்தாள். எப்போதுமே அவளுடைய ஓவியங்களைப் புரிந்து கொண்டு ரசிக்கிறவன் அவன்.

''பிரமாதம்! மோகித்துப் போய் விட்டேன்,'' என்றான் மைக்கேல்.

''இதை முடித்து, நம்

## தகுதியில்லாத



## ரீகன்

'தி பெஸ்ட் மேன்' என்ற திரைப்படம் அமெரிக்காவில் எடுக்கப்பட்டது, **1964**'ம் ஆண்டு. அது ஒரு ஜனாதிபதியைப் பற்றிய கதை.

அதில் ஒரு பிரபல ஹாலிவுட் நடிகர் நடிக்கவிருந்தார். ஆனால் ஒரு ஜனாதி பதிக்குத் தேவையான தோற்றம் இல்லை என்று அவரை நிராகரித்துவிட்டார்கள்.

நடிகர்: ரீகன்.



அவர்: வீட்டு வாசல்லே வச்சிருந்த சைக்கிளை யாரோ தள்ளிட்டுப் ாயிட்டாங்க, சார்!

போலீஸ்: ஏன், அதிலே ஏறி கார்ந்து போக முடியாதா?

—சீர்காழி ஸ்ரீராம்

---

யாணத்தன்று நான் உனக்குக் யாணப் பரிசாகத் தரப் போகிறேன்!''

''கல்யாணப் பரிசு என்றதும் பகம் வருகிறது,'' அவன் கைக் யாரத்தைப் பார்த்துக் கொண்டான். னி ஐந்தாகி விட்டது. ஆறு மணிக்கு ன் விமான நிலையத்தில் இருந்தாக ண்டும். ''சரி, நான் புறப்படுகிறேன்.''

அவள் கவலையுடன் அவனைப் ர்த்தாள்.

''மைக், இன்று ராத்திரி நீ ாய்த்தான் ஆக வேண்டுமா?''

''ஆமாம். ரொம்ப முக்கியம். சில னி நேரத்தில் திரும்பி வந்து விடுவேன். ரை எட்டுக்கெல்லாம் அம்மாவின் ட்டில் இருப்பேன்—போக்குவரத்தில் டை எதுவும் இல்லையென்றால். வ்வொரு மணி சுமாருக்குக் கடைசி மானத்தைப் பிடித்து, பன்னிரண்டு ணிக்கெல்லாம் திரும்பி வந்து விடுவேன். கே?''

''ஓகே,'' என்றாள் அவள். னால் அவள் குரலில் தயக்கம் தானித்தது. அவன் போவதைப் பற்றி வளுக்குக் கவலையாகவே இருந்தது. ாக வேண்டாமென்று தடுக்க ரும்பினாள். ஆனால் ஏன் அப்படித் தான்றுகிறது என்று அவளுக்கே ரியவில்லை.

''சரி, எல்லாம் நல்லபடி டியட்டும்.''

''நல்லபடியாய்த்தான் முடியப் ாகிறது, பார்.''

ஆனால் இருவருக்குமே மக்கேலின் அம்மா மரியமைப் பற்றித் தரிந்துதான் இருந்தது.

தன் விருப்பம் எதுவோ ப்படித்தான் செய்வாள் அவள்.

ஆனால் எப்படியும் அவளைத் வேன் வழிக்குக் கொண்டு வந்துவிட முடியும் என்று அவன் நம்பினான். கொண்டு வரத்தான் வேண்டும். நான்ஸி இல்லாமல் வாழ்க்கை இல்லை. என்ன ஆனாலும் சரி.

அவளை அணைத்துக் கொண்டான். ஸ்போர்ட்ஸ் ஷர்ட்டுக்கு மேலே ஒரு டை அணிந்து கொண்டான். காலையில் கழற்றிப் போட்டிருந்த கோட்டை மாட்டிக் கொண்டான்.

நியூயார்க்கில் இப்போது நல்ல வெப்பமாக இருக்கும் என்பது அவனுக்குத் தெரியும். ஆனால் கோட்டும் டையும் இல்லாமல் அம்மாவின் முன்னே போய் நிற்கக் கூடாது. அதுவும் அவனுக்குத் தெரியும். கோட்டு, டை அணியாதவர்கள் ஹிப்பிகள்—ஊர் பேர் தெரியாதவர்கள் என்பது அவள் அம்மாவின் கருத்து. அவர்களை அவளுக்குப் பிடிக்காது...

நான்ஸியும் ஊர் பேர் தெரியாதவள்தான்...

கதவருகில் அவன் விடை பெற்றான். இருவரும் முத்தமிட்டுக் கொண்டார்கள்.

அவனை எதிர் நோக்கியிருப்பது எப்படிப்பட்ட நிலைமை என்று இருவருக்குமே தெரிந்திருந்தது.

''குட் லக்,'' என்றாள் அவள்.

''ஐ லவ் யூ, கண்ணே,'' என்றான் அவன். புறப்பட்டு விட்டான்.

அபார்ட்மெண்ட் மொத்தமும் நிசப்தத்தில் ஆழ்ந்திருந்தது.

சந்தையில் எடுத்த புகைப் படத்தைப் பார்த்த வண்ணம் வெகு நேரம் உட்கார்ந்திருந்தாள் நான்ஸி.

என்ன வேடிக்கையான உடை! பித்துக்குளித்தனமாய் ஒட்டையில் தலையை நீட்டிக் கொண்டு...

இல்லை, இதில் பித்துக் குளித்தனம் இல்லை. இருவர் முகத்திலும் மகிழ்ச்சி விளையாடுகிறது...

மரியமுக்கு இதெல்லாம் புரியுமா? பித்துக்குளித்தனத்துக்கும் சந்தோஷத்துக்கும் இருக்கிற வித்தியாசம்—அசலுக்கும் கற்பனைக்கும் இருக்கிற வித்தியாசம்—மரியமுக்குப் புரியுமா?

மரியம் என்ன சொல்லப் போகிறாள்?

அவள் தவித்துக் கொண்டிருந் தாள்.

(தொடரும்)



## தங்கம் கடத்தப்படுகிறது

சுறுசுறுப்பானார் இன்ஸ்பெக்டர் இருதயராஜ். இரண்டு கான்ஸ்டபிள்களை ஜீப்பில் ஏற்றிக் கொண்டு, கிண்டி அருகே இருந்த சுத்திபாரா சந்திப்புக்கு வந்தார்.

டெலிபோன் செய்தி—

'ஜி.எஸ்.டி. ரோடு வழியாகத் தங்கம் கடத்தப்படுகிறது.'

சுறுசுறுப்பானார் இன்ஸ்பெக்டர் இருதயராஜ்.

பல வாகனங்களுக்கு இடையே ஒரு ஸ்கூட்டர். மடக்கினார். பிடித்து விட்டார்.

''நீங்க எப்படி பிடிச்சீங்க?'' வியந்தனர்.

''ஹெல்மெட் அணிய வேண்டாம்னு அறிவிச்ச உடனேயே, அவனவன் அதைத் தூக்கி எறிஞ்சிட்டு ஜாலியா ரோட்டிலே வண்டியிலே போய்க்கிட்டு இருக்கும்போது, இவரு ஹெல்மெட் போட்டுக்கிட்டுப் போனது எனக்கு சந்தேகத்தைக் கிளப்பிருச்சு. ஹெல்மெட்டிலே மறைச்சு வச்சு எடுத்து வந்திருக்கிறார்.''

நிவேதா

---

## நன்கொடை

விநாயகர் கோவில் கோபுரக் கமிட்டியார், வசூலுக்குக் கிளம்பினர். முதல் இலக்கு: துபாய்க்காரர் வீடு. ஆயிரமாவது தருவார் என்ற நம்பிக்கையுடன் தெருவில் இறங்கியபோது எதிரே வந்தாள் பிச்சைக்காரி வனபேச்சிக் கிழவி. 'அபசகுனம்' என்று அவர்கள் பயந்த மாதிரியே நடந்து விட்டது. துபாய்காரர் நூறு ரூபாய் மட்டுமே தந்தார்.

மீண்டும் வனபேச்சிக் கிழவி தென்பட்டாள். ''என்னங்க சாமி அலையறீங்க?''

''உன்னைப் பார்க்கத்தான். பிள்ளையார் கோபுரம் கட்டணும். ஆயிரம் ரூபாய் நீ தருவியாம். உன் பேரைக் கோபுரத்திலே பதிச்சுட லாம்னு...''

''என் சாவுச் செலவுக்குன்னு பணம் சேர்த்து வச்சிருக்கேன். ஆயிரத்து நூறு ரூபாய். அதைத் தர்றேன். ஆனால் என் பேரையெல்லாம் போடாதீங்க!''

உமா கல்யாணி

---

## பக்தி திலீர்

''என்னங்க... கோவில்ல திருவாதிரை உற்சவம் நடக்குது. நான் போகலாம்னு இருக்கேன். நீங்களும் வர்றீங்களா?''

''வரலை, மரகதம். கோவிலுக்குப் போகிறதெல்லாம் வேஸ்ட் ஆஃப் டைம்.''

ஒரு நாள்—

சுந்தரம் மிகவும் கவலையுடன் காணப்பட்டான்.

''ஆபீஸ்லே ஏதாவது பிரச்சினையா?''

''என் உடம்பிலே பிரச்சினை. எனக்குக் கொலஸ்ட்ரால் லெவல் ரொம்ப அதிகமா இருக்குதாம். காலையிலே அரை மணி அல்லது ஒரு மணி நேரம் நடக்கணுமாம்.''

''நாளை முதல் காலையிலே கோவிலுக்குப் போயிட்டு வாங்க. வாக் போன மாதிரியும் இருக்கும். சுவாமி கும்பிட்ட மாதிரியும் இருக்கும்.''

இந்தத் தடவை சுந்தரம் கோவிலுக்குப் போக மறுக்கவில்லை.

கமலநாதன்

# 4

# காதல்

மைக்கேலின் அன்னை மரியம், மகன் வரவுக்காகக் காத்திருந்தாள் தன் நியூயார்க் மாளிகையில்.

டைனிங் டேபிள் பளபளத்துக் கொண்டிருந்தது, ஏரியின் நீர்ப் பரப்பைப் போல.

நீல நிறமும் பொன் நிறமும் கொண்ட பாத்திரங்கள், சாப்பாட்டு மேசையின் ஓரமாய் வீற்றிருந்தன.

காப்பி அருந்தும் வெள்ளிக் கோப்பைகள் கச்சிதமாக வைக்கப்பட்டிருந்தன. பக்கத்தில், வேலைப்பாடுகள் செய்த சிறிய வெள்ளி மணி— வேலைக்காரர்களை அழைப்பதற்காக.

மரியம் தன் நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்துகொண்டு, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டாள். ஒரு மெல்லிய பெருமூச்சுடன் புகையை இழுத்து வெளி விட்டாள்.

ஞாயிற்றுக் கிழமைகளில் இன்னின்ன வேலைகளைக் கவனிக்க வேண்டும் என்று அவள் திட்டமிட்டுக் கொள்வது வழக்கம். தனக்கு வரும் கடிதங்களைப் படித்துப் பதில் எழுதுவாள். சமையல்காரனும் வேலைக்காரியும் தரும் செலவுக் கணக்குகளைச் சரிபார்ப்பாள். அடுத்த வாரம் என்னென்ன துணி மணிகள் தேவை என்று பார்த்து எடுத்து வைப்பாள். வீட்டில் பழுது பார்க்க வேண்டிய விஷயங்களைக் குறித்து வைப்பாள். வரும் வாரத்துக்கு என்ன சமையல் செய்ய வேண்டும் என்று உத்தரவுகள் பிறப்பிப்பாள்.

சலிப்பாகத்தான் இருக்கும். ஆனால் வருஷக் கணக்காக, பிஸினஸ் தலைமையை ஏற்பதற்கு முன்பிருந்தே கூட, இந்தக் காரியங்களை அவள் செய்து வந்திருப்பதால் பழக்கமாகி விட்டது.

மைக்கேல் குழந்தையாயிருந்தபோது அவனைக் கவனித்துக் கொள்ளும் ஆயா ஞாயிற்றுக்கிழமை லீவு எடுத்துக் கொள்வாள். அப்போது மைக்கேலைத்

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

மூலம்: டேனியல் ஸ்டீல்

தானேதான் கவனித்துக் கொண்டு வந்திருக்கிறாள்.

மைக்கேலை நினைத்ததும் மரியமின் உதட்டில் புன்னகை அரும்பியது. ஒரு நிமிடம் கண்ணை மூடிக் கொண்டாள். அவள் முகம் மலர்ந்தது.

மைக்கேலுக்காகவே ஒரு சாம்ராஜ்யத்தை இத்தனை காலமாக அவள் நிர்வகித்து வந்திருக்கிறாள். பரம்பரையைக் கட்டிக் காத்து, அடுத்த வாரிசான மைக்கேலிடம் கொடுக்கப் போகிறாள். மாபெரும் பரிசாக காட்டர்—ஹிலியர்டு நிறுவனத்தைக் கொடுக்கப் போகிறாள்...

''அம்மா! நீங்கள் இன்று ரொம்ப அழகாயிருக்கிறீர்கள்!'' மைக்கேலின் குரல் கேட்டது.

மரியமின் கண்கள் ஆச்சரியத்துடன் திறந்தன.

வாசல்படியருகே அவன் நின்றிருந்தான்.

மைக்கேல்!

ஓடிச் சென்று அவனை வாரியெடுத்து அணைத்துக்கொள்ள வேண்டும் போல இருந்தது. பல வருடங்களுக்கு முன்பு அப்படித்தான் செய்து வந்தாள். இப்போது அடக்கிக் கொண்டு, மகனைப் பார்த்து மெதுவே புன்னகை செய்தாள்.

''எப்போது வந்தாய்? வருகிற சத்தமே கேட்கவில்லையே?'' என்றாள்.

இன்னும் வாசற்படியிலேயே நின்றிருந்த மைக்கேல், ''என்னிடம் இன்னொரு சாவி இருக்கிறதே? நானே திறந்து கொண்டேன். உள்ளே வரலாமில்லையா?'' என்றான்.

''ஓ! தாராளமாய் வா,'' என்றாள் அவள். ''என்ன சாப்பிடுகிறாய்?''

அவன் மெல்ல உள்ளே வந்தான். ஒரு சங்கடமான புன்னகை அவன் உதட்டில் நெளிந்து கொண்டிருந்தது. சின்னப் பையன் போல் சாப்பாட்டு மேஜை மீதிருந்த தட்டைக் குனிந்து பார்த்தான். ''அட! சாக்லேட்டா?''

அவள் ஆமாம் என்பது போல் தலையை அசைத்தாள். குழந்தையாகவே இருக்கிறானே! சில விஷயங்களில் வளரவே மாட்டானோ?

மரியம் வெள்ளி மணியைக் கையிலெடுத்து கிணுகிணுவென்று அடித்தாள்.

மறு நிமிஷம் சமையல்காரி வந்தாள். ரொம்ப வருடங்களாக இந்த வீட்டோடு இருக்கிறவள். மேட்டி என்று பெயர். அவளுக்கென்று குழந்தை குட்டி குடும்பம் எதுவும் கிடையாது.

''எஸ் மேடம்?''

''மிஸ்டர் ஹிலியர்டுக்குக் காப்பி எடுத்து வா, மேட்டி.''

''எஸ் மேடம்.''

அம்மா ஏன் வேலைக்காரர்களிடம் ஒரு போதும் 'தாங்க் யூ' என்று சொல்வதில்லை? ரொம்ப நாளாய் மைக்கேலுக்கு ஏற்படும் எண்ணம் இப்போதும் ஏற்பட்டது.

'இட்ட கட்டளையை நிறைவேற்றத்தான் வேலைக்காரர்கள் இருக்கிறார்கள்? அப்புறம் தாங்க்யூ எதற்கு?' என்று அம்மா நினைக்கிறாள் போலும் என்று நினைத்துக் கொண்டான்.

''காலேஜ் எப்படி இருக்கிறது, மைக்கேல்?''

''ஒரு வழியாய் முடிந்தது. இன்னும் இரண்டு வாரம்தான்.''

''உன்னைப்பற்றி எனக்கு ரொம்பப் பெருமையாயிருக்கிறது, மைக்கேல். டாக்டரேட் வாங்குவதென்றால் லேசா? அதுவும் கட்டிடக் கலையில்?'' என்று அவள் பாராட்டியபோது—

''அம்மா!'' என்று அன்னையைக் கட்டிக் கொள்ள வேண்டும்



போலிருந்தது மைக்கேலுக்கு. ஒன்பது வயதுப் பையனாயிருந்தால் அப்படித்தான் செய்திருப்பான்.

மரியம் தொடர்ந்தாள்: ''உன் சினேகிதன் பென் எப்படி இருக்கிறான்? அவனுக்கு நம் கம்பெனியில் வேலை தருவது பற்றி இந்த வாரம் அவனுடன் பேசப் போகிறோம். அவனிடம் நீ ஒன்றும் சொல்லிவிடவில்லையே?''

''இன்னும் சொல்லவில்லை அம்மா. விஷயம் தெரியும்போது அவனுக்கு ரொம்பச் சந்தோஷமாக இருக்கும்.''

''இருக்காதா பின்னே? எப்பேர்ப்பட்ட வேலை அவனுக்குக் கிடைத்திருக்கிறது!''

''அவனும் அதற்கு முழுக்க முழுக்கத் தகுதியுள்ளவன்தான்,'' என்றான் மைக்கேல்.

''தகுதி இருந்தால்தான் நல்லது,'' என்றாள் மரியம். எதிலும் அங்குலம் கூட விட்டுக் கொடுக்காதவள். ''அதிருக்கட்டும் உன்

விஷயம் என்ன? நிர்வாகத்தை ஏற்கத் தயாராயிருக்கிறாய் அல்லவா? ஆபீசில் உனக்கான அறை இன்னும் ஒரு வாரத்தில் தயாராகிவிடும்.''

அலுவலகத்தைப் பற்றி நினைக்கையில் மைக்கேலுக்குப் பெருமையாயிருந்தது. நாலு பக்கமும் வேலைப்பாடமைந்த மரச் சுவர்கள். மெத்து மெத்தென்ற சோபாக்கள். தோல் உறை போட்ட நாற்காலிகள். அவனுடைய அப்பா இருந்தபோது எப்படி இருந்ததோ அதே மாதிரியான ஆடம்பரமான அலுவலகம்.

''ரொம்ப அழகாய் அமைந்திருக்கிறது உன் அலுவலகம்,'' என்றாள் மரியம்.

''நல்லதம்மா,'' என்றவன், ஒரு நிமிஷம் தாயைப் பார்த்துப் புன்னகை செய்து, ''என் அறையில் சில படங்கள் மாட்ட வேண்டுமென்று நினைத்திருக்கிறேன். மற்ற வேலைகள் முடியட்டும்,'' என்றான்.

நான்ஸியின் ஓவியங்களைத் தன் அறையில் மாட்ட வேண்டுமென்பது அவன் திட்டம். அதை எண்ணும்போதே அவன் கண்களில் ஒரு பிரகாசம் ஏற்பட்டது. மரியம் அதைக் கண்டுவிட்டாள். அவள் கண்களில் ஓர் எச்சரிக்கை படர்ந்தது.

''உனக்கு நான் அந்தச் சிரமம் வைக்கவில்லை, மைக்கேல். என்னென்ன படம் மாட்ட வேண்டுமென்று நானே தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறேன்.''

''அம்மா...'' மெதுவே தாயின் அருகே போய் அவன் உட்கார்ந்து கொண்டான்.

அந்தச் சமயம் பார்த்துச் சமையல்காரி காப்பியுடன் உள்ளே நுழைந்தாள்.

''தாங்க் யூ மேட்டி,'' என்றான்.

''மைக்கேல், காப்பியை லைப்ரரிக்குப் போய்ச் சாப்பிடலாமா?'' என்றாள் மரியம்.

''ஓ.''

அந்தரங்கமாகப் பேசுவதற்கு இந்தச் சாப்பாட்டுக் கூடம் லாயக்கில்லை என்று அவனுக்குத் தோன்றியது. அம்மாவின் மனசைக் கொஞ்சமாய் மாற்றுவதற்கு இந்த இடம் சரியில்லை.

எழுந்து, அம்மா பின்னால் நடந்தான்.

காலின் கீழே மெத்து மெத்தென்றிருந்தது அடர்த்தியாகப் போட்டிருந்த தரை விரிப்பு. இடப்புறமிருந்த லைப்ரரி அறையை அடைந்தார்கள்.

அறைக்கு வெளியே பரந்த சாலையும், பூங்காவின் ஒரு பகுதியும் தெரிந்தன. கதகதப்பான கணப்பு.

இரண்டு பக்கத்துச் சுவர்களை ஒட்டிப் புத்தக அலமாரிகள்.

மூன்றாவது சுவரில் மைக்கேலின் தந்தையின் உருவப் படம்

**முன் கதை:**

மைக்கேல் கட்டிடக் கலைக்குப் படிக்கிறான். டாக்டரேட் பட்டம் பெற இன்னும் இரண்டே வாரம்தான் இருக்கிறது. அதன் பின் தன் அன்னை மரியம் நிர்வகித்து வரும் மாபெரும் தொழில் சாம்ராஜ்யத்துக்கு அதிபதியாகப் பொறுப்பேற்கவிருக்கிறான். ஓவியம் வரையும் ஏழைப் பெண் நான்ஸியும் அவனும் காதலர்கள்.

அன்று அவர்கள் கிராமத்துச் சந்தையில் உல்லாசமாகப் பொழுதைக் கழிக்கிறார்கள். அதிர்ஷ்டப் போட்டியில் கிடைக்கும் ஒரு சாதாரண மணி மாலையை அவன் அவளுக்கு அளிக்கிறான். நான்ஸி கடற்கரையில், ஒரு பள்ளத்தில் அதைப் போட்டு, பாறையால் மூட, ''நம் காதலின் அடையாளம். நாம் பிரியக் கூடாது. சத்தியம்,'' என்று ஆணையிடுகிறார்கள்.

அன்று நியூயார்க்கிற்குப் புறப்படுகிறான் மைக்கேல். ''நம் கல்யாணத்துக்கு அம்மாவின் அனுமதி கேட்கப் போகிறேன். அவள் மறுத்தால் உடனே பதிவுத் திருமணம்,'' என்கிறான்.

ஆனால் நான்ஸிக்கு நம்பிக்கை இல்லை.

பிரம்மாண்டமாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது.

அந்த ஓவியம் மைக்கேலுக்கு ரொம்பப் பிடிக்கும். அப்பா ஒரு பிரியமான நபராகத் தோன்றினார் அவனுக்கு. சிலரைப் பார்த்ததும் பேசிப் பழக வேண்டும்போல் ஆசை ஏற்படுமே, அது மாதிரி.

கணப்பினருகே போட்டிருந்த பழங்கால நாற்காலியில் மரியம் உட்கார்ந்து கொண்டாள். அது அவளுடைய வழக்கமான இடம்.

கணப்பின் ஜ்வாலையில் அவள் உடைகள் பளபளத்தன. 'அம்மா எத்தனை அழகு!' என்று நினைத்துக் கொண்டான்.

மரியம் கேட்டாள்: ''என்ன மைக்கேல், என்னிடம் ஏதோ முக்கியமான விஷயம் பேச வேண்டு மென்று வந்திருக்கிறமாதிரி தோன்று கிறதே? ஏதாவது பிரசினையா?''

திடீரென்று மகன் வந்திருந் ததால் அவள் மனத்தில் பலவிதமான சந்தேகங்கள்.

''ஒரு பிரசினையும் இல்லை, அம்மா. உங்களிடம் ஒரு விஷயம் பேச வேண்டும். அவ்வளவுதான்,'' என் றான்.

அப்படிச் சொன்னதுமே நாக்கைக் கடித்துக் கொண்டான். 'பேச வேண்டும்' என்று ஏன்தான் வாயில் வந்ததோ? 'உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்' என்றல்லவா சொல்லியிருக்க வேண்டும்? 'பேச வேண்டும்' என்றால் அதைப் பற்றி விவாதிக்கப் போவதாக அர்த்தமாகுமே?

சமாளித்துக் கொண்டு, ''அம்மா, நாம் நம்ம மனசில் இருப்பதை ஒளிக்காமல் மனம் திறந்து பேச வேண்டிய கட்டம் வந்துவிட்டது என்று நினைக்கிறேன்,'' என்றான்.

மரியம் புன்னகை செய்தாள். ''நீ சொல்வதைப் பார்த்தால் ஏதோ இதுவரை நமக்குள் ஒளிவு மறைவாகப் பேசி வந்த மாதிரியல்லவா இருக்கிறது?''

ஆறு வித்தியாசங்கள் விடை:

1. மாலை
2. பன்னீர் செம்பு
3. புடவை பார்டர்
4. துப்பாக்கி முனை
5. பந்தல் கம்பம்
6. சிரிப்பு



''ஆமாம்மா. சில விஷயங் களில் நாம் அப்படித்தான் இருந்து வருகிறோம்,'' என்றான் மைக்கே தைரியமாக.

அவன் உடம்பெங்கும் ஒரு திடம் ஏற்பட்டது. பின்னாலிருந்த ஓவியத்திலிருந்து அப்பா எட்டிப் பார்த்து அவனுக்குத் தைரியம் கொடுக்கிற மாதிரி இருந்தது. முன் பக்கமாகக் குனிந்து அம்மாவைப் பார்த்தான். ''நான்ஸி விஷயம் அம்மா. அந்த விஷயத்தில் நாம் ஒருவருக்கொருவர் மனம் விட்டுப் பேசிக் கொண்டதில்லை,'' என்றான்.

''நான்ஸியா?'' புரியாத மாதிரிப் பார்த்தாள் மரியம்.

எழுந்து அவளை நாலு அறை விடலாம் போல அவனுக்குத் திடீரென ஆத்திரம் மூண்டது. 'நான்ஸி' என்ற பெயரை அம்மா உச்சரித்த விதம்—யாரோ வேலைக் காரியின் பெயரைச் சொல்கிற மாதிரி...

''நான்ஸி மக்லிஸ்டர், அம்மா என் சினேகிதி. நினைவில்லை?''

''ஓ! ஆமாம், ஆமாம்.'' கையிலிருந்த காப்பிக் கோப்பையில் ஸ்பூனை விட்டு மெல்லக் கலக்கிக் கொண்டிருந்தாள் மரியம்.

(தொடரும்)

# காதல் மேல் ஆணை



**5**

நான்ஸியைப் பற்றிப் பேச்செடுத்ததும் மைக்கேலுக்கும் மரியமுக்குமிடையே சிறிது நேரம் மௌனம் நிலவியது.

''அம்மா! நான்ஸி என்று ஒருத்தி இல்லவே இல்லை போல நீங்கள் பாசாங்கு செய்கிறீர்கள். நானோ உங்கள் மனசுக்குக் கவலை ஏற்படுத்தக் கூடாதென்று பார்க்கிறேன். ஆனால் உண்மையை மறைக்க முடியாது. நான்ஸியை நான் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறேன், அம்மா.'' என்று கடகடவென்று கூறியவன், நாற்காலியில் சாய்ந்து கொண்டான். ''இன்னும் இரண்டே வாரத்தில் கல்யாணம்,'' என்றான்.

''அப்படியா?'' மரியம் கொஞ்சம்கூட அசையவில்லை. அவள் கண்களிலும் சரி, கைகளிலும் சரி, துளியும் சலனமில்லை. கால்களிலும் எவ்வித அசைவும் இல்லை.

''ஏன் நீ அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள நினைக்கிறாய் என்று நான் தெரிந்து கொள்ளலாமா? அவள் கர்ப்பமாகி விட்டாளா?'' என்றாள்.

''சே, சே! அப்படி எதுவும் இல்லை.''

முன்கதைச் சுருக்கம்.

பெரும் பணக்காரரான மைக்கேலும் ஓவியம் வரையும் சாதாரணப் பெண்ணான நான்ஸியும் உயிருக்குயிராய்க் காதலிக்கிறார்கள்.

திருவிழாவில் பரிசாகக் கிடைத்த ஒரு சாதாரண மணி மாலையை நான்ஸிக்கு அணிவிக்கிறான் மைக்கேல். கடற்கரையில் ஒரு பாறையின் கீழே அதைப் புதைத்து, ''நாம் ஒருவரையொருவர் விட்டுப் பிரியக் கூடாது. நம் காதல் மேல் ஆணை,'' என்று இருவரும் சத்தியம் செய்து கொள்கிறார்கள்.

தங்கள் திருமணத்துக்குத் தன் அன்னை மரியமிடம் அனுமதி பெறப் புறப்படுகிறான் மைக்கேல். அம்மா அனுமதி தராவிட்டால் நான்ஸியைப் பதிவுத் திருமணம் செய்து கொள்வேன் என்கிறான்.

''அப்பாடா! ஒரு கவலை விட்டது. பின்னே எதற்காக அவளைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும்? அதுவும் இரண்டே வாரத்தில்?''

''இரண்டு வாரத்தில் என் படிப்பு முடிந்து விடுகிறது, அம்மா. பிறகு நான் நியூயார்க்கிற்கு வந்து விடப் போகிறேன். வேலை பார்க்கப் போகிறேன். ஆகவே அவளைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும். அதுதானே நியாயம்?''

''நியாயமா? யாருக்கு நியாயம்?'' முதன் முதலாக மரியமின் குரலில் கடினம் தென்பட்டது. மெதுவே கால்மீது கால் போட்டுச்

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

கொண்டபோது ஸில்க் உடை வழுவழுப்பான சத்தம் எழுப்பியது. அவள் கண்கள் அவன் மீதே நிலைத்திருந்தன. அந்தப் பார்வையைத் தாள முடியாமல் மைக்கேல் சங்கடப்பட்டான். பிஸினஸில் மட்டுமில்லை எந்த விஷயத்திலுமே, பிடித்த பிடியை அம்மா விடுவதில்லை என்று அவனுக்குத் தெரியும். எப்படிப்பட்ட ஆளானாலும் அவள் முன்னிலையில் கூனிக் குறுகி, கடைசியில் ஒடிந்தே போவான் என்பதையும் அவன் அறிவான்.

''நான்ஸியைக் கல்யாணம் செய்து கொள்வதுதான் நியாயம் என்று நினைக்கிறேன்...'' என்றான் மறுபடியும்.

''உனக்கு நியாயமாய்த் தோன்றலாம் மைக்கேல். எனக்கு அப்படித் தோன்றவில்லை. உனக்குப் பெரிய பெரிய பொறுப்புக்கள் காத்துக் கொண்டிருக்கின்றன. சான் பிரான்ஸிஸ்கோவில் ஒரு பிரம்மாண்டமான மருத்துவ நிலையம் கட்டப் போகிறார்கள். அந்த வேலையை நம்மிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். கல்யாணம் செய்துகொண்டு குடும்பம் நடத்த உனக்கு டயமே இருக்காது—அடுத்த இரண்டு மூன்று வருஷங்களுக்கு நான் உன்னைத்தான் ரொம்ப நம்பியிருக்கிறேன், மைக்கேல், நான் சொல்வதைக் கேளப்பா.''

அவள் குரலில் கனிவு தென்படுகிற மாதிரி அவனுக்குத் தோன்றியது. அப்படியானால் அவளைத் தன் வழிக்குக் கொண்டுவர நம்பிக்கை இருக்கிறது.

''நான்ஸி நம் இருவருக்குமே பெரிய சொத்தாக இருப்பாள் அம்மா. என் வேலையையும் கெடுக்க மாட்டாள். உங்களுக்கும் தொந்தரவாக இருக்க மாட்டாள். நம் குடும்பத்துக்கு அவளால் கௌரவம் ஏற்படும்.''

''என்னது! குடும்பத்துக்குக் கௌரவம் என்றா சொன்னாய்? இல்லை. அவளால் நமக்குத் தலைக் குனிவுதான் ஏற்படும். ஏன் சொல்கிறேன் தெரியுமா?''

அவள் கண்களில் வெற்றியின் பளபளப்புத் தெரிந்தது—ஒரே அடியில் அவனை வீழ்த்தப் போகிற மாதிரி.

அதை மைக்கேல் உணர்ந்தான். அவனுக்கு மூச்சுத் திணறுகிற மாதிரி இருந்தது. வேட்டைக்காரனிடம் நிர்க்கதியாகச் சிக்கியிருக்கும் விலங்கைப் போல இருந்தது அவன் நிலைமை. அவள் எந்த இடத்தில் அடிக்கப் போகிறாள், எப்படி அடிக்கப் போகிறாள் என்பது தான் தெரியவில்லை.

''தலைக் குனிவா... என்ன தலைக் குனிவு?'' என்றான் மெதுவே.

''தான் யாரென்று அவள் உன்னிடம் சொல்லியிருக்கிறாளா?''

அவன் திகைப்பு அதிகரித்தது. என்ன சொல்கிறாள் அம்மா?

''புரியவில்லையே நீங்கள் சொல்வது... நான்ஸி என்ன சொல்லியிருக்க வேண்டும் என்கிறீர்கள்?''

''உனக்குப் புரியும்படி விளக்கமாகவே சொல்கிறேன். கொஞ்சம் இரு.''

எவ்விதப் பரபரப்புமில்லாமல் மரியம் எழுந்து கொண்டாள். கையிலிருந்த காப்பிக் கோப்பையை வைத்தாள். தன் மேஜையை நோக்கி நளினமாக நடந்தாள்.

மேஜையின் கீழறையை இழுத்தாள். ஒரு பைலை எடுத்தாள். மைக்கேலிடம் கொடுத்தாள்.

''என்ன இது?'' அவன் திகைத்தான்.

''படி, உனக்கே தெரியும்,'' என்றாள் மரியம்.

மைக்கேல் அந்த ஃபைலைக் கையில் வாங்கிக் கொண்டான். ஒரு



வினாடி அப்படியே
வைத்திருந்தான்.
திறந்து பார்க்கப்
பயமாயிருந்தது.

பிறகு மெல்லிய
குரலில் கேட்டான்:
''என்ன இது?''

''ரிப்போர்ட்,
மைக்கேல். அறிக்கை.
உன்னோட சினேகித
இருக்கிறாளே, அந்தப்
படம் போடுகிற
பெண்—அவளைப்
பற்றிய விவரங்களை
விசாரித்துச் சொல்லும்
படி ஒரு பிரைவேட்
டிடெக்டிவிடம்
சொல்லியிருந்தேன்.
அவர் கொடுத்திருக்கும்
தகவல்கள் அந்த
ஃபைலில் இருக்கிறது.
படித்துப் பார்த்தேன்.
எனக்கென்னவோ
திருப்தியாக இல்லை.''
மரியம் கடும் கோபத்தி
லிருந்தாலும், வேண்டு
மென்றே தணிவாய்ப்
பேசினாள்.

அவன் அசையாமல்
நின்றான்.

''உட்கார்ந்து
படித்துப் பார்,
மைக்கேல்,''
என்றாள்.

அவன் உட்கார
வில்லை. வேண்டா
வெறுப்பாக ஃபைலைப்
பிரித்தான். படிக்கத்
தொடங்கினான்.

முதல் பத்துப்
பன்னிரண்டு வாக்கியங்
களிலேயே நான்ஸியின்
குடும்பத்தைப் பற்றித்
தெரிந்தது.

நான்ஸியின் அப்பா
ஒரு கைதி. கொள்ளை
யடித்த குற்றத்திற்காக

அன்புக் குழந்தைக்கு அறியுமா இன்று...
ன்னை விட்டு அப்பா சில நாட்களுக்கு
ிந்து இருக்க வேண்டும் என்று.

ஆனால் பயப்படும்படியாக ஒன்றுமில்லை. ஒரு சாதாரணமான அப்பெண்டிக்ஸ் அறுவை சிகிச்சைதான். அவரும் அதைப் பற்றி கவலைப் படவில்லை. ஏனெனில் அறுவை சிகிச்சைக்காகும் அனைத்து செலவுகளுக்கும் பாதுகாப்பு வழங்கும் நியூ இந்தியாவின் மெடிக்ளைம் பாலிஸி.

இதுபோன்ற எதிர்பாராத நோய்களை சமாளிக்க நியூ இந்தியா அஷ்யூரன்ஸிலிருந்து மெடிக்ளைம் பாலிஸி ஒன்றை எடுத்துக் கொள்ளுங்கள். ஹாஸ்பிடலைசேஷன் மற்றும் விசேட சூழ்நிலையில் வீட்டிலிருந்தே மருந்துவமனையில் சிகிச்சை பெறுவதற்கான செலவுகளுக்கு டொமிசிலியரி ஹாஸ்பிடலைசேஷன் பெனி..பிட் பாலிஸி உங்கள் மருத்துவ செலவுகளுக்கு காப்பு வழங்கும். இது உங்களுக்கும் உங்கள் குடும்பத்தினருக்கும் பலவிதமான மருத்துவ வசதிகளை வழங்குகிறது. ஆண்டொன்றுக்கு மிக சொற்பத் தொகை ரூ. 200/- (குறைந்த பட்சம்) செலுத்தினால் போதும். அதோடு இது உங்கள் குடும்பத்தினருக்கு தள்ளுபடியும், வரிவிலக்கும் வழங்குகிறது.

நியூ இந்தியா அஷ்யூரன்ஸின் மெடிக்ளைம்—எத்தனை சிறிய தொகையில் எத்தனை பெரிய பாதுகாப்பு.

| ஆண்டொன்றுக்கு பிரீமியம் | ஹாஸ்பிடலை-சேஷன் | ஹாஸ்பிடலை-சேஷன் |
|---|---|---|
| ரூ. | ரூ. | ரூ. |
| 200 | 10,500 | 3,100 |
| 250 | 17,600 | — |
| 350 | 25,500 | — |
| 600* | 37,750 | 5,250 |
| 840* | 52,750 | 7,400 |
| 1300* | 82,500 | 11,500 |

வயது வரம்பு: 5-70 ஆண்டுகள். *கூடுதல் பிரீமியம் செலுத்துவதின் பேரில் பர்சனல் ஆக்ஸிடென்ட் காப்பு கிடைக்கும்.

NEW INDIA ASSURANCE
A subsidiary of the General Insurance Corpn. of India




BORN TO LEAD

மெடிக்ளைம் வழங்குவோர்: நியூ இந்தியா அஷ்யூரன்ஸ்

# MEDICLAIM

ஏழு வருடத் தண்டனை பெற்றுச் சிறையில் இருந்தவன். சிறையில் ஓர் அடிதடி சண்டையில் அவனைக் கொலை செய்து விட்டார்கள். அப்போது நான்ஸி கைக்குழந்தை.

இரண்டு வருடத்துக்கெல்லாம் நான்ஸியின் அம்மா இறந்து போனாள்—மிதமிஞ்சிய குடியினால்.

''ரொம்பப் பிரமாதமான குடும்பம் தான் இல்லை?'' மரியமின் குரலில் இகழ்ச்சி தொனித்தது.

மைக்கேல் மேஜை மீது விசிறி எறிந்தான் அந்த ஃபைலை. உள்ளிருந்த காகிதங்கள் சிதறித் தரையில் பறந்தன.

''அம்மா, இந்தக் குப்பையை நான் படிக்கத் தயாராயில்லை!''

''குப்பையைப் படிக்க மாட்டாய். ஆனால் குப்பையைக் கல்யாணம் செய்து கொள்வாய். அப்படித் தானே?''

''இதோ பாருங்கள், அம்மா. நான்ஸியின் அம்மாவும் அப்பாவும் எப்படி இருந்தால் நமக்கென்ன? நான்ஸிக்கு அதில் என்ன சம்பந்தம்? அப்பாவும் அம்மாவும் அப்படி இருந்தது அவளோட தப்பா என்ன?''

''அவளுடைய தப்பில்லை. அவளுடைய துரதிருஷ்டம். அவளைக் கல்யாணம் செய்து கொண்டால் உன்னையும் அந்தத் துரதிருஷ்டம் தொற்றிக் கொள்ளும்,'' என்றாள் மரியம். ''மைக்கேல், அறிவோடு நடந்து கொள். கோடிக் கணக்கான ரூபாய்கள் புரளுகிற பிஸினஸில் பொறுப்பு ஏற்கப் போகிறாய். நாலு பேர் சிரிக்கிற மாதிரி நீ நடந்து கொள்ளக் கூடாது. நடந்து கொண்டால் எல்லாம் கெட்டுக் குட்டிச்சுவராகி விடும். ஐம்பது வருடத்துக்கு முன்னால் உன் தாத்தா ஆரம்பித்த பிஸினஸ் இது. கேவலம் ஒரு காதல் சமாசாரத்துக்காக அதை நாசம் பண்ணப் போகிறாயா? கிறுக்குத்தனமாய் எதுவும் செய்யாதே. அறிவு முதிர்ச்சியோடு நீ இருக்க வேண்டிய சமயம் இது. முக்கியமான கட்டம் இது. இன்னும் இரண்டே வாரம்தான்—உன் காலேஜ் வாழ்க்கை முடியப் போகிறது.''

கொஞ்சம் கொஞ்சமாய் அவள் வார்த்தைகள் சீற்றத்துடன் வரத் தொடங்கின. மகனைப் பார்க்கப் பார்க்க அவள் முகம் சினத்தினால் ஜொலித்தது. இது ஒரு தர்ம யுத்தம் என்று எண்ணிக் கொண்டாள். அவளுக்கும் அவள் மகனுக்கும் நடக்கும் யுத்தம். இந்த யுத்தத்தில் அவள் தோற்கக் கூடாது. தோற்கப் போவதில்லை. என்ன நேரிட்டாலும் சரி.

### மிளகாய் விதை



போர்ச்சுக்கல் நாட்டில் விருந்து ஒன்றில் கலந்து கொண்டேன். உப்பு, காரம் இல்லாமல் சப்பென்று இருந்தது.

மிளகாய் கிடைக்குமா என்று கேட்டேன். சின்னத் தட்டில் கொண்டு வைத்தார்கள். நம் ஊரில் உப்புமாவுக்குத் தாளிக்க மிளகாயைத் துண்டு செய்வோமே அந்த சைஸில் இரண்டே இரண்டு துண்டு வைத்தார்கள். நான் சர்வ சாதாரணமாய் வாயில் போட்டுக் கடித்துச் சாப்பிட்டேன்.

அந்தக் காட்சியை எல்லோரும் அதிசயம் போல் பார்த்துப் பிரமித்தனர். விருந்து அளித்த குழுவின் தலைவர், கூடியிருந்த எல்லோரையும் என் டேபிளுக் கருகே அழைத்து விட்டார்.

—வி. கிருஷ்ணசாமி




...TT மில் இயங்கி
...ம், "Pontificial
...titute of Arabic and
...mic Studies' என்ற நிறுவனம் உலகின்
... பகுதிகளிலிருந்து இஸ்லாமிய ஆய்வா
...கள் பன்னிருவரை, 'நற்பணிகளும்,
...ரிதத்துவமும்' என்னும் பொருள் பற்றிக்
...த்துவ அறிஞர்களுடன் உரையாட
...ழைத்திருந்தது. நானும் பங்கேற்றேன்.

மாநாடு வெற்றிகரமாக முடிந்தது.
...கு இத்தாலியில் பத்து நாள் சுற்றுலா.
...ங்கிலமும், இத்தாலிய மொழியும் தெரிந்
...ர் யாரேனும் கிடைத்தால் சுற்றுலாவில்
...வியாக இருக்கும் என்று நாங்கள்
...ண்ணிக் கொண்டிருக்கும் போதே,
...ன்ஸ்டிட்யூட்டின் சார்பாக எங்களை வர
...பற்ற டாக்டர் மிஷேல் வந்து,
...laulana! Mr. Kozntraz will take care
...you," என்று கூறினார்.

இதற்குள் Kozntraz என்று
...க்டர் மிஷலால் குறிப்பிட்டவர்
...ங்களை நோக்கி வந்து, கொண்டிருந்
...ர். அவர் முகத்தைப் பார்த்ததும்..!

அவர் எங்களருகே வந்து கையை
...டினார். அவர் கையைப் பற்றிக்
...காண்டே நான், "மிஸ்டர் குழந்தை
...ஜ்! நீங்க தமிழ்நாட்டில் எந்தப் பகுதி
...லிருந்து வர்றீங்க?" என்றேன்.

"நீங்க நீங்க என் பெயரை...
...ப்படி... என்று அவர் திகைத்தார்.

"பேரைக் கண்டு பிடிச்சதைப்
...ற்றித்தானே ஆச்சரியப்படுறீங்க!
...ozntraz வருவாருன்னு டாக்டர் மிஷல்
...சான்னார். உங்களைப் பார்த்ததும்
...மிழர் என்று புரிந்துவிட்டது. நம் தமிழ்
...மாழியிலுள்ள சிறப்பு எழுத்தை உச்சரிக்க
...டியாமல் தான் டாக்டர் மிஷல் உங்கள்
...பயரை அப்படி உச்சரித்திருக்கிறார்
...ன்பது புரிந்துவிட்டது. குழந்தை ராஜ்
...ன்பதுதான் உங்கள் பெயராக இருக்கும்
...ன்று ஊகித்தேன். சரிதானா?" என்
...றன். 'சரிதான்' என்று அவர் சிரித்தார்.

—அப்துல் வஹ்ஹாப்

...ச்சரிக்க இன்னும் சில

| இங்கிலிஷ் பெயர் | உச்சரிப்பு |
|---|---|
| Marjoribanks | மார்ஷ்பேங்க்ஸ் |
| Leicester | லெஸ்டர் |
| Bottomley | பம்லி |

"மைக்கேல், இந்த விஷயத்தைப் பற்றி நான் உன்னிடம் பேசத் தயாரா யில்லை. நான் சொன்னதை நீ கேட்டுத்தான் ஆக வேண்டும். உன் சொந்த விருப்பங்களுக்கு இங்கே இடம் கிடையாது."

"ஏன் கிடையாது? என் விருப்பத் துக்கு ஏன் இடம் கிடையாது என்று கேட்கிறேன்!" வேகமாய் அம்மாவை நெருங்கிச் சென்றான். அவன். "இதோ பாருங்கள், உங்களுக்கும் உங்கள் சட்ட திட்டங்களுக்கும் நான் ஆயுள் பூரா அடி பணிந்து கொண்டிருப்பேன் என்று நினைக்கிறீர்களா? ஒரு நாளும் இல்லை. என்ன நினைத்துக் கொண் டிருக்கிறீர்கள் உங்கள் மனசில்? என்னை பிஸினஸில் மடக்கி வைக்க வேண்டும். நீங்கள் ரிடையாகிற வரை யில் என்னை ஆட்டிப் படைப்பீர்கள். நீங்கள் இழுக்கிறபடியெல்லாம் நான் ஆடிக் கொண்டிருக்க வேண்டும். அது தானே உங்கள் திட்டம்? அது ஒரு நாளும் நடவாது. கம்பெனியில் வேலைக்குச் சேர்வேன். பொறுப்பு ஏற்பேன். அத்தோடு சரி. மற்றப்படி இன்றைக்கும் சரி, என்றைக்கும் சரி என் வாழ்க்கையை உங்களிடம் அடகு வைக்க மாட்டேன். எனக்கு எந்தப் பெண்ணைப் பிடிக்கிறதோ அவளைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்!" புரிந்து கொள்ளுங்கள்!"

மரியம் பல்லைக் கடித்தாள். "மைக்கேல்!"

அதற்குள் அழைப்பு மணி அடிக்கவே, அவர்கள் பேச்சு நின்றது.

கூண்டுக்குள் இருக்கும் இரண்டு சிறுத்தைகள் போல அவர்கள் ஒருவரையொருவர் முறைத்துக் கொண்டு நின்றார்கள்.

ஒன்று கிழச் சிறுத்தை. இன்னொன்று இளம் சிறுத்தை. இரண்டும் ஒன்றையொன்று குதறத் துடித்தன. ஆனால் ஒன்றைக் கண்டு ஒன்று பயந்தது.

[தொடரும்]

ஜெயலலிதா:

இரண்டு கைகளையும் கும்பிடுவது போல் சேர்த்து ஒரு தேய் தேய்த்துப் பின்பு விரித்து கைகளைப் பார்த்துக் கொள்வார். இதை அடிக்கடி செய்து கொண்டிருப்பார்.

கருணாநிதி:

அடிக்கடி ஒரு கையின் ஆள் காட்டி விரலாலும் கட்டை விரலா லும் ஒரு காதின் கீழ்ப் பகுதியை நெருடி விட்டுக் கொள்வார்.

ஜி.கே. மூப்பனார்:

துண்டின் இரு நுனியையும் இரண்டு கைகளால் பிடித்துக் கொண்டு தோளில் (முதுகுப் பக்கம்) கவாட்டில் விறைப்பாகப் பிடித்துக் குறுக்கும் நெடுக்குமாக இழுத்துக் கொண்டேதான் பேசுவார்.

கே.கே.எஸ்.எஸ்.ஆர்.:

முண்டா வரை சுருட்டி விடப் பட்ட கை மடிப்பை ஒரு கையால் மேல் பக்கம் தள்ளி விட்டுக்கொண்டே இருப்பார். அல்லது மீசையை அடிக் கடி ஒதுக்கி விடுவார்.

சுப்பு:

மேலிருந்து கீழ்ப் பக்கமாக ஒரு கையால் தாடையைத் தடவி விட்டுக் கொள்வார்.

டாக்டர் ராம்தாஸ்:

பேசிக் கொண்டிருக்கும் போது கழுத்தில் மாட்டியிருக்கும் ஸ்டெதஸ்கோப்பின் ஸ்டெட்டை (நுனியை) தூக்கிப் போட்டுப் பிடித்துக் கொண்டிருப்பார்.

ஆற்காடு வீராசாமி:

காரில் போகும்போதும் வீட்டில் இருக்கும்போதும் அடிக்கடி 'மலர்களைப் போல் தங்கை உறங்கு கிறாள்' என்ற 'பாச மலர்' படப் பாடலை பாடிக் கொண்டே இருப்பார்.

தமிழ்க்குடிமகன்:

ஜிப்பா பாக்கெட்டினுள் கையை நுழைத்துக் கொண்டேதான் பேசுவார்.

மாறன்:

மீசையின் ஒவ்வொரு முடியை யும் பிடித்து அழுத்தி இழுத்து விட்டுக் கொண்டேதான் பேசுவார். நிற்கும்போது வலது காலை ஆட்டிக் கொண்டேயிருப்பார்.

மு.க. ஸ்டாலின்:

மேடையில் பேசும்போது ஆடியன்ஸைப் பார்க்காமல், மேடை யின் இரண்டு பக்கங்களையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டுதான் பேசுவார்.

தா. பாண்டியன்:

வலது கையின் கட்டை விர லால் மற்ற நான்கு விரல்களையும் அழுத்திவிட்டு, கடைசியாக ஆள் காட்டி விரலால் மேஜையைத் தட்டிப் பேசுவது இவரது வழக்கம்.

—ஜெயா ராம்.



# 6 காதல் மேல் ஆணை



மூலம்: டேனியல் ஸ்டீல்

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

மைக்கேலும் அவன் அன்னையும் கோபத்தால் உடல் நடுங்க நின்றிருந்தபோது—

ஜார்ஜ் உள்ளே நுழைந்தார். மரியமின் வலது கை போன்ற நிர்வாகி.

நுழைந்த கணமே, அந்த அறையின் உஷ்ணத்தைப் புரிந்து கொண்டார்.

மென்மையான சுபாவம் கொண்ட கண்ணியமான மனிதர் அவர். அறுபதை நெருங்கிக் கொண்டிருக்கும் வயது. பல வருடமாக மரியமுக்கு உதவியாக இருந்து வருபவர். மரியமின் நிறுவனத்தில் ஒரு பெரும் சக்தி.

ஆனால் முந்திரிக் கொட்டை போல் முன்னால் வந்து நிற்க மாட்டார். பின்னணியில் மறைவாக இருந்தபடி தன் சக்தியைப் பிரயோகிப்பதுதான் அவருக்குப் பிடிக்கும். அப்படிப் பின்னணியில் நிற்பது எவ்வளவு நல்லது என்பதை ரொம்ப நாளைக்கு முன்பே புரிந்து வைத்திருந்தார்.

என்றைக்குக் கணவன் இறந்து மரியம் நிர்வாகப் பொறுப்பேற்றாளோ, அன்று முதல் அவளுடைய நம்பிக்கையையும் பாராட்டையும் பெற்று வந் திருக்கிறார் ஜார்ஜ். ஆரம்பத்தில் கொஞ்ச நாள் வரை சும்மா பெயருக்கு மரியம் தலைவியாக இருந்தாள். அப்போது ஜார்ஜ்தான் எல்லாவற்றை யும் நடத்தினார். கூடவே மரியமுக்கு எல்லா பிஸினஸ் வித்தைகளையும் மனப்பூர்வமாகக் கற்றுத் தந்தார்.

சொல்லித் தந்ததை கப்பென்று பிடித்துக் கொண்டாள் மரியம். அதற்கு மேலேயும் தெரிந்து கொண்டாள். ஆனால் தனிப் பெரும் சக்தியாக ஆகிவிட்ட பிறகும்கூட எந்த முக்கிய விஷயத்திலும் ஜார்ஜின் ஆலோசனைப்படிதான் செய்வாள்.

எத்தனை வருடமானாலு தன் உதவி அவளுக்குத் தேவையாக தான் இருக்கும் என்பதை ஜார் புரிந்து வைத்திருந்தார்.

மரியமும் ஜார்ஜும் ஒ விசித்திரமான ஜோடி. பிரிக் முடியாத, ஒருவரால் மற்றவர் பல பெறுகிற, விந்தையான ஜோடி.

தனக்கு மரியமிடம் உள் அன்பு எப்படிப்பட்டது என் மைக்கேலுக்குத் தெரியுமா என்று சி சமயம் ஜார்ஜ் நினைத்துப் பார்ப துண்டு. ஏன், மரியமுக்கே கூட தெரிந்திருக்காது. அவள் கவன யெல்லாம் பிஸினஸ்தான். அதுதா அவளுக்கு ஒரே மூச்சு. பிற்பாடு ஒ நாள்... என்றைக்காவது ஒரு நாள்.

இப்போது மரியமின் முகத்தைப் பார்த்ததும் அவருக்குக் கவலை ஏற்பட்டது.

''மரியம், உடம்புக்கு ஒன்று மில்லையே?'' என்றார். அவளுடைய உடல் நிலைமையைப் பற்றி அவருக்கு மட்டுமே தெரியும்.

கடுமையான ரத்த அழுத்தம்..... இருதயத்தில் கோளாறு...

மரியம் உடனே பதில் சொல்லவில்லை. மகன் மீதிருந்த கண்களை மெல்ல அகற்றி, ஜார்ஜைப் பார்த்தாள்.

''உடம்பா.... ஒன்றுமில்லை. நன்றாயிருக்கிறேன். அங்கேயே நிற்கிறீர்களே, உள்ளே வாருங்கள்,'' என்றாள்.

தாயையும் மகனையும் மாறி மாறிப் பார்த்தார் ஜார்ஜ்.

''சந்தர்ப்பம் சரியில்லையோ என்று....''

''சே, சே! அதெல்லாமில்லை. போன் புறப்பட்டுக் கொண்டிருந்தேன்.

நீங்கள் வந்தீர்கள்,'' என்றான் மைக்கேல். புன்னகை செய்கிற மாதிரி பாசாங்கு பண்ணக்கூட அவனால் முடியவில்லை. அம்மாவின் பக்கம் திரும்பி, ''குட் நைட்,'' என்றான்.

''நாளைக்கு உனக்குப் போன் செய்கிறேன், மைக்கேல். அதைப் பற்றிப் பேசுவோம்,'' என்றாள் மரியம்.

அவள் முகத்திலடிக்கிற மாதிரி, அவளைப் பயப்படுத்துகிற மாதிரி, ஏதாவது சொல்ல வேண்டுமென்று மைக்கேலுக்குத் தோன்றியது. ஆனால் சொல்ல வரவில்லை. சொல்லத் தெரியவில்லை. அப்படியே சொன்னாலும் என்ன லாபம்?

''மைக்கேல்....''





அவன் பதிலளிக்கவில்லை. ஜார்ஜின் கையைக் குலுக்கிவிட்டு, திரும்பிப் பாராமல் வெளியே நடந்தான்.

அம்மாவின் கண்களிலிருந்த வேதனையை அவன் காணவில்லை. நடுங்கும் கரங்களினால் முகத்தைப் பொத்திக் கொண்டு மெல்ல மெல்ல நாற்காலியில் அவள் சரிந்தாள்.

ஜார்ஜின் முகத்தில் கவலை படர்ந்தது.

மைக்கேல் எதையும் கவனிக்க ல்லை. போய் விட்டான்.

மரியமின் கண் முனைகளில் ண்ணீர் கொப்புளித்துக் கொண்டு ன்றது. ஜார்ஜுக்குக்கூட அது தரியக் கூடாதென்று மறைத்துக் காண்டாள்.

''மரியம், என்ன நடந்தது?'' ன்றார் ஜார்ஜ்.

அவள் அவரை ஏறிட்டு நாக்கினாள். ''மைக்கேல் ஒரு பைத்தியக்காரத்தனமான காரியம் செய்வதாக இருக்கிறான்,'' ன்றாள்.

நான்ஸி விஷயம் என்று அவர் ரிந்து கொண்டார். ''அதெல்லாம் ஒன்றும் செய்ய மாட்டான். நம் ல்லோருக்குமே நடுநடுவே இப்படிப் பைத்தியக்காரத்தனம் தோன்றுவது பழக்கம்தான்,'' என்றார்.

''நாம் வயது வந்தவர்கள். நமது பைத்தியக்காரத்தனங்கள் மறைந்துவிடும். அவர்களுக்கு இளம் வயது. பிடித்தால் விட மாட்டார் கள்,'' என்றாள் மரியம். எண்ண எண்ண அவளுக்குத் துக்கம் பொங்கி யது. எவ்வளவு முயற்சி எடுத்துக் கொண்டிருந்தாள் மகனின் காதலைத் தடுப்பதற்காக. எல்லாம் வீண்! வீண்!

ஒரு பெருமூச்சுடன் நாற்காலி யில் சாய்ந்து கொண்டாள்.

''நீங்கள் மருந்து சாப்பிட வேண்டிய வேளையாயிற்றே? சாப்பிட்டீர்களா?'' என்றார் ஜார்ஜ்.

இல்லையென்று அவள் மிக லேசாய்த் தலையசைத்தாள்.

''எங்கே இருக்கிறது?''

''என் பையில். அந்த மேஜைக்குப் பின்னால்.''

அவர் மேஜைக்குப் போனார். கீழே அந்தக் காகிதங்கள் சிதறிக் கிடந் தன—மைக்கேல் விட்டெறிந்த ஃபைலி லிருந்து பறந்த காகிதங்கள். ஜார்ஜ் அவைகளைப் பற்றி எதுவும் கேட்க வில்லை. ஊகித்துக் கொண்டார்.

தங்கப் பிடி போட்ட அந்த முதலைத் தோல் பையைத் திறந்தார்.

மூன்று வருடங்களுக்கு முன்பு, கிறிஸ்துமஸின்போது அவர் மரிய முக்குப் பரிசு கொடுத்த பை அது.

மாத்திரைகளை அவளிடம் எடுத்து வந்தார்.

ஜாடியிலிருந்து தண்ணீர் சரிக்கும் சத்தம் கேட்டு மரியம் கண்களைத் திறந்தாள். மெல்லப் புன்னகை செய்தவள், ''நீங்கள் இல்லாவிட்டால் நான் என்ன ஆவேனோ?'' என்றாள்.

'நீங்கள் இல்லாவிட்டால் நான் என்ன ஆவேனோ?' என்று ஜார்ஜ் சொல்லவில்லை. நினைத்துக் கொண்டார்.

மாத்திரைகளை விழுங்கினாள் மரியம். ''மைக்கேலினால் எனக்கு மனசுக்குக் கஷ்டம் ஏற்பட்டுவிட்டது, ஜார்ஜ்.''

''சரி, அதைப் பற்றி இப்போ தென்ன? எல்லாம் சரியாகிவிடும்.''

அவளையே பார்த்தபடி நின்றார் ஜார்ஜ். இவளுக்கு இருதய நோய் இருப்பது மைக்கேலுக்குத் தெரியுமா? தெரிந்திருக்காது. தெரிந் திருந்தால் இப்படியெல்லாம் தாய்க்கு வேதனை தர மாட்டான்...

**வி**மான நிலையத்தை நோக்கி டாக்ஸியில் போய்க் கொண்டிருந்த மைக்கேலுக்கும் வேதனையினால் கண்கள் எரிந்தன.

இன்னும் இருபது நிமிடங் களில் அவன் விமானம் புறப்பட இருந் தது.

விமான நிலையத்தை



அடைந்ததும் நான்ஸிக்குப் போன் செய்தான்.

''நான்ஸி, நான் அங்கேதான் வந்து கொண்டிருக்கிறேன். நீ டிரெஸ் செய்து கொள். இரண்டொரு துணி மணி எடுத்து வைத்துக் கொள். ஒன்றரை மணி நேரத்தில் ரெடியா யிருக்கணும்,'' என்றான்.

ஒன்றரை மணி நேரத்துக்குள் ரெடியாவதா? எதற்கு? ஏன்? நான் ஸிக்கு ஒரே திகைப்பு.

''எதற்கு மைக் நான் ரெடியாகணும்?''

ஒரு நிமிடம் மௌனமாக இருந்தான் மைக்கேல். அவன் உதட்டில் ஒரு புன்னகை பிறந்தது. அம்மாவைப் பார்க்க வந்தது முதல், கடந்த இரண்டு மணி நேரத்தில் இது தான் அவன் செய்யும் முதல் புன்னகை.

''ஒரு பிரமாதமான காரியம் நடக்கப் போகிறது! கொஞ்ச நேரத் தில் உனக்கே தெரியும், டார்லிங்!''

நான்ஸிக்குத் திகைப்பு நீங்கா விட்டாலும் சிரிப்பு வந்தது. ''உனக்குப் பைத்தியம்தான் பிடித் திருக்கிறது, மைக்!'' என்றாள்.

அவளுக்கே உரிய அந்த மென்மையான, அற்புதமான சிரிப்பு அவனுக்குப் பரவசமூட்டியது.

''ஆமாம்! பைத்தியம்தான்— உன்னைப் பற்றிய பைத்தியம்!'' என்றான். இப்போதுதான் அவனுக்குத் தன் அசல் இயல்பு திரும்பி வந்த மாதிரி இருந்தது. இப்போதுதான் நமக்கு அறிவு தெளி கிறது என்று நினைத்துக் கொண்டான்.

இண்டர்வியூவில் அதிகாரி: பஞ்சாயத்து ராஜ் என்றால் என்ன அர்த்தம்?

வந்தவர்: எனக்கு வேலை கிடைக்கா துன்னு அர்த்தம்!

—எஸ். முகம்மது யூசுப்

அப்பாடா! இன்னும் கொஞ் நேரத்தில் நான்ஸியும் நாமும் சேர்ந் விடுவோம். நம் காதலைப் பறிக் யாராலும் முடியாது.

அம்மாவுமாச்சு, துப்பறியு நிபுணருமாச்சு! எதுவும், எதுவு அவன் காதலைப் பறிக்க முடியாது.

இன்று ஒரு நாளைக்கு எவ்வளவு நடந்துவிட்டது!

அவனும் அவளும் கட கரைக்குச் சென்றது இன்றுதான் கிராமத்துச் சந்தையில் அந்த ம மாலையை அவன் அவளுக்கு வாங்கி தந்தது இன்றுதான். கடற்கரையி பாறையின் கீழே அந்த மாலையை புதைத்து வைத்தது இன்றுதான்.

ஒரு நாளும் உன்னைப் பிரி மாட்டேன், ஒரு நாளும் உனக்கு குட்பை சொல்ல மாட்டேன் என்று அவளுக்குச் சத்தியம் செய்து கொடுத் தும் இன்றைக்குத்தான்.

அந்தச் சத்தியத்தை காப்பாற்ற வேண்டும்.

நான்ஸி டெலிபோனில் கா திருப்பது ஞாபகம் வந்தது.

''என்ன நான்ஸி, ரெடியாயிரு பார்த்தியா, மறந்து விட்டேனே. இன்னொரு விஷயம், ஒரு பழைய டிரெஸ்ஸைப் போட்டுக் கொள். ஒரு புதிய டிரெஸ்ஸை எடுத்து வைத்துச் கொள். என்ன?''

சொல்லும் போதே அவனுடைய புன்னகை சிரிப்பாக வெடித்தது. கடகடவென்று வாய் விட்டுச் சிரித்தான்.

நான்ஸி ஊகித்து விட்டாள். ''அதாவது.... அப்படியானால்....''

''ஆமாம், நான்ஸி! உனக்கும் எனக்கும் இன்று கல்யாணம்! இன்று ராத்திரியே! என்ன, உனக்குச் சம்மதம்தானே?''

நான்ஸியினால் பேச முடிய வில்லை.

''என்னது.... மைக்கேல், நீ என்ன சொல்கிறே?''

''இன்னுமா புரியவில்லை? இன்று ராத்திரி நாம் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறோம் என்றேன். என்ன? உனக்குச் சம்மதம் தானே?''

''வந்து... மைக்.... வந்து....''

''வந்துமில்லை, போயுமில்லை. நான் சொன்னால் சொன்னதுதான்!''

''இன்று ராத்திரியேவா? என்ன அப்படி அவசரம்?''

''என்னவோ எனக்கு அப்படித் தோன்றுகிறது. அத்தோடு இன்றைக்குப் பௌர்ணமி!''

''ஆமாம்! இன்று நமக்குக் கல்யாணம் என்றால் இன்று பௌர்ணமியாகத்தான் இருக்கும்!'' இப்போது அவள் முகத்திலும் புன்சிரிப்பு பரவியிருந்தது.

கல்யாணம்! அவளுக்குக் கல்யாணம்! அவளும் மைக்கேலும் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறார்கள்!

அவளுக்குக் காலோடு தலை பரபரத்தது.

மைக்கேல் சொன்னான்: ''ஒ மணி நேரத்தில் அங்கே வந்துவி வேன், நான்ஸி. அப்புறம். வந்து.....''

''அப்புறம்?''

''ஐ லவ் யூ, டார்லிங்! மைக்கேலுக்கு ஒரே உற்சாகம்!

போனைக் கொக்கியில் தூச் எறிந்துவிட்டு, விமான நிலையத்ை நோக்கி ஓடினான்.

பாஸ்டனுக்குப் பிளே புறப்பட்டுக் கொண்டிருந்தது.

கடைசிப் பயணியாக அவ உள்ளே தாவினான்.

இனி எதுவும் அவனை தடுத்து நிறுத்த முடியாது. யாராலு தடுத்து நிறுத்த முடியாது.

(தொடரு

# ஹலோ ஹலோ ஹம்ஸா!

ஆபிஸிலிருந்து வரும்போதே உற்சாகமாக வந்தான் சேகர். காலையில் டெலிபோன் பில் அதிகமாக வந்ததற்காக திட்டிவிட்டுப் போனவன்.

''ஹம்ஸா! இனிமேல் டெலிபோன் பில் அதிகமா வராமல் இருக்க ஒரு ஐடியா பண்ணியிருக்கேன்.''

''என்னங்க ஐடியா?''

''ஒரு குறிப்பிட்ட நேரத்தில நான் பக்கத்துல இருக்கிற பப்ளிக் டெலிபோன் பூத்லேர்ந்து உனக்குப் போன் பண்ணுவேன். நீ நம்ம வீட்டிலே ரிஸீவரை எடுத்து, சொல்ல வேண்டிய விஷயத்தைச் சொல்லணும். நான் கேட்டுப்பேன். டெலிபோன்லே காசைப் போட்டுப் பண்ண வேண்டாம். நம்பரைச் சுற்றின உடனே, எதிர் முனையிலே உன் குரலோ, என் குரலோ கேட்கும். குரலைக் கேட்ட உடனே விஷயத்தைச் சொல்லிடலாம். சரியா?''

அடுத்த முறை டெலிபோன் பில்லைப் பார்த்தான். உற்சாகத்தில் துள்ளிக் குதித்தான்.

''பார்த்தியா ஹம்ஸா! டெலிபோன் பில் கால்வாசியா குறைஞ்சிருக்கு?''

''நல்லாயிருக்குங்க. இப்படியே டெலிபோனில் பேசிப்போம்.''

அடுத்த வாரம் ஒரு நாள்.

''என்னங்க! மத்தியானம், பக்கத்து வீட்டு மாமி கூட காஞ்சிபுரம் போயிட்டு வரலாம்னு இருக்கேன். வழக்கம் போல பன்னிரண்டு மணிக்குப் போன் பண்ணுங்க. விவரம் சொல்றேன்,'' என்றாள் ஹம்ஸா.

அவசர வேலை இருந்ததால், அலுவலகத்தில் தங்கிவிட்டு மறுநாள் காலை வீட்டுக்கு வந்த சேகர் அதிர்ந்து போனான்.

கதவு உடைக்கப்பட்டு, பீரோவிலிருந்த அத்தனையும் காணாமல் போயிருந்தன.

காஞ்சிபுரத்திலிருந்து வந்து இறங்கிய ஹம்ஸா ஆடிப் போனாள்.

''ஏங்க! நம்ம வீட்டு ரகசியமெல்லாம் எப்படிங்க மத்தவங்களுக்குத் தெரிஞ்சுது? நேத்து பன்னிரண்டு மணிக்கு நீங்க போன் செய்தபோது கூட, பணம் நகையெல்லாம் ரகசியமா வேற இடத்திலே வெச்சிருக்கேங்கிறதைச் சொன்னேனே....?''

திடுக்கிட்டான் சேகர். ''நேத்து பன்னிரண்டு மணிக்கு நான் உனக்குப் போன் பண்ணவே இல்லியே? அவசரமா வெளியே போயிட்டேன். மறந்திட்டேன்!''

நிவேதா



# 7

பாஸ்டனை அடைந்ததும் மைக்கேல் முதலில் சென்றது சினேகிதன் பென்னின் அறைக்குத்தான்.

கதவைத் தட்டினான். பத்து நிமிடம் தொடர்ந்து தட்டியும் கதவு திறக்கக் காணோம். ஆனால் பென் உள்ளே இருப்பது நிச்சயம் என்று தோன்றியது.

''பென்! எழுந்திருடா! கதவைத் திற! டேய்.....'' மறுபடியும் பலமாகத் தட்டினான்.

அப்பாடா! உள்ளே காலடியோசை கேட்டது.




கதவு திறந்தது.

தூக்கக் கலக்கத்துடன் பென் கதவைத் திறந்தான். தலை கலைந்து, உடைகள் அலங்கோலமாய்....

அவனை உலுக்கினான் மைக்கேல். ''ஏய், பென்! மணி பதினொன்று கூட ஆகவில்லை. அதற்குள்ளாகவா தூக்கம்?''

பென்னின் முகத்தில் படர்ந்திருந்த இளிப்பு! மைக்கேலுக்குப் புரிந்துவிட்டது. ''அடப் பாவி! ஏகமாய்க் குடித்திருக்கிறாய் போலிருக்கிறதே!''

''மிதக்கிறேனாக்கும்!'' என்று பென் குழறினான். கால்கள் தள்ளாடின.

''சரி, சரி! சீக்கிரம் நிதானம் பண்ணிக்கொண்டு கிளம்பு! ஒரு முக்கியமான விசேஷத்துக்குப் போகிறேன். எனக்கு உன்னோட உதவி தேவை!''

''போடா போடா!'' என்றான் பென். ''ஆறு புட்டி வாங்கி வச்சிருக்கேன்! அதெல்லாம் அப்படியே போட்டுவிட்டு வரச் சொல்கிறாயா? நோ!''

மைக் அவனை லட்சியம் பண்ணாமல் சமையலறையின் உள்ளே நுழைந்து விளக்கைப் போட்டான். அந்த வெளிச்சம் பென்னின் கண்களைக் கூச வைத்தது. ''ஏய்! என்னப்பா பண்றே?''

சமையலறை சின்னதாக இருந்தது. பாத்திரங்கள் கண்டபடி இறைந்து கிடந்தன. ''ஏண்டா, பென், என்னதான் செய்வாய் இந்தச் சமையலறையில்? வெடிகுண்டு தயாரிக்கிற இடம் மாதிரி இருக்கே!''

''ஆமாம். தயாரித்து உன் தலையில் போடப் போகிறேன்!'' என்றான் பென் எரிச்சலுடன். தன் ஆனந்தத்தைக் குலைக்கிறான் என்று மைக்கேல் மீது அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது.

''இதோ பார், ஒரு முக்கியமான விசேஷம். என்று சொன்னேனே, காதில் விழவில்லை? அதற்கு உன்னைக் கூப்பிடத்தான்

**தமிழில்: ரா.கி.ரங்கராஜன்**

மூலம்: டானியல் ஸ்டீல்



வந்தேன்.'' பொறுமையுடன் சிரித்துக்கொண்டே சொன்னான் மைக்கேல்.

விசேஷமா! பென்னின் முகத்தில் திடீரென்று பளபளப்பு. ''விசேஷம் என்றா சொன்னாய்? அப்ப ட்ரிங்க்ஸ் உண்டா?''

''உண்டு. எவ்வளவு வேண்டுமானாலும் குடிக்கலாம். ஆனால் விசேஷம் எல்லாம் முடிந்த பிறகுதான்.''

''ப்சு!'' சூள் கொட்டிவிட்டுப் பொத்தென்று நாற்காலியில் விழுந்தான் பென். குஷனின் மெத்மெத்தென்ற அணைப்பில் அவன் தலை ஆடியது.

''டேய் பென், விசேஷம் விசேஷம் என்று அப்போது பிடித்துச் சொல்லிக் கொண்டிருக்கிறேன், என்ன விசேஷம் என்று நீ கேட்கவேயில்லையே?''

''என்ன விசேஷமானால் எனக்கு என்ன? குடிக்கிறதுக்குக் கிடைக்கும்! அவ்வளவுதான் எனக்கு வேண்டும்!''

''பென், நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன்பா!''

''என்னது!'' மைக்கேல் சொன்னது மெதுவே உறைக்க, நிமிர்ந்து உட்கார்ந்தான். அவன் கண்கள் வியப்பினால் விரிந்தன.

''என்ன பண்ணிக் கொள்ளப் போகிறாய்?''

''கல்யாணம்! காதிலே விழவில்லை? கல்யாணம்! நானும் நான்ஸியும் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறோம்.''

''ஓ! நிச்சயதார்த்தப் பார்ட்டிக்குப் போகிறோமா இப்ப?''

''நிச்சயதார்த்தப் பார்ட்டி இல்லை! கல்யாணம்! அசல் கல்யாணம்! இன்றைக்கே! இப்போதே!''

''கல்யாணமா? இப்போதேயா? இந்த நேரத்திலா?''

''ஆமாம், ஆமாம், ஆமாம்! எங்களுக்கு மாப்பிள்ளைத் தோழனாக நீ இருக்க வேண்டும். வருகிறாயா? அந்த அளவுக்கு நிதானத்தில் இருக்கிறாயா?''

''ஓ! நிச்சயமாய்! நிச்சயமாய்! அயோக்கியா, நீ நிஜமாகவே நான்ஸியைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறாயா?'' உற்சாகத்துடன் மேஜையை ஓர் உதை விட்டான். பிறகு வலி தாங்காமல் காலைப் பிடித்துக் கொண்டு துள்ளினான்.

''போய் ஏதாவது நல்லதா டிரெஸ் மாட்டிக் கொள்! இந்தா, உனக்காகக் காப்பி போட்டு வைக்கிறேன்.''

''ஓ....'' பென் அடுத்த அறைக்குள் தள்ளாடியபடி புகுந்தான். சற்றுப் பொறுத்து வெளியே வந்த போது கொஞ்சம் போதை தெளிந்திருந்தது. நல்ல ஷர்ட் அணிந்து, ஒரு டை கூடக் கட்டிக் கொண்டிருந்தான்.

மைக் அவனைப் பார்த்து முக மலர்ச்சியுடன் கை குலுக்கினான்.

பென் சொன்னான்: ''இப்படி ராத்திரி வேளையில் திடீரென்று உன் கல்யாணத்துக்குக் கூப்பிடுவாய் என்று நான் எதிர்






பார்க்கவே இல்லை. காலையிலேயே நீ சொல்லியிருக்கலாம்.''

''எனக்கே காலையில் தெரியாது.''

பென்னின் கண்களில் ஒரு சீரியஸ்னஸ் தோன்றியது. ''உனக்கே தெரியாதா?''

''ஊகூம்.''

''நிஜமாகவா?''

''சத்தியமாய். சரி, சரி. உபதேசம் பண்ண ஆரம்பித்து விடாதே. உபதேசம் கேட்டுக் கேட்டு ஏற்கனவே எனக்குக் காது புளிச்சுப் போச்சு. புறப்படு, புறப்படு. நாம் போய் நான்ஸியைக் கூப்பிட்டுக் கொள்ள வேண்டும்.'' ஆவி பறக்கும் காப்பியை நண்பனின் கையில் கொடுத்தான் மைக்கேல்.

''அதிருக்கட்டும். கல்யாணம் நடக்கப்போவது எந்த இடத்தில்?''

''நீதான் வரப் போகிறாயே! நேரில் பார். அது ஒரு சின்ன கிராமம். ரொம்ப வருஷங்களாய் அந்த ஊர் மீது எனக்கு ஒரு மோகம். சின்னப் பையனாயிருந்த போது கோடை விடுமுறைக்காகப் போயிருந்த இடம். இப்ப கிளம்பினால் ஒரே மணி நேரத்திலே அந்தக் கிராமத்தை அடைந்து விடலாம்.''

''திருமண லைசென்ஸ்?''

''அதெல்லாம் தேவையில்லை. அது விசித்திரமான ஊர். ஒரே மூச்சில் எல்லாவற்றையும் முடித்துக் கொள்ளலாம்.''

காப்பியை ஒரே மடக்கில் விழுங்கிவிட்டுத் தலையை ஆட்டினான் பென். ''இருந்தாலும் எனக்கென்னவோ படபடவென்று இருக்கிறது, மைக், உனக்குப் பயமாக இல்லை?''

மைக் அலாதியான அமைதியுடன் இருந்தான். ''பயமா? துளிகூட இல்லை.''

''இதன் விளைவுகள்... உனக்குத் தெரியாதா என்ன?



அடுத்த வீட்டுக்கு இரவல் கொடுத்த காப்பிப் பொடியை நாங்கள் வசூல் செய்து தருகிறோம்.

எனக்குப் புரியவில்லை.... அவ்வளவு தான்..... கல்யாணம் என்பது....'' தலையை மறுபடியும் அசைத்து, தன் கால்களைப் பார்த்தவாறு இருந்தான். ஒரு காலுக்குத்தான் செருப்பு அணிந்திருப்பது தெரிந்தது. இன்னொரு செருப்பைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டுமென்று ஞாபகம் வந்தது. ''ஆனால்.... ஒண்ணு சொல்றேன். நான்ஸி அட்டகாசமான பெண்.''

''அதற்கும் மேலே!'' என்ற மைக், சோபாவுக்கு அடியில் தேடி நண்பனின் செருப்பைக் கண்டெடுத்துத் தந்தான். ''மனைவி என்கிறவள் எப்படியெல்லாம் இருக்கணுமென்று நான் ஆசைப்பட்டேனோ அவ்வளவும் நான்ஸியிடம் இருக்கு.''

''அப்படியானால் இந்தக் கல்யாணம் உங்கள் இரண்டு பேருக்கும் பிரமாதமான வாழ்க்கையைத் தரட்டும் மைக், என்றென்றைக்கும்.'' அவன் கண்களில் நெகிழ்ச்சி மின்னியது.

ஒரு கணம் அவன் கைகளைப் பற்றிக் கொண்டான் மைக். ''தாங்க்ஸ்!''

இருவரும் ஒரு கணம் வெளியே பார்த்தார்கள். புறப்பட வேண்டும் என்ற அவசரம்.

திருமணம் என்பதை சீரியஸாக எடுத்துக் கொள்ளாமல் உல்லாசமான துள்ளலாக அந்த நிமிடத்தை அனுபவிக்கத் துடித்தார்கள்...

''இப்ப நான் சரியாயிருக்கேனா?'' கேட்டபடி பென் தன்

பாண்ட் பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்துக்கொண்டான்–பர்ஸ் இருக்கிறதா, சாவி இருக்கிறதா என்று.

''பிரமாதமாயிருக்கிறாய்!'' என்றான் மைக்.

''கடவுளே! என் சாவி எங்கே தொலைந்ததோ தெரியலியே?''

மைக் அவனைப் பார்த்துச் சிரித்த பிறகே அவனுக்குப் புரிந்தது. பெல்ட்டிலுள்ள வளையத்தோடு சாவி கோத்திருந்தது பத்திரமாய்.

''கமான் பென். முதலில் இங்கிருந்து கிளம்புவோம்.''

இருவரும் கைகளைக் கோத்துக்கொண்டு, மதுக் கடைகளில் கேட்ட பாட்டுக்களை உரக்கப் பாடிக் கொண்டு புறப்பட்டார்கள். கட்டிடம் முழுதும் அவர்கள் பாட்டு எதிரொலித்தது. ஆனால் யாரும் அதைப் பொருட்படுத்தவில்லை. அந்தக் கட்டிடம் முழுவதும் மாணவர்கள் நிரம்பியிருந்தார்கள். இன்னும் இரண்டு வாரத்தில் விடுமுறை என்பதால் எல்லா அறையிலுமே குதூகலம் கொடி கட்டிப் பறந்து கொண்டிருந்தது.

பத்தாவது நிமிடம் அவர்கள் நான்ஸியின் வீட்டு முன்னே காரை நிறுத்தினார்கள். மைக் ஹாரனை அடித்தான். மாடி ஜன்னலிலிருந்து நான்ஸி கை வீசினாள். அவள் முகத்தில் சிறிது படபடப்பு தெரிந்தது.

ஒரு நிமிடத்துக்கெல்லாம் இறங்கிக் காரினருகே வந்தாள்.

ஆறு வித்தியாசங்கள் விடை:



1. செங்கல்
2. கால்
3. அலமாரி
4. ஜட்டி
5. நெருப்பு
6. சட்டை

இரண்டு இளைஞர்களுக்கும் ஒரு கணம் என்ன பேசுவதென்று தெரியவில்லை.

மைக்தான் முதலில் பேசினான். ''நான்ஸி! என்ன அற்புதமாயிருக்கிறாய்! இந்தத் திருமண டிரெஸ் எங்கே கிடைத்தது?''

''என்னிடம் இருந்தது,'' என்றாள் அவள்.

அவர்கள் முகத்தில் புன்னகை பரவியது.

இந்த அகால நேரம், இந்தத் திடீர் ஏற்பாடு–இவைகளையும் மீறி, தானொரு மணப் பெண் என்ற உணர்வால் அவளுடைய தேகமெங்கும் நாணம் பரவியிருந்தது. நீண்ட வெள்ளை உடையும், தலையில் கருங் கூந்தலுக்கு மேலே பளபளப்பான ஸாடின் தொப்பியும் அணிந்திருந்தாள். மூன்று வருடத்துக்கு முன்பு ஒரு தோழியின் கல்யாணத்தின் போது அணிந்து கொண்ட உடை அது. ஆனால் மைக் இதுவரை பார்த்ததில்லை. வெள்ளைக் காலணி அணிந்து, லேஸ் போட்ட கைக்குட்டையைக் கையில் பிடித்திருந்தாள்.

''என்ன பார்க்கிறே? என் டிரெஸ் கொஞ்சம் பழசு, கொஞ்சம் புதிசு–நீ சொன்ன மாதிரியே. இந்தக் கைக்குட்டை என் பாட்டியினுடையதாக்கும்!''

அற்புத வனப்போடு திகழ்ந்த அவளைப் பார்த்தது பார்த்தபடி மௌனமாக இருந்தான் மைக். என்ன பேசுவதென்றே தெரியவில்லை. ஏன், பென்கூட அவளைப் பார்த்து முழுக்கப் போதை தெளிந்துவிட்டான். ''நீ ராஜகுமாரி மாதிரி இருக்கிறாய், நான்ஸி.''

''தாங்க்ஸ், பென்,'' என்றாள் நான்ஸி.

நடக்கப் போகும் திருமணத்தைப் பற்றி மட்டுமே அவர்கள் எண்ணினார்கள். வரப்போகும் ஆபத்தை அறியவில்லை.

(தொடரும்)

# காதல் மேல் ஆணை

மூலம்:
டானியல் ஸ்டீல்

மைக்கேல் தன் காருக்குள் ஏறிக் கொண்டான். பென் அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். நான்ஸி அருகில் வந்ததும், ''கொஞ்சம் இரு, நான்ஸி,'' என்றான் பென்.

''ஏன்?''

பென் தன் கழுத்தைத் தடவி எதையோ எடுத்தான்.

அழகான ஒரு தங்கச் செயின்.

''இது நான் டிகிரி வாங்கியதும் போட்டுக்கொள்ள வேண்டும் என்று சொல்லி என் அக்கா எனக்குப் பரிசு கொடுத்தது. அதுவரை காத்திருக்கப் பொறுமையில்லாமல் மாட்டிக்கொண்டு விட்டேன். உன் கல்யாணத்துக்காக இதை இரவல் தருகிறேன். போட்டுக்கொள்.'' காரிலிருந்து தலையை நீட்டி நான்ஸியின் கழுத்தில் அதை அணிவித்தான் பென். அவள் பொன்நிறக் கழுத்தில் அந்தத் தங்கச் சங்கிலி ஜொலித்தது.

அதைத் தொட்டுப் பார்த்தபடி, ''அருமை!'' என்றாள் அவள்.

''நீ கூடத்தான்.''

மைக்கேல் இத்தனை நேரம் அவள் அழகைப் பார்த்துக் கிறங்கிப் போய் உட்கார்ந்திருந்தான். சில நிமிடங்களுக்குப் பின் பிரமிப்பிலிருந்து விடுபட்டு வெளியே இறங்கி, நான்ஸிக்காகக் காரின் கதவைத் திறந்தான்.

''டார்லிங், இப்படி என் பக்கத்தில் உட்கார்,'' என்றவன், ''பென், நீ பின் சீட்டுக்குப் போ.''

''ஏன்? அவள் என் மடியில் உட்காரட்டுமே?'' பொய்க் கோபத்துடன் முணுமுணுத்துக் கொண்டே பென் இறங்கிப் பின் சீட்டுக்குச் சென்றான்.

மைக் அவனை முறைத்ததும், ''சரிப்பா, சரி! மாப்பிள்ளைத் தோழனாயிற்றே, நமக்குச் சில ஸ்பெஷல் சலுகைகள் கிடைக்கும் என்று நினைத்து விட்டேன்!''

''வாயை மூடிக்கொண்டு வா! இல்லாவிட்டால் இங்கே ஒரு கொலை விழும்!'' என்றான் மைக்.

நண்பர்கள் இருவரும் ஒருவரையொருவர் சீண்டிக் கொண்டிருக்க, மைக்கேலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள் நான்ஸி. தான் மணக்கவிருக்கும் மைக்கேலைப் பார்க்கப் பார்க்க அவள் முகம் ஆனந்தத்தால் பூரித்தது.

அதே சமயம், மைக்கேலின் அன்னை மரியமை நினைத்து ஒரு கணம் அவள் மனம் சஞ்சலப்பட்டது. அம்மாவிடம் அனுமதி கேட்க மைக்கேல் போனானே, அங்கே என்ன நடந்தது என்று கேட்க நினைத்தாள். மறுகணம்

மிழில்:
ா.கி.ரங்கராஜன்



அந்த எண்ணத்தைத் தன் மனத்தி லிருந்து விரட்டியடித்தாள். இப்பாது நினைக்க வேண்டிய தெல்லாம் தன்னைப் பற்றி; மைக்கேலைப் பற்றி; நடக்கவிருக்கும் திருமணத்தைப் பற்றி.

''மைக், நீ செய்வது சுத்தக் கிறுக்குத்தனமாய் இருக்கிறது!'' என்று சிரித்தாள். ''ஆனால் என்ன அற்புதமான ராத்திரி! இந்த ராத்திரியை நான் மறக்கவே மாட்டேன்.''

மூவரும் மாறி மாறிச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

திருமணத்தை நடத்துவதற்கு மைக்கேல் மனத்தில் தேர்ந்தெடுத்திருந்த கிராமத்தை நோக்கிக் கார் பறந்து கொண்டிருந்தது.

சிறுகச் சிறுக அவர்கள் மௌனமானார்கள். தங்கள் தங்கள் எண்ணங்களில் ஆழ்ந்து போனார்கள். அம்மாவைச் சந்தித்ததைப்

ற்றியும் அப்போது நடந்த
ம்பாஷனைகளைப் பற்றியும் மைக்
கல் நினைத்தவாறிருந்தான்.
ான்ஸியோ, தன் வாழ்க்கையில்
ன்றைய தினம் எவ்வளவு
க்கியமானது என்று எண்ணியபடி
ருந்தாள்.

அவளுக்கு இருக்கை கொள்ள
ல்லை. அவள் எடுத்து வந்திருந்த
ாட்டியின் கைக்குட்டை இந்தக்
கைக்கும் அந்தக் கைக்குமாக மாறிக்
சங்கிக் கொண்டிருந்தது.
'இன்னும் ரொம்ப தூரம் போக
வண்டுமா, மைக்?''

''இதோ வந்தாயிற்று.
இன்னும் ஐந்தே மைல்தான்,''
என்ற மைக்கேல் அவள் கையை
மெல்ல வருடிக் கொடுத்தான்.
'இன்னும் சில நிமிடங்களில்
நமக்குக் கல்யாணமாகிவிடும்,
டார்லிங்.''

''வேகமாய் ஓட்டுங்க,
மிஸ்டர்!'' பின் சீட்டிலிருந்து பெண்
குரல் கொடுத்தான். ''எனக்குத்
தைரியம் குறைந்து
கொண்டிருக்கிறது. சீக்கிரம்
போகாவிட்டால் இறங்கி ஓடிவிடு
வேன்!''

பாட்டு மாதிரி இழுத்து
இழுத்து அவன் பேசிய விதத்தைக்
கண்டு மைக்கேலும் நான்ஸியும்
சிரித்தார்கள். பெண்ணும் அவர்கள்
சிரிப்பில் கலந்து கொண்டான்.

மைக் அக்ஸலேட்டரை
அழுத்தினான். கார் ஜிவ்வென்று
முன்னே தாவி, ஒரு திருப்பத்தில்
திரும்பியபோது—

அவர்கள் சிரிப்பு சடேரென்று
நின்றது.

'ஆ!' என்ற கூச்சல் மூன்று
பேரின் தொண்டையிலிருந்தும் ஒரே
சமயம் வெளிப்பட்டது.

எதிரே, பாதையின் நட்ட
நடுவாக, தலை தெறிக்கும் வேகத்
துடன் அந்த லாரி வந்து
கொண்டிருந்தது—வெறி பிடித்த
மாதிரி. லாரியை ஓட்டி வந்தவன்,
அரைத் தூக்கத்தில் இருந்தானோ
என்னவோ,— லாரி அவன்
கட்டுப்பாட்டில் இருப்பது போலத்
தெரியவில்லை.

மைக்கேல் தன் காரை
சட்டென்று ஒடித்துத் திருப்ப
முயன்றான். அதற்குள்—

நான்ஸிக்கு நினைவிருந்த
தெல்லாம்—

'ஐயோ!' என்ற பெண்ணின்
அலறல்தான்.

காரின் கண்ணாடிகள்
தெறிக்கிற ஓசை —உடைகிற ஓசை—
உலோகங்கள் நொறுங்குகிற, அரை
படுகிற உறுமுகிற ஓசை.... இரண்டு
இஞ்சின்கள் மோதி ஒன்றுக்குள்
ஒன்று சிக்கிக் கொள்ளுகிற சத்தம்...
கை கால்கள் பிய்த்துக் கொண்டு

## மார்ச் 29



நிருபர்: உங்க பிறந்த தேதி
என்ன?

நடிகை: மார்ச் 29.

நிருபர்: எந்த வருஷம்?

நடிகை: ஒவ்வொரு வருஷமும்
தான்.

—முத்து

வெளியே விழுகிற மாதிரி பிரமை....
சீட்டுகள் கிழிபட, பிளாஸ்டிக் பகுதிகள் சிதற, கண்ணாடித் தூள்கள் எல்லாவற்றையும் போர்வைபோல் மூடிக் கொள்ள—

இருட்டு, இருட்டு, மொத்தமும் இருட்டு.

முதலில் பிரக்ஞை வந்தது பென்னுக்குத்தான்.

ஆனால் பல வருடங்களாக உணர்வற்று கிடந்தது போலிருந்தது அவனுக்கு. காரின் முன்புற டாஷ் போர்டுக்குள் அவன் தலை சிக்கியிருந்தது. காதுகளில் மடேர் மடேரென்று யாரோ அறைவது மாதிரி இருந்தது. சுற்றிலும் எங்கெங்கும் அந்தகாரம். வாய்க்குள் ஒரு பிடி மண் அடைத்துக் கொண்டது போல் இருந்தது. கண்ணைத் திறந்தான். அதற்கே பல மணி நேரம் பிடித்த மாதிரி தோன்றியது. குமட்டிக் கொண்டு வந்தது.

தன் கண்களில் படுவது என்னவென்று அவனுக்கு முதலில் புரியவில்லை. என்னவோ கோரமாக....

பிறகு புரிந்தது—தன் கண்ணெதிரே தெரிவது மைக்கேலின் வலது கண் என்று. மைக்கேலின் அருகே முன் சீட்டில் கிடக்கிறோம் என்பதை அறிந்து கொண்டான். ஆனால் மைக்கேலின் முகத்தைத் தவிர வேறெதுவும் தெரியவில்லை. அந்த முகத்தில் மெல்லிய கீற்றாக ரத்தம் ஓடிக் கொண்டிருப்பதைக் கண்டான். அது வழிந்து கழுத்தில் படர்வதைப் பார்த்தான்.

ரொம்ப நேரம் வரை அந்த ரத்தத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். வேறெதுவும் அவனுக்கு மூளையில் உறைக்கவில்லை. மைக்.... ரத்தம் வழிய.... மைக்... ரத்தம் வழிய....

கடவுளே!

என்ன நடந்ததென்பது




மனைவி: சிகரெட் பிடிச்ச கேன்சர் வரும்னு தெரியும்லே, ஏ பிடிக்கிறீங்க?

கணவன்: உன் சமையலை சாப்பிட்டால் கூடத்தான் அல்ச வரும்னு தெரியும். நான் தினமு சாப்பிடலையா?

—டேச

அவனுக்குத் திடீரென நின வந்தது.

விபத்து! மைக்கேல் கா ஓட்டிக் கொண்டிருந்த போது அ விபத்து நிகழ்ந்தது....

மெதுவே நிமிர்ந்து பா முயன்றான். ஆனால் இரும் தடியால் அடித்த மாதிரி த மறுபடி தொய்ந்தது.

சில நிமிடங்கள் சென்ற மிகுந்த பிரயத்தனத்துடன் மூச் இழுத்தான். கண்களை மீண் திறந்தான்.

இன்னும் மைக்கே அப்படியேதான் கிடந்தான். ரத் வழிந்து கொண்டிருந்தது. ஆன மூச்சு வந்து கொண்டிருப்பது தெ தது.

இப்போது பென்னின சற்று அசைய முடிந்தது. தலை உயர்த்த முடிந்தது. மைக்கேலு அப்பால், சாலையின் ஓரமாக அ லாரி கவிழ்ந்து கிடந்தது. ஆன அதன் இஞ்சின் பகுதிக்குக் கீழே லா டிரைவர் இறந்து கிடப்பது அவ கண்ணுக்குப் படவில்லை.

இன்னொரு விஷயம் அவ மூளைக்குச் சட்டெனப் பட்ட

ாரின் எல்லாக் கதவுகளும் திறந்து ந்க்கின்றன. காரின் எந்த இடத்தி ும் கண்ணாடி இருக்கவில்லை. த்தனை கண்ணாடிகளும் பொடிப் பாடியாகி அவர்களை அபிஷேகம் ெய்த மாதிரி மூடிக் கொண்டிருந் ன. சுற்றிலும் சின்னச் சின்னக் ண்ணாடித் துண்டுகள் இரைந்து டந்தன.

மைக்கின் பக்கத்திலும் கதவே ில்லை. மெல்ல மெல்ல நினைவு ந்தது. மைக்கின் அருகில் யாரோ ட்கார்ந்திருந்தார்களே.... யார்? ஆமாம்... நான்ஸி! மூவரும் ங்கேயோ போய்க் கொண்டிருந் ்தாமே? எங்கே?

ஒழுங்காக நினைவு படுத்திக் கொள்ள அவனால் முடியவில்லை. தலை பயங்கரமாக வலித்தது. கொஞ்சம் நகர்ந்தான். காலில் தாள முடியாத வலி......

இப்போது நான்ஸி கண்ணுக் குத் தெரிந்தாள்.

கடவுளே! நான்ஸிதானா அது! உடை வெள்ளையும் சிவப்புமாக.... தரையோடு கவிழ்ந் திருந்த அவள் முகம்.... அதை அவள் தொப்பி மூடிக் கொண்டிருந் தது.

நான்ஸி... இறந்து விட்டாளா என்ன?

## ஜோக் ரூபாய் 108

''அந்த டாக்டருக்குப் போஸ்ட் மார்ட்டம் மட்டும்தான் பண்ணத் தெரியு மாம்.''

''ஏன்?''

''அவர் 'கரஸ்பாண்டென்ஸ் கோர்ஸ்'லே படிச்சவராம்!''

—லட்சுமி ஆவுடைநாயகம்



அவன் தன் காலின் வேதனையை மறந்தான். தன்னைத் தானே இழுத்து இழுத்து அவளைச் சமீபித்தான். அவளை... அவளைப் புரட்டிப் பார்க்கவேண்டும்.... அவளுக்கு உதவி செய்ய வேண்டும்.... நான்ஸி....

அவள் கூந்தலைத் தொட் டான். வழவழவென்ற பொடி கையில் பட்டது. என்ன பொடி அது? புரிந்தது. காரின் முன்புறக் கண்ணாடி பொடியாகி அவள் தலையெங்கும்.... முடியெங்கும்.... உடையெங்கும்....

ஐயோ கடவுளே! தன் சக்தியனைத்தையும் திரட்டி அவளைப் புரட்டினான்.

அவனை அச்சம் கப்பிக் கொண்டது. சின்னப் பையனைப் போல் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான்.

''தெய்வமே!'' என்று விம்மினான்.

நான்ஸியின் தொப்பி ரத்தத் தில் சொதசொதத்திருந்தது. தொப் பிக்கு அடியில்—

முகமென்று எதுவ்மே காணோம். உயிரோடு இருக்கிறாளா இல்லியா? அதுவும் தெரியவில்லை.

'வேண்டாம்! அவள் உயிரோடு இருக்க வேண்டாம்! இறந்து போவதே மேல்!' என்று பென்னுக்குத் தோன்றியது. ஏனெனில்—

நான்ஸி என்று சொல்லும்படி அங்கே எதுவுமே இல்லை. இது நான்ஸியே அல்ல. அவளுடைய அழகான முகத்தின் மிச்சம் என்று சொல்லக்கூடியதாக எதுவுமே இல்லை. சிதைந்து, கோரமாகி...

நான்ஸியின் ரத்தமும் அவனு டைய கண்ணீரும் கலக்க, பென் மறுபடியும் மூர்ச்சையானான். அந்த மயக்கம் கொடிய வேதனையிலிருந்து தற்காலிகமாக அவனுக்கு விடுதலை கொடுத்தது.

(தொடரும்)

# காதல் மேல் ஆணை 9

மூலம்:
டானியல் ஸ்டீல்

ஆஸ்பத்திரி.

ரத்தம் வற்றி வெளிறிப்போன முகத்துடன் நினைவற்றுக் கிடந்தான், மைக்கேல்.

அவன் தாய் மரியம் அந்த அறையின் மூலையில் அசையாமல் உட்கார்ந்திருந்தாள். அவள் முகம் எந்த உணர்ச்சியுமற்று வெறிச்சிட்டிருந்தது.

முன்னொரு நாள் இதே ஆஸ்பத்திரியில், இதே அறையில், இதே முகத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தது அவளுக்கு நினைவு வந்தது.

இதே முகமல்ல—இதே போன்ற வேறொரு முகம். மைக்கேலின் தந்தை—பிரடெரிக் —இங்கேதான் படுத்திருந்தார். பயங்கர மாரடைப்பு ஏற்பட்டு, சில மணி நேரத்துக்கெல்லாம் அவர் இறந்துவிட்டது இதே இடத்தில்தான். இதேபோல அன்றும் சிலையாக, இதேபோல் உள்ளுக்குள் பயந்து நடுங்கிய வண்ணம், இதே போல் தன்னந்தனிமையாக உட்கார்ந்திருந்தாள்...

அந்த நாளைய நினைவு வந்தபோது அவள் தொண்டையை அடைத்தது. நீண்ட ஆழமான பெருமூசசுடன் விம்மலை அடக்கிக் கொண்டாள். கூடாது. அழக் கூடாது. அன்றைய நிகழ்ச்சிகளை இப்போது ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது.

சற்றே திரும்பி நர்ஸின் முகத்தைப்பார்த்தாள். மைக்கேலைக் கூர்ந்து கவனித்தபடி இருந்தாள், நர்ஸ். ஆனால் முகத்தில் கலவரம் எதுவும் தென்படவில்லை.

முந்தின இரவு விபத்து நிகழ்ந்தது. செய்தி கிடைத்ததும் விடிகாலை ஐந்து மணிக்குக் காரில் பறந்து வந்துவிட்டாள் மரியம். கார் கிடைத்திரா விட்டால் கால் நடையாகவே ஓடி வந்திருப்பாள்.

பகல் பூராவும் மயக்கமாகவே கிடக்கிறான், மைக்கேல்.

மரியம் இந்த அறையை விட்டு அந்தண்டை இந்தண்டை நகரவில்லை. அவன்தான் எல்லாம் அவளுக்கு இப்போது. 'மைக்கேல், உன்னைவிட்டு நான் நகர மாட்டேன். உனக்குத் தருவதற்காக ஒரு பெரும் பரிசுடன் நான் காத்திருக்கிறேன். தொழில் சாம்ராஜ்யம். பதவி, வெற்றியின் அதிகாரம், உனக்கு நான் தரவேண்டும். நீ போகாதே. நான் உனக்காக வைத்திருக்கும் மகத்தான பரிசைத் தூக்கி எறிந்துவிட்டுப் போய் விடாதே மைக்கேல், போய் விடாதே.'

கடவுளே! இவ்வளவும் யாரால் வந்தது?

அந்தச் சிறுக்கியினால்! அவள்தான் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்று மைக்கேலுக்கு யோசனை சொல்லியிருக்க வேண்டும்.

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்



அவள்தான் அவனை அழைத்துப் போயிருக்க வேண்டும். அவள்.... அவள்....

மரியம் பல்லைக் கடித்தாள்.

நர்ஸ் எழுந்து சென்று மைக்கேலை நெருங்கி அவன் இமைகளை உயர்த்திப் பார்த்தாள்.

மரியமும் சட்டென எழுந்து கொண்டாள். நர்ஸின் பக்கத்தில் மௌனமாய் நின்று கொண்டு மைக்கேலைப் பார்த்தாள்.

வெள்ளை உடையில் இருந்த நர்ஸ் மைக்கேலின் நாடியைப் பிடித்துப் பார்த்தாள். அவள் முகத்தில் எந்தச் சலனமும் தெரிய வில்லை. ரொம்ப நேரமாகச் சொல்லிக் கொண்டிருப்பது போலவே இப்போதும், ''ஒன்றும் மாறுதல் இல்லை,'' என்றாள்.

'இப்படி வாருங்கள்,' என்று மரியமுக்குச் சைகை காட்டி வெராந்தாவுக்குச் சென்றாள் நர்ஸ். மரியம் பின்தொடர்ந்தாள்.

இப்போது நர்ஸ் மைக்கேலைப் பற்றிக் கவலைப்படவில்லை. அவனுடைய தாயைப் பற்றித்தான் கவலைப் பட்டாள்.

''நீங்கள் ஐந்து மணிக்கெல் லாம் வீட்டுக்குப் போய்விட வேண்டும் என்று டாக்டர் விக்ஃபீல்டு என்னிடம் சொல்லியிருக்கிறாரம்மா. இப்போது.....'' கைக் கடியாரத்தைப் பார்த்துவிட்டு, மன்னிப்புக் கேட்கிற மாதிரி ஒரு புன்னகையை வெளி யிட்டாள். மணி ஐந்தே கால் ஆகி யிருந்தது.

அதாவது, சரியாய்ப் பன்னிரண்டு மணி நேரமாக நகராமல் உட்கார்ந்திருக்கிறாள் மரியம்! இரண்டே இரணடு கப் காப்பி குடித்ததோடு சரி. மற்றபடி இம்மியும் நகரவில்லை.

ஆனால் மரிய முக்குக் களைப்பாயில்லை. பசியில்லை. எதுவுமே இல்லை.

மைக்கேலை விட்டு நகரக் கூடாது என்ற பிடிவாதம் ஒன்றுதான் இருந்தது.

நர்ஸிடம், ''எனக்காக அக்கறை காட்டுவதற்கு நன்றிம்மா. கொஞ்ச தூரம் ஹால்வரை காலார நடந்து போய்விட்டுத் திரும்பி வருகிறேன்,'' என்றாள்.

அவள் மைக்கேலை விட்டுப்போகத் தயாராயில்லை. ஒருபோதும் தயாராயில்லை. இப்படித்தான் அன்றொரு நாள் கணவரை விட்டுக் கொஞ்சம் வெளியே போனாள். அதுவும் ஒரே ஒரு மணி நேரம் சாப்பாட்டுக்காக. ஏதாவது சாப்பிடத்தான் வேண்டும் என்று எல்லோரும் கட்டாயப் படுத்தியதால்.

அதற்குள் அது நேர்ந்து விட்டது. அவள் திரும்பி வருவதற்குள் கணவர் போய்விட்டார்.

இந்தத் தடவை அந்த மாதிரி நடக்க அவள் விடப் போவதில்லை. மைக்கேலின் பக்கத்தை விட்டு நகராதிருக்கும் வரையில் அவனுக்கு ஓர் ஆபத்தும் நேராதென்று அவளுக்குத் தெரியும். டாக்டர் விக்ஃபீல்டும் சொல்லியிருக்கிறார்—மைக்கேலுக்கு உள்ளுக்குள்தான் காயம் என்று. சீக்கிரமே மயக்கம் தெளிந்துவிடும் என்று சொல்லியிருக்கிறார். இருந்தாலும் அவள் விஷப் பரீட்சை செய்யத் தயாராயில்லை. அவள் கணவரைப் பற்றிக்கூட அப்படித்தான் சொன்னார்கள்—ஒன்றுமில்லை, மயக்கம் தெளிந்து எழுந்துவிடுவார் என்றார்கள். எழுந்திருக்காமலே போய்விட்டாரே?

நர்ஸின் பின்னணியில் மங்கல் நீலமாகத் தெரிந்த சுவரையே பார்த்தபடி நின்றிருந்த போது மரியத்தின் கண் முனையில் நீர் பளபளத்தது.

''மிஸஸ் ஹிலியர்டு....'' என்றபடி மரியாதையுடன் மரியமின் கையைத் தொட்டாள் நர்ஸ். அதுவே மரியத்துக்குத் தூக்கி வாரிப் போட்ட மாதிரி இருந்தது. ''நீங்கள் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கொண்டால் தேவலை, அம்மா. மூன்றாவது மாடியில் உங்களுக்காக ஓர் அறை டாக்டர் ஏற்பாடு செய்து வைத்திருக்கிறார்.''

''அதற்கெல்லாம் தேவையில்லை.'' நர்ஸைப் பார்த்துச் சோகையாக ஒரு புன்னகையை வெளியிட்டுவிட்டு, வெராந்தாவின் மறுகோடியை நோக்கி மெல்ல நடந்தாள் மரியம்.

ஜன்னல் வழியே பளீரென்று சூரிய வெளிச்சம் பிரவேசித்துக் கொண்டிருந்தது. அதன் விளிம்பில் ஜாக்கிரதையாக உட்கார்ந்து கொண்டாள். ஒரு சிகரெட் பற்ற வைத்துக் கொண்டாள். பல மணி நேரத்துக்குப் பிறகு அவள் பிடிக்கும் முதல் சிகரெட். எட்டத்தில் ஒரு சின்ன வெள்ளை நிறச் சர்ச் தெரிந்தது. சூரிய வெளிச்சம் அதன் மீது சாய்ந்து கொண்டிருந்தது. பாஸ்டன் நகருக்குச் சமீபத்தில்தான் இந்த மருத்துவமனை அமைந்திருந்ததால், தலைசிறந்த டாக்டர்களை உடனே வரவழைத்துச் சிகிச்சை கொடுக்க வசதியாக இருந்தது. பிரயாணத்துக்குத் தகுதியாகும் அளவுக்கு மைக்கேலுக்குக் குணம் ஏற்பட்டவுடன் நியூயார்க்கிற்கு அழைத்துச் செல்வதென்று ஏற்பாடு.

இப்போதைக்கு மைக்கேல் சிறந்த டாக்டர்களின் கண்காணிப்பில் இருக்கிறான். ஆபத்தான நிலைமையைத் தாண்டி விட்டதாகச் சொல்கிறார்கள்.

அந்தப் பையன் பென், பாவம், அவனுக்கும் சரியான அடியாம். ஆனால் நினைவோடு நல்லபடி இருந்ததால் அவன் அப்பா வந்து



"என் ஃப்ரிட்ஜ் அடிக்கடி தொல்லை. டு-இன்-ஒன் அப்பப்ப பாடுவதில்லை.
இந்த இரண்டு வருஷத்திலே ஒன்னுல மட்டும்
தொல்லையே இல்லை.
என்னோட ஸியர்ஸ்-எல்காட் டிவி."
அதிக சிறப்பென்றால் அனைவருமே கவனிப்பர்.




சுனில் கவாஸ்கர், முழுமையான மனநிறைவு
பெற்ற எங்கள் வாடிக்கையாளர். அவரது
சிறப்புக்கும், சிறந்த தரத்துக்கும்
ஸியர்ஸ்-எல்காட் டிவி ஈடு கொடுப்பதே
அதற்குக் காரணம். ஸியர்ஸ்-எல்காட்,
கருப்பு-வெள்ளை மற்றும் கலர் பலப்பல
மாடல்களில் வருகிறது. எல்லா மாடல்களிலும்
உள்ளடங்கிய வோல்டேஜ் ஸ்டெபிலைசர்
உள்ளது. விற்பனைக்குப்பின் சிறந்த சேவையும்
தருகிறது.
எல்லா ஸியர்ஸ்-எல்காட்
டிவிக்களிலும் சர்க்யூட் இந்திய
நிலைமைகளுக்கேற்ப, விசேஷமாக
வடிவமைக்கப்பட்டுள்ளது. ஒலி, ஒளி, பளிங்கு
போன்ற படத்தெளிவு.
தொழில் நுட்பத்திறனில் ஸியர்ஸ்-
எல்காட்டிற்கு இணை ஒன்றே ஒன்றுதான்...
சபாஷ்! சரியாக ஊகித்து விட்டீர்களே!
மாடல் 4V DX
ஸியர்ஸ்
எல்காட்
டெலிவிஷன்கள்
*ஸியர்ஸ் கோரல் எலெக்ட்ரானிக்ஸ் லிமிடெட்டின்
வர்த்தகச் சின்னம். இது இந்திய தொழில் முனைவோரால்
முற்றிலும் உடைமையாக்கப்பட்டு நிர்வகிக்கப்படுகிறது.

ஆம்புலன்ஸில் பாஸ்டன் நகருக்கு அழைத்துச் சென்றுவிட்டார். கையில், கழுத்தில், பாதத்தில், தொடையில்—பல இடங்களில் எலும்பு முறிவு ஏற்பட்டிருந்தது. ஆனால் விரைவில் குணமாகிவிடுவான் என்று சொல்கிறார்கள்.

அந்தப் பெண்—இவ்வளவும் அவளால் வந்தது தான். அவள் பிழைக்க வேண்டியது அவசியமா...

மரியம் சிகரெட்டைக் கீழே போட்டுக் காலால் அழுத்தித் தேய்த்தாள்.

அவளும் குணமடைந்து விடுவாள் என்று டாக்டர்கள் சொன்னார்கள். எப்படியும் உயிர் பிழைத்து விடுவாளாம். ஆனால் ஒன்று: அவள் முகம் சிதைந்துவிட்டது. வேண்டும் அவளுக்கு...

இப்படி நாம் கோபப்படுவது கூடாது என்று மரியம் தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள். அந்தப் பெண்ணைப் பற்றிப் பரிதாபப்பட வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள். அப்படி நினைப்பது தான் மனிதத் தன்மை.... அப்படி நினைத்தால் மைக்கேலுக்கும் நல்லபடியாகக் கூடும்... அப்படி நினைத்தால் கடவுள் நம்மைத் தண்டிக்காமல் விட்டு விடக் கூடும்...

ஆனால் எவ்வளவு முயன்று பார்த்தும் அவளால் அப்படி நினைக்க முடியவில்லை! அந்தப் பெண்ணை அவளுடைய உடம்பின் ஒவ்வோர் அணுவும் வெறுக்கிறதே!

''நீங்கள் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சொன்னேனே, யாரும் உங்களிடம் சொல்லவில்லையா?'' என்ற குரல் பின்னாலிருந்து கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பியவள், விக்ஃபீல்டுதான் என்று அறிந்ததும் புன்னகை செய்தாள். அவர் அவளுடைய சொந்த டாக்டர். விக்கி என்று செல்லமாய்க் கூப்பிடுவது வழக்கம். ''ஏன் மரியம், யார்




ஒவ்வொருவரும் பிறந்த நேரம் எதுவோ அதையொட்டியே தூக்கம் நன்றாக

சொன்னாலும் நீங்கள் கேட்க மாட்டீர்களா?'' என்றார்.

''அவசியமானால்தான் கேட்பேன்,'' என்றாள் மரியம். ''மைக்கேலுக்கு எப்படி இருக்கிறது?'' அவள் புருவங்கள் கவலையுடன் மேலேறின. மீண்டும் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டாள்.

''இப்போதுதான் அவனைப் பார்த்துவிட்டு வருகிறேன். எல்லாம் சீராக இருக்கிறது. நான்தான் சொன்னேனே, சரியாகிவிடுவான் என்று. கொஞ்சம் அவகாசம் கொடுக்க வேண்டும். அவ்வளவு தான். அவனுக்கு ஏற்பட்டது பயங்கரமான அதிர்ச்சியாயிற்றே!''

''செய்தி கிடைத்த போது எனக்கும்தான் பயங்கர அதிர்ச்சி,'' என்றாள் அவள் மெல்லிய குரலில். ''ஏன் டாக்டர், அவனுக்கு நிரந்தரமான கோளாறு எதுவும் ஏற்பட்டு விடாதே?'' ஒரு நிமிடம் மௌனமாக இருந்தாள். கடைசியில், சொல்வதற்கே பயந்த வார்த்தைகளைச் சொன்னாள். ''அதாவது மூளைக்குச் சேதம்....''

அவள் கையை மெல்லத் தட்டிக் கொடுத்தார் விக்ஃபீல்டு. பின்னர் அவளருகிலேயே தானும் ஜன்னல் விளிம்பில் தொற்றினாற் போல் உட்கார்ந்து கொண்டார். அவர்களின் பின்னணியில் அந்தச் சிறிய ஊர், வாழ்த்து அட்டையில் அச்சிட்ட மாதிரி அழகான வண்ணத்தில் காட்சி தந்தது.

''நான் தான் திருப்பித்

...வரும்?

வரும். 2 மணிக்கு ஒருவர் பிறந்தார் என்று வைத்துக் கொள்வோம். அந்தக் காலை 2 மணிக்குத்தான் அவருக்குத் தூக்கம் வரும்.

—'இளமையின் ரகசியம்.
—யோகி என். ராஜன்

திருப்பிச் சொல்கிறேனே, மரியம். ஜம்மென்று ஆகிவிடுவான். எத்தனை நாள் இப்படி இருப்பான் என்பதுதான் பிரசினை. ஆனால் எனக்கு எவ்வித பயமும் இல்லை,'' என்றார் டாக்டர்.

''எனக்குப் பயமாயிருக் கிறது,'' என்றாள் மரியம்.

அத்தனை மனோதிடமுள்ள பெண்மணியின் வாயிலிருந்து அந்த இரண்டு வார்த்தைகளைக் கேட்ட போது டாக்டருக்கே ஆச்சரியமாயிருந் தது. அவளை உற்றுப் பார்த்தார். இந்த ஒரு மரியமுக்குள் எத்தனை வகையான மரியம்கள் ஒளிந் திருக்கிறார்களோ என்று எண்ணிக் கொண்டார்.

''அந்தப் பெண் எப்படி இருக்கிறாள்?'' என்றாள் மரியம். சிகரெட் புகையினூடே அவளுடைய வெறுப்பு நிறைந்த முகத்தை டாக்டர் கண்டார். கண்கள் குறுகி, பயம் அகன்றிருந்தது. 'எனக்குத் தெரிந்த மரியம் இவள்தான்,' என்று எண்ணிக் கொண்டார்.

''அவளிடம் எந்த அபிவிருத்தி யும் காணோம்,'' என்றார் டாக்டர். ''நாள் பூரா அவள் உடல்நிலை சீராகத்தான் இருக்கிறது. ஆனால் அவளுக்காக நாம் செய்யக் கூடியது எதுவுமில்லை. கோரமாகி விட்டது. அவள் முகம். அதைப் பரிபூரணமாக மாற்றியமைக்கக் கூடிய டாக்டர்கள், அமெரிக்காவிலேயே இரண்டே இரண்டு பேர்தான் இருக்கிறார்கள். அவள் முகத்தில் இப்போது எலும்போ, நரம்போ, தசையோ எதுவுமே உருப்படியாக இல்லை. நல்ல காலம், கண்கள் மட்டும் சேதமடையாமல் தப்பியது.'' என்றார் டாக்டர்.

''ஆமாமாம்! அவள் மூஞ்சியின் லட்சணத்தை அவளே பார்த்துக் கொள்ள வேண்டாமா?'' என்றாள் மரியம்.

அந்தக் குரலின் குரூரத்தைக் கண்டு டாக்டர் விக்ஃபீல்டு திகைத்தார். ''காரை ஓட்டி வந்தது மைக்கேல்தானே, மரியம்? அந்தப் பெண்ணல்ல,'' என்றார்.

மரியம் வெறுமே தலையசைத் தாள். இதைப் பற்றி விவாதிக்க அவள் தயாராயில்லை. தப்பு யார் மீது என்று அவள் தீர்மானித்து விட்டாள்—அந்தப் பெண்ணின் மீதுதான்.

''இம்மாதிரி கேஸில், முகத்தைச் சரி செய்யாவிட்டால் என்ன ஆகும்? அவளால் உயிர் வாழ முடியுமா?'' என்று கேட்டாள்.

''உயிர் வாழ முடியும், பாவம். ஆனால் மகா பரிதாபமான வாழ்க்கையாக இருக்கும். இருபத்திரண்டு வயதுப் பெண், இவ்வளவு கோரமான முகத்தை வைத்துக் கொண்டு வாழ்க்கையைச் சமாளிப்பதாவது! எவராலும் முடியாத காரியம்..... வந்து.... இங்கேயுள்ள டாக்டர்கள் ஏதோ தங் களாலானதைச் செய்வார்கள். ஆனால் அதெல்லாம் புண்ணிய மில்லை. அவளிடம் பணம் இருக்கிறதா?''

''பைசா இல்லாதவள்!'' சுளீரெனப் பதில் வந்தது மரியமிட மிருந்து.

''அப்படியானால் கஷ்டம் தான். இதற்கு ஏராளமாய்ச் செல வாகும். அவ்வளவு பெரிய வைத்தியத்தை எந்த டாக்டரும் இனாமாகச் செய்ய மாட்டார்.''

மரியமின் உள்ளத்தில் ஒரு திட்டம் உருவாகிக் கொண்டிருந்தது.

(தொடரும்)

மூலம்: டானியல் ஸ்டீல்

# காதல் மேல் ஆணை



தமிழில்: ரா. கி. ரங்கராஜன்

## 10

மரியம் சிந்தனையுடன் சிறிது நேரம் மௌனமாக இருந்தபின் கேட்டாள்: ''அந்தப் பெண்ணுக்குச் சிகிச்சை செய்யக் கூடிய டாக்டர்கள் அமெரிக்காவிலேயே இரண்டு பேர் தான் என்று சொன்னீர்களே, உங்களுக்குத் தெரிந்தவர்களா?''

''கொஞ்சம் தெரியும். இரண்டு பேரில் ஒருவர் ரொம்பக் கெட்டிக்காரர். அவர் சான் ஃபிரான்ஸிஸ்கோவில் இருக்கிறார்.....'' என்றார் டாக்டர் விக்ஃபீல்டு. அவர் உள்ளத்துக்குள் பல கற்பனைகள் ஓடின. மரியமிடம் தாராளமாய்ப் பணம் இருக்கிறது. ஒருவேளை நான்ஸியின் மீது இரக்கம் கொண்டு வைத்தியத்துக்கு உதவி செய்ய நினைக்கிறாளோ என்னவோ. ''அந்த டாக்டரின் பெயர் பீட்டர் கிரெக்ஸன். பல வருடங்களுக்கு முன் அவரைச் சந்தித்திருக்கிறேன். அற்புதமான டாக்டர்...''

''இந்தக் கேஸை ஏற்றுக் கொண்டு செய்வாரா?''

டாக்டருக்கு மரியமின்மீது மதிப்பு குபீரென்று உயர்ந்தது. அவளைக் கட்டித் தழுவிப் பாராட்ட லாம் போல் இருந்தது. ஆனால் அதற்குத் தைரியம் இல்லை. ''அவர் ஒருத்தர்தான் இந்தச் சிகிச்சையைச் சிறப்பாகச் செய்யக் கூடியவர்.... வந்து... நான்.... அவரை டெலிபோனில் கூப்பிட்டுப் பேசட்டுமா?'' தயங்கியவாறு கேட்டுவிட்டு மரியமின் முகத்தைப் பார்த்தார்.

அவள் கண்கள் சில்லென்றிருந்தன. மனத்துக்குள் அவள் போடும் கணக்கு அந்தக் கண்களில் வெளிப்பட்டது. மனசில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாள் என்று அவரால் ஊகிக்க முடியவில்லை. சற்று நேரத்துக்கு முன்பு அவள் மீது ஏற்பட்டிருந்த மதிப்பு இப்போது பயமாக மாறியது.

''யோசித்துச் சொல்கிறேன்,'' என்றாள் மரியம்.

''ஓ,'' என்றார் டாக்டர். கைக் கடியாரத்தைப் பார்த்துவிட்டு எழுந்து கொண்டார். ''நீங்கள் கீழே போய் ரெஸ்ட் எடுத்துக் கொண்டால் நல்லது. நிஜமாய்த்தான் சொல்கிறேன்,'' என்றார்.

''தெரியும்,'' என்றாள் மரியம். போனால் போகிறதென்கிற மாதிரி ஓர் உலர்ந்த புன்னகையை அவரை நோக்கி வெளியிட்டாள். ''நான் ரெஸ்ட் எடுத்துக் கொள்ளப் போவதில்லை. மைக்கேலின் பக்கத்திலேயே இருக்க வேண்டும்.''

''உங்கள் உயிருக்கு ஆபத்து என்றால்கூடப் பரவாயில்லையா?''

''நான் சாக மாட்டேன். பயப்படாதீர்கள், டாக்டர். நான் செய்ய வேண்டிய காரியங்கள் இன்னும் எவ்வளவோ இருக்கிறது.''

''உடம்பைக் கெடுத்துக் கொண்டாவது இந்தக் காரியத்தைச்



செய்ய வேண்டுமா?'' என்று மெதுவே சொன்னார் டாக்டர், அவளை விசித்திரமாகப் பார்த்தபடி. நமக்கு மட்டும் இந்தப் பெண்மணிக்கு இருக்கும் லட்சிய வெறியில் பத்தில் ஒரு பங்கு இருந்திருந்தால் இன்று நாம் எவ்வளவோ பெரிய சர்ஜனாக ஆகியிருப்போம். என்று எண்ணிக் கொண்டார். ''அப்படியெல்லாம் உடம்பைக் கெடுத்துக் கொள்ள வேண்டுமா?'' என்று மறுபடியும் ஒரு தடவை கேட்டார்.

மரியம் மெல்லத் தலையசைத்தாள். ''ஆமாம், டாக்டர். வாழ்க்கையில் இன்னும் சில காரியங்கள் பாக்கி இருக்கிறது என்பதால் தான் என் உடம்புக்குத் தெம்பு வருகிறது,'' என்றவள் கண்ணை மூடிக் கொண்டாள். 'மைக்கேல் போய் விட்டால் என் வாழ்க்கையும் போய் விடும் அவ்வளவுதான்,' என்ற எண்ணம் ஒரு கணம் தோன்றியது அந்த நினைப்பைத் தூர தள்ளினாள்.

''சரி, இன்னும் ஒரு ம நேரம் அவனுடன் இருங்கள் அவ்வளவுதான் டயம் தருவேன் அதற்குப் பிறகு நான் வந்து அவசியமானால் உங்களுக்கு மயக் ஊசி போட்டாவது, நாே தரதரவென்று இழுத்துக் கொண் போய் விடுவேன், என்ன?''

''சரி.'' கையிலிருந் சிகரெட்டைக் கீழே போட்டு காலால் தேய்த்துவிட்டு, டாக்டரி கன்னத்தைச் செல்லமாய்த் தட்டி கொடுத்தாள், மரியம். ''விக்கி....' என்று மெல்லிய குரலில். அவ அழைத்த போது அந்த அழகி கண்ணிமைகள் மெல்ல அவனை நோக்கி உயர்ந்தன. மென்மையு நேர்த்தியும் நிறைந்த சீமாட்டியா

அந்த வினாடியில் தோற்றமளித்தாள். ''தாங்க்யூ விக்கி.'' அவர் கைகளைப் பாசத்துடன் ஒரு முறை அழுத்தினாள்.

''மைக்கேலுக்கு நன்றாய்க் குணமாகிவிடும், மரியம். பார்த்துக் கொண்டேயிருங்கள்,'' என்றார் டாக்டர் விக்ஃபீல்டு. அந்தப் பெண்ணைப் பற்றிப் பேச்செடுக்க நினைத்தார். தைரியம் வரவில்லை. கொஞ்சம் பொறுத்துப் பார்த்துக் கொள்ளலாம்.

ஒரு புன்னகையுடன் விடை பெற்றார். மரியம் தன்னந்தனியளாக இருக்கிறாளே என்று சிறிது கவலை ஏற்பட்டது. நல்ல வேளை மரியமின் உதவியாளர் ஜார்ஜுக்குப் போன் செய்தோம். என்று எண்ணிக் கொண்டார். கொஞ்ச நேரத்தில் ஜார்ஜ் வந்துவிடுவார். மரியமுக்குத் துணை இருப்பார்.

அவர் போவதையே பார்த்த படி நின்றிருந்தாள் மரியம். வெகு நேரத்துக்கு அங்கிருந்து ஓரங்குலம் கூட நகரவில்லை. பிறகு மைக்கேலின் அறையை நோக்கி ஓசையின்றி நடந்தாள். சில அறைகளின் கதவுகள் திறந்திருந்தன. சில மூடியிருந்தன. நம்பிக்கைகளும் மனத்தை ஒடிய வைக்கும் அச்சங்களும் அந்த அறைக்குள் கோலோச்சுவது அவளுக்குத் தெரிந்தது. சில பேர் பிழைப்பார்கள். சில பேர்....

அபாயமான நிலையில் உ
நோயாளிகளுக்கு மட்டுமே ஏற்ப
மாடி அது. ஆகவே எந்த அறைக்
ளிருந்தும் எந்த ஓசையும் கே
வில்லை.

மெல்ல நடந்து கொண்டி
தவள் சட்டென நின்றாள்.

அருகிலிருந்த அறைக்குள்
யாரோ விசும்பும் சத்தம் கேட்டது.

ரொம்ப மெல்லிய விசும்பல
இருந்ததால், நிஜமாகவே அப்ப
கேட்கிறதா, அல்லது பிரமையா என
மரியமுக்குத் தெரியவில்லை
தலையை உயர்த்தி அறையி
எண்ணைப் பார்த்தாள்.

புரிந்து விட்டது யாருடை
அறை என்று.

ஏதோ ஒரு சுவர் அவ
வழியை மறித்த மாதிரி மேற்கொண்
நடக்காமல் நின்றாள், திறந்திரு
கதவையே பார்த்தபடி. அறைக்கு
ஒரே இருட்டாக இருந்தது. எனினு
அறையின் ஓரமாகப் போட
பட்டிருந்த கட்டில் மங்கலாகத் தெ
தது. திரைச் சீலைகள் தொங்க விட
பட்டு ஜன்னல்கள் மூடப்பட்டிருந்த
படுத்திருக்கும் நோயாளி மீ
வெளிச்சம் கூடப் படக்கூடாது என
அப்படிச் செய்திருக்கிறமாதி
தோன்றியது.

ஒரு நீண்ட நிமிட நேரத்துக்
மரியம் வெளியிலேயே இருந்தாள்



''உங்க வீட்டிலே உங்க அதிகாரம் தான் போலிருக்கே!''

''ஆமாம். எப்படிக் கண்டு பிடிச்சீங்க?''

''வேஷ்டியிலே வடாம் காயப் போடறதுக்கு பதிலா சேலையிலே காயப் போட்டிருக்கீங்களே!

—எஸ். முகம்மது யூசுப்

...ளே செல்ல ஏனோ பயமாயிருந்... ஆனால் போகத்தான் வேண்டும் ...றும் தோன்றியது.

கடைசியில், அடிமேலடி ...த்து அறைக்குள் நுழைந்தாள்.

ஆனால் உடனேயே மறுபடி ...ன்றாள். இப்போது அந்தப் ...ண்ணின் விசும்பல்கள் இன்னும் ...மாகவும் இன்னும் அதிகமாகவும் ...ட்டன. அந்த விம்மலில் அச்சமும் ...வரமும் நிறைந்திருந்தன.

''யார்.... வருகிறது யார்....'' ...ன்றாள் அவள். அவளுடைய தலை ...மாத்தமும் பாண்டேஜ் போட்டு மூடி ...ருந்தது. ஆகவே அவள் குரல் ...முங்கிப் போயிருந்தது. ''யார்... ...ராவது வந்திருக்கிறீர்களா.....?'' ...வள் குரல் அழுகையாகவே வெளிப் ...ட்டது. ''என்னால் பார்க்க முடிய ...ில்லையே?''





**ரேகா முதல் ராதா வரை...**

ரேகாவின் இடை
ரத்தியின் புன்னகை
மாதவியின் பார்வை
ராதாவின் இளமை
வீடு முழுதும்
ஸ்ரீகளின்
அலங்காரங்களே.
வேறொன்றுமில்லை,
அத்தனையும்
அவனுக்குக் கிடைத்த
ஓசிக் காலண்டர்கள்!

—இறையடியான்
(ஊமைக் கனவுகள்)

''உன் கண்கள் மீது கட்டுப் போட்டிருக்கிறார்கள். அதனால்தான் உன்னால் பார்க்க முடியவில்லை. மற்றப்படி உன் கண்ணுக்கு ஆபத்து இல்லை,'' என்றாள் மரியம்.

ஆனால் அந்த வார்த்தைகள் அவளைச் சமாதானப்படுத்தவில்லை. விம்மல்கள் அதிகப்பட்டன.

''ஏன் தூங்காமல் விழித்துக் கொண்டிருக்கிறாய்?'' என்றாள் மரியம். ஆனால் நான்ஸிக்குத் தைரிய மூட்டுவதாகவோ ஆறுதல் கொடுப்பதாகவோ அவள் குரல் இருக்கவில்லை. எந்த உணர்ச்சியு மற்றுத் தொனித்தது. மரியமுக்குத் தானொரு கனவின் நடுவே நிற்பது போலத் தோன்றியது. இருந்தாலும் அவளால் அந்த இடத்தை விட்டுப் போக முடியவில்லை. இருக்கத்தான் வேண்டும். பேசத்தான் வேண்டும். மைக்கேலுக்காக...

''நீ தூங்குவதற்கு மருந்து எதுவும் கொடுக்கவில்லையா?'' என்றாள்.

''கொடுத்தார்கள். ஆனால் பலனில்லை. எனக்கு அடிக்கடி விழிப்பு வந்துவிடுகிறது.''

''ரொம்ப வலியாக இருக்கிறதா?''

''இல்லை. எல்லாம் மரத்து விட்ட மாதிரி இருக்கிறது. நீங்கள்.... நீங்கள் யார்.....?''

தான் யாரென்று தெரிவிக்க மரியமுக்குத் தயக்கமாயிருந்தது. படுக்கையை மேலும் நெருங்கினாள். நர்ஸ் போட்டு வைத்திருந்த சிறிய நீல நிற நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். நான்ஸியின் கைகள் முழுவதும் கட்டுப் போடப்பட்டிருந் தன. செயலற்றுப் போய் பக்க வாட்டில் கிடந்தன. விபத்து நேர்ந்த போது, தன்னையும் அறியாமல் இரண்டு கைகளாலும் அவள் முகத்தைப் பொத்திக் கொண்டாள்

என்று டாக்டர் விக்கி சொன்னது மரியமுக்கு ஞாபகம் வந்தது. முகத்துக்கு எவ்வளவு சேதமோ அவ்வளவு சேதம் கைகளுக்கும் ஏற்பட்டிருக்கிறது. ஓவியம் வரைகிற பெண்.... அப்படியானால் ரொம்பக் கஷ்டம் தான்.... பார்க்கப் போனால் இவள் வாழ்க்கையே முடிந்தாயிற்று. இவளுடைய இளமை, இவளுடைய அழகு, நாசம்.

மரியம் ஒரு தீர்மானத்துக்கு வந்தாள்.

''நான்ஸி—'' என்றாள். அந்தப் பெயரை அவள் உச்சரிப்பது இதுவே முதல் தடவை. பரவாயில்லை என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். வேறு வழி கிடையாது.

''உனக்கு உன் நிலைமையைப் பற்றிச் சொன்னார்களா?'' மரியமின் குரல் பட்டுப் போல் மென்மையாக ஒலித்தது. ''வந்து... உன் முகத்துக்கு ஏற்பட்டிருக்கிற சேதத்தைப் பற்றிச் சொன்னார்களா?''

அந்த அறையில் திடீரென நிலவிய மௌனம் முடிவேயில்லாதது போல் நீண்டது. பிறகு அந்தப் பாண்டேஜ்களுக்குள்ளிருந்து ஒரு விம்மல் வெடித்தது.

''உன் முகம் எவ்வளவு மோசமாகிவிட்டது என்று டாக்டர்கள் சொன்னார்களா?'' என்று மறுபடியும் மரியம் கேட்டாள். அப்படிப் பேச அவளுக்கே பிடிக்கவில்லை. ஆனால் பேசித்தானே ஆகவேண்டும்?

இவள் மைக்கேலை விட்டுவிட வேண்டும். விட்டுவிட்டால்தான் மைக்கேலுக்கு வாழ்வு கிடைக்கும். அப்படி எண்ணிய போது அவள் நரம்புகளுக்குப் புதுத் தெம்பு ஏற்பட்ட மாதிரி இருந்தது. ''உன் முகத்தைப் பழையபடி செய்வது எவ்வளவு அசாத்தியம் என்று உன்னிடம் டாக்டர்கள் சொன்னார்களா?'' என்று மறுபடியும் கேட்டாள்.

(தொடரும்)




கலைவாணர் என்.எஸ்.கே. வீட்டில் நடைபெற்ற ஒரு திருமணத்திற்காக மாப்பிள்ளை அழைப்பு.

மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம், பனகல் பங்கா வேங்கடநாராயணா சாலை சந்திப்பில் வந்து கொண்டிருக்கிறது. காருகுறிச்சி வாசித்துக் கொண்டே வருகிறார்.

காருகுறிச்சியின் வாசிப்பு, ராஜரத்தினம் பிள்ளையை என்ன செய்ததோ தெரியவில்லை. அப்படியே 'வாசி!' என்று சொல்லிவிட்டுத் தெரு என்றும் பாராமல் முன்னால் உட்கார்ந்து விட்டார் ராஜரத்தினம்.

இரண்டு புறமும் பஸ்களும் கார்களும் ஒன்றன் பின் ஒன்றாக நிற்க வேண்டியதாகி விட்டது. எக்கச்சக்கமான 'டிராபிக் ஜாம்.' பிள்ளைவாள் விடுகிற வழியாய் இல்லை. வாசிக்கிறவரும் கேட்பவரும் என்று, சுற்றுச் சூழலையே மறந்து போய் ரசிக்கிற மனநிலை.

யார் யாரோ போய்ச் சொல்லிப் பார்த்தார்கள். ''பிள்ளைவாள்! ஊர்வலம் நகரட்டும்.... டிராஃபிக் ஜாம் அதிகமாகிக் கொண்டிருக்கிறது....''

''சும்மா இருங்கய்யா! டிராஃபிக்காவது ஜாமாவது. எவ்வளவு சுகமா நாதம் விழுகிறது..... விடுங்கய்யா, வாசிக்கட்டும்,'' என்று அடம் பிடித்தார்.

அந்த நேரம், தொடர்ந்து அரை மணியோ முக்கால் மணியோ நீடித்த போக்குவரத்து நெரிசல். மக்கள் பட்டிருக்கக் கூடிய சில அசௌகரியங்கள், எல்லாம் இப்போது நினைத்தாலும் மெய் சிலிர்க்கிறது.

—வானதி திருநாவுக்கரசு எழுதிய 'நினைக்க... நினைக்க....' என்ற புத்தகத்திலிருந்து











எட்டாம் வகுப்பு வரை படித்தவர். இருபத்து ஐந்து வயது. இளைஞர். பெயர் பி. ஹரிநந்தன். அவர் வீட்டு அறையில் எங்கு பார்த்தாலும், சுள்ளிகள், மாங்கொட்டைகள், சின்னச் சின்னக் காய்ந்த விதைகள், கொட்டாங்கச்சிகள். அவைகளில் அழகான பொம்மைகள்.

சில வருடங்களுக்கு முன் ஊட்டியில் வசித்த போது, வீட்டில் அடுப்புக்கு காஸ் இல்லை, கரி இல்லை. பெற்றோர்கள் சுள்ளி, விறகு பொறுக்கிவரக் காட்டுக்கு அனுப்பி விட்டனர். இப்படித்தான் இந்தப் பழக்கம் 'வேர்' விட்டது.

முதலைக்கு ஒரு கொம்பு கிடைத்தது. வாய்ப் பகுதியில் ஒரு வெட்டு வெட்டி, வாயைத் திறந்தார். பற்கள் முட்களைப் போல இருக்க வேண்டுமே?

ரோஜாச் செடியிலிருந்து முட்களை எடுத்து, பெவிகாலைப் போட்டு ஒட்டி விட்டார். அழகுக்கு வார்னிஷ் அடித்தார். இதோ மேசை மீது முதலை!

—பாமா கோபாலன்
வண்ணப் படங்கள்: ராதாகிருஷ்ணன்

மூலம்: டானியல் ஸ்டீல்




# 11

''உன் முகம் கோரமாகியிருப்பது உனக்குத் தெரியுமா?'' என்று மரியம் கேட்டதும், நான்ஸி அதிர்ச்சி யடைந்தாள்.

''அப்படியா? நான் நன்றாக ஆகிவிடுவேன் என்று பொய்யா சொல்லியிருக்கிறார்கள்?''

''நான்ஸி, உன்னைக் குணப்படுத்தக் கூடியவர், உன் முகத்தைப் பழையபடி அழகாகச் செய்யக் கூடியவர், ஒரே ஒரு டாக்டர்தான் இருக்கிறார். அதற்குக் கோடிக்கணக்கான ரூபாய் செலவாகும். உன்னால் அவ்வளவு செலவழிக்க முடியாது. மைக்கேலினாலும் செலவழிக்க முடியாது...''

மரியமின் குரலில் தென்பட்ட தொனி நான்ஸிக்குக் கோபம் ஏற்படுத்தியது. தன் விதியின் மீது கோபம் ஏற்பட்டது. ''வேண்டாம்... எனக்காக மைக் கேலுக்கு அவ்வளவு செலவு வைக்க மாட்டேன்...''

''பின்னே என்ன செய்யப் போகிறாய்?''

''தெரியவில்லை....'' அவளிடமிருந்து மறுபடி விம்மல்கள் புறப்பட்டன.

''இந்த முகத்தோடு அவனை உன்னால் பார்க்க முடியுமா?''

பல நிமிடங்களுக்குப் பிறகு, ''முடியாது,'' என்று கேவியபடி சொன்னாள் அவள்.

மரியம் சொன்னாள்: ''உன்னை அவனால் இனிமேல் காதலிக்க முடியும் என்றா நினைக்கிறாய்? அப்படியே காதலித்தாலும்கூட, ஏதோ கடமைக்காக, உனக்கு விசுவாசமாக இருக்க வேண்டுமே என்பதற்காகக் காதலிக்கலாம். அந்தக் காதல் எத்தனை நாளைக்கு நிலைக்கும்? உன் முகம் இருக்கும் நிலைமையை எத்தனை நாளைக்கு உன்னால் பொறுத்துக்கொள்ள முடியும்? அவனுக்குத் துன்பம் ஏற்படுத்துகிறோம் என்பதை எத்தனை நாளைக்கு உன்னால் உணராமல் இருக்க முடியும்?''

நான்ஸியிடமிருந்து வந்த விம்மல்களும் கேவல்களும் அதிகமாயின. எந்த நிமிடமும் வாந்தி எடுத்து விடுவாள் போல் திணறினாள். மரியத்துக்கே அவள் நிலைமையைப் பார்க்க வயிற்றைப் பிசைந்தது.

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்



மெதுவே தொடர்ந்து சொன்னாள்: "நான்ஸி, பழைய நான்ஸி போயாயிற்று. இப்போது உன் பழைய தன்மை எதுவும் இல்லை. எதுவுமே இல்லை. நேற்று வரை இருந்த உன் வாழ்க்கையின் மிச்சமென்று சொல்லக் கூடிய எதுவும் இன்று கிடையாது."

முடிவில்லாத நிசப்தம் அங்கே நிலவியது. நான்ஸியின் விம்மல்கள் மட்டும் மரியமின் செவிகளுக்குள் ஒலித்துக் கொண்டிருக்கிற மாதிரி இருந்தது. இனி வாழ்நாள் பூராவும் அது கேட்டுக் கொண்டே இருக்குமென்று தோன்றிற்று. வேதனை நிறைந்தவைதான் இந்த விம்மல்கள். ஆனால் இதனால் எந்த நன்மையும் ஏற்படப் போவதில்லை.

"நான்ஸி, நீ மைக்கேலை இழந்தாயிற்று. இனியும் நீ அவன்மீது காதல் வைத்திருப்பது கொஞ்சமும் நியாயமில்லை. அவன்.... உன்னைக் காட்டிலும் பன்மடங்கு உயர்ந்த பெண் அவனுக்குக் கிடைக்க வேண்டும். அவனுக்கு அதற்குத் தகுதி உண்டு. நான் சொல்வதை நீயும் ஒப்புக் கொள்வாய். இல்லையா? உனக்கு அவன் மேலுள்ள காதல் உண்மையானது என்றால் உனக்கே தெரியும் நான் சொல்வதன் நியாயம். அதே சமயம் உனக்கும் ஒரு புது வாழ்வு கிடைக்கும், நான்ஸி."

நான்ஸியிடமிருந்து பதில் வரவில்லை. விம்மல்கள் தான் தொடர்ந்து வந்து கொண்டிருந்தன.

"ஆமாம் நான்ஸி, உனக்குப் புது வாழ்வு கிடைக்க முடியும். புத்தம் புதிய உலகம்—புத்தம் புதிய வாழ்க்கை." நான்ஸியின் விம்மல்களில் கோபம் ஓங்கியது. அது அடங்கு மட்டும் காத்திருந்து மீண்டும் மரியம் சொன்னாள்: "உனக்குப் புதிய முகம் கிடைக்கும்."

"எப்படி?" என்றாள் அவள்.

எடையைக் குறைக்க வேண்டுமானால் சாப்பாட்டைக் குறையுங்கள் என்கிறார்கள்.

சரி, சாப்பாட்டைக் குறைப்பது எப்படி?

1. சாப்பாட்டுக்கு முன்னாலும் நடுநடுவேயும் தண்ணீர் குடியுங்கள். வயிறு நிரம்பின மாதிரி இருக்கும். சாப்பாடு அதிகம் இறங்காது. (ஜீரண சக்திக்கும் இது நல்லது.)

2. மெதுவாகச் சாப்பிடுங்கள். ஒவ்வொரு கவளத்தையும் நன்றாக, மெதுவாக, மெல்லுங்கள், கால் மணி நேரத்தில் சாப்பிடக்கூடிய சாப்பாட்டை அரை மணி நேரத்துக்கு இழுத்தடித்தால், குறைவான உணவே நிறைவான உணவாகத் தோன்றும்.

3. மெதுவாகச் சாப்பிட நேரமில்லை என்றால், சாப்பிடவே சாப்பிடாதீர்கள்.

4. கேரட், வெண்டை போன்ற பச்சைக் கறிகாய்கள் நல்லது. சமைக்கப்பட்ட கறிகாய்களைத்தான் வேகமாகச் சாப்பிட முடியும். பச்சைக் கறிகாய்களை மென்று சாப்பிட வேண்டுமாகையால் அதிக நேரம் பிடிக்கும். போதும் என்று எழுந்து விடுவீர்கள்.

—எக்ஸிக்யூடிவ் ஹெல்த்

''சான்பிரான்ஸிஸ்கோவில் ஒரு சர்ஜன் இருக்கிறார். உன்னை மீண்டும் அழகானவளாகச் செய்ய அவரால்தான் முடியும். நீ மறுபடியும் ஓவியம் வரையும்படி அவரால் பண்ண முடியும். அதற்கு நீண்ட காலமாகும். பணமும் ஏராளமாகச் செலவாகும். ஆனால், அவ்வளவும் தகும், நான்ஸி. இல்லையா?'' மரியமின் உதட்டோரத்தில் மிகச் சின்னதாய் ஒரு புன்சிரிப்புப் பூத்திருந்தது. தனக்குப் பழக்கமான விவகாரத்தைப் பேச ஆரம்பித்திருக்கிறோமென்ற தெம்பு ஏற்பட்டது அவளுக்கு. இது ஒரு வியாபாரம் மாதிரி. பல கோடி ரூபாய்கள் கைமாறப் போகிற பேரம் மாதிரி.

முகத்தை மூடியிருந்த கட்டுக்களுக்குள்ளிருந்து ஒரு மெல்லிய பெருமூச்சுக் கேட்டது. ''ஊகூம்.... அவ்வளவு பணம் செலவழிக்க எங்களால் முடியாது...''

'எங்களுக்கு' என்ற அந்தச் சொல் மரியமைச் சுருக்கென்று குத்தியது. எங்களுக்கு—நாங்கள் —அதற்கெல்லாம் இடம் கொடுக்கப் போவதில்லை. முன்னேயும் கொடுத்ததில்லை. இனிமேலும் கொடுக்கப் போவதில்லை. 'நாங்கள்' என்பது மைக்கேலும் நானும்தான். இவள் சொல்லும் 'நாங்கள்' அல்ல.

ஓர் ஆழமான பெருமூச்சுடன் தன்னை அமைதிப்படுத்திக் கொண்டாள், மரியம். இது ஒரு வேலை. இந்த வேலையை எப்படியும் முடித்தாக வேண்டும். இந்தப் பெண்ணைப் பற்றி நினைக்கக் கூடாது. மைக்கேலைப் பற்றி மட்டுமே நினைக்க வேண்டும்.

''அத்தனை செலவு செய்ய உன்னால் முடியாது நான்ஸி. ஆனால் என்னால் முடியும். நான் யாரென்று உனக்குப் புரிகிறது இல்லையா?''

''புரிகிறது.''

''மைக்கேலை நீ இழந்தாயிற்று. அது புரிகிறதா உனக்கு? அவன் உயிர் பிழைப்பது கஷ்டம். அப்படியே பிழைத்தாலும் உன்னைப் பற்றிய துன்பத்தையும் வேதனையையும் சோகத்தையும் அவனால் தாங்கிக் கொள்ள முடியாது. அது உனக்குப் புரிகிறதா?''

''புரிகிறது.''

''உன்மீது அவன் விசுவாசமாக இருக்க வேண்டும் என்பதற்காக அவனை நிர்ப்பந்தப்படுத்திக் கல்யாணம் செய்து கொள்வது கொடுமையான காரியம். இல்லையா நான்ஸி?''

'காதல்' என்ற சொல் தன் வாயில் வந்துவிடாதபடி எச்சரிக்கையாகவே பேசினாள் மரியம். அந்தச்




சொல்லுக்கு இந்தப் பெண் தகுதியானவளல்ல என்று உறுதியாக நம்பினாள்.

"என்ன நான்ஸி, நான் சொல்வது உனக்குப் புரிகிறதா?"

"ஆமாம்," என்று பதில் வந்தது. ஆனால் நான்ஸியின் உயிர் மொத்தமும் வடிந்துவிட்டாற் போன்ற களைப்பு அந்த ஒற்றை வார்த்தையில் வெளிப்பட்டது.

"அதாவது, இழக்கக் கூடியது என்னென்ன உண்டோ அவ்வளவையும் நீ இழந்தாயிற்று. உண்டா, இல்லையா?"

"ஆமாம்." நான்ஸியின் குரலில் ஜீவனே இல்லை. கொஞ்சம் கொஞ்சமாய் அவள் புலன்கள் பஞ்சடைந்து கொண்டிருக்கிற மாதிரி இருந்தது.

"நான்ஸி, இப்போது உன்னுடன் நான் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளலாம் என்று நினைக்கிறேன்." வழக்கமான தன்னம்பிக்கை திரும்பியிருந்தது மரியமுக்கு. அந்தச் சமயம் அவள் பேச்சை மைக்கேல் கேட்டிருந்தால் தாயென்றும் பாராமல் கொலைகூடச் செய்திருப்பான்.

"உனக்குக் கிடைக்கப் போகிற அழகிய முகத்தை நினைத்துப் பார் நான்ஸி. புதிய வாழ்க்கையை நினைத்துப் பார். நன்றாக யோசனை செய். எவ்வளவு பெரிய அதிர்ஷ்டம் உனக்குக் கிடைக்கப் போகிறதென்று சிந்தனை செய். பழையபடி நீ அழகாக ஆகலாம். பழையபடி உனக்கு நண்பர்கள் ஏற்படுவார்கள். இஷ்டப்பட்ட இடங்களுக்குப் போகலாம், வரலாம். ஓட்டல்களுக்கு, சினிமாக்களுக்கு, கடைக்குப் போகலாம். அழகான உடைகள் உடுத்தலாம். ஆண்களுடன் வெளியே போகலாம். இத்தனையும் வேண்டாம் என்றால், உன் வாழ்க்கை என்ன ஆகப் போகிறது? அதையும் நினைத்துப் பார். நீ அருகில் வந்தால் போதும், எல்லாரும் அலறுவார்கள். நீ எங்கேயும் போக முடியாது. எதையும் செய்ய முடியாது. ஒரு மனிதப் பிறவியாக நடமாட முடியாது. குழந்தைகள் உன்னைக் கண்டால் பயந்து அலறும். எந்த வாழ்க்கை உனக்கு வேண்டும்? சொல்லு. இரண்டிலே எதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளப் போகிறாய்?"

"இல்லை... இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் நிலைமை எனக்கு ஏது?"

"உண்டு. நான் உனக்குப் புதிய வாழ்க்கை ஏற்படுத்தித் தருகிறேன். ஒரு புதிய முகம், ஒரு புதிய உலகம் நான் தருகிறேன். வெகுவெகு தூரத்தில் உள்ள ஊரில் உனக்கு வீடு எடுத்துத் தருகிறேன். அங்கே உனக்குச் சிகிச்சை நடக்கும். சிகிச்சை மட்டுமல்ல, என்னென்ன வேண்டுமென்று நீ விரும்புகிறாயோ அத்தனையும் கிடைக்கும். எந்தப் போராட்டமும் உனக்கு இருக்காது. ஒரு வருஷம்—இந்தப் பயங்கரம் அகன்று விடும்."

"அதன் பிறகு?"

"நீ சுதந்திரமான பெண். புதிய வாழ்க்கை தேடிக் கொள்ளலாம்." வெகு நேரம் மௌனமாயிருந்த பிறகு நிபந்தனையைச் சொன்னாள் மரியம். "நீ மைக்கேலை அடியோடு மறந்துவிட வேண்டும். அவனுடன் எந்தத் தொடர்பும் வைத்துக்

கொள்ளக் கூடாது. மைக்கேலை விட்டுவிட்டால்தான் உனக்குப் புதிய முகம் கிடைக்கும். இதை... நான் தரும் இந்தப் பரிசை நீ ஏற்றுக் கொள்வதும் கொள்ளாததும் உன் இஷ்டம். ஆனால் ஒன்று மட்டும் புரிந்து கொள்: எப்படியும் மைக்கேல் உனக்குக் கிடைக்கப் போவதில்லை. கிடைக்க நான் விடப் போவதில்லை. அப்படியிருக்க எதற்காகத் தேவையில்லாமல் கோரப் பிறவியாக நீ உலவ வேண்டும்?''

நான்ஸி மெதுவாகக் கேட்டாள்: ''இந்தத் திட்டத்துக்கு மைக்கேல் ஒப்புக்கொள்ளாவிட்டால் என்ன ஆவது? நான் அவனிடமிருந்து விலகினால் கூட அவன் என்னிட மிருந்து விலகவில்லையென்றால்?''

''நீ அவனிடமிருந்து விலகி விடுகிறேன் என்று எனக்கு உறுதி கொடு. அவ்வளவுதான் எனக்குத் தேவை. மற்றது மைக்கேலின் இஷ்டம்.''

நான்ஸிக்குச் சிறிது தைரியம் வந்தது.

''மைக்கேல்... மைக்கேல் என்னை விரும்பினால்... என்னிடம் வந்தால் அவன் இஷ்டம் என்று விட்டு விடுவீர்களா? அதற்குப் பிறகு மறுபடியும் தடுக்க மாட்டீர்களே? அந்த உறுதி மொழியை நீங்கள் தர

''தருகிறேன்.''

ஒரு பெரிய போராட்டத்தில் ஜெயித்துவிட்ட மாதிரி நான்ஸியின் உள்ளத்தில் உவகை ஏற்பட்டது. மைக்கேலைப் பற்றி அவன் தாயைக் காட்டிலும் எனக்குத்தான் நன்றாகத் தெரியும். ஒரு நாளும் மைக்கேல் என்னைக் கைவிட மாட்டான். நான் எங்கேயிருக்கிறேனென்று கண்டுபிடிப்பான். எனக்கு உதவி செய்ய வருவான். அதற்குள் நானும் நல்லபடி ஆகிவிடுவேன். என்ன முயன்றாலும் மரியம் இந்தப் போராட்டத்தில் ஜெயிக்க முடியாது.

மரியம் சுலபமாகத் தோற்றுப் போகப் போகிறாள். இந்தப் பேரத்தை ஒப்புக் கொள்வது மரியமை



''என் மனைவியை டைவர்ஸ் செஞ்சதுல எனக்கு ஏகப்பட்ட நஷ்டம்.''

''எப்படி?''

''என் கல்யாணத்துக்கு மொய் எழுதின வங்களெல்லாம் பணத்தைத் திருப்பிக் கேட்டு

ஏமாற்றுகிற மாதிரி என்றுகூட அவளுக்குத் தோன்றியது. இருந்தாலும் வேறு வழி இல்லை.

''என்ன, ஒப்புக் கொள்கிறாயா?'' மரியம் மூச்சுவிடக்கூடத் தோன்றாதவளாய்க் கேட்டாள். நான்ஸியிடமிருந்து வரும் அந்த ஒரு வார்த்தைக்காக, தெய்வங்களையெல்லாம் வேண்டிக்கொண்டு காத்திருந்தாள். ஒரு வார்த்தை! மைக்கேலை விடுவிக்கக் கூடிய ஒரு வார்த்தை!

''ஒப்புக் கொள்கிறேன்,'' என்றாள் நான்ஸி.

நேற்றுக் காலை, கடற்கரையில், பாறையின் கீழிருந்த பள்ளத்தில் அந்த மணிமாலையைப் புதைத்து வைத்தபோது சொன்ன சொற்கள் அவளுக்கு ஞாபகம் வந்தது. 'நாம் ஒருவரையொருவர் பிரிய மாட்டோம்.'

ஆம். நானும் மைக்கேலும் ஒருவரையொருவர் பிரியப் போவதில்லை.

''நிச்சயமாகத்தானே சொல்கிறாய்?'' என்று மரியம் மீண்டும் கேட்டாள். அவளால் தன் நெஞ்சின் படைப்பைத் தாள முடியவில்லை.

''ஆமாம்,'' என்று நான்ஸி மறுபடி சொன்னாள்.

ன்னை கம்பர் விழாவில் முதல்வா
லஞர் ஒரு விஷயம் சொன்னார்:

''கம்பர் கோசல நாடு பற்றிப்
டும்போது, 'இல்லாரும் இல்லை
டையாரும் இல்லை' என்றும்
ண்மை இல்லை ஓர் வறுமை
ளமையால்' என்றும் பாடி இருக்
ார். ஆனால் அயோத்யா
ண்டத்தில், மந்தரை கைகேயியின்
த்தை மாற்ற, ராம பட்டாபிஷே
தைத் தடுக்க, இப்படிப் பேசு
ள்.

ண்டும் இன்னலும் வறுமையும்
தொடர்தரத் துயரால்
டு வந்துனை இரந்தவர்க்
கிருநிதி அவளை
ண்டி ஈதியோ, வெள்குதியோ...?

அதாவது 'ராமன் அரசனா
ல் அவன் தாயார் கோசலையிடம்
லா அதிகாரமும் போய்விடும்.
ன்னை வந்து இன்னலுடனும்
றுமையுடனும் யாசிக்கிறவர்களுக்கு
ண்டிய பொருளை நீயாகக்
டுக்க முடியுமா? அல்லது அவளை
ோசலையை)க் கெஞ்சிக் கேட்டுக்

இது கம்பர் முதலில் வர்ணித்த கோசல நாட்டின் செழிப்புக்கு எதிராக இருக்கிறது. (வறுமை இல்லை, இல்லார் இல்லை என்றார். இப்போது 'வறுமையுடன் யாசிக்கிற' என்கிறார்.)

இது சரியில்லை என்று நான் நினைக்கிறேன். கோசல நாடு செழிப்பாகத்தான் இருக்கிறது. கைகேயியின் கேகய நாடு அப்படி இல்லை. அந்த நாட்டு உள்ளூர் உறவினர்கள் யாராவது வந்து, கைகேயியிடம் யாசிக்கும் போது என்பதுதான் பொருள். முன் சொன்ன பாடலுக்கு அடுத்த பாடலிலேயே கம்பர் இதை விளக்குகிறார்.

உந்தை உன்னை உன்கிளைஞர்
மற்றுன் குலத்துள்ளோர்
வந்து காண்பதுன் மாற்றவள்
செல்வமோ மதியாய்

கம்பர் விழாவில் முதல்வர் கலைஞர் கருணாநிதி மற்றுமோர் கருத்தும் கூறினார்:

கம்பர் சித்திரித்த சீதை, ராமர் வனவாசம் புறப்படும் போது தயாராக தானும் புறப்பட்டு விட்டாளாம். ஆனால் வால்மீகியின் சீதை ளாம்.

கலைஞரின் இந்தக் கூற்று பற்றி வேளுக்குடி வரதாசாரிய சுவாமிகளைக் கேட்டேன். அவர் கூறியது:

''அயோத்தியா காண்டம் 26—ம் சர்க்கத்தில் ராமர் சீதை இருப்பிடத்துக்கு வந்து தான் காட்டுக்குப் போக இருப்பதைப் பற்றிச் சொல்கிறார்.

27—வது சர்க்கத்தில் சீதை, ''உங்கள் உயிரேபோல் இருக்கிற நான் உங்களை விட்டு எப்படிப் பிரிய முடியும்? நான் உங்களுக்கு முன் சென்று காட்டில் உங்கள் வழியில் கிடக்கும் முட்களை எடுத்துப் போடுவேன்'' என்றாளாம்.

ஆகையால் வால்மீகியின் சீதை நான் காட்டுக்குப் போக மாட்டேன் என்று எங்கும் சொல்லவில்லை. கம்பரின் சீதையைப் போல இவளும் ராமருக்கு முன்னேயே 'காட்டுக்குப் போகிறேன் என்றுதான் சொல்கிறாள்.''

—மகரம்



# கலைஞர் சொன்னது சரிதானா?

# காதல் மேல் ஆணை

## 12

ஆஸ்பத்திரியின் வாசல் கதவருகே நின்ற வண்ணம் மரியம் கவனித்துக் கொண்டிருந்தாள்.

நான்ஸியை ஆம்புலன்ஸ் வண்டியில் ஏற்றிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது காலை ஆறு மணி இருக்கும். நான்ஸியுடன் நேற்றிரவு பேசியதோடு சரி. அதன் பிறகு மரியம் அவளுடன் எதுவும் பேசவில்லை. இருவரும் ஒப்பந்தம் பேசி முடித்ததுமே மரியம் டாக்டர் விக்கியிடம் சென்றாள். சான்பிரான்ஸிஸ்கோவில் இருக்கும் ஸ்பெஷலிஸ்ட் டாக்டருடன் டெலிபோனில் பேசி முடிக்கும்படி சொன்னாள்.

டாக்டர் பீட்டர் வீட்டில் இருந்தார். நான்ஸிக்குச் சிகிச்சை கொடுக்க ஒப்புக் கொண்டார். உடனேயே நான்ஸியை சான்



தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

மூலம்: டானியல் ஸ்டீல்

பிரான்ஸிஸ்கோவுக்கு அனுப்பி வைக்கச் சொன்னார்.

மரியம் கிடுகிடுவென்று ஏற்பாடுகள் செய்தாள். காலை எட்டு மணிக்கு சான்பிரான்ஸிஸ்கோவுக்குப் புறப்படும் விமானத்தில் முதல் வகுப்பில் ஸ்பெஷல் கம்பார்ட்மெண்ட் அமர்த்தப்பட்டது. நான்ஸியும், அவளுக்குத் துணையாக இரண்டு நர்ஸ்களும் போவதென்று முடிவாயிற்று.

எந்தச் செலவையும் லட்சியம் பண்ணவில்லை மரியம்.

சிகரெட்டைக் காலின் கீழ் போட்டுத் தேய்த்தபடி பார்த்துக் கொண்டு நின்றபோது அருகே வந்தார் டாக்டர், விக்கி. ''சரியான அதிர்ஷ்டம்தான் அந்தப் பெண்ணுக்கு,'' என்றார். மரியமை அவர் பார்த்த பார்வையில் வியப்பும் பிரமிப்பும் தெரிந்தன.

''டாக்டர், கண்டிப்பாக இந்த விஷயம் எதுவும் மைக்கேலுக்குத் தெரியக் கூடாது, என்ன?'' என்றாள் மரியம். 'தெரிந்ததோ தொலைந்தீர்கள்!' என்று வாயால் சொல்லவில்லையே தவிர, அவள் குரலில் பயங்கரக் கண்டிப்பு தொனித்தது ''அவனுக்குத் தெரிந்தாலும் சரி நீங்கள் யாராவது அவனிடம் இதைப் பற்றி மூச்சு விட்டாலும் சரி, அந்தப் பெண்ணுக்கு நடக்கும் சிகிச்சையை உடனே நிறுத்தி விடுவேன்,'' என்றாள்.




டாக்டர் விக்கி திகைத்தார். ''ஏன்? தெரிந்தால் என்ன? இந்தப் பெண்ணுக்காக நீங்கள் இவ்வளவு செய்கிறீர்களே, அது மைக்கேலுக்குத் தெரிய வேண்டாமா?''

''தேவையில்லை. இது எனக்கும் அவளுக்கும் உள்ள விஷயம். உங்களையும் டாக்டர் பீட்டரையும் சேர்த்தால் நம் நாலு பேருக்குள் உள்ள விஷயம். மைக்கேலுக்கு இதைப் பற்றித் தெரிய வேண்டிய அவசியமில்லை. அவனுக்கு மயக்கம் தெளிந்து பேசுகிற போது, அந்தப் பெண்ணைப் பற்றி நீங்கள் எதுவும் சொல்ல வேண்டாம். அனாவசியமாய்க் கவலைப்படுவான்.....''

டாக்டர் பயத்துடன் பேசாமல் இருந்தார்.

மறுபடியும், ''என்ன ராபர்ட், அவனிடம் ஒன்றும் சொல்ல மாட்டீர்கள், இல்லியா?'' என்றாள் மரியம். பொதுவாக டாக்டர் விக்கியை ராபர்ட் என்று அவள் அழைப்பது கிடையாது. அப்படி அழைத்தால் அதற்கு விசேட அர்த்தமுண்டு. 'உங்கள் ஆஸ்பத்திரிக்கு எங்கள் கம்பெனி எவ்வளவோ செய்திருக்கிறது. அதை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள்,' என்று மறைமுகமாய் எச்சரிக்கை செய்வதாக அர்த்தம்.

''நீங்கள் சொல்ல வேண்டாம் என்று சொன்னால் சொல்லவில்லை.'' என்றார் டாக்டர் விக்கி.

''சொல்ல வேண்டாமென்றுதான் சொல்கிறேனே?'' என்றாள் மரியம் மறுபடியும் அழுத்தமாக.

ஆம்புலன்ஸ் கதவு மூடிக்கொள்ளும் மெல்லிய சத்தம் கேட்டது. நான்ஸியைப் போர்த்திக் கொண்டிருந்த நீலப் போர்வையும் அந்த இரண்டு நர்ஸ்களின் முதுகும் பார்வையிலிருந்து மறைந்தன. நர்ஸ்கள் இருவரும் ஸான்பிரான்ஸிஸ்கோவில் முதல் ஆறு அல்லது எட்டு

மாதங்களுக்கு நான்ஸியுடன் தங்குவது என்று ஏற்பாடு. அதன் பின்னர் அவர்கள் தேவைப்பட மாட்டார்கள் என்று டாக்டர் பீட்டர் கூறியிருந்தார். அந்த ஆறேழு மாதங்களுக்கு, பெரும்பாலும் நான்ஸியின் கண்ணுக்குக் கட்டுப் போட்டிருக்கும். மூக்கு, புருவம், தாடை ஆகியவற்றை மட்டும் கவனிப்பார். இப்படியே கொஞ்சம் கொஞ்சமாக மொத்த முகத்தையும் மாற்றியமைக்கப் போவதாக டாக்டர் பீட்டர் சொல்லியிருந்தார்.

நான்ஸிக்காக வேறு செலவுகளும் உண்டு. முற்றிலும் புத்தம் புதியவளாக அவள் மாறப் போவதால், அந்த அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ளும் மனோதிடம் அவளுக்கு ஏற்பட வேண்டும். அதற்காக ஒரு மனவியல் நிபுணரும் நான்ஸியைக் கவனித்துக்கொள்ளப் போகிறார்.

அந்த மட்டில் மரியமுக்கு ஆறுதல்தான். நான்ஸி முற்றிலும் வேறு பெண்ணாக மாறிவிட்டால் அவ்வளவுக்கவ்வளவு மைக்கேலிடமிருந்து எட்டிப் போய்விடுவாள்.

இன்னும் ஐந்து வருஷம் கழித்துத் தற்செயலாக ஏதாவதொரு விமான நிலையத்தில் மைக்கேல் அவளைப் பார்க்க நேரிட்டால்கூட அடையாளம் தெரியப் போவதில்லை.

இன்று விடிகாலை நாலு மணிக்கு டாக்டர் பீட்டருடன் போனில் பேசியது மரியமுக்கு ஞாபகம் வந்தது.

பிளாஸ்டிக் சிகிச்சையில் சர்வதேசப் புகழ்பெற்றவரான அந்த டாக்டருக்கு வயது நாற்பதுக்குள்தான். சுறுசுறுப்பாகவும் பளிச்சென்றும் பேசினார்.

நான்ஸிக்கான இருப்பிடம் துணிமணிகள் எல்லாவற்றையும் தன் செக்ரட்டரி ஏற்பாடு செய்து விடுவாள் என்று சொன்னார்.

அறுவைச் சிகிச்சை, மனவியல் டாக்டரின் செலவு, நர்ஸ்கள் சம்பளம், மற்ற உதிரிச் செலவுகள்—எல்லாமாக முதல் ஒன்றரை வருடத்துக்குச் சுமார் அறுபது லட்சம் ரூபாய் ஆகலாம் என்று கணக்கிட்டார்கள்.

''காலையில் பாங்க் திறந்ததுமே முதல் காரியமாக சான்பிரான்ஸிஸ்கோ பாங்கில் உங்கள் கணக்கில் பணம் கட்டி விடுகிறேன்.'' என்றாள் மரியம்.

எல்லாம் கிடுகிடுவென்று முடிந்துவிட்டது. இந்தப் பெண் நல்ல அதிர்ஷ்டக்காரிதான்.

''மரியம்...'' என்று மறுபடி குரல் கொடுத்தார் டாக்டர் விக்கி.

''என்ன?''

''காலைச் சிற்றுண்டி...''

''கொஞ்ச நேரம் போகட்டும், விக்கி. நான் மைக்கேலைப் பார்க்கணும்.''

''நான் முன்னால் போய்ப் பார்க்கிறேன்.'' என்று புறப்பட்டார் விக்கி. ஒரு மணி நேரம் முன்புதான் அவனைப் பார்த்திருந்தார். அதற்குள் என்ன பிரமாத முன்னேற்றம்

---



''என் மகளைக் கடத்திக்கிட்டுப் போய்க் கல்யாணம் நிச்சயம் பண்ணினதுமில்லாமல், அந்தப் பாவி எனக்கே கல்யாணப் பத்திரிகை அனுப்பியிருக்கான்!''

''நீங்க என்ன பண்ணினீங்க?''

''நான் என்ன அவ்வளவு ரோஷம் கெட்டவனா? கல்யாணத்துக்கே போகலியே!''

—காஞ்சி எஸ். ஃபைசுதீன்

ஏற்பட்டிருக்கப் போகிறது என்று நினைத்துக் கொண்டார்.

ஐந்து நிமிஷம் கழித்து மரியம் மைக்கேலின் அறையை அடைந்த போது அங்கே பயங்கர நிசப்தம் நிலவியது.

நர்ஸ் இல்லை. டாக்டர் விக்கி மட்டும் கட்டிலினருகே அசையாமல் ஆழ்ந்த யோசனையுடன் நின்றிருந்தார்.

காலை இளஞ்சூரியனின் கதிர்கள் அறைக்குள் நுழைந்திருந்தன. எங்கேயோ ஒரு தொட்டியில் அமைதியாகத் தண்ணீர் விழும் ஓசை டப் டப்பென்று கேட்டது. மற்றப்படி எங்கும் அமைதி...

மரியமின் மார்பு அடைத்துக் கொண்டது. இப்படித்தானே அன்றொரு நாள் அவள் கணவரும்...

அவளையும் அறியாமல் அவள் கைகள் வாயைப் பொத்திக் கொண்டன. டாக்டரையும் படுக்கையையும் மாறி மாறிப் பார்த்த வண்ணம் உறைந்து போனாள்.

அவள் பார்வை மகனின் முகத்துக்குத் திரும்பியது. அப்பா! அன்று கண்டாளே, கணவனின் முகம் அது போல இல்லை இது. இதில் ஜீவன் இருக்கிறது.

விம்மலொன்று தொண்டையை அடைத்துக் கொள்ள, நடுங்கும் கால்களுடன் படுக்கையை நெருங்கினாள். குனிந்தாள். மகனின் முகத்தைத் தொட்டாள்.

''அம்மா,'' என்றான் அவன்.

உலகத்திலேயே அற்புதமான, அழகான சொல் இது போல் அவள் கேட்டதில்லை! புன்னகை பூத்தாள். கண்களிலிருந்து வழிந்த கண்ணீர் அந்தப் புன்னகையை நனைத்தது.

''மைக்கேல் கண்ணா, ஐ லவ் யூ...'' என்றாள்.

''நானும்தான் அம்மா.''

அருகிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த டாக்டர் விக்கிக்கு கண்ணில் நீர் துளித்தது.

அவர்களுடைய மகிழ்ச்சியைக் கெடுக்க வேண்டாமென்று நினைத்தவராய் ஓசைப்படாமல் வெளியேறினார்.

மகனைத் தன் தோள்மீது சாத்திக்கொண்டாள் மரியம். அவனுடைய முடியைக் கோதிக் கொடுத்தாள்.

''என்னம்மா நீங்க... எதுக்குக் கவலைப்படுகிறீர்கள். எனக்கு ஒன்றுமில்லை... எல்லாம் சரியாகி விட்டது. அம்மா, எனக்கு ஒரே பசியாய் இருக்கிறது.''

மரியம் வாய்விட்டுச் சிரித்தாள். மைக்கேல் பிழைத்து விட்டான். இனி அவளுடைய மகனாக என்றென்றைக்கும் இருப்பான்.

''ஓ! உடனே மகா பிரமாத



டிஸ்கோ சாந்தியின் லாரி அனுபவம்

எனக்குக் கார், மோட்டார் பைக் எல்லாம் ஓட்டத் தெரியும். லாரி மட்டும் ஓட்டியதில்லை. சமீபத்தில் ஒரு நாள் படப்பிடிப்பிற்கு வந்த ஒரு லாரியை ஓட்டிப் பார்க்க ஆசைப்பட்டேன். முதலில் பயமாக இருந்தது. ஓட்டத் தொடங்கியவுடன் கார் மாதிரியே ஓட்டினேன். அப்பாடா! லாரியும் ஓட்டிப் பார்த்து விட்டேன்.

—வி.சி

மான, மகா ருசியான, மகா பெரிய சிற்றுண்டி வரவழைக்கிறேன்—ஆனால் டாக்டர் விக்கி சரியென்று சொல்ல வேண்டும்.''

''போம்மா! விக்கியுமாச்சு, மக்கியுமாச்சு! எனக்குப் பசிக்கிறது!''

''மைக்கேல்!'' செல்லமாய் அதட்டினாள் மரியம். ஆனால் அவனிடம் கோபம் காட்ட முடிய வில்லை. அவனிடம் அவள் காட்டக் கூடியதெல்லாம் அன்பு, பிரியம், பாசம்...

அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். மேகம் மாதிரி ஒரு கருமை அந்த முகத்தில் படருவது தெரிந்தது. தான் எங்கே இருக்கி றோம் என்பது இப்போதுதான் அவனுக்கு ஞாபகம் வருகிறது போலிருக்கிறது. இதுவரை தனக்கு ஏதோ டான்ஸில் ஆபரேஷன் நடந்திருப்பது போலவும், அம்மா விடம் குழந்தை ஐஸ் கிரீம் கேட்பது போலவும் பாசாங்கு பண்ணியிருக் கிறான். இப்போது அவனிடம் ஒரு தீவிரம் தென்படுகிறது. படுக்கையில் எழுந்து உட்கார முயன்றான். ஏதோ கேட்க நினைக்கிறான். வார்த்தைகள் சரியாக வரவில்லை. தாயின் முகத்தை ஆராய்கிறான்...

அவள் அவன் கண்களையே உற்றுப் பார்த்தவாறு, அவன் கை களைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டாள். ''என்னப்பா? என்ன பார்க்கிறே?''

''அம்மா... அன்று ராத்திரி... ஞாபகம் வருகிறது... என்னோடு இருந்த மற்றவர்கள்...''

''உன் சினேகிதன் பென் அவன் அப்பாவுடன் பாஸ்டனுக்குப் போய் விட்டான். பாவம், அவனுக்கு ஏகப் பட்ட காயம். ஆனால் உயிருக்கு அபாயம் இல்லை. உன்னைவிட அவன் எவ்வளவோ தேவலை,'' என்றாள் மரியம். சொல்லிவிட்டு ஒரு பெருமூச்சுடன் அவன் கைகளை மேலும் பலமாக இறுக்கிக் கொண்டாள்.

அடுத்து அவன் என்ன கேட்கப் போகிறானென்பது அவளுக்குத் தெரிந் திருந்தது. அதற்குத் தயாராகவே இருந்தாள்.

''வந்து... நான்ஸி?'' அந்தப் பெயரைச் சொல்லுகையில் அவன் முகம் சவம் போல் வெளுத்தது. ''நான்ஸி அம்மா? நான்ஸிக்கு என்ன ஆச்சு?'' அவன் கேட்கும்போதே அவன் கண் முனைகளில் நீர் பளபளத்தது. அம்மா பதிலேதும் சொல்லாமல் மெல்ல எழுந்து அருகிலிருந்த நாற்காலியில் உட் கார்ந்து கொள்வதையும், அவள் கை விரல்கள் தன் முகத்தை மெதுவே வருடிக் கொடுப்பதையும் காணக் காண அவனுக்குப் பகீரென்றிருந்தது.

''இல்லை, கண்ணா. எவ்வ ளவு முடியுமோ அவ்வளவும் செய்து பார்த்து விட்டார்கள். அடி ரொம்ப அதிகம்.'' அரை வினாடி நிறுத்தி விட்டுப் பின் சொன்னாள்:

''இன்று விடிகாலை அவள் இறந்துவிட்டாள்.''

(தொடரும்)




வந்தவர்: இந்த பெட்ல இருந்த பேஷண்ட் எங்கே?''

நோயாளி: அவர் மேலே போய் விட்டார். பழம், பிஸ்கெட் என்று யார் என்ன கொண்டு வந்தாலும் என்னை வாங்கிச் சாப்பிடச் சொல்லிட்டுப் போனார்!

—எம். கீதா

## நலம் பெற வேண்டும்

என்னுடைய அப்பா பழனிச்சாமிக்கு 10 மாதம் முன்பு மூக்கில் கொப்புளம் வந்தது. அதற்கு ஊசி போட்டதில் ஊசி மருந்து மாறிவிட்டது அதனால் தலை பூராவும் பரவிவிட்டது. அதன்பின் 8 மாதங்களாக ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்தார். புண் நன்றாகக் குணமாகி விட்டது. ஆனால் கை, கால் இரண்டும் நன்றாக வருவதில்லை. ஆகவே உடல் நலம் பெற, கை, கால் சரிவர எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்குமாறு அன்பும் பண்பும் கருணை உள்ளமும் கொண்ட பிரார்த்தனை கிளப் உறுப்பினர்களைப் பணிவன்புடன் வேண்டி கேட்டுக் கொள்கிறேன்.

பி. மயில்சாமி 46, முத்துநகர் முதல் வீதி, திருப்பூர் 638 607.

எனது பெயர் கே.ஆர். சிவகுமார் (வயது 20). எனக்கு இருதயத்தில் இரண்டு வால்வுகள் பழுதடைந்துள்ளன. அறுவை சிகிச்சை மூலம் இரண்டு வால்வுகளையும் மாற்ற வேண்டும் என்று மருத்துவர்கள் கூறுகின்றார்கள்.

இந்த மாதத்தில் எனக்கு அறுவை சிகிச்சை நடைபெறும். சிகிச்சை நன்கு நடந்தேற அன்புள்ளம் கொண்ட பிரார்த்தனை கிளப் அங்கத்தினர்கள் இறைவனைப் பிரார்த்திக்கும்படி மிகத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

கே.ஆர். சிவகுமார், குருத்துக்குளி கிராமம், நஞ்சநாடு, நீலகிரி.



இந்த வாரம் கூட்டுப் பிரார்த்தனைக்குத் தலைமை தாங்குபவர்: எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன், ஆசிரியர், 'கீதாசாரியன்', சென்னை—5.



மற்றவர் துன்பம் கண்டு வருந்தும் குணம் இருக்கிறது என்றால், இறைவனோடு தொடர்பு உண்டு என்பர் பெரியோர். பிறர் நலத்துக்காகப் பிரார்த்தனை செய்வது மிக உயர்ந்த, உன்னதமான செயல். ''குழாங்களாய் அடியீருடன் கூடி நின்று ஆடுமினே'' என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடி கூட்டுவழிபாடு செய்தால், இறைவன் திருவுள்ளம் இரங்கும்.

திருப்பூர் பழனிச்சாமிக்கு கை, கால்கள் குணமாகிப் பூரண நலம் பெறவும், நீலகிரி கே.ஆர். சிவகுமாரின் இருதய நோய்

# சூர்ந்து பார்த்தால் ஊர்கள் தெரியும்









நான்கு நட்சத்திரங்களும் நான்கு ஊர்களின் பெயர்களை இங்கே நடித்துக் காட்டியிருக்கிறார்கள். ஒவ்வொரு நட்சத்திரமும் எந்தெந்த ஊரைச் சொல்கிறார்கள் என்று உங்களால் ஊகிக்க முடிகிறதா?

விடை: 73'ம் பக்கம்.

புதிர் ஏற்பாடு: ரகுராஜ்




தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

# 13

என்ன! நான்ஸி இறந்து விட்டாளா! நான்ஸி இறந்து விட்டாளா?

ஆயிரம் இடிகள் தலைமேல் விழுந்த மாதிரி இருந்தது மைக்கேலுக்கு, அம்மா சொன்ன தகவலைக் கேட்டதும்.

''அம்மா! நிஜமாத்தான் சொல்கிறீர்களா? நீங்கள் அவளைப் பார்த்தீர்களா?'' தாயின் முகத்தையே பார்த்தபடி கதறினான் அவன்.

மகனின் தலையை மெல்லக் கோதியபடி, ''ஆமாம், கண்ணா. நான்ஸி இறந்துவிட்டாள். இன்று விடிகாலை கொஞ்ச நேரம் அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்தேன்,'' என்றாள்.

''ஐயோ கடவுளே? அவளை நான் பார்க்க முடியாமல் போய் விட்டதே! நான்ஸி... நான்ஸி... நான்ஸி...'' தலையணையில் முகம் புதைத்தபடி அவன் புலம்பிக் கொண்டே இருந்தான். மரியம் அவன் தோள்களை ஆதரவோடு அணைத்துக் கொள்ள, அவன் குழந்தை போலத் தேம்பித் தேம்பி அழுதான். நான்ஸி—நான்ஸி... அவள் பெயரைச் சொல்லிச் சொல்லி விசும்பினான். அழ முடியாதபடி தொண்டை கட்டிக் கொள்ளும் வரையில் விம்மிக் கொண்டேயிருந்தான்.

பிறகு மெதுவே திரும்பி, தலையை உயர்த்தித் தாயைப் பார்த்தான்.

மரியம் அவன் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டாள். இத்தனை காலமும் பார்த்திராத வகையில் அவன் முகம் மாறியிருந்தது.

நான்ஸியின் பெயரைச் சொல்லிக் கொண்டேயிருந்த அந்த நிமிடங்களில் அவனில் ஒரு பகுதியை அவன் இழந்து விட்டதுபோல் அவளுக்குத் தோன்றியது. அவனுக்குள் ஏதோ ஒன்று ரத்தத்தோடு ரத்தமாக வடிந்து விட்டாற்போல—இறந்து விட்டாற்போல மரியம் உணர்ந்தாள்.

விமானம் சான்பிரான்ஸிஸ்கோவை நெருங்கிக் கொண்டிருந்தது.

முகம் பூரா கட்டுடன் படுத்திருந்த நான்ஸி, விமானம் கிளம்பியது முதல், நூறாவது முறையாக அந்த நர்ஸின் கையை மெல்லப் பிடித்துக் கொண்டாள்.

அப்படிப் பிடிக்கும் போதெல்லாம் அவளுக்குள் ஓர் ஆறுதல் ஏற்பட்டது.

அவளருகில் இரண்டு நர்ஸ்கள் இருந்தார்கள். ஸ்பரிசத்தின் மூலமே எந்த நர்ஸின் கை எது என்று தெரிந்து கொள்ள நான்ஸியால் முடிந்தது. அதை எண்ணி அவளுக்குப் பெருமையாய்க்கூட இருந்தது. ஒரு நர்ஸின் விரல்கள் மெலிந்து நீளமாய் மென்மையுடன் இருந்தன. கொஞ்சம் குளிர்ச்சியாகவும் இருந்தது. ஆனால் அவளி

மூலம்: டானியல் ஸ்டீல்

டம் ஏதோ பெரும் சக்தி இருக்க வேண்டும். அவளைத் தொட்டாலே நான்ஸிக்குத் தெம்பும் தைரியமும் ஏற்படுகிற மாதிரி இருந்தது.

இன்னொரு நர்ஸின் கை கொழுக்கு மொழுக்கென்று இருந்தது. கதகதப்பான அந்தக் கை நான்ஸியை அடிக்கடி தட்டிக் கொடுத்தது. அதில் அன்பு பிரதிபலித்தது. நான்ஸிக்கு வலி தெரியாமல் இருப்பதற்காக இரண்டு முறை ஊசி போட்டவள் அந்த நர்ஸ் தான். அவள் குரலில் பிரியம் தொனித்தது.

இருவரையுமே நான்ஸிக்குப் பிடித்துப் போய்விட்டது.

ஒரு நர்ஸ் சொன்னாள்: ''சான்பிரான்ஸிஸ்கோவை நெருங்கிக் கொண்டிருக்கிறோம், நான்ஸிம்மா. அதோ கடல் தெரிகிறது. சீக்கிரமே விமான நிலையத்தை அடைந்து விடுவோம்.''

அவள் அப்படிச் சொல்லிக் கொண்டிருந்த அதே சமயம், விமான நிலையத்தை நோக்கித் தன் காரில் வந்து கொண்டிருந்தார் டாக்டர் பீட்டர்.

கைக் கடியாரத்தைப் பார்த்துக் கொண்டார். ''இன்னும் இருபது நிமிஷத்தில் விமானம் வந்து விடும்,'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார். ஆம்புலன்ஸ் வண்டியை விமான நிலையத்துக்கு வரும்படி ஏற்பாடு செய்திருந்தார் அவர். காரை விமான நிலையத்தில் விட்டுவிட்டு, ஆம்புலன்ஸ் வண்டியில் நான்ஸியுடன் வர வேண்டுமென்று அவர் திட்டம்.

அந்தப் பெண் எப்படிப் பட்டவளாக இருப்பாள்? அடிக்கடி எண்ணிப் பார்த்துக் கொண்டார்.

மரியம் அவளைப் பற்றி அவ்வளவு அக்கறை எடுத்துக்



# உதடே உதடே ஒட்டாதே













புலவர் கீரன் சொற்பொழிவில் கேட்டவர்:
தி. வீரசுடலை

கொண்டிருக்கிறாள் என்றால் முக்கியமான நபராகத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் ஒன்றல்ல, இரண்டல்ல, அறுபது லட்சம் ரூபாய் செலவழிக்க முன் வந்திருப்பாளா?

அவருடைய பீஸ் நாற்பத்தைந்து லட்சம் ரூபாய்தான். மீதி பதினைந்து லட்சம், அடுத்த ஒன்றரை வருடத்துக்கு நான்ஸி வசதியாக வாழ்வதற்காகத்தான். நல்லபடி பார்த்துக் கொள்கிறேன் என்று மரியமுக்கு அவர் உறுதி கொடுத்திருந்தார்.

நான்ஸியுடன் நன்கு பழகி, அவளை முற்ற முழுக்கப் புரிந்து கொள்ள வேண்டும் என்று டாக்டர் பீட்டர் விரும்பினார். அவள் ஒரு புதிய பெண்ணாக ஆகப் போகிறாள். பதினெட்டு நீண்ட மாதங்களுக்குத் தன் கர்ப்பத்தில் வைத்திருந்து நான்ஸி என்ற ஒரு புதுப் பெண்ணை அவர் பிரசவிக்கப் போகிறார்.

எதையும் தாங்கிக் கொள்ளும் தைரியமான பெண்ணாக அவள் மாற வேண்டும். மாறுவாள். மாற்றப்படுவாள்.

அவருக்குத் தன் தொழிலில் எல்லையற்ற ஈடுபாடு எப்போதுமே உண்டு. இப்போது நான்ஸிக்குச் சிகிச்சை தருவதை ஒரு சவாலாக ஏற்றுக் கொண்டிருந்தார். தானும் நான்ஸியுமாகச் சேர்ந்து இந்தப் போராட்டத்தில் வெற்றி பெறப் போகிறோம் என்று அவருக்கு நிச்சயமாய்த் தெரிந்தது. ஏனோ தெரியவில்லை, நான்ஸியைப் பார்ப்பதற்கு முன்னரே அவளிடம் அவருக்கு ஓர் ஈடுபாடு ஏற்பட்டு விட்டது.

மீண்டும் கடியாரத்தைப் பார்த்துக் கொண்டார், காரின் வேகத்தை அதிகப்படுத்தினார். இந்தக் காரில் வேகமாகச் செல்வது அவருக்குப் பிடித்தமான விஷயங்களில் ஒன்று. இது மட்டுமல்ல, தன் சொந்த விமானத்தையும் அவரேதான் ஓட்டுவார். நேரம் கிடைக்கும் போதெல்லாம் நீச்சலுக்கும் பனிச் சறுக்கு விளையாட்டுக்கும் அவர்

"நான் நேசிப்பது பட்டுப் போன்ற மென்மை"

"எனவேதான் புதிய டாபர் ஸ்பெஷல் ஹேர் ஆயிலே நான் மிகவும் விரும்புகிறேன்."

புதிய டாபர் ஸ்பெஷல் ஹேர் ஆயில், கூந்தலுக்கு ஊட்டம் கொடுக்கும் விசேஷப் பொருட்கள் கலந்த, பரவசமூட்டும் பிசுக்கு இல்லாத ஒரு எண்ணெய்!

''எனது கூந்தலுக்கு நான் விரும்பி உபயோகிக்கும் எண்ணெய் இதுவே. புதிய டாபர் ஸ்பெஷல் ஹேர் ஆயில், எண்ணெய்ப் பிசுக்கு இல்லாமல் எனது கூந்தலுக்கு ஊட்டம் அளிக்கிறது. அது கூந்தலை பட்டுப்போல மென்மையாக்கி, நறுமணம் ஊட்டி, இயற்கை எழிலுடன் திகழச் செய்கிறது.''




# டாபர் ஸ்பெஷல்

## ஹேர் ஆயில்

கூந்தலுக்கு பிசுக்கற்ற ஊட்டச்சத்து

செல்வதுண்டு. ஐரோப்பாவில் பல மலைச் சிகரங்களில் அவர் ஏறியிருக்கிறார். மற்றவர்களால் ஈட்ட முடியாத வெற்றிகளை ஈட்டுவது அவருக்குப் பிடிக்கும். அசாத்தியமானது என்று ஒன்று இருந்தால் அதைச் சாத்தியமாக்க முயன்று வெற்றியும் பெறுவார். 'என்னவோ தான்தான் கடவுள் என்று இந்த டாக்டருக்கு எண்ணம்!' என்று சில பேர் அவரைக் குற்றம் சாட்டுவதுகூட உண்டு. எதிலும் அவர் தோல்வியைக் கண்டது கிடையாது—அது மலையாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, நோயாளியாக இருந்தாலும் சரி.

காரின் வேகத்தில் அவருடைய முடியும் மெல்லிய சட்டையும் சிலுசிலுத்தன. அப்பழுக்கற்ற அழகான உடைகளையே அவர் எப்போதும் அணிவார். அதனால் அவர் தோற்றம் மேலும் அழகாகத் தெரியும். கண்களில் ஜீவன் மின்னும். மின்சாரம் மாதிரி அவருக்குள்ளிருந்து பரவும் ஆர்வ அலைகள் எவரையும் வசீகரித்து விடும்.

விமான நிலையத்தை அவர் அடையவும் விமானம் தரையிறங்கவும் சரியாக இருந்தது. அதிகாரிகளிடம் தன் ஸ்பெஷல் அனுமதிச் சீட்டைக் காட்டி உள்ளே சென்றார். சிறிய வண்டியின் மூலம் விமானத்தை நெருங்கிச் சென்றார்.

மற்றப் பிரயாணிகளை நிறுத்திக் கொண்டு நான்ஸியின் ஸ்டிரெச்சரை மட்டும் முதலில் இறக்கினார்கள். கட்டுப் போடப் பட்டிருந்த பெண்ணையும் அவளுடன் இணைக்கப்பட்டிருந்த ரத்தப் புட்டிகளையும் குழாய்களையும் கவனித்த போது அவருக்கு என்னவோ போல் இருந்தது. ஆனால் அவளுடன் நர்ஸ்கள் பேச்சுக் கொடுத்தபடி வருவதைக் கண்டு நிம்மதி ஏற்பட்டது.

இரண்டு நர்ஸ்களும் இளமையாகவும் சுறுசுறுப்பாகவும் இருந்தார்கள். அவருக்குத் திருப்தி உண்டாயிற்று. இவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து ஒரு குழுவாக இயங்க வேண்டும், அடுத்த பதினெட்டு மாத காலத்துக்கு. அலட்சியமோ திறமையின்மையோ யாருக்கும் இருக்கக் கூடாது. அந்த வகையில் இனிக் கவலையில்லை என்று பீட்டர் சந்தோஷப்பட்டார்.

ஸ்டிரெச்சரை மெல்ல ஆம்புலன்ஸுக்குள் வைத்தார்கள். நர்ஸ்களிடம் டாக்டர் ஒன்றும் பேசவில்லை. புன்னகை மட்டுமே செய்தார். 'கொஞ்சம் இருங்கள்' என்று அவர்களுக்குச் சைகை காட்டி விட்டு, ஆம்புலன்ஸுக்குள் ஏறி, நான்ஸிக்குப் பக்கத்திலிருந்த இருக்கையில் அமர்ந்தார்.

அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''ஹலோ, நான்ஸி. நான் பீட்டர். பிரயாணம் எப்படி இருந்தது?'' என்று கேட்டார்.

முகமில்லாத ஒரு பொம்மையுடன் பேசுகிற மாதிரி இல்லாமல், ஒரு நிஜமான பெண்ணிடம், அவளிடம் ஒரு வித்தியாசமும் தான் காணாத மாதிரி, இயல்பாக அவர் பேசிய விதமும், அதிலிருந்த பரிவும் நான்ஸியை நெகிழ வைத்தன.

''பிரயாணம் சௌகரியமாக இருந்தது. நீங்கள்தான் டாக்டர் க்ரெக்ஸனா?'' என்றாள். குரலில் களைப்புத் தெரிந்தாலும் ஆர்வம் இருந்தது.

''ஆமாம். நான் டாக்டர் க்ரெக்ஸன்தான். ஆனால் நீ பீட்டர் என்றே கூப்பிடலாம். ஏனென்றால் நாம் இரண்டு பேருமாகச் சேர்ந்து ஒரு காரியத்தை வெற்றிகரமாகச் செய்ய வேண்டும். நமக்குள் அனாவசிய மரியாதைகள் எதற்கு?'' என்றார் பீட்டர்.

அவர் பேசிய விதம் நான்ஸிக்குப் பிடித்திருந்தது. புன்னகை செய்ய முயன்றாள். ஆனால் முகத்திலிருந்த கட்டு அதை மறைத்துவிட்டது.

''என்னைச் சந்திப்பதற்காகவா வந்தீர்கள்?'' என்றாள்.

''ஏன்? நான் உன் ஊருக்கு வந்தால் நீ என்னை வரவேற்க வர மாட்டாயா?''

''வருவேன்,'' என்றவள் தலையை ஆட்ட முயன்றாள். முடியவில்லை.

''சான்ஸ்பிரான்ஸிஸ்கோவுக்கு நீ வருவது இதுதான் முதல் தடவையா நான்ஸி?''

''ஆமாம்.''

''இந்த ஊர் உனக்கு ரொம்பப் பிடித்துவிடப் போகிறது, பார். எல்லா வசதிகளும் உள்ளதாக உனக்கு ஜாகை பார்த்து வைத்திருக்கிறேன். இந்த ஊரை விட்டுப் போகவே உனக்கு மனசு வராது. ரொம்பப் பேர் அப்படித்தான். கொஞ்ச நாள் தங்குவதற்காக வருவார்கள். பிறகு திரும்பிப் போக மாட்டார்கள். என்றென்றைக்கும் இங்கேயே தங்கிவிடுவார்கள். என்னையே எடுத்துக்கொள். பதினைந்து வருடத்துக்கு முன்னால் சிகாகோவிலிருந்து இங்கே வந்தேன். இப்போது லட்ச ரூபாய் தந்தாலும் திரும்பிப் போக மாட்டேன்.''

நான்ஸி சிரித்தாள். அவள் களைப்பை நீக்கிச் சகஜமாக்க வேண்டுமென்றுதான் டாக்டர் பீட்டர் தமாஷாகப் பேசிக் கொண்டிருந்தார். ''உனக்குச் சொந்த ஊர் பாஸ்டனா, நான்ஸி?'' என்றார்.

''இல்லை. நான் அனாதை விடுதியில் வளர்ந்தவள். பதினெட்டு வயது ஆகும்போது பாஸ்டனுக்கு வந்தேன்.''

அனாதை விடுதியில் வளர்ந்தவள் என்று அவள் சொன்னதை டாக்டர் பீட்டர் பெரிதாய் எடுத்துக் கொள்ளாமல், ''ஓ! அனாதை விடுதியென்றால் டிக்கன்ஸின் நாவலில் வருமே அதுமாதிரியா?'' என்று வேடிக்கையாகக் கேட்டார்.




உதவி செய்யும் இருதயம் உள்ளவனுக்குத்தான் குற்றம் சொல்ல உரிமையுண்டு.

—லின்க்கன்

---

நான்ஸி சிரித்தாள். ''அப்படிக் கொடுமை எதுவும் கிடையாது. கன்னியா ஸ்திரீகள் ரொம்பப் பிரியமாய் இருப்பார்கள். அவர்களைப் பார்த்துப் பார்த்து நான்கூடக் கன்னியாஸ்திரீ ஆக வேண்டுமென்று ஆசைப்பட்டதுண்டு.''

''ஐயையோ! அப்படியெல்லாம் போய் விடாதே. நமது சிகிச்சை முடிந்த பிறகு நீ எவ்வளவு அழகாய் இருப்பாய் தெரியுமா? ஹாலிவுட்டிலிருந்து யாராவது வந்து உன்னைப் பார்த்தால் கொத்திக் கொண்டு போய்விடுவார்களாக்கும்!'' என்றார் டாக்டர் பீட்டர்.

அவள் மீண்டும் சிரித்தாள்.

''என்ன, கன்னியாஸ்திரீயாகப் போய்விட மாட்டாயே?''

''மாட்டேன், டாக்டர்.''

''சத்தியமாய்?''

''சத்தியமாய் டாக்டர்!''

அவள் இதயம் மைக்கேலை நோக்கி ஓடியது.

'நான் ஏன் கன்னியாஸ்திரீயாகப் போக வேண்டும்? எனக்கு மைக்கேல் இருக்கிறான். மைக்கேலின் காதல் இருக்கிறது,' என்று எண்ணிக் கொண்டாள்.

(தொடரும்)

எப்படி மேக்கப் செய்து கொள்வது? ரம்யா கிருஷ்ணன் சில டிப்ஸ் தருகிறார்:

# மேக்கப்புன்னா



**1. நகங்கள்:**

நகத்தில் சாயம் பூசுவதற்கு முன் அளவாக நறுக்கி விட வேண்டும். பிறகு முட்டை வடிவத்தில் அரத்தால் ராவி விடவும்.



**2. புருவம்:**

புருவத்தை பிரஷ்ஷால் சீவிப் படிய வைக்க வேண்டும். பிறகு டார்க் பிரவுன் பென்சிலால் (ஐப்ரோ பென்சில்) புருவத்தை எழுத வேண்டும். இது முடிந்ததும் பாயிண்ட் பிரஷ்ஷால் புருவத்தை வில் மாதிரி சரி செய்து கொள்ள வேண்டும்.

பிறகு புருவத்துக்கும் கண்ணுக்குமிடையே உள்ள பகுதியில் பிரஷ்ஷால் ஐ ஷேடோ கொடுத்தால், கவர்ச்சியாகத் தெரியும்.



மேக்கப்பிற்கு முன்

முதலில் சுத்தமான வெள்ளைத் துணியை நீரில் நனைத்து முகத்தில் அழுக்கு இல்லாதபடி துடைத்துக் கொள்ள வேண்டும்.

பேன் ஸ்டிக் (கிரீம்)—பவுடர் மாதிரி செந்நிறத்தில் இருக்கும். இதை நெற்றி, மூக்கு, கன்னம், தாடை, கழுத்து ஆகிய பகுதிகளில் ஒரே சீராகத் தடவிக் கொள்ள வேண்டும். அடுத்து ரோஸ்

**3. பளபளப்பு (Highlighter):**

கன்னம் மினுமினுப்பாக இருக்க பிரஷ்ஷால் அந்த இடத்தில் கொஞ்சம் ரோஸ் பவுடர் தூக்கலாகத் தடவ வேண்டும்.

# காதல் மேல் ஆணை

**14**

நான்ஸி!
உன் அறைக்கு
ஓடோடி
வந்தேனே?
எங்கே
போனாய்?



பாஸ்டன் நகரின் பிரமாண்டமான ஓட்டலின் முன்னே போய் நின்றது அந்த ஆம்புலன்ஸ் வண்டி. ஊழியர்கள் சுறுசுறுப்பாக இறங்கிக் கதவைத் திறந்து ஸ்டிரெச்சரை உள்ளே எடுத்துச் சென்றார்கள்.

சகல வசதிகளும் நிறைந்த பெரிய அறைக்கு ஸ்டிரெச்சரைக் கொண்டு சென்றார்கள்.

மைக்கேலை மெல்லப் படுக்கையில் கிடத்தினார்கள்.

பாஸ்டன் நகரில் மரியமுக்குச் சில பிஸினஸ் வேலைகள் இருந்தன. மைக்கேலும் தங்கள் நியூயார்க் வீட்டுக்குச் செல்லுமுன் இங்கே சில நாட்கள் தங்க வேண்டுமென்று கேட்டிரு[ந்]தான்.

அவனுடைய விருப்பம் எதுவானாலு[ம்] அதை நிறைவேற்றுவதென்று மரியம் தீ[ர்] மானித்திருந்தாள். ஆகையால் இந்த ஓட்ட[லில்] ஏற்பாடு செய்யப்பட்டது.

தாயைப் பார்த்து முகம் சுளித்தா[ன்] மைக்கேல். "என்னம்மா, ஸ்டிரெச்சர் அ[து] இதுவென்று! எனக்கு ஒன்றுமில்லை என்[று] தான் டாக்டர்கள் சொல்லிவிட்டார்களே?"

"இருக்கட்டுமே? அதற்காக உடம்பை வருத்திக்கொள்ள வேண்டுமா?" ஓட்ட[ல்] ஊழியர்களுக்கு டிப்ஸ் கொடுத்தனுப்பினா[ள்] மரியம். மைக்கேல் அறையை நோட்ட[ம்] விட்டான். எங்கு பார்த்தாலும் பூக்கள் வைக்கப்பட்டிருந்தன. படுக்கைக்கருகே இருந்த மேஜையில் ஒரு கூடை நிறைய[ப்] பழங்கள் இருந்தன.

இந்த ஓட்டலே அம்மாவுக்குச் சொந்த[ம்] என்பது பிறகுதான் மைக்கேலுக்கு ஞாபக[ம்] வந்தது. பல வருடங்களுக்கு முன் இதை விலைக்கு வாங்கியிருந்தாள்.

இரண்டொரு வாரத்துக்கு அமைதியாகப் படுத்திருக்கவே அவன் விரும்பினான். அதன் பிறகு அம்மாவின் கம்பெனியில் வேலைக்குப் போகலாம்.

முதலில்... முதலில்...

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்

மூலம்: டானியல் ஸ்டீ[ல்]

வேறொரு முக்கியமான லை இருக்கிறது...

''ஏதாவது சாப்பிடுகிறாயா?'' று மரியம் மறுபடி கேட்டாள்.

''ஓ! மசால் தோசை, சாதம், ார்க் குழம்பு, ஐஸ்கிரீம்...'' க்கையில் எழுந்து உட்கார்ந்து ாண்ட மைக்கேல் குறும்பாகப் லளித்தான்.

''சகிக்கலை!'' என்று மரியம் த்துவிட்டுக் கைக்கடியாரத்தைப் ர்த்துக் கொண்டாள். ''சரி, ாக்கு வேண்டியதை வரவழைத்துச் ப்பிடு. ஜார்ஜ் வருகிற நேரம். ஒரு னிக்கு எங்களுக்கு பிஸினஸ் மீட்டிங் ருக்கிறது.''

தன் ப்ரீஃப்கேசை எடுத்துக் ாள்வதற்காக அடுத்த அறைக்கு ள் சென்றாள். வெளியே அழைப்பு ணியின் ஓசை கேட்டது. அடுத்த ட்டம் மரியமின் மானேஜர் ஜார்ஜ் ாளே வந்தார்.

''என்ன மைக்கேல், எப்படி ருக்கிறீர்கள்?''

''ஒரு வேலையும் இல்லாமல் ையைக் கட்டிக் கொண்டு இரண்டு ரம் ஆஸ்பத்திரியில் இருந்தாயிற்று. ழ்க்கையே வெறுத்து விடும் ாலிருக்கிறது.''

விளையாட்டாகப் பேச அவன் ன்ற போதிலும் அவனுடைய கண் ில் ஒரு சூனியம் நிரம்பியிருந்தது.

அதை அவன் அம்மாவும் கவனித்திருந்தாள். அதற்குக் காரணம் களைப்பு என்று அவள் தனக்குத் தானே சமாதானம் சொல்லிக் கொண்டிருந்தாள். வேறு காரணம் உண்டு என்று அவளுக்குத் தெரியும். ஆனால் அந்த எண்ணத்தை மனத்தி லிருந்து விரட்டியடித்திருந்தாள். அந்த விஷயத்தைப் பற்றி மகனுடன் பேசு வதே கிடையாது. பிஸினஸைப் பற்றிப் பேசினாள். சான்பிரான்ஸிஸ் கோவில் அவர்கள் நிறுவனம் கட்ட விருக்கும் மருத்துவ நிலையத்தைப் பற்றிப் பேசினாள்.

விபத்தைப் பற்றி மட்டும் பேசு வதே கிடையாது.

''காலையில் வரும்போது ஆபீசுக்குப் போயிருந்தேன். உங்கள் அறை ரொம்பப் பிரமாதமாய் இருக்கிறது,'' என்று புன்சிரிப்புடன் கூறியபடி படுக்கையின் ஓரத்தில் உட்கார்ந்தார் ஜார்ஜ்.

''பிரமாதமாயில்லாமல் வேறெப்படி இருக்கும்?'' என்று மைக்கேல் சொல்லிக் கொண்டிருந்த போது கையில் ப்ரீஃப் கேசுடன் மரியம் வருவதைக் கண்டான்.

மெல்லிய நீல நிற ப்ளவுஸ் அணிந்து, காதில் முத்துத் தோடும், கழுத்தில் மூன்று வடம் முத்து மாலையுமாக பளிச்சென்றிருந்த

## காசு கொடுத்து 'லிப்ட்' பயணம்



சிம்லாவிற்கு வருபவர்கள் பல மேடு பள்ளங்களை கடக்க வேண்டும். பிரசினையைச் சமாளிக்க நகராண்மைக் கழகம் 'லிப்ட்'களை அமைத்திருக்கிறது. சுமார் 100 அடி உயரத்தில் உள்ள 'மால்' என்ற நடு நகரை அடைய ஒரு ரூபாய் செலுத்தி இரண்டு வெவ்வேறு மின் தூக்கிகளில் பயணம் செய்யலாம். இதே தூரத்தை நடந்து கடந்தால் குறைந்தது 30 நிமிடம் ஆகும்.

—வீரராகவன்

தாயைப் பார்த்தவன், ''அம்மாவின் அழகுணர்ச்சியே தனி!'' என்று பாராட்டினான்.

ஜார்ஜும் ''ஆமாம். ரொம்ப அருமை!'' என்று மரியமைப் பார்த்து வியந்தவாறு சொன்னார்.

''போதும் உங்கள் முகஸ் துதி!'' என்று கையை வீசி அதட்டினாள் மரியம். ''ஜார்ஜ், நேரமாகிறது. நம் ஃபைல்களெல்லாம் ரெடியாயிருக்கிறதில்லையா?''

''ஓ! ரெடி.''

''சரி, புறப்படலாம்.'' மகனின் அருகில் வந்து குனிந்து அவன் நெற்றியில் முத்தமிட்டாள் அவள். ''ரெஸ்ட் எடுத்துக்கொள், கண்ணா. சாப்பாடு வரவழைத்துக்கொள். மறந்து விடாதே.''

''நிச்சயமாய். நீங்கள் போய் வேலையைக் கவனியுங்கள்.''

அவர்கள் புறப்பட்டுப் போன பின் வெகுநேரம் பொறுமையாக, அமைதியாக உட்கார்ந்திருந்தான் மைக்கேல், தன் சிந்தனைகளில் தானே மூழ்கியவனாக.

அடுத்து என்ன செய்யப் போகிறோம் என்று அவனுக்குத் தெரியும். இன்றல்ல, இரண்டு வாரங்களுக்கு முன்பே அவன் திட்டமிட்டு வைத்திருந்தான்.

இந்தத் திட்டத்துக்காகத்தான் அவன் உயிர் வாழ்ந்திருந்தான்.

இந்த ஒன்றைப் பற்றித்தான் அவன் ஒவ்வொரு வினாடியும் எண்ணிக் கொண்டிருந்தான்.

இதற்காகவேதான் அவன் பாஸ்டன் நகரில் ஓட்டலில் தங்க விரும்பினான். இதற்காகவே தான் இந்த ஊரில் ஒரு கல்லூரிக் கட்டிடம் கட்டும் வேலை இருப்பதாகக் கேள்விப்பட்டு அதைப் பற்றிப் பேசி முடிக்கும்படி அம்மாவை மெல்ல வற்புறுத்தியிருந்தான்.

அவன் திட்டப்படியே இதுவரை நடந்தாயிற்று.

> சினிமா மோகம் இன்று அதிகரித்து வருகிறது. சினிமாவில் ஆதிபராசக்தியாக நடிக்கும் கே.ஆர். விஜயா, சீதாவாக நடிக்கும் ராதா, பார்வதியாக நடிக்கும் ஜெயலலிதா ஆகியோரைச் சம்பந்தப்பட்ட கடவுளாக நினைக்கும் அளவுக்கு மோகம் வளர்ந்துள்ளது.
>
> —சட்டமன்றத்தில்
> பாப்பா உமாநாத்
> (மார்க்ஸிஸ்ட் எம்.எல்.ஏ.)

படுக்கையை விட்டு நகராம[illegible] அரை மணிநேரம் உட்கார்ந்திரு[illegible]தான். அவர்கள் போய் விட்டார்க[illegible] என்ற நிச்சயம் ஏற்பட்டது.

அலமாரியில் இருந்த தன் பெட்டியைத் திறந்தான். அதில் உடை[illegible]கள் இருந்தன. தேவையானவற்றை[illegible] தேர்ந்தெடுத்தான்.

இப்படி உடையணிந்து ஆயிர[illegible] ஆண்டுகளாகி விட்ட மாதி[illegible] இருந்தது. பலவீனத்தால் கைகால்க[illegible] நடுங்குவதை இப்போதுதான் உணர்[illegible]தான். உடைகளை மாட்டிக் கொள்[illegible]வதற்குள் நாலைந்து முறை கட்டிலி[illegible] உட்கார்ந்து ஆசுவாசப்படுத்தி[illegible] கொள்ள வேண்டியிருந்தது.

'இப்படியா பலவீனப்[illegible] அடைவது! வெட்கக்கேடு. இதற்[illegible] இடம் கொடுக்கக் கூடாது' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். உடல் நிலை எப்படி இருந்தாலும் இன்று புறப்படத்தான் வேண்டும். நாளைக்கு ஒத்திப் போடக் கூடாது.

உடையணிந்து கொண்டு தலை வாரிக் கொள்ள அரைமணி நேரம் பிடித்தது. ஓட்டல் வரவேற்பறைக்குப் போன் போட்டு, ஒரு டாக்ஸி[illegible] கொண்டு வரச் சொன்னான். லிப்டில் இறங்கும் போது உடல் தளர்ந்திருந்[illegible]தாலும், திட்டத்தை நிறைவேற்றப் போகிறோம் என்று உள்ளம் பரபரப்[illegible]பாக இருந்தது. புத்துயிர் பெற்ற மாதிரி, சென்ற இரண்டு வாரத்தில்

இல்லாத சுறுசுறுப்பு இப்போது ஏற்பட்டிருந்தது.

ஓட்டல் வாசலில் டாக்ஸி காத்திருந்தது. போக வேண்டிய முகவரியைச் சொல்லிவிட்டு ஏறி உட்கார்ந்து உள்ளம் நிறைய மகிழ்ச்சியுடன் சீட்டில் சாய்ந்து கொண்டான்.

நான்ஸி.

ஏதோ இருவருமாய் வெளியே சுற்றுவதற்குத் திட்டமிட்டிருக்கிற மாதிரி. ஏதோ அவள் இவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கிற மாதிரி. ஏதோ தான் வரப் போவது அவளுக்குத் தெரியும் என்கிற மாதிரி.

போகும் வழி பூரா அவன் புன்னகை செய்தபடியே இருந்தான். இறங்குமிடம் வந்ததும் டாக்ஸியோட்டிக்குக் கட்டணத்துக்கு மேல் நிறையவே இனாம் கொடுத்தான். காத்திருக்கட்டுமா என்று டிரைவர் கேட்டதற்கு வேண்டாம் என்று சொல்லி அனுப்பினான்.

வேண்டாம். யாரும் அவனுக்காக காத்திருக்க வேண்டாம்.

அவன் தன்னந்தனியே இருக்க வேண்டும். எவ்வளவு நேரம் முடியுமோ அவ்வளவு நேரம் அங்கே தங்க வேண்டும்.

அவளுடைய அபார்ட்மெண்டுக்குத் தொடர்ந்து வாடகை கொடுத்து வரலாமா என்றுகூட அவன் எண்ணியதுண்டு. பிறகு இஷ்டப்பட்ட நேரத்திற்கு வரலாம் போகலாம். நியூயார்க்கிலிருந்து ஒரே ஒருமணி நேரப் பயணம்தான். நான்ஸியின் அபார்ட்மெண்ட் என்றென்றும் அவன் வசமே இருக்கும்.

நான்ஸியின் அபார்ட்மெண்ட் என்று சொல்வது தப்பு. எங்களுடைய அபார்ட்மெண்ட்.

அவள் அறைக்குள் நுழையும் ஒவ்வொரு முறையும் 'ஏய்! நான் வந்தாச்சு!' என்று கூறுவது அவன் வழக்கம். இப்போதும் அவனையுமறியாமல் சொல்லி விட்டான்.

அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழையும் போதெல்லாம் இதுவரை ஆயிரம் தடவையாவது அப்படிச் சொல்லியிருப்பான். அப்போதெல்லாம் நான்ஸி ஓவியம் வரைந்து கொண்டிருப்பாள். அவள் கைகளில்—சில சமயங்களில் முகத்தில் கூட—வண்ணங்கள் தெறித்திருக்கும். தன் வேலையில் அபார ஈடுபாடு கொண்டவள் அவள். அவன் கூப்பிடுவதுகூட அவள் காதில் விழாது சில சமயம்.

ஒவ்வொரு படியாக ஏறிய போது களைப்பு அவனை வாட்டியது. இருந்தாலும் மனத்துக்குள்




சர்தார்ஜி ஒருவர் தன்னுடைய ஊரில் பெரிய பங்களா ஒன்றைக் கட்டினார். திறப்பு விழாவின் போது எல்லோருக்கும் சுற்றிக் காண்பித்தார். அப்போது தோட்டத்திலிருந்த மூன்று நீச்சல் குளங்களைக் காண்பித்து, ''ஒரு நீச்சல் குளம் வெந்நீரால் உருவாக்கப்பட்டிருக்கிறது. எனவே இது குளிர் காலத்திற்கு ஏதுவாகிறது. மற்றொன்று வெயில் காலத்திற்கு ஏதுவாகக் குளிர்ந்த நீரால் நிரப்பப்பட்டிருக்கிறது,'' என்று தெரிவித்தார்.

இதைக் கேட்ட அனைவரும், 'பிறகு ஏன் மூன்றாவது நீச்சல் குளம் காலியாக இருக்கிறது?' என வினவினர். அதற்கு அவர், ''வேறொன்றுமில்லை! சில நாட்கள் எனக்குக் குளிப்பதற்கு மனம் வராது!'' என பதிலுரைத்தார்.

—எஸ். மணி



## லட்டுப் பாப்பா

'சகலகலா சம்பந்தி' படத்தில் முக்கியக் கதாபாத்திரமாக நடித்திருக்கும் லட்டுப் பாப்பாவுக்கு இந்த ஆண்டு ஆகஸ்ட் பதினைந்துடன் ஒரு வயதாகிறது. இன்னும் பெயர் வைக்கவில்லை. படத்தில் பாப்பா என்று அழைத்து, பெண் குழந்தை யாக நம்பும்படி செய்திருந்தார் விசு. உண்மையில் அது ஆண் குழந்தை. அப்பா ஹரிக்குச் சொந்த ஊர் புத்தூர். சினிமாவில் ஆர்ட் அஸிஸ்டெண்டாக வேலை செய்பவர்.

''டைரக்டர் நிஜமாகவே கிள்ளி விட்டுத்தான் அழ வைத்தார். மற்றப்படி பசித்தால்கூட அழ மாட்டான்,'' என்கிறார் தந்தை.

—வி.ஸி.

---

உற்சாகம்.... அவளுக்கருகே, அவளுடன், அவளுடைய பொருள்களு டன் சிறிது நேரமாவது உட்கார்ந் திருக்கப் போகிறோம் என்ற உற்சா கம்....

இந்தக் கட்டிடத்துக்கே உரிய அலாதியான மணங்கள் அவனுக்குப் பழக்கமானவை. பரிச்சயமான ஓசைகள்—எங்கோ ஒரு குழாயில் தண்ணீர் கொட்டுகிறது. ஒரு குழந்தை ஓடுகிறது. ஏதோவொரு மூலையி லிருந்து ஒரு பூனையின் மியாவ். வெளியே ஒரு காரின் ஹாரன். எங் கிருந்தோ ஒரு ரேடியோவில் இசை ஒலிக்கிறது. ஒருவேளை அவளுடைய அறையிலிருந்துதானோ?

சாவி இருந்தது அவனிடம். அறையை அடையுமுன் ஒரு நீண்ட நிமிடத்துக்கு நின்றிருந்தான்.

முதல் தட்வையாக அவன் கண் முனைகளில் நீர் பொங்கிக் கொண்டு வந்தது. உண்மை அவனைச் சுட்டது.

நான்ஸி இல்லை. இருக்க மாட்டாள். போய்விட்டாள். என் றென்றைக்கும் திரும்பி வராதபடி போய்விட்டாள். அவள் இறந்து விட்டாள். இறந்து விட்டாள். தனக்குத் தானே அந்த வார்த் தையைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டான்—அந்த உண்மை தனக்கு நன்றாய் உறைக்க வேண்டும் என்பதற்காக. உண்மையை ஒப்புக்கொள்ளத் தைரியம் இல்லாமல் பாசாங்கு செய்து கொண்டு தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வார்கள் சில பேர். அந்த மாதிரி பைத்தியமாக இருக்க அவன் விரும்பவில்லை.

இருந்தாலும்கூட அந்த உண்மையை நினைத்துப் பார்க்கும் போதெல்லாம் முகத்தில் யாரோ சுளீரென்று அறைவது போலிருந்தது.

சாவியைப் பூட்டில் செருகித் திருப்பினான். ஒரு வினாடி காத் திருந்தான், யாரோ வந்து கதவைத் திறக்கப் போகிற மாதிரி.

யாரும் வரவில்லை.

கதவை மெல்லத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான்.

அவன் மூச்சு நின்றது.

ஐயோ கடவுளே! எங்கே.... எங்கே நான்ஸியின் பொருள்க ளெல்லாம்?

அறை ஹோவென்று சூனிய மாக இருந்தது.

(தொடரும்)

# காதல் [illegible]

**15**

மூலம்: டானியல் ஸ்டீல்

எங்கே நான்ஸியின் மேஜை? ங்கே நான்ஸியின் நாற்காலி? எங்கே புவள் வளர்த்து வந்த சின்னஞ் சிறு செடிகள்? எங்கே அவளுடைய ஓவியங்கள்? எங்கே அவளுடைய பண்ணக் கிண்ணங்கள்? எங்கே அவளுடைய உடைகள்? எங்கே தூரிகைகள்? எங்கே போயிற்று எல்லாம்?

நான்ஸியின் அறை காலியாக, சூனியமாக, எந்தப் பொருளும் இல்லாமல் வெற்றாகக் காட்சி தந்தது.

நான்ஸி! நான்ஸி! கடவுளே!

கோபமான சூடான கண்ணீர் பொங்கி வழிந்து அவன் முகத்தைச் சுட்டது. தன்னையுமறியாமல் அழுத படி, அலமாரிகளை ஒவ்வொன்றாய்த் திறந்து பார்த்தான். அவையும் காலி யாக இருந்தன. ஃப்ரிஜ்கூடக் காணோம்.

ஒரு நிமிடம் ஊமை போல் நின்றிருந்தவன் மறுநிமிடம் தடதட வென்று மாடிப் படிகளில் இறங்கி னான். கீழ்த் தளத்திலிருந்த கட்டிட நிர்வாகியின் அறையை அடைந்து வேகமாய்த் தட்டினான்.

வயோதிகரான அவர் கதவை லேசாகத் திறந்தார். செயினைக்கூட முழுதும் அகற்றாமல் பயத்துடன் அவனைப் பார்த்தார்.

மைக்கேல் அடிக்கடி அங்கு வருகிறவனாகையால் அவனை அவ ருக்குத் தெரியும். அடையாளம் கண்டு கொண்டதும் கதவை முழுதும் திறந்து—

புன்னகை செய்யவிருந்த வரைச் சட்டைக் காலரைப் பிடித்து உலுக்கு உலுக்கென்று உலுக்கினான் அவன். ''அவளோட சாமான் களெல்லாம் எங்கே ஐயா? என்ன பண்ணினீர்? யாராவது எடுத்துக் கொண்டு போனார்களா? யார்? சொல்லு ஐயா!''

''சாமான்களா... என்ன சாமான்கள்... ஐயோ கடவுளே, நான் எதையும் எடுத்துக் கொள்ளவில்லை. இரண்டு வாரத்துக்கு முன்பு அவங்க வந்தாங்க... அவங்கதான்...''

''அவங்க அவங்க என்றால் எவங்க ஐயா?'' பயத்தினால் பெரிய வருடைய உடம்பு நடுங்கிக் கொண் டிருந்தது. கோபத்தினால் மைக் கேலின் உடம்பு நடுங்கிக் கொண்டி ருந்தது. ''எவங்க?'' என்றான் மீண்டும்.

''எனக்குத் தெரியாது. யாரோ போன் பண்ணி, நான்ஸியோட அபார்ட்மெண்ட்டைக் காலி பண் றோம் என்று சொன்னாங்க. நான்ஸி தான்... இறந்து...'' மைக்கேலின்

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

கன்னங்களில் கண்ணீரின் ஈரம் படர்ந் திருப்பதைக் கண்டதும் அவரால் மேலே பேச இயலவில்லை. ''நான்ஸி யின் அபார்ட்மெண்டை ஒரு வாரத்தில் காலி பண்ணிவிடுவோம் என்று சொன்னார்கள். பிறகு இரண்டு நர்ஸ்கள் வந்து சில பொருள் களை எடுத்துப் போனார்கள். மறு நாள் பழைய பொருள்களை வாங்கி விற்கிற குட்வில் கம்பெனியிலிருந்து ஒரு லாரி வந்தது...''

''நர்ஸ்களா?'' மைக்கேலின் உள்ளம் மரத்துக் கொண்டிருந்தது. ''குட்வில் கம்பெனியா? அவர்களை யார் வரவழைத்தார்கள்?''

''அந்த நர்ஸ்கள் யாரென்று எனக்குத் தெரியாது. ஆனால் வெள்ளை யூனிபார்ம் போட்டிருந்தார் கள். அவர்கள் அதிகமாய் எடுத்துப் போகவில்லை. ஒரு பை, சில ஓவியங்கள்தான். குட்வில்காரர்கள் தான் மற்றதையெல்லாம் எடுத்துக் கொண்டு போனார்கள். நான் ஒரு துரும்புகூட எடுக்கவில்லை. சத்திய மாய்ச் சொல்கிறேன். நான்ஸி மாதிரி ஒரு தங்கமான பெண்ணோட பொருளைப் போய் நான் திருடு வேனா?''

அவர் சொல்லுவது அவன் காதில் விழவில்லை. பிரமை பிடித்தவன் போல் தெருவை நோக்கி நடந்தான்.

''இந்தா... தம்பி...'' என்று அழைத்தார் பெரியவர். மைக்கேலைப் பார்க்கப் பரிதாபமாயிருந்தது அவருக்கு. பாவம், நான்ஸி இறந்த சமாசாரம் இப்போதுதான் இவனுக்குத் தெரியும் போலிருக்கிறது என்று எண்ணிக் கொண்டார்.

அவருடைய குரலைக் கேட்டு நின்று திரும்பிப் பார்த்தான் அவன்.

''ரொம்ப வருத்தமாயிருக் கிறது தம்பி,'' என்றார் அவர்.

தலையை அசைத்துவிட்டுத் தெருவில் இறங்கினான் மைக்கேல்.

நர்ஸ்கள் வந்தார்களாமே? எப்படி இந்த இடம் தெரியும் அவர் களுக்கு? ஆஸ்பத்திரியில் யாராவது பேசிக் கொண்டதைக் கேட்டு



வந்திருக்க வேண்டும். கழுத்துக்கு, காலுக்கு என்று இரண்டொரு நகைகள் வைத்திருந்தாள் நான்ஸி. அவைகளையும் ஓவியங்களையும் எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள் போலிருக்கிறது. சீ! என்ன அற்ப ஜன்மங்கள்! மிச்சம் மீதியைக் கொத்த வந்த கழுகுகள்! அவர்களை மட்டும் அன்று நான் பார்த்திருந்தால்...

கைகளைப் பிசைந்து கொண்டான் மைக்கேல்.

ஒருவேளை... அங்கே—எதற்கும் பார்க்கலாமே?

தெருவோடு சென்ற டாக்ஸியை நிறுத்தினான்.

மண்டையின் பின்புறம் மடேல் மடேலென்று வலித்தது. அதைப் பொருட்படுத்தாமல் டாக்ஸிக்குள் ஏறி உட்கார்ந்து கொண்டு, ''குட்வில் ஸ்டோருக்குப் போ,'' என்றான்.

''என்ன சார்?'' என்றான் டாக்ஸியோட்டி.

''குட்வில் ஸ்டோர். பழைய நாற்காலி மேஜைகளை விற்பார்களே அந்தக் கடை.''

''ஓ, அதுவா?''

ஐந்து நிமிஷத்தில் குறிப்பிட்ட நிறுவனத்தின் வாசலை அடைந்தது டாக்ஸி.

வரும்போது முகத்தில் வீசிய குளிர்ந்த காற்று மைக்கேலின் உள்ளத்திலிருந்த சூனியத்தை ஓரளவு விரட்டியிருந்தது. நின்றிருந்த இதயத் துடிப்பு மீண்டும் அடிப்பது போலிருந்தது.

டாக்ஸியோட்டிக்கு இரட்டிப்புக் கட்டணம் கொடுத்து விட்டு இறங்கிக் கொண்டான்.

உள்ளே போவதா வேண்டாமா என்று அவனுக்கே தெரியவில்லை.

நான்ஸியின் பொருள்களை

அவன் பார்க்க விரும்பியது அவளுடைய வீட்டில்தான். கண்ட கண்ட குப்பைகள் அடைந்து கிடக்கும் இந்த இடத்தில் அல்ல. ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு விலைச் சீட்டு மாட்டப்பட்டு, அடைசல் நாற்றத்துடன்...

களைப்பும் குழப்பமும் தனிமை புணர்வும் வாட்டியெடுக்க அவன் உள்ளே நுழைந்தான். என்ன வேண்டும் என்று யாரும் அவனைக் கேட்கவில்லை. மனம் போன போக்கில் அவன் பாட்டுக்கு நடந்தான்.

தெரிந்த பொருளாக எதுவும் இல்லை. பழக்கமானதாக எதுவும் கண்ணில் படவில்லை.

அவன் இதயம் வலித்தது. நான்ஸியின் பொருள்களுக்காக அல்ல. அந்தப் பொருள்களின் சொந்தக்காரிக்காக—நான்ஸிக்காக.

அவளே போயாயிற்று. இனி மேல் அவளுடைய பொருள்கள் கிடைத்தாலென்ன, கிடைக்கா விட்டால் என்ன?

மீண்டும் கண்ணீர் வழிந்து கண்களை நனைக்க அவன் தெருவோடு நடந்தான். டாக்ஸியையும் கூப்பிடவில்லை. கால் போனபடி நடந்தான். எங்கே நடக்கிறோம் என்பது அவன் மூளைக்கு எட்டவில்லை. இது மட்டுமல்ல, எதுவுமே அவன் மூளைக்கு எட்டவில்லை. உடம்பு மொத்தமும் சேறாகி, உள்ளம் மட்டும் இரும்பாகி விட்டாற்போல் இருந்தது. அந்த நாற்றம் படிந்த பழைய சாமான் கடையோடு தன் வாழ்வே முடிந்து விட்டது போல் தோன்றியது.

தெரு முனையில் சிவப்பு சிக்னல் எரிந்து கொண்டிருந்தது. அது பச்சைக்கு மாறட்டும் என்று ஒரு வினாடி நின்றான். தலை கிறுகிறுத்தது. மயக்கம் போட்டு விழுந்தான்.

சில நிமிடங்கள் கழித்துக் கண்




காக்காய் பிடித்தல் என்பது உலகத்தின் மிகத் தொன்மையான தொழில்களில் ஒன்று. பதவியில் உள்ளவர்களுக்கு மன அமைதி சப்ளை செய்பவன் என்று காக்காய்ப் பிடிப்பவனை அழைக்கலாம். சொந்தமான எண்ணம் ஏதும் அவனுக்குக் கிடையாது. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் எஜமானர் எந்த மனநிலையில் இருக்கிறாரோ அதற்கு ஏற்ற பாவத்தை ஏற்றுக் கொள்வதைப் பொறுத்து அவனுடைய வெற்றி இருக்கிறது.

ஷேக்ஸ்பியரின் நாடகத்தில் ஹாம்லெட் வானத்தைச் சுட்டிக் காட்டி, பொலோனியஸிடம் கேட்கிறான்: அதோ அந்த மேகத்தைப் பார்த்தீர்களா? ஒட்டக வடிவில் இருக்கிறது.

பொலோனியஸ்: ஆமாம். ஒட்டகத்தின் சாயல் இருக்கத்தான் இருக்கிறது.

ஹாம்லெட்: எனக்கென்னவோ அது உடும்பு மாதிரி தோன்றுகிறது.

பொலோனியஸ்: முதுகு உடும்பு மாதிரி தான் இருக்கிறது.

ஹாம்லெட்: அல்லது திமிங்கிலம் மாதிரி இருக்கிறதோ?

பொலோனியஸ்: திமிங்கிலம் மாதிரியேதான் இருக்கிறது.

—எம். தேவராஜ் பட்டேல்

அறிமுகம்

# ஆயில் ஆ:ப் ஒலே

க்ரீம்

## இளந்தளிர் மேனியெழிலின் மென்மையான இரகசியம்.

புதிய ஆயில் ஆ:ப் ஒலே க்ரீம்.
லோஷனை விட அதிகச்
செழுமையானது. மிருதுவானது.
ஆனால் பிசுக்கற்றது. மென்மையான
மிருதுவான இந்த க்ரீம் சருமத்தில்
உடனுக்குடன் உறிஞ்சப்படுகிறது.
எண்ணெயப்பசை மற்றும் ஈரத்தை
சமச் சீராக வைத்து. சருமத்தில
உட்புகுந்து ஆற்றலுடன்
செயல்படுகிறது. கண்ணிற்கு
புலப்படாத சுருக்கங்களையும் நீக்கி.
சருமத்தை இளமைப்
பொலிவுடனும். வனப்புடனும்
வைத்து என்றென்றும் இளமைத
தோற்றத்தை அளிக்கிறது

எல்லா பருவத்திலும். ஆண்டு
முழுவதும் இதை உபயோகியுங்கள்.
இளந்தளிர் மேனியெழிலின
இரகசியத்தை அறிந்து
கொள்ளுங்கள். என்றென்றும் இதை
உமதாக்கிக் கொள்ளுங்கள்.




everest/89/PG/849-tm

**7.9.89** இதழில் நடுப்பக்கத்தில் வெளியான இந்தப் படத்திற்குப் பொருத்தமான தலைப்பு வைக்குமாறு கேட்டிருந்தோம்.

தேர்ந்தெடுக்கப்பட்ட தலைப்புகள்:

1. நான் படிக்க ஆரம்பித்து விட்டால் 'இடையில்' எதையுமே அனுமதிக்க மாட்டேன்.
(பி.கே. விஸ்வநாதன், சென்னை—40)

2. காணாமல் போன ஜட்டி விளம்பரம் வந்திருக்கா?
(கே. ஞானமூர்த்தி, சென்னை—87)

3. முற்றும் திறந்த மினிவர்
(கனகம் நடராஜன், திருப்பூர்—4)

4. அட்டைகள் மேல் மொட்டை
(பிரியதர்சினி, மயிலாடுதுறை)

5. அட்டை இல்லாத புத்தகம்
(எம்.கே. க்ண்ணன், மதுரை.)

(ஒவ்வொருவரும் ரூ. 20 அன்பளிப்புப் பெறுகிறார்கள்.)



மொ(அ)ட்டைப் பட போட்டி முடிவு

விழித்தபோது, பச்சைப் புல்லடர்ந்த ஒரு பூங்காவில் தான் கிடப்பதை உணர்ந்தான். யாரோ அவனை இங்கே தூக்கி வந்து கிடத்தியிருக்கிறார்கள். அவனைச் சுற்றிச் சிலர் நின்றிருந்தார்கள். ஒரு போலீஸ்காரர் அவனைக் கூர்மையாக நோக்கியவாறிருந்தார்.

''என்ன தம்பி, இப்ப தேவலையா?'' என்றார். இவன் நிச்சயமாய்க் குடித்திருக்கவில்லை. யாரும் அடித்துப் போடவில்லை. ஆனால் நோயாளி மாதிரி இருக்கிறான். ஒரு வேளை பசியாயிருக்குமோ? ஆனால் வசதியான பையனாகத் தோன்றுகிறானே? பட்டினியாக இருந்திருக்க முடியாது.

போலீஸ்காரர் இவ்வாறு எண்ணிக் கொண்டிருந்த சமயம், மைக்கேல் புன்னகை செய்தபடி, ''எனக்கு ஒன்றுமில்லை. இன்று காலைதான் ஆஸ்பத்திரியிலிருந்து டிஸ்சார்ஜாகி வந்தேன். அசதி...'' என்று எழுந்து உட்கார முயன்றான்.

ஆனால் சுற்றியிருந்த நபர்களெல்லாம் தலைகீழாய்ச் சுழலுகிற மாதிரி இருந்தது.

போலீஸ்காரர் அவன் நிலைமையைப் புரிந்து கொண்டு, 'போங்கள்! போங்கள்!' என்று கூட்டத்தை விரட்டினார். பிறகு மைக்கேலிடம், ''ஆம்புலன்ஸ் வேண்டுமானால் வரவழைக்கட்டுமா தம்பி?'' என்றார்.

''வேண்டாம். எனக்குச் சரியாகி விட்டது.''

''திரும்பி ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டுமா?''

''வேண்டாம், வேண்டாம்.''

''இருங்க, உங்களை வீட்டில் கொண்டு போய் விடுகிறோம்.'' போலீஸ்காரர் தன் கையிலிருந்து வாக்கிடாக்கியில் செய்தி சொல்லி விட்டு அவனருகே அமர்ந்தார். ''இதோ ஒரு நிமிடத்தில் வந்து

விடுவார்கள். ரொம்ப நாளாய் உடம்பு சரியில்லாமல் இருக்கிறீர்களா?''

மைக்கேல் மௌனமாய்த் தலையை அசைத்து, தன் உள்ளங்கைகளைப் பார்த்தவாறிருந்தான். பிறகு, ''இரண்டு வாரமாய்,'' என்றான். தன் நெற்றியில் இருக்கும் தழும்பைப் போலீஸ்காரர் கவனிப்பாரோ என்று எண்ணினான். அவர் கவனிக்கவில்லை.

ஆம்புலன்ஸ் வண்டி வந்தது. போலீஸ்காரர் அவனை ஏற்றிவிட்டு, ''மெதுவாய்! ஜாக்கிரதை!'' என்றார் அன்போடு. 'பையன் களைப்பாயிருந்தாலும், கொஞ்சம் நேரத்துக்கு முந்தி இருந்ததற்கு இப்போது தேவலை,' என்று நினைத்துக் கொண்டார்.

''நன்றி,'' என்று புன்னகை செய்தான் மைக்கேல். அது போலீஸ்காரரின் சந்தேகத்தை மீண்டும் கிளறி விட்டது. இவன் கண்ணில் ஏதோ ஒரு விரக்தி தெரிகிறதே...

தன் ஓட்டலுக்குச் சற்றுத் தள்ளி ஆம்புலன்ஸை நிறுத்தச் சொல்லி இறங்கிக் கொண்டான் மைக்கேல். அங்கிருந்து நடந்து சென்று ஓட்டலை அடைந்தான்.

அறையில் யாருமில்லை. உடைகளைக் களைந்து விட்டு, முன் போல் படுக்கையில் படுத்திருக்கலாமா என்று ஒரு வினாடி யோசித்தான்.

தேவையில்லை. இனிமேலும் எதற்காகப் பாசாங்கு? என்ன செய்ய வேண்டுமென்று நினைத்தானோ அதைச் செய்தாகி விட்டது. அதில் ஒரு லாபமுமில்லை.

நான்ஸியைத் தேடிப் போனேன். அவள் அங்கே இருக்க மாட்டாள் என்று தெரிந்திருந்தும் போனேன்.

நான்ஸி இருக்கக் கூடிய இடம் ஒன்றே ஒன்றுதான் — என் இதயம்!

(தொடரும்)

தமிழில்:
ரா.கி. ரங்கராஜன்
மூலம்:
டானியல் ஸ்டீல்



**மயக்கமா?**

●● கருணாநிதி எனக்குப் பொட்டு வைத்தாலும் குல்லாப் போட்டாலும் மயங்குகிற ஆள் நான் இல்லை.

—மூப்பனார்

# 16

விரக்தியுடன் ஜன்னலருகே நெடு நேரம் நின்றிருந்தான் மைக்கேல்.

அறைக் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. ஆனால் அவன் திரும்பிப் பார்க்காமலே இருந்தான். அம்மாவும் அவளுடைய மானேஜரான ஜார்ஜும்தான் வந்திருக்கிறார்கள் என்று அவனுக்குத் தெரியும்.

அவனுக்கு அவர்களைப் பார்க்கப் பிடிக்கவில்லை. அவர்கள் சென்றிருந்த பிஸினஸ் மீட்டிங் என்னாயிற்று என்று கேட்கப் பிடிக்கவில்லை. 'எனக்கு ஒன்றுமில்லை. நன்றாக இருக்கிறேன்,' என்று அவர்களிடம் பாசாங்கு செய்யப் பிடிக்கவில்லை. 'நான் நன்றாக இல்லை. இனி ஒருபோதும் நன்றாக இருக்கப் போவதுமில்லை' என்று எண்ணிக் கொண்டான்.

''என்ன கண்ணா, அதற்குள் படுக்கையிலிருந்து எழுந்துவிட்டாய்?'' அவனுடைய அம்மாவின் குரல் கேட்டது.

இன்னும் கொஞ்ச நாளில் இருபத்தைந்தாவது வயதை எட்டப் போகிறவன் அவன். ஆனால் என்னவோ ஏழு வயதுப் பையனுடன் பேசுகிற மாதிரி அவள் குரல் இருந்தது.

மெதுவே திரும்பியவன் அம்மாவிடம் எதுவும் பேசவில்லை. ஜார்ஜைப் பார்த்துப் புன்னகை செய்தான். அந்தப் புன்னகையில் களைப்புத் தெரிந்தது.

''எத்தனை நேரம் அம்மா படுத்துக் கொண்டேயிருப்பது? எழுந்து கொண்டால்தான் தேவலை. சொல்லப் போனால் இன்று ராத்திரி நியூயார்க்கிற்குப் போகப் போகிறேன்.''

''என்னது!''

''நியூயார்க் போகிறேன் என்றேன்.''

''எதற்காக? இங்கே பாஸ்டனில் கொஞ்ச நாள் தங்கணும் என்று சொன்னாயே?'' மரியம் குழப்பத்துடன் கேட்டாள்.

''உங்களுக்குத்தான் வந்த காரியம் முடிந்து விட்டதே?'' என்றான் மைக்கேல். 'எனக்கும் நான் வந்த காரியம் முடிந்து விட்டது,' என்று நினைத்துக் கொண்டான். சொல்லவில்லை. ''என்னத்துக்கம்மா அனாவசியமாய் இங்கே தங்கணும்? நாளைக்கு என் ஆபீசில் இருக்கலாமென்று



●● மத்தியில் ஒரு கட்சி ஜெயித்தால் மாநிலங்களில் உள்ள மாற்றுக்கட்சி அரசுகளை டிஸ்மிஸ் செய்யும் வழக்கத்தை ஏற்படுத்தியது யார் என்று கருணாநிதிக்குத் தெரியாதா? இப்போது வால் பிடிக்கும் ஜனதா கட்சி 77'ல் ஆட்சிக்கு வந்தபோது ஆரம்பம் ஆனதுதானே இந்தப் பாரம்பரியம்? 80'ல் காங்கிரஸ் ஜெயித்ததும், இங்கே எம்.ஜி.ஆர். அரசை டிஸ்மிஸ் செய்யச் சொன்னது இதே கருணாநிதி தானே? அன்று விதைத்ததை இன்று அவரே அறுவடை செய்யப் போகிறார்.

—வாழப்பாடி ராமமூர்த்தி

●● இந்தத் தேர்தலில் எல்லாக் கட்சிகளையும் தோல்வியடையச் செய்ய வேண்டும். கட்சி வேட்பாளர்களை ஒதுக்கி விட்டு சுயேச்சைகளுக்கு மக்கள் ஓட்டுப் போட வேண்டும்.

—கர்நாடக முன்னாள் முதல்வர் நிஜலிங்கப்பா

●● ரேஷன் கடைகளில் தட்டுப்பாடு இருப்பதற்கு ராஜீவ் அரசுதான் காரணம்.

—கருணாநிதி

பார்க்கிறேன். என்ன ஜார்ஜ், நான் சொல்வது சரிதானே?''

ஜார்ஜ் அவனைத் தர்ம சங்கடத்துடன் பார்த்தார். அவன் கண்களில் ஏதோவொரு வேதனையும் துன்பமும் தெரிவதைக் கண்டு அவருக்குப் பயமாயிருந்தது. ஒருவேளை அலுவலகத்துக்குச் சென்று வேலையில் மூழ்கினால் நல்லதோ என்னவோ என்று எண்ணினார். போதுமான அளவுக்கு உடல் தேறவில்லையென்றாலும் இங்கே சும்மா படுத்திருப்பது இவனுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும்...

''நீங்கள் சொல்வதும் சரிதான் மைக்கேல். முதலில் கொஞ்ச நாளைக்கு அரை அரை நாள் வேலை பாருங்களேன், போதும்,'' என்றார்.

''உங்கள் இரண்டு பேருக்குமே பைத்தியம் பிடித்திருக்கிறது,'' என்றாள் மரியம். ''இன்று காலையில் தான் இவன் ஆஸ்பத்திரியிலிருந்தே வந்திருக்கிறான்.''

''ஆமாம்! நீங்கள் மட்டும் உங்கள் உடம்பை ரொம்பப் பார்த்துக் கொள்கிறீர்களாக்கும்!'' என்று மைக்கேல் கேலியாகச் சொன்னதும் நாற்காலியில் பொத்தென்று உட்கார்ந்து கொண்டாள் மரியம்.

''சரி, சரி, சரி,'' என்றாள் மெதுவான புன்சிரிப்புடன்.

''மீட்டிங்கிற்குப் போயிருந்தீர்களே, என்ன ஆச்சு அம்மா?'' தாயின் முன்னே உட்கார்ந்து கொண்டு ரொம்ப அக்கறை கொண்டவன் மாதிரி விசாரித்தான்.

இனிமேல் இதுதான் வாழ்க்கை என்று எண்ணிக் கொண்டான். ஆம், அன்று அவன் ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டான்.

இனி அவன் உயிர் வாழப் போவது ஒன்றே ஒன்றிற்காகத்தான் வேலை, வேலை, வேலை.

வேலையைத் தவிர வேறு வாழ்க்கை கிடையாது.

''என்ன, ரெடியா?'' என்று கேட்டார் டாக்டர் பீட்டர்.

''ரெடிதான்,'' என்றாள் நான்ஸி.

தன் தோளுக்கு மேல் எதுவுமே இல்லைபோல, தலையை வெட்டி விட்டாற்போல, ஒரு விசித்திர உணர்வு ஏற்பட்டிருந்தது அவளுக்கு. ஆபரேஷன் தியேட்டரின் பிரகாச மான விளக்குகள் அவள் கண்களைக் கூச வைத்தன. கண்ணை இமைக்க நினைத்தாள். ஆனால் அதுகூட முடியவில்லை. அவளுக்குத் தெரிந்ததெல்லாம் அவளை நோக்கிக் குனிந்திருக்கும் டாக்டர் பீட்டரின் முகம் தான். அவருடைய, அழகாக வெட்டப்பட்டிருந்த குறுந்தாடி, நீல நிற முகத்திரைக்குள் மறைந்திருந்தது.

அவருடைய கண்கள் ஜீவனுடன் மின்னிக் கொண்டிருந்தன.

நான்ஸியின் எக்ஸ்ரேக்களை ஆராய்வதும், கணக்கிடுவதும், வரைவதும் திட்டமிடுவதும் தயாரிப்பதும்

---



பாண்டியராஜன் வீட்டு வரவேற்பறையில் அவரும் அவர் மனைவியும் எம்.ஜி.ஆருடன் நின்று எடுத்துக் கொண்ட போட்டோ ஒன்றை பிரேம் போட்டு மாட்டியிருந்தார். இப்போது அந்தப் போட்டோவை வரவேற்பறையில் காணவில்லை. கலைஞரிடம் ஷீல்டு வாங்கிய படம் ஒன்று பிரேம் போட்டுப் பெரிதாக வரவேற்பறையில் மாட்டப்பட்டுள்ளது.

—துரை

அவளுடன் பேசுவதுமாக மூன்று வாரம் செலவிட்டிருந்தார் அவர்.

நான்ஸியின் புகைப்படம் ஒன்றே ஒன்றுதான் அவருக்குக் கிடைத்திருந்தது. விபத்து நடந்த அன்று திருவிழாக் கடையில் எடுத்தது. அதுவும் கூட, வேடிக்கையான பொம்மை ஓட்டைக்குள் நான்ஸி முகத்தை நுழைத்துக் கொண்டிருந்த தால் ஓரளவுதான் தெரிந்தது.

இப்போதைக்கு இது போதும் என்று பீட்டர் எண்ணினார். ஆனால் பிரமாதமான சிகிச்சை செய்யப் போகி றோம் என்ற ஆர்வம் அவரிடம் இருந் தது. சிகிச்சை பூரா முடிந்த பிறகு நான்ஸி மகா அழகியாக மாறப் போகிறாள். கண்டவர் எவரையும் கிறங்க வைக்கும் கனவுக் கன்னியாகத் திகழப் போகிறாள்.

குனிந்து அவள் கண்களை இளநகையுடன் நோக்கினார்.

கண்ணிமைகள் கனத்துத் தொய்வதைக் கண்டதும், ''நீ இன்னும் கொஞ்ச நேரத்துக்குத் தூங்காமல் விழித்துக் கொண்டுதான் இருக்க வேண்டும், நான்ஸி. என்னிடம் ஏதாவது பேசிக் கொண்டிரு. தூக்கம் வருகிற மாதிரிதான் இருக்கும். ஆனால் தூங்கக் கூடாது,'' என்றார்.

இந்தக் கட்டத்தில் தூங் கினால் அவள் உயிருக்கே ஆபத்து என்று அவருக்குத் தெரியும். ஆனால் அதை இப்போது சொல்லத் தேவை யில்லை என்று முடிவு செய்திருந்தார்.

அவள் குஷியாக இருப்பதற் காகக் கதைகளும் ஜோக்குகளும் சொன்னார். பல நிகழ்ச்சிகளை நினைவுபடுத்திக் கொள்ளும் வகையில் கேள்விகள் கேட்டார். குழந்தையா யிருந்த போது அவளைக் கவனித்துக் கொண்ட கன்யாஸ்திரீகளின் பெயர் கள் என்னென்ன என்று விசாரித்தார்.

''நீ கன்யாஸ்திரீயாக ஆக வேண்டுமென்று ஆசைப்பட வில்லை?'' என்றார்.



## குப்பையிலும் சம்பாதிக்கலாம்!

பெரிய வங்கிகள், ஜவுளிக் கடைகள், அரசாங்க நிறுவனங்கள் மற்றும் பெரிய வியாபார நிறுவனங்கள் ஆகியவற்றில் அன்றாடம் சேரும் குப்பைப் பேப்பர்களை மறுநாள் காலையில் தெருவில் உள்ள குப்பைத் தொட்டிகளில் தான் கொண்டு வந்து கொட்டுவார்கள்.

அம்மாதிரி நிறுவனங்களின் மேலாளர்களைச் சந்தித்து, 'ஐயா! உங்கள் நிறுவனத்தில் அன்றாடம் சேரும் குப்பைப் பேப்பர்களைக் குப்பைத் தொட்டியில் கொட்ட வேண்டாம். காலையில் அலுவலகம் திறக்கும் போது அன்றாடம் நானே வந்து பெற்றுக் கொள்கிறேன். அது எனக்கு உதவும்', என்று கேட்டுக் கொண்டால் அவர்கள் மறுக்காமல் சம்மதிப்பார்கள். அதுபோல் காலையில் சென்று சேகரித்து வரலாம். இவ்வாறு ஒரு பத்து நிறுவனங்களில் சேகரித்தாலே போதும். அது உங்களின் அன்றாடச் செலவில் ஒரு பகுதியை ஈடுகட்டும். சில சமயங்களில் அதிக வருவாயும் கூடக் கிடைக்கலாம்.

இவ்வாறு செய்வதில் கௌரவக் குறைவு ஏதும் இல்லை, உங்கள் தேவையும் பூர்த்தியாகும். அவர்கள் தேவையும் பூர்த்தியாகும்.

கந்தகிரிதாசன் எழுதிய
'முதலில்லாமல் பணம் சம்பாதிப்பது
எப்படி?' என்ற புத்தகத்திலிருந்து.

''ஊகூம். அந்த ஆசையை விட்டுவிட்டேன் என்று முன்பே உங் களுக்குச் சொன்னேனே?''

சிகிச்சை நடந்த மூன்று மணி நேரமும் இப்படியே அவர்கள் மாறி மாறிப் பேசிக்கொண்டிருந்தார்கள். டாக்டர் பீட்டரின் கைகள் ஒரு நிமிடம்கூட நிற்கவில்லை. அந்தக் கை களின் அசைவுகள்—ஒரு நடனக் குழு வின் நாட்டியத்தைப் பார்க்கிற மாதிரி இருந்தது நான்ஸிக்கு.

''உனக்குத் தெரியுமோ, நான்ஸி? இன்னும் இரண்டு வாரத்தில் உனக்கே உனக்கென்று ஓர் அபார்ட் மெண்ட் ஏற்பாடாகிவிடும். ஜன்னல்



''அய்யய்யோ, என்னடா உன் மனைவி துடைப்பத்தோடு வர்றா?''

''பயப்படாதே! எனக்கு அவள் திருஷ்டி சுத்திப் போடப் போறா. அதனால்தான்!''

—பி. சாமி

வழியே பார்த்தால்... ஏய் தூங்குமூஞ்சி! நான் சொல்வது காதில் விழவில்லை? உன் படுக்கையறையிலிருந்து பார்த்தால் அழகான கடற்கரை தெரிய வேண்டும்! என்ன?''

''நல்லது,'' என்றாள் நான்ஸி.

''உனக்குத் திருப்தியில்லை போலிருக்கிறது. இந்த ஆஸ்பத்திரி அறை உன்னை ரொம்பத்தான் கெடுத்துவிட்டது.''

''அதெல்லாமில்லை.''

''அப்ப ஒண்ணு செய்யலாம். நீயும் நானும் சேர்ந்து வீட்டு வேட்டையாடுவோம். நல்ல வீடாகப் பிடிப்போம். சரிதானா?''

''சரி,'' என்றபோது அவள் குரலில் தூக்கத்தின் சுமை அழுத்தியது. ''இப்ப நான் தூங்கலாமா?''

''இதோ பாருங்கள் அரசகுமாரி, இன்னும் சில நிமிடங்கள் தான். தங்களைத் தங்கள் அறையில் கொண்டு போய் விட்டு விடுகிறேன். பிறகு இஷ்டப்பட்ட நேரத்துக்குத் தாங்கள் தூங்கலாம்,'' என்றார் டாக்டர் பரிகாசமாக.

''சரி.''

''உன்னை ரொம்பப் போரடிக்கிறேன் போலிருக்கிறது?''

நான்ஸி லேசாய்ப் புன்னகை செய்தாள்.

''ஆச்சு.... இதோ.... அவ்வளவுதான்.''

டாக்டர் பின்னால் நகர்ந்து கொண்டு தன் உதவியாளரை நோக்கித் தலையசைத்தார். ஒரு நர்ஸ் முன்னே வந்து நான்ஸியின் தொடையில் ஊசி போட்டாள்.

பீட்டர் அருகில் வந்து நின்று அவளைப் பார்த்தார். நான்ஸியின் கண்கள் மட்டுமே தெரிந்தன. 'இந்தக் கண்கள் எனக்கு எவ்வளவு பழக்கமாகி விட்டன!' என்று எண்ணிக் கொண்டார். அந்தக் கண்களின் அந்த ரங்கத்தை உணர்ந்து விட்ட மாதிரி இருந்தது. இவளுக்கும் என் கண்கள் பழக்கமாகியிருக்கும்

''இன்றைக்கு ஒரு மகத்தான தினம்,'' என்றார்.

''ஆமாம்,'' என்றாள், நான்ஸி.

''எதை வைத்துச் சொல்கிறாய்?''

''தெரியும், அவ்வளவுதான் சொல்வேன்,'' என்றாள் நான்ஸி.

அவளுக்கு ஞாபகம் இருப்பதற்குக் காரணம்—

இன்று மைக்கேலுக்குப் பிறந்த நாள். இருபத்தைந்தாவது பிறந்த நாள். அதனால்தான் அவளுக்கு இன்றைய தினம் நன்றாக நினைவு இருக்கிறது.

மைக்கேல் இப்போது என்ன செய்து கொண்டிருப்பான்?

''இன்றுதான் சிகிச்சையின் முதல் நாள். நீயும் நானும் சேர்ந்து நடத்தும் சிகிச்சை இது. அற்புதமானதொரு பாதையில் நாம் செல்கிறோம். ஒரு புதிய நான்ஸி பிறக்கப் போகிறாள்.....''

டாக்டர் சொல்லிக் கொண்டே போனார்.

ஆனால், நான்ஸி, 'மைக்கேல் இன்று என்ன செய்து கொண்டிருப்பான்?' என்ற எண்ணத்துடனேயே தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டாள்.

(தொடரும்)

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்

# காதல் மேல் ஆணை





## 17

மூலம்:
டேனியல் ஸ்டீல்

''மனமார்ந்த பிறந்த நாள் வாழ்த்துக்கள் 'பாஸ்,'' என்று சொன்னவாறு மைக்கேலின் அலுவலக அறைக்குள் வந்தான் அவன் சினேகிதன் பென்.

''சீ! பாஸ் கீஸ் என்று சொன்னாயோ தெரியும் சேதி!'' என்றான் மைக்கேல். ''ஏய், பென், உன்னைப் பார்க்கவே சகிக்கவில்லை.''

''பாராட்டுக்கு மிக்க நன்றி,'' என்று சிரித்தான் பென்.

கால்களின் காயம் இன்னும் குணமாகவில்லை, இரண்டு பக்கமும் ஊன்றுக் கட்டை தாங்கிக் கொண்டு, ஒரு பெண் செக்ரட்டரியின் உதவியுடன் உள்ளே வந்தான். அவனை ஒரு நாற்காலியில் உட்கார்த்தி வைத்துவிட்டு அந்தப் பெண் போய்விட்டாள்.

மைக்கேலின் அறையைச் சுற்று முற்றும் பார்த்தான் பென். புதிதாகத் தயாரான அந்த அறை ஆடம்பர அலங்காரங்களுடன் இருந்தது.

''உன் அறை பிரமாதமாயிருக்கிறதே, மைக்? என் அறையும் இது போல இருக்குமா?''

''நீ வேண்டுமானால் இந்த அறையை வைத்துக் கொள். எனக்கு இதைக் கண்டாலே வெறுப்பாக இருக்கிறது.''

''ரொம்ப நன்றி. நீயே வைத்துக் கொள்,'' என்று சிரித்தான் பென். ''அப்புறம்? என்ன விசேஷம்?''

பென் தன் சிகிச்சை ஓரளவு முடிந்ததும் பாஸ்டனிலிருந்து வந்திருந்தான். இதுவரை நண்பர்கள் இரண்டு முறை சந்தித்துப் பேசிவிட்டார்கள். ஆனால் பேச்சு தயங்கித் தயங்கித்தான் இருந்தது. சரளமாக வரவில்லை.

அந்த விபத்து அவர்கள் நினைவில் நின்றிருந்ததே காரணம்.

நான்ஸியைப் பற்றிப் பேச இருவருக்குமே கஷ்டமாக இருந்தது. ஆனால் அவளைப் பற்றிப் பேசாமலிருப்பதோ இன்னும் கஷ்டமாக இருந்தது. இருவர் நினைப்பையும் நான்ஸிதான் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தாள்.

''நான் அடுத்த வாரம் முதல் வேலைக்குப் போகலாம் என்று டாக்டர்கள் சொல்லிவிட்டார்கள், மைக்,'' என்றான் பென்.

மைக்கேல் சிரித்தபடி தலையை அசைத்தான். ''அதற்குள் வேலைக்கு வருவதா? உனக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்கிறது!''

''ஏன்? நீ வேலைக்கு வந்துவிடவில்லையா?''

மைக்கேலின் கண்களில் ஒரு சோகம் படர்ந்தது. ''எனக்குக் கை கால் முறியவில்லையே பென்?'' என்று சொல்லும்போதே, மனத்துக்குள், 'எனக்கும் முறிவு ஏற்பட்டிருக்கிறது. அது வெளியே தெரியவில்லை,' என்று எண்ணிக் கொண்டான். இதோ பார்



பென், நீ இன்னும் ஒரு மாசம் லீவு எடுத்துக் கொள். தேவைப் பட்டால் இரண்டு மாசம்கூட எடுத்துக்கொள். உன் சகோதரியுடன் ஐரோப்பாவுக்குப் போய்விட்டு வாயேன்?''

''போய் என்ன செய்வது? சக்கர நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு போகிற வருகிற அழகிகளைப் பார்த்துக் கொண்டு பெருமூச்சு விடச் சொல்கிறாயா? எனக்கு வேலையில் சேர வேண்டுமென்று ஆவலாக இருக்கிறது. நீ சொல்வதற்காக இரண்டு வாரம் வேண்டுமானால் லீவு எடுத்துக் கொள்கிறேன். என்ன?''

''பார்க்கலாம்.''

நீண்ட மௌனம் நிலவியது. பிறகு மைக்கேல் சட்டென்று தலையை உயர்த்தி நண்பனை ஏறிட்டுப் பார்த்தான். அவன் பார்வையில் இருந்த கசப்பு! விரக்தி! அப்படியொரு பார்வையைப் பென் தன் நண்பனிடம் அதுவரை கண்டது கிடையாது.

''சரி, வேலையில் சேர்ந்து விடுகிறாய்? அதற்கப்புறம்? அதற்கப்புறம் என்ன பென்?''

''அதற்கப்புறம் என்ன என்றால்? புரியவில்லையே?''

''புரியவில்லை? அதற்கப்புறம் ஐம்பது வருஷத்துக்கு எருமை மாடாட்டம் உழைக்கப் போகிறோம். கிடைக்கிற பெண்களோடெல்லாம் சுற்றப் போகிறோம். முடிந்த அளவுக்குப் பணம் சம்பாதிக்கப் போகிறோம்! அதோடு வாழ்க்கை சரி! அவ்வளவுதானே?''

பேச்சை வேடிக்கையாகத் திருப்ப முயன்றான் பென். ''நீ இன்றைக்குச் சகிக்க முடியாத மூடில் இருக்கிறாய்! என்ன ஆச்சு உனக்கு? ஏதாவது கதவிடுக்கில் கட்டை விரலை நசுக்கிக் கொண்டாயா?''

''நோ! தயவு பண்ணி

விளையாடாதே. சீரியஸாய் இரு. நான் நிஜமாய்த்தான் சொல்கிறேன். நம் வாழ்க்கை எத்தனை அர்த்தமில்லாமல் போய்விட்டது பார்த்தாயா? உனக்கு அது தெரியவில்லை?''

நண்பனின் மனநிலை பென்னுக்கு நன்றாகவே புரிந்தது. அவன் என்ன சொல்ல வருகிறானென்பதும் தெரிந்தது.

பேச வேண்டாம், பேச வேண்டாம் என்று நினைத்திருந்த விஷயத்தை இனிப் பேசித்தான் ஆக வேண்டும்.

''மைக், எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அந்த விபத்தை நினைத்தால் மனமே குழம்பிப் போய்விடுகிறது. வாழ்க்கையில் எது நிரந்தரம் எது நிரந்தரமில்லை என்று நானும் யோசித்து யோசித்துப் பார்க்கிறேன்.....''

''யோசித்து? என்ன தெரிந்து கொண்டாய்?''

''எதுவும் தெரியவில்லை. நல்ல வேளை, உயிர் பிழைத்தோமே என்ற நன்றியுணர்வு மட்டும்தான் இருக்கிறது. உயிர் என்பது எத்தனை முக்கியமானது என்று அந்த விபத்து எனக்குக் காட்டி விட்டது. உயிரோடு இருந்தாலே போதும், அதுவே பெரிய விஷயம் என்று தோன்றுகிறது...'' பென்னின் கண்களில் நீர் தளும்பிக் கொண்டிருந்தது. ''மைக்... நானும் நினைத்து நினைத்துப் பார்க்கிறேன்—எதற்காக அப்படியொரு விபத்து நடந்தது? ஏன்? ஏன்? அதிலே.....'' அவன் குரல் உடைந்தது. விம்மியபடி சொன்னான்: ''மைக்.... அந்த விபத்திலே நான்ஸிக்குப் பதில் நான் போயிருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது.....''

மைக் கண்களை மூடிக் கொண்டான். அப்படியும் இமைகளினூடாகக் கண்ணீர் வழிந்தது. மேஜையை விட்டு மெல்ல எழுந்து வந்தான். சினேகிதனின்

---

கோலி சோடாவைக் கையோ, ஸ்ட்ராவோ உபயோகிக்காமல் குடிக்க வேண்டும். முடியுமா? சவாலை ஏற்றவர்கள் விஜி, லக்ஷ்மி (வைஷ்ணவா கல்லூரி) மற்றும் ராதா (செல்லம்மாள் கல்லூரி).

ரிசல்ட்: மூன்று பாட்டில்கள் உடைத்துத் தரப்பட்டன. ராதா வாயால் பாட்டிலைக் கவ்விக் கொண்டு அப்படியே இருந்தார். விஜி 40 டிகிரி கோணத்தில் தூக்கினார். பிறகு அம்பேல்! லக்ஷ்மி 90 டிகிரிக்கு சர்வ சாதாரணமாகத் தூக்கி மடக்கென்று குடித்து விட்டார். —2 நிமிஷம் 30 வினாடிகளில்!

—மணியன்—குமாரராஜா



கண்களைக் கைக்குட்டையால் துடைத்து விட்டான்.

ஒரு நிமிடம் இரு நண்பர்களும் பேச்சிழந்து நின்றார்கள். இருவர் கன்னங்களிலும் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. இருவரும் ஒருவரை யொருவர் இறுக்கி அணைத்துக் கொண்டார்கள். அவர்களுடைய பத்து வருடத்துச் சினேகிதம் இன்று அற்புதமான தெம்பைத் தந்தது.

''இப்பத்தான் மனசுக்கு ஆறுதலாயிருக்கிறது பென். தாங்ஸ்,'' என்றான் மைக்கேல்.

''அது இருக்கட்டும்....'' பென் அவசரமாகத் தன் சட்டை முனையால் கண்களைத் துடைத்துக் கொண்டு, ''இன்னிக்கு உனக்குப் பிறந்த நாள் மைக்! வா, ஜாலியாய் வெளியே போய்த் தூள் பரத்திவிட்டு வரலாம்,'' என்றான்.

''ஓ!'' என்றான் மைக்கேல் உற்சாகமாக. ''மணி ஐந்தாகப் போகிறது. இங்கே ஆபீசில் ஒரு வேலையுமில்லை. மீட்டிங் கீட்டிங் கிடையாது. போகலாம்.''

நண்பனைக் கைத்தாங்கலாக அழைத்துச் சென்று டாக்ஸியில் ஏறிக் கொண்டான். அரை மணிக்கெல்லாம் அவர்கள் ஒரு பெரிய நைட் கிளப்பில் இருந்தார்கள்.

அம்மாவின் ஜாகையை மைக்கேல் திரும்ப அடைந்த போது நள்ளிரவுக்கு மேல் ஆகிவிட்டது. தலை கிறுகிறுத்துக் கொண்டிருந்தது. வாசல்




விடை:
71'ம் பக்கம்






காவலாளிதான் அவனைப் பிடித்து மாடிக்கு அழைத்துச் சென்று போய்ப் படுக்கையில் படுக்க வைத்தான்.

அப்படியும்கூட மறு நாள் காலை வேலைக்காரி அறையைக் கூட்ட வந்த போது அவன் தரையில் தான் கிடந்தான்.

'எப்படியானால் என்ன? பிறந்த நாளைப் பிரமாதமாய்க் கொண்டாடி விட்டோம்!' என்று நினைத்துக் கொண்டு, காலைச் சிற்றுண்டிக்காகச் சாப்பாட்டு அறைக்குச் சென்றான்.

நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையைப் படித்தவாறு அம்மா தனக்காகக் காத்திருப்பது தெரிந்தது.

''ராத்திரி ரொம்ப ஜோராகப் பொழுது போயிற்று போலிருக்கிறது?'' என்றாள் மரியம். அவள் குரலில் கடுமை நிறைந்திருந்தது.

''பெண்ணுடன் வெளியே போயிருந்தேன்,'' என்றான்.

''இதையே வழக்கப்படுத்திக் கொண்டு விடாதே!''

''எதைச் சொல்கிறீர்கள்? நான் குடித்து விட்டு வந்ததையா?''

''அதுவும்தான். ஆனால் நான் அதை மட்டும் சொல்லவில்லை. ஆபீசை விட்டு ஐந்து மணிக்கே புறப்படுவதை வழக்கப்படுத்திக் கொள்ளாதே என்கிறேன்.''

''வந்து.... எனக்கு ஞாபகமில்லை.....''

''உனக்கு எதுதான் ஞாபகம் இருக்கிறது?'' பேப்பரை மேஜை மீது வைத்துவிட்டு அவனைக் கடுமையாக நோக்கினாள், மரியம். ''டின்னருக்கு ராத்திரி வந்துவிடு என்று உனக்குச் சொல்லியிருந்தேனே, அதுவும்தான் ஞாபகமில்லை. உன் பிறந்த நாளுக்காக என்று முக்கியப்பட்ட ஒன்பது பெரிய மனிதர்களை அழைத்திருந்தேன். இரண்டு மணி நேரம் உனக்காகக் காத்திருந்ததுதான் மிச்சம். அசிங்கமாய்ப் போய் விட்டது!''

''டின்னருக்கு வரும்படிதான் சொன்னீர்களே தவிர, ஒன்பது பேரைக் கூப்பிட்டிருக்கிறதாய்ச் சொல்லவில்லையே? நாம் இரண்டு பேர்தான் என்று நினைத்து விட்டேன்.''

''நான் என்றால் மட்டும் பரவாயில்லையாக்கும்?''

''எனக்கு மறந்து போய் விட்டது அம்மா. அத்தோடு இது ஒன்றும் எனக்குச் சந்தோஷமான பிறந்த நாள் இல்லை!''

''சரி, சரி,'' என்றாள் மரியம். ஏன் இது அவனுக்குச் சந்தோஷமான பிறந்த நாள் அல்ல என்று அவளுக்குப் புரிந்திருந்தது. அதை வெளிப்படையாகக் கேட்க அவள் விரும்பவில்லை.

''அம்மா, உங்களிடம் இன்னொரு விஷயம் சொல்ல வேண்டும். நான் வெளியே எனக்காகத் தனி ஜாகை பார்த்துக் கொள்ளலாம் என்றிருக்கிறேன்.''

''என்னது!'' மரியம் அதிர்ச்சியடைந்தாள். ''எதற்காக? ஏன்?''

''எனக்கு இருபத்தைந்து வயதாகிறது அம்மா. உங்கள் கீழே நான் வேலை பார்க்கத் தயார். ஆனால் உங்களோடுதான் வசிக்க வேண்டும் என்பதில்லையே?''

(தொடரும்)

கிறார்கள் என்பதை சீர் தூக்கிப் பார்த்து நிச்சயிக்கும் திறனை வாசகர் களிடம் ஒப்படைத்து விடுகிறேன். வேண்டுமானால் பள்ளிகளில் செக்ஸ் கல்வி புகட்டலாமா கூடாதா என்பதை விசாரிக்க ஒரு கமிஷன் நிறுவியதுபோல் இதற்கும் ஒரு கமிஷன் நியமிக்கலாம்.

# தீர்ப்புத் தருகிறார்



# கே. பாலசந்தர்

அதிகப்படியான போதனை (excessive indoctrination) இளசுகள் மனதில் அடக்க முடியாத ஓர் ஆர்வத்தைத் தூண்டி விடுகின்ற, நேர் எதிராகச் செயல்படுகின்ற, சின்ன ஆபத்தைக் கதையில் கோடிட்டுக் காட்டி யிருப்பது எனக்கு என்னமோ 'பாஸிடிவ்' ஆகத்தான் படுகிறது.

இது இன்னொரு உதாரணம்.

பிரசினை எதுவாக இருந்தாலும்—அது 'கூடங்குளமோ' அல்லது 'காலிஸ்தானோ' எதற்குமே இரண்டு பக்கங்கள் இருக்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மை.

இன்னொரு பக்கமே இல்லை யென்றாலும் இன்னொரு கோணத்தைத்தான் கதையில் அடையாளம் காட்டியிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.

மன்னிக்கவும்! 'அக்னி' என்னைச் சுடாமலிருக்கட்டும்! எதையுமே ''செய்யாதே செய்யாதே'' என்று திரும்பத் திரும்பச் சொல்லு கின்றபோதுதான் அதைச் செய்து பார்த்தால் என்ன என்கிற சாதாரண சராசரி மனித சுபாவத்தின் ஆர்வக் கோளாறு செயல்படத் தொடங்கு கிறது.

'உனக்குச் சர்க்கரை வியாதி! இனிப்புகளைத் தொடவே கூடாது;' என்று டாக்டர்கள் அபாய அறி விப்பினைக் கூறும்போதுதான் இனிப்புகள் மீது அபரிதமான ஒரு நாட்டம் ஏற்படுவது வயதானவர்கள் மத்தியிலே கண்கூடு. இது ஒரு உதாரணம்.

இன்னும் சொல்லப் போனால் இந்தக் கதைக்கு மறுப்பும், மறுப்புக்கு மறுப்புகளும், விளக்கங்களும் கொடுக்கப்படும்போதுதான் கதை யைப் படிக்காமல் விட்டவர்களுக்கும் அதைத் தேடிப் பிடித்துப் படிக்க வேண்டுமென்கிற ஆர்வம் வெளிப் படுவதில் ஆச்சரியமில்லை.

போதை மருந்து கடத்து பவர்களுக்கு மரண தண்டனை யென்று சட்டத்தின் பிடிகளை மலேசியா இறுக்கிக்கொண்ட அதே நேரத்தில், இளைஞர்களைச் சீர்குலைக்கும் இந்தப் போதைப் பொருள்களைக் கடைத் தெருவிலே விற்பதற்குக்கூட டென்மார்க் நாட்டில் இப்பொழுது அனுமதி வழங்கியிருக்கிறார்கள் என்றால் இந்தக் கொடிய பழக்கத்தைக் கூண் டோடு ஒழித்துக் கட்ட நினைக்கும் முயற்சிகள்தான் இந்த இரண்டு நாடு களின் நடவடிக்கைகளுமே! இவர்களு டைய அணுகுமுறைதான் நேர் எதிராக இருக்கிறது.

என் கருத்து தப்பாகவும் இருக்கலாம். இரண்டு பெரிய பெண் எழுத்தாளர்கள் மத்தியில் நான் அகப் பட்டுக் கொள்ள விரும்பவில்லை.

I do not want to get sandwiched.

# காதல் மேல் ஆணை

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

மைக்கேலின் அன்னையி னால் தன் அதிர்ச்சியை மறைத்துக் கொள்ள முடியவில்லை.

''என்ன சொன்னாய்? வேறு ஜாகைக்குப் போகிறாயா? ஏன்?'' என்று மறுபடியும் கேட்டாள்.

மைக்கேலும் மீண்டும் தான் சொன்னதையே சொன்னான்: ''ஆமாம்மா. உங்கள் கீழே வேலை பார்க்கலாம். அதற்காக உங்க ளுடனேயே தங்கியிருக்க வேண்டும் என்று கட்டாயமா?''

''வேண்டாம், மைக்கேல்! நீ எதுவுமே கட்டாயத்துக்காகச் செய்ய வேண்டாம்ப்பா,'' என்று எரிச்சலு டன் பதிலளித்தாள் மரியம். இவன் சினேகிதன் பென்தான் இவனுக்கு இந்த யோசனையைச் சொல்லித் தந் திருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள். இந்த மாதிரி என்ன யோசனையெல்லாம் சொல்லித் தரப் போகிறானோ என்று கவலை ஏற் பட்டது.

''அம்மா, நாம் பேசியது போதும். எதற்கு அனாவசியமாய்? எனக்கு ஒரே தலைவலி,'' என்றான் மைக்.

''நேற்றிரவு நீ குடித்ததன் விளைவு,'' என்றாள் மரியம் கடுமையாக. கைக் கடியாரத்தைப் பார்த்துவிட்டு எழுந்து கொண்டாள். ''அரை மணி நேரத்தில் உன்னை ஆபீசில் சந்திக்கிறேன். ஹூஸ்டனி லிருந்து வந்திருக்கிறார்கள். மீட்டிங் இருக்கிறது. மறந்து விடாதே. என்ன, வருகிற மாதிரிதானே இருக்கிறாய்?''

''நிச்சயம் வந்துவிடுகிறேன்,'' என்றவன், ''அம்மா, என் ஜாகை விஷ யத்தை மனசில் வைத்துக் கொள்ளா தீர்கள். எனக்கு அது அவசியமென்று தோன்றியது,'' என்றான்.

அவனைக் கண்டிப்புடன் ஒரு கணம் நோக்கினாள் மரியம். ஒரு பெருமூச்சு அவளிடமிருந்து வெளிப் பட்டது. ''சரி, மைக்கேல், சரி,'' என்றாள். ''உனக்குப் பிறந்த நாள் வாழ்த்துச் சொல்லவில்லையே?'' குனிந்து மகனை முத்தமிட்டாள். ''மறந்தே போனேன். இதோ உனக்கு ஒரு பரிசு,'' என்று ஒரு சிறிய பெட்டியை மைக்கேலின் கையில் தந் தாள்.

தாள முடியாத தலைவலி இருந்த போதிலும் அவன் புன்னகை செய்தான். ''எதற்கம்மா இதெல்லாம்?'' என்று கூறி வாங்கிக் கொண்டான்.

அவன் உள்ளம் முணுமுணுத் தது. 'என் வாழ்க்கையில் இனி எந்தப் பரிசுக்கும் அர்த்தம் கிடையாது!'

பென் அவன் உள்ளத்தைப் புரிந்து கொண்டிருந்தான். அதனால் தான் பிறந்த நாள் என்று பரிசு எதுவும் கொடுக்கவில்லை.

''பிறந்த நாள் பிறந்த நாள் தானே, மைக்கேல்? அதை அலட்சியப் படுத்தலாமா?'' என்றவாறு மரியம் புறப்பட்டாள். ''நல்லது, ஆபீசில் பார்க்கிறேன்.''

அவள் சென்ற பிறகும் வெகு நேரம் வரை மைக்கேல் அந்த டைனிங் அறையிலேயே உட்கார்ந்திருந்தான், ஜன்னல் வழியே வெளியே தெரிந்த உலகத்தைப் பார்த்த வண்ணம்.

---

ஆதாரம்: டேனியல் ஸ்டீல்

தன் உள்ளம் ஏங்கி ஏங்கித் தேடுகின்ற வீடு எதுவென்று அவனுக்குத் தெரிந்தேயிருந்தது: பாஸ்டன் நகரில் நான்ஸி வசித்து வந்த வீடு.

என்ன பாடு பட்டாவது அதே போன்ற வீட்டை இங்கே நியூயார்க்கில் பிடிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

அப்படிப்பட்ட இடத்தில் இருந்தால்தான் நான்ஸியோடு இருக்கிற மாதிரி இருக்கும்.

நான்ஸி இறந்து போய் விட்டாள், இதெல்லாம் பித்துக்குளித் தனமான எண்ணங்கள் என்று அவன் உணர்ந்துதான் இருந்தான். ஆனால், அவளைப் பற்றிய கற்பனைகளை அவனால் விட்டுவிட முடியவில்லை.

நான்கு மாதம் சென்றிருக்கும்.

கையில் ஒரு ஃபைலுடன் மைக்கேலைத் தேடிக் கொண்டு பென் வந்தபோது மணி ஐந்து. நாள் பூரா வேலை இருந்ததால் எங்கேயாவது போய்க் கொஞ்ச நேரம் அக்கடாவென்று உட்கார்ந் திருக்க வேண்டும் போலிருந்தது அவனுக்கு.

''ஸ்யூ, மைக்கேல் இருக்கிறாரா?'' என்று மைக்கேலின் ஸ்டெனோவிடம் விசாரித்தான். அவள் அழகிய



இளம் பெண். ஆனால் கவர்ச்சி தெரியாதபடி, அழகை மறைக்கிற மாதிரி உடை அணிந்திருந்தாள். ஸ்டெனோக்கள் கவர்ச்சியாக உடையணிவது மரியமுக்குப் பிடிப்பதில்லை.

முக்கியமாகத் தன் மகனுடைய ஸ்டெனோ அப்படி இருக்கக் கூடாதென்று நினைக்கிறாள் போலும்.....

''இருக்கிறார் சார். நான் போய் நீங்கள் வந்திருக்கிறீர்களென்று சொல்லட்டுமா?'' என்றாள் ஸ்யூ.

''வேண்டாம், நானே போய்க்கொள்கிறேன்.''

வேலைப்பாடமைந்த பெரிய மரக் கதவைத் தட்டினான் பென். ''வீட்டிலே யார் இருக்கிறாங்க?'' என்று வேடிக்கையாய்க் குரல் கொடுத்தான். பதிலில்லை. திரும்பவும் தட்டினான். அப்போதும் பதிலில்லை. சந்தேகத்துடன் ஸ்டெனோ பக்கம் திரும்பினான். ''மைக்கேல் உள்ளே இருக்கிறாரா? நிச்சயமாகத் தெரியுமா?''

''நிச்சயம், சார்.''

''நல்லது.'' பென் மறுபடி தட்டினான்.

இந்த முறை உள்ளேயிருந்து 'ஊம்' என்று ஒரு கரகரப்பான முனகல் வந்தது.

பென் மெல்லக் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தான். ''என்ன மைக், தூங்கிக் கொண்டிருந்தாயா, என்ன?''

''தூங்கினால் தேவலைதான். எத்தனை அமளிகள் பார் இங்கே!''

மேஜை மீது கடிதங்களும் வரைபடங்களும் ஃபோல்டர்களும் டிசைன்களும் அறிக்கைகளும் குவிந்து கிடந்தன. பத்துப் பேர் ஒரு வருஷ காலம் செய்யும் அளவுக்கு வேலைகள்.

''உட்கார், பென்.''

''தாங்ஸ், பாஸ்!''

'பாஸ்' என்று சொல்லி நண்பனைச் சீண்டுவதில் பென்னுக்கு ஒரு தனி சந்தோஷம்.

''மூடு வாயை! ஏதோ ஃபைல்கள் கொண்டு வந்திருக்கிறாயே என்ன?''

முடியைக் கையால் அளைந்தபடி கனமான லெதர் நாற்காலியில் சாய்ந்து கொண்டான், மைக்கேல். இந்தச் சூழ்நிலைக்குப் பழக்கப்பட்டு மரத்து விட்டது அவன் உள்ளம். இந்த மேஜை, நாற்காலி, சோபா, சுவர்கள், சுவர்களில் மாட்டியிருக்கும் படங்கள், ஸ்டெனோ—எதிலும் அவனுக்கு ஈடுபாடு ஏற்படவில்லை.

மேஜை மேல் என்ன வேலை இருக்கிறது? அதைக் கவனித்தால் போதும். அவ்வளவுதான் அவனுக்கு வாழ்க்கை.

''என்ன ஃபைல் எடுத்து வந்திருக்கிறாய், அதைச் சொல்லு. கான்ஸாஸ் ஸிடியில் ஒரு ஷாப்பிங் சென்ட்டர் கட்டுகிறோமே, அது சம்பந்தமாக நீயும் ஒரு பிரசினை கொண்டு வந்திருக்கிறாயா? எனக்குப் பைத்தியமே பிடித்து விடும் போலிருக்கிறது!''

''பைத்தியம் பிடிக்க வேண்டும் என்பதுதானே உன் ஆசையும்?''



நடிகர்: நான் ஒரு 'குட்டி வீடு' செட்டப் பண்ணிட்டேன்!

தயாரிப்பாளர்: அது என்னங்க, குட்டி வீடு?

நடிகர்: எனக்குத்தான் ஏற்கனவே ஒரு சின்ன வீடு இருக்கே?

—கிங்லி.




ரௌடி ராசப்பன் மடக்கென்று சாராயம் ஒரு வாய் ஊற்றிக் கொண்டு, 'சாமியே சரணம் ஐயப்பா!' என்று பாடினான். அவன் பெண்சாதி அஞ்சலை, ''இன்னா, இன்னிக்குப் பாட்டுப் பிய்ச்சுக்குது?'' என்றாள். கத்தியால் அவளைச் சதக் சதக் செய்து விட்டு, 'ஏழுமலையானே! வெங்கடாசலபதி!' என்று பாடிய வண்ணம் ஒரு பஸ்ஸில் ஏறியவன், 'முருகா! வேலா! தண்டபாணித் தெய்வமே!' என்று பாடிக் கொண்டு பக்கத்தில் பார்த்தான். ஒரு பெரியவரின் ஜிப்பாப் பையில் கனமான பர்ஸ் துருத்திக் கொண்டிருந்தது. வெகு லாகவமாக அதைக் கைப்பற்றிக் கொண்டு இறங்கி, 'ஹரே ராமா! ஹரே கிருஷ்ணா!' என்று இசைத்தவாறு சாராயக் கடைக்குள் நுழைந்தான். ஐந்நூறு மில்லி அடிக்கும்போது குஷி கிளம்ப, ''மாரியாத்தா! மகமாயி!'' என்று பாடுகையில்; குடிசையின் பின்னால் ஒரு பெண் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. அவளைத் துரத்திப் பிடித்து, வீழ்த்தி, 'நாராயணா! கோவிந்தா!' என்று பாடியவாறு கற்பழித்துவிட்டு வெளியே வந்தான்! தெருவில் போய்க் கொண்டிருந்த அம்மாளின் தங்கச் சங்கிலியை அறுத்துக்கொண்டு, 'பிள்ளையாரப்பா! வினாயகரே!' என்று பாடிய வண்ணம் ஓடினான்.

(புதுப் புது அர்த்தங்களில் 'குருவாயூரப்பா! குருவாயூரப்பா!' என்ற டூயட் பாட்டையும், இதயத்தைத் திருடாதேயில் 'ஓம் நமஹ! ஓம் நமஹ!' என்ற முத்தக் காட்சிப் பாட்டையும் கேட்டதால் ஏற்பட்ட இன்ஸ்பிரேஷன்.)

—ஆர்.

என்றான் பென். ''நிஜத்தைச் சொல் மைக். நீ சினிமாவுக்குப் போ எத்தனை நாளிருக்கும்? கடைசியா என்ன சினிமா பார்த்தாய் நினைவிருக்கிறதா? இந்தப் பாழாய் போன ஆபீசை விட்டு வெளியே வரவே மாட்டாயா?''

''நேரம் கிடைக்கும்போது சினிமா போகிறேன்.'' மேஜையிலிருந்த சில காகிதங்களைப் பார்த் வாறே பதிலளித்தான் மைக்கேல். ''சரி, என்ன ஃபைல் எடுத்து வ திருக்கிறாய், அதைச் சொல்லு.''

''.... ஃபைலுமில்லை, மண்ணுமில்லை. உன்னோடு கொஞ்ச நேரம் பேச வேண்டும் போலிருந்தது. அதற்கு ஒரு சாக்காக ஃபைலை எடுத்துக் கொண்டு வந்தேன்.''

''ஏன்? சாக்கு எதற்கு? நீ சும்மாவே வரக் கூடாதா?'' என்று கேட்டு விட்டுச் சிரித்தான் மைக்கேல். அவனுக்குத் தன் தாயின் கண்டிப் நினைவுக்கு வந்தது. ஆபீசில் யாரும் சும்மா 'திரிந்து' கொண்டிருக்க கூடாது. கையில் காகிதமோ ஃபைலோ எடுத்துக் கொண் போனால் கூட ஒரே பார்வையில் அது என்னவென்று கண்டுபிடித் விடுவாள்.

மைக்கேல் சிரிப்பதை பார்த்து பென்னும் சிரித்தான் பள்ளிப் பிராயத்தில் ஹாஸ்டல் வார்டனுக்கு டிமிக்கி கொடுத்துவிட் ஒருவன் அறைக்கு மற்றவன் போவ துண்டு. அந்த நாள் அவர்களுக்கு ஞா கம் வந்தது. சிரிப்பும் கூடவே வந்தது.

''சரி, பென். விடுமுறைக்கு வெளியூர் போயிருந்தாயே, எப்படி இருந்தது?''

பென் அவனையே ஒரு நிமிடம் அசையாமல் பார்த்துக் கொண்டிருந்து விட்டுச் சொன்னான்: ''நிஜமான அக்கறையோடுதான் கேட்கிறாயா மைக்?''

மைக்கேல் ஒரு வறண்ட சிரிப் டன், ''உன்னிடம் எனக்கு நிஜமான

அக்கறைதான், பென்,'' என்றான்.

நண்பனை உற்றுப் பார்த்தான் பென். மைக்கேலின் முகம் மரக் கட்டை மாதிரி இருந்தது.

''மைக், உன்னிடமே உனக்கு அக்கறை கிடையாது,'' என்றான் வருத்தத்துடன், ''சமீபத்தில் கண்ணாடியில் உன் முகத்தைப் பார்த்துக் கொண்டாயா? பேய் மாதிரி இருக்கிறாய்? நான் சொல்வதைக் கேள். இந்த ஞாயிற்றுக் கிழமை நாங்கள் எல்லோரும் பிக்னிக் போகிறோம். நீயும் கட்டாயம் வந்தாக வேண்டும். வர மாட்டேனென்று சொன்னால் நான் விடப் போவதில்லை. தரதரவென்று உன்னை இழுத்துக் கொண்டு போவேன். மைக், நீ இந்த இடத்தில் அடைந்து கிடக்கக் கூடாது. வெளியே வந்துதான் ஆக வேண்டும். தெரிகிறதா?''

பென்னின் முகத்தில் புன்னகை இருக்கவில்லை. கோபம்தான் இருந்தது.

மைக்கேல் அசைந்து கொடுக்கவில்லை.

''உன்னுடன் வர வேண்டும் என்றுதான் எனக்கும் ஆசை. ஆனால் இந்தக் கான்ஸாஸ் ஸிடி வேலை என் உயிரை எடுக்கிறது. ஐம்பத்தெட்டாயிரம் பிரசினை. உனக்குத் தெரியாதா? நேற்று ஆபீஸ் மீட்டிங்கில் இதைப் பற்றி விவாதித்த போது நீயும்தான் இருந்தாயே?'' என்றான்.

''மீட்டிங்கில் இருபத்து மூன்று பேர்கள் இருந்தார்கள். அவர்கள் கவனித்துக் கொள்ள மாட்டார்களா? அல்லது, உன்னைத் தவிர வேறு யார் கவனித்தாலும் கெடுத்து விடுவார்கள் என்று உனக்கு அகம்பாவமா?'' என்றான் பென்.

அப்படிச் சொன்னானே தவிர, நண்பனின் உள்ளம் அவனுக்குப் புரிந்தது. வேலை என்பது ஒரு போதை மருந்து போலாகிவிட்டது இவனுக்கு. இவன் வேலைக்கு அடிமையாகிவிட்டான். இவனுடைய உணர்ச்சிகளெல்லாம் மரத்து விட்டன. என்றைக்கு இந்த அலுவலகத்தில் நுழைந்து இந்த மேஜையடியில் உட்கார்ந்தானோ, அன்றிலிருந்து மைக்கேல் இப்படி ஆகிவிட்டான்.

''மைக், இந்த ஒரே ஒரு தடவை.....''

''என்னால் முடியாது, பென், முடியாது,'' என்று மைக்கேல் தலை கவிழ்ந்தபடி சொல்ல—

படபடவென்று பொரிய ஆரம்பித்தான், பென்.

(தொடரும்)




படத்திலே நடிக்கிற போது நல்லா இருக்கிற மாதிரிதான் தோணுது. நடிக்கும்போதே நல்ல பாராட்டும் கிடைக்குது. நானும் ரொம்ப சிரமப்பட்டுத்தான் நடிக்கிறேன். ஆனால் படம் வெளிவந்து ஓடும்போது தோல்வி ஆயிடுது. அதுக்கு நாம் என்ன பண்ண முடியும்?

—அர்ஜுன் (சினிமா எக்ஸ்பிரஸ்).




எனக்கு ஆசைகள் கம்மி. மூன்று ரூபாய் சம்பளம் வாங்கின போது ஐந்து ரூபாய் இருந்தால் போதும்னு நினைச்சேன். பத்து ரூபா வேணும்னு நினைக்கலே, அதனாலே ஓரளவு நிதானமா இருக்கேன்.

—எம்.என். நம்பியார் (தினமணி).

# தமிழில்: ரா.கி. ரங்கராஜன்

**19**




மூலம்:
டேனியல் ஸ்டீல்

மைக்கேல் எங்கேயும் வெளியே வராமல், வேலை வேலை யென்று தன் அலுவலகத்திலேயே அடைந்து கிடப்பது பென்னுக்குக் கோபம் ஏற்படுத்தியது. என்ன சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறானே!

''சே! உனக்கு எப்படிச் சொல்லி விளங்க வைப்பது என்றே தெரியவில்லை, மைக்!'' என்று சலிப்புடன் சொன்னான். ''உன்னை நீயே கொன்று கொண்டிருக்கிறாய்! அதைப் பற்றிக் கொஞ்சமாவது நினைத்துப் பார்க்கிறாயா?'' அவன் குரல் கொஞ்சம் கொஞ்சமாய் உரத்து அந்த அறையெங்கும் எதிரொலித்தது. அந்தக் குரலின் உக்கிரத்தைக் கண்டு மைக்கேலின் உடம்பே ஆடியது. உணர்ச்சி மிகுதியினால் அவன் முகத்தில் தசை நார்கள் புடைத்தெழுந்தன.

பென் தொடர்ந்தான்: ''மைக், உன்னை நீயே சாகடித்துக் கொண்டிருக்கிறாய். நீ இறப்பதால் யாருக்கு என்ன பிரயோசனம்? நான்ஸி திரும்பியா வரப் போகிறாள்? இல்லை, ஆனால் நீ உயிருடன் இருக்கிறாய். இருபத்தைந்தே வயது தான் ஆகிறது. இப்போதே உன் வாழ்வை வீணடித்துக் கொண்டிருக்கிறாய். பாழாய்ப் போன உன் அம்மாவைப் போலவே நீயும் வேலையில் மூழ்கப் போகிறாய். சொல்லு, அதுதான் உன் லட்சியமா? உன் அம்மாவைப் போலவே நீயும் ஆக வேண்டுமா? பிஸினஸுக்காகவே மூச்சு விட வேண்டும். பிஸினஸுக்காகவே சாப்பிட வேண்டும். பிஸினஸுக்காகவே குடிக்க வேண்டும். பிஸினஸுக்காகவே உழைத்து உயிரை விட வேண்டும். அவ்வளவுதானா உன் வாழ்க்கை? இல்லை, மைக், நான் அப்படி நினைக்கவில்லை. உன் உடம்புக்குள்ளே இன்னொரு மைக்கேல் இருக்கிறான், மிஸ்டர்! அதைத் தான் நான் நேசிக்கிறேன். ஆனால் நீயோ அந்த இன்னொரு மைக்கேலை நாய் போல நடத்துகிறாய். அதற்கு நான் இடம் தரப்போவதில்லை. இந்த நிமிஷம் நீ என்ன செய்து கொண்டிருக்க வேண்டும் தெரியுமா? அதோ வெளியே இருக்கிறாளே உன் ஸ்டெனோ, அழகான பெண், அவளுடன் நாலு இடத்துக்குப் போக வேண்டும். அவளைப் போல அழகான

பெண்கள் இன்னும் பல பேர் இருக்கிறார்கள். அவர்களுடன் டஜன் கணக்கான பார்ட்டிகளுக்குப் போக வேண்டும். வாழ்க்கையை அனுபவிக்க வேண்டும். இந்தத் தரித்திரம் பிடித்த நாற்காலியை விட்டு எழுந்திரு. இது நாற்காலியல்ல. சவப் பெட்டி. இதிலிருந்து எழுந்து வா. இல்லாவிட்டால்....''

அவன் பேச்சை முடிக்க விடவில்லை மைக்கேல். அவன் உடம்பு தடதடவென்று ஆடிக் கொண்டிருந்தது. முகம் சிலிர்த்தது கோபத்தால்.

''போதும் நிறுத்து! போ வெளியே! இன்னும் ஒரு நிமிஷம் இங்கே இருந்தாயோ உன்னைக் கொலையே பண்ணிவிடுவேன்! கெட் அவுட்!'' என்று கத்தினான். அடிபட்ட புலியின் சீற்றம் இருந்தது அந்தக் குரலில்.

இருவரும் சரேலென எழுந்து கொண்டார்கள். தங்கள் பேச்சையும் உணர்ச்சிகளையும் எண்ணி அவர்களுக்கே பயமும் வெட்கமும் தோன்றின.

''ஸாரி, பென்!'' என்றபடி மைக்கேல் திரும்ப உட்கார்ந்து கொண்டான் தன் இருக்கையில். இரு கைகளாலும் தன் முகத்தைப் பொத்திக் கொண்டான். ''இன்று நாம் இத்தோடு நிறுத்திக் கொள்ளலாம்,'' என்றான், சினேகிதனை நிமிர்ந்து பார்க்காமலே.

பென் மெதுவே அவனருகில் வந்து அவன் தோளை ஒரு முறை அழுத்திவிட்டு, ஓசையில்லாமல் கதவைச் சாத்திக் கொண்டு வெளியேறினான்.

மைக்கேலின் ஸ்டெனோ அவனைக் கேள்விக்குறியுடன் ஏறிட்டு நோக்கினாள். ஆனால் ஒன்றும் கேட்கவில்லை. மைக்கேல் கத்தியது அவளுக்குக் கேட்டிருந்தது. அவளுக்கு மட்டுமா, கொஞ்சம் கவனித்திருந்தால் அந்த மாடியிலிருந்த யாருக்குமே கேட்டிருக்கும்.



பென் தன் அறைக்குத் திரும்பினான். வழியில் ஹாலில் மரியம் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. ஜார்ஜ் காட்டும் ஏதோ காகிதத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஆனால் அருகில் சென்று வணக்கம் சொல்லப் பென்னுக்குப் பிடிக்கவில்லை. அவளை நினைக்கும் போதே அவனுக்கு வெறுப்பாயிருந்தது. சொந்த மகனையே இப்படி விட்டு வைத்திருக்கிறாளே என்று கோபம் ஏற்பட்டது. மைக்கேல் அப்படி இருப்பதுதான் இவளுக்குப் பிடித்திருக்கிறது. அதுதான் தன் பிஸினஸுக்கு நல்லது, தன் தொழில் சாம்ராஜ்யத்திற்கு நல்லது, தன் பரம்பரைக்கு நல்லது என்று நினைக்கிறாள் இவள். சே! என்ன தாய்!

ஆறரை மணிக்குத் தன் அலுவலகத்திலிருந்து புறப்பட்டான் பென். தெருவிலிருந்து அண்ணாந்து பார்த்தபோது மைக்கேலின் அறையில் விளக்கு எரிந்து கொண்டிருப்பது தெரிந்தது. மணி பதினொன்றானாலும், பன்னிரண்டானாலும் அவன் வீட்டுக்குப் புறப்படப் போவதில்லை என்று எண்ணிக் கொண்டான்.

வீடா! மைக்கேலுக்கு வீடு ஏது? பென் கசப்புடன் சிரித்துக் கொண்டான்.

மூன்று மாதத்துக்கு முன்னால் மைக்கேல் நகரின் ஆடம்பரமான பகுதியில் அழகான அபார்ட்மெண்ட் அமர்த்தியிருந்தான். அதனுடைய அமைப்பு கிட்டத்தட்ட நான்ஸி இருந்த இடம் போலவே இருந்தது. அதனால்தான் மைக்கேல் அந்த இடத்தைப் பிடித்திருந்தானோ என்னவோ.

ஆனால் அதற்கப்புறம்தான் இன்னும் மோசமாகிவிட்டது. மைக்கேலிடமிருந்த கொஞ்ச நஞ்சம் ஜீவனும் போய், ஆபீஸ் வேலையிலேயே சதா காலமும் வெறி பிடித்தவன் போல் மூழ்கத் தொடங்கி விட்டான். அவனுடைய அபார்ட்மெண்ட் எந்தக் கவனிப்பும் இல்லாமல் சூனியமாய்க் கிடந்தது. ஒரு படுக்கை, இரண்டு மடக்கு நாற்காலி, அழுக்கு படிந்த ஒரு விளக்கு—அவ்வளவுதான். உயிரற்ற எதிரொலிகள். முன்பு குடியிருந்தவன் அன்றுதான் காலி செய்து விட்டுப் போயிருந்தது போல் குப்பை கூளம்.

'அப்படிப்பட்ட வீட்டுக்குப் போவதென்றால் யாருக்குத்தான் உற்சாகம் வரும்!' என்று பென் நினைத்துக் கொண்டான். மைக்கேலுக்கும் அதே போல்தான் இருக்கும் போலும். தன் அபார்ட்மெண்ட்டின் அலங்கோலத்தை மைக்கேல் ஒரு நொடியாவது கவனிக்கிறானா என்பதே சந்தேகம்தான்.

இரண்டு மாதம் முன்பு, அங்கே வைப்பதற்காக இரண்டு பூந்தொட்டிகள் கொடுத்திருந்தான் பென். அதற்கு மைக்கேல் ஒரு நாள் கூடத் தண்ணீர் ஊற்றியது கிடையாது. போன மாதம் உதிர்ந்து சருகாகி வெறும் தொட்டிதான் கிடந்தது. அந்த விளக்கைப் போல, யாரும் கவனிக்காத அனாதையாக.

நண்பன் இப்படி இருப்பதைப் பற்றிப் பென் உள்ளம் வருந்தினான்.



மனைவி: பக்கத்து வீட்ல பருப்பு கைமாத்து, எதிர் வீட்ல சர்க்கரை கைமாத்து, மாடி வீட்ல அம்பது ரூபாய் கைமாத்து வாங்கி இருக்கோமே, என்ன செய்ய?

கணவன்: பேசாம அவங்களை ஏமாத்து!

—முகமது.

ஆனால் யார் என்ன செய்ய முடியும்? நான்ஸியினால் தான் இவனைக் காப்பாற்ற முடியும். அவளோ இறந்து விட்டாள்.

அவளைப் பற்றி நினைக்கையிலேயே பென்னின் உடம்பில் ஒரு வலி ஏற்பட்டது. விபத்தில் எலும்பு முறிந்தபோது விலாவிலும் கால் முட்டியிலும் ஏற்பட்டதே அதே போன்ற வலி.

ஆனால் அந்த முறிவுடன் சரியாகி விட்டான். அவனிடம் இளமை இருந்ததால்.

அதே இளமை மைக்கையும் குணப்படுத்தக் கூடாதா என்று பென் ஏங்கினான். ஆனால் மைக்கேலின் முறிவுகள் வேறு விதமானவை. அவை அவன் உடம்புக்குள் இருக்கின்றன. வெளியே தெரிவதில்லை. கண்களில் மட்டும்தான் தெரிகிறது—அல்லது, நாள் பூரா உழைத்துவிட்டு அவன் முகத்தை நிமிர்த்தும்போது, அவனையும் மீறி அவன் முகத்தில் அந்த வேதனை வெளிப்பட்டு விடுகிறது....

''என்ன இளவரசி, எப்படி இருக்கிறாய்?'' என்று கேட்டார் டாக்டர் பீட்டர். ''சொன்ன வார்த்தையைக் காப்பாற்றினேனா இல்லையா? வெளியே பார்க்க என்ன பிரமாதமான காட்சியாக இருக்கிறது பார்த்தாயா? இதுமாதிரி இடம் இந்த ஊரிலேயே கிடையாதாக்கும்!''

அழகான மாடி வெராந்தாவில் அவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அங்கிருந்து பார்க்கையில் ஒரு பக்கம் அமைதியான கடலும், இன்னொரு புறம் சந்தடி மிகுந்த நகரமும் தெரிந்தன. வெராந்தாவின் ஒரு கோடியிலிருந்து சூரியோதயத்தையும் மற்றொரு புறத்திலிருந்து சூரியாஸ்தமனத்தையும் காண முடிந்தது. இந்த இடத்தைப் பீட்டர்தான் தேடிப் பிடித்திருந்தார் அவளுக்காக.

நான்ஸியின் முகம் பூரா இன்னும் கட்டு இருந்தது. ஆனால் ஜீவனுள்ள கண்கள் மட்டும் திறந்திருந்



''ரோடு ரோலர் ஓட்டிக்கிட்டிருந்தவனைக் கார் ஓட்ட வைச்சது தப்பாப் போச்சு.''

''ஏன்? மெதுவா ஓட்டறானா?''

''மெதுவா ஓட்டினாலும் பரவாயில்லையே. முன்னும் பின்னுமா ஓட்டறானே.''

—சி. பாஸ்கர்

தன. கைகளிலும் இப்போது கட்டு ஏதும் இல்லை.

''நீங்கள் எனக்கு ரொம்பச் செல்லம் கொடுத்து என்னைக் குட்டிச் சுவராக்குகிறீர்கள்!'' என்று செல்லமாய் புகார் செய்தாள் நான்ஸி.

''இருக்கட்டுமே? உனக்கு எவ்வளவு செல்லம் கொடுத்தாலும் தகும்,'' என்றார் பீட்டர். ''அதிருக்கட்டும், உனக்காக ஒரு பரிசு வாங்கி வந்திருக்கிறேன்.''

சிறுமியைப் போல் கைதட்டிக் குதூகலித்தாள் நான்ஸி. வரும்போதெல்லாம் ஏதாவது வாங்கிக் கொண்டு வருவது அவருக்கு வழக்கமாகிவிட்டது. பத்திரிகைகள், புத்தகங்கள், புதுமையான தொப்பி, கழுத்தில் சுற்றிக் கொள்ள ஸ்கார்ஃப், குணமாகி விட்ட கைகளுக்கு வளையல்கள்—

இப்படி ஏதாவது வாங்கி வருவார். ஆனால் இன்று கொண்டு வந்து தந்த பெட்டி சற்றுப் பெரியதாக இருந்தது. கனமாயும் இருந்தது.

''என்ன இது டாக்டர்? கல் மாதிரி கனக்கிறதே?''

''ஆமாம். உலகத்திலேயே பிரம்மாண்டமான வைரக் கல்!'' என்று பீட்டர் சிரித்தார்.

ஆவலுடன் பிரித்தாள்.

விலையுயர்ந்த, பெரிய காமெரா.

''டாக்டர்! இது... இது... ஊகூம்... நான் இதை வாங்கிக் கொள்ள மாட்டேன்!''

''வாங்கிக் கொள்ளத்தான் வேண்டும். அது மட்டுமில்லை. இந்தக் காமெராவை வைத்துக் கொண்டு நீ படங்கள் எடுக்க வேண்டும். சீரியஸாக வாழ்க்கையை ஆரம்பிக்க வேண்டும்.''

அவர் எதைக் குறிப்பிடுகிறார் என்று அவளுக்குப் புரிந்தது.

முன்பாவது நான்ஸியின் கைகளில் கட்டு இருந்தது. இப்போது எதுவும் இல்லை. நன்கு குணமாகி விட்டது. அவள் தாராளமாய் ஓவியங்கள் தீட்டலாம். ஆனால் தீட்ட விரும்பவில்லை. ஓவியம் தீட்டுவதைப் பற்றி நினைக்கும்போதே அவளுக்குள் ஏதோ ஓர் எதிர்ப்புத் தோன்றி அவளைத் தடுத்தது.

பாஸ்டன் நகரிலிருந்த அவளுடைய ஓவியங்களையும் தூரிகைகளையும் வண்ணக் கிண்ணங்களையும் நர்ஸ்கள் எடுத்து வந்து தந்திருந்தார்கள். அவ்வளவும் ஒரு பெட்டியில் அடைக்கப்பட்டு, இருண்ட மூலையில் கிடந்தன. அந்தப் பெட்டியைத் திறக்கக் கூட அவள் விரும்பவில்லை.

அவளுடைய மனநிலையை டாக்டர் பீட்டர் அறிந்திருந்தார். அதனால்தான் இந்தக் காமெரா வாங்கித் தந்தார்.

ஓவியம் வரைய இவளுக்குப் பிடிக்காதிருக்கலாம். ஆனால் காமெரா சமாசாரம் அப்படியில்லை. புகைப்படம் பிடிக்க ஆர்வம் ஏற்படக் கூடும்.



நிழல்கள் ரவிதான்

இவள் வாழ்க்கையின் பழைய கதவுகள் மூடிக் கொண்டு விட்டன. அவைகளைத் திறப்பதால் இவளுக்கு எந்தப் பயனும் இல்லை. புதிய கதவுகள் திறக்க வேண்டும். அதற்கு இந்தக் காமெரா உதவக் கூடும்.

நான்ஸியின் கண்களில் தென் பட்ட பளபளப்பு!

அவர் நம்பிக்கை பலித்தது.

கையில் வைத்திருந்த ஒரு சிறு புத்தகத்தை அவளிடம் கொடுத்தார்.

''இந்தக் காமெராவை எப்படிக் கையாள வேண்டும் என்ற குறிப்புகள் இதில் இருக்கிறது. படித்துப் பார். பத்து வருஷம் டாக்டருக்குப் படித்தேனே தவிர எனக்கு இதிலொன்றும் புரியவில்லை.''

''அட!'' அவள் பரபரப்பானாள். புத்தகத்தைப் புரட்டுவதும் காமெராவைத் திறப்பதுமாக, சூழ்நிலையை மறந்தாள். அவரை மறந்தாள்.

டாக்டர் பீட்டர் அவளையே புன்னகையுடன் பார்த்த வாறிருந்தார். அரை மணி நேரம் சென்ற பிறகுதான் அவளுக்கு டாக்டரின் ஞாபகமே வந்தது.

கண்களில் மகிழ்ச்சி மின்ன, ''டாக்டர், எனக்குக் கிடைத்த பரிசு களிலேயே இதுதான் ரொம்ப அற்புத மானது.'' என்றாள்.

சொல்லும்போதே இன் னொன்று ஞாபகம் வந்தது.

மைக்கேல் தந்த அந்த முத்து மாலை. அதைப் போன்ற அற்புதமான பரிசு எதுவும் இருக்க முடியாது.

அந்த நினைப்பை வலுக் கட்டாயமாக அவள் மனத்திலிருந்து விரட்டினாள்.

அப்படியும்கூட, அந்த ஒரு கணத்துக்குள் அவள் முகத்தில் தோன்றி மறைந்த வேதனையை டாக்டர் பீட்டர் கண்டுகொண்டார்.

(தொடரும்)



20

டாக்டர் பீட்டர் பரிசளித்த மெராவையே திருப்பித் திருப்பிப் ர்த்து மகிழ்ந்தாள் நான்ஸி.

''பீட்டர், பிலிம் வாங்கி ந்திருக்கிறீர்களோ?''

''ஓ!'' இன்னொரு சிறிய ப்பாவைத் திறந்து பிலிம் சுருளை வளிடம் நீட்டினார் அவர். காமெரா வாங்கி வந்துவிட்டு, பிலிம் ாங்க மறப்பேனா நான்!''

''நீங்கள் எதையுமே மறப்பது டையாது,'' என்றவாறு மெராவில் பிலிமை மாட்டி, ாக்டரையும், வெளியே தெரிந்த யற்கைக் காட்சிகளையும், சுப்பிடிச் சுவரில் வந்து உட்காரும் றவைகளையும் மடமடவென்று பட மடுக்கத் தொடங்கினாள் நான்ஸி. எல்லாம் கோரமாய் இருக்கப் பாகிறது. ஆனால் எனக்கு இது னே முதல் தடவை!''

அவளை வெகு நேரம் வரை மளனமாகக் கவனித்துக் காண்டிருந்தார் டாகடர். பிறகு வள் தோளின் மீது மெல்லக் கை வத்து, ''உள்ளே போகலாம் வா. னக்கு இன்னொரு பரிசும் வைத் ருக்கிறேன்,'' என்றார்.

---

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்

மூலம்: டேனியல் ஸ்டீல்

''ஓகோ! மெர்ஸிடிஸ் கார் தானே! எனக்குத் தெரியும்!'' என்று நான்ஸி சிரித்தாள்.

''வேடிக்கையில்லை. சீரியஸான விஷயம்,'' என்றவா அவளைக் குனிந்து எச்சரிக்கையுடன் நோக்கினார். ''உனக்கு ஒரு பெண்ணை அறிமுகப்படுத்தப் போகிறேன். ரொம்ப முக்கியமான பெண்.''

ஒரு வினாடிக்குப் பைத்தியக்காரத்தனமான பொறாமையொன்று நான்ஸியின் முதுகுத் தண்டில் ஊர்ந்து ஓடியது. டாக்டரின் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள்.

தன்னை அவள் உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பது டாக்டருக்குத் தெரிந்தது. தொடர்ந்து பேசினார். ''அவள் பெயர் அல்லிஸன். நானும் அவளும் மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து படித்தோம். மனோதத்துவத் துறையில் அவளைப் போலக் கெட்டிக்காரியான டாக்டர் இந்த வட்டாரத்திலேயே கிடையாது.

ஏன், அமெரிக்காவிலேயே கிடையாது என்று கூடச் சொல்வேன். அவள் உனக்குப் பிரமாதமான சினேகிதியாக இருப்பாள். பார்த்தவுடனேயே அவளை உனக்குப் பிடித்துப் போகும், பாரேன்.''

நான்ஸிக்குத் திகைப்பு ஏற்பட்டது. ''எதற்கு நான் அவளை....''

''உன் நல்லதுக்குத்தான் நான்ஸி. ஒரு மனோதத்துவ டாக்டரைப் பார்க்க வேண்டும் என்று முன்பே உன்னிடம் சொல்லியிருந்தேனே?''

நான்ஸிக்குச் சற்று வேதனையாக இருந்தது. காமெராவைக் கீழே வைத்துவிட்டு அவரைக் கூர்ந்து பார்த்தாள். ''நான் மனத்தளவில் இன்னும் சரியாகவில்லை என்று நினைக்கிறீர்களா?''

''நீ பிரமாதமாகக் குணமடைந்து வருகிறாய், நான்ஸி. இல்லையென்று சொல்லவில்லை. ஆனால் இங்கே இரண்டே இரண்டு நர்ஸ்களைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள் உனக்கு? பேச்சுத் துணைக்கு இன்னொருத்தர் இருந்தால் நல்லதில்லையா?''

''இன்னொருத்தரா! மைக்கேல் இருந்தால்....!' என்று அவள் எண்ணிக் கொண்டாள். அவனுடன் பேசிக் கொண்டிருக்கி மாதிரி இனிமேல் வருமா!

''எனக்குக் குழப்பமாயிரு கிறது, டாக்டர்....''

''அல்லிஸனைப் பார்த்தவு னேயே உன் குழப்பமெல்லாம் தீர் விடும். ஆசையும் பாசமும் உள் பெண். உன் கேஸைப் பற்ற கேட்டது முதல் உன்னிடம் ரொம அனுதாபம் கொண்டிருக்கிறாள்.''

''என்னைப் பற்றி அவளுக்கு தெரியுமா?''

''ஆரம்பத்திலிருந்தே தெ யும்,'' என்றார் பீட்டர். மரியடு டாக்டர் விக்கியும் டெலிபோன கூப்பிட்டுப் பேசியபோது அல்லிஸ அவருடன்தான் இருந்தா அவளுக்கு அன்றே எல்லாம் தெரியு ஆனால் இப்போது நான்ஸியிட அதைப் பற்றியெல்லாம் சொல் தேவையில்லை என்று எண்ணின பீட்டர்.

பல வருடங்களாகப் பீட்ட அல்லிஸனும் காதலர்களாக இரு





## விஸ்வாமித்திரர் திருப்பித் தந்தாரா?

வாரியார் சமீபத்தில் கலிபோர்னியா வந்திருந்தபோது தமது சொற்பொழிவில் கூறினார்:

''என்.டி.ஆர். பாகவதம் பற்றிய சந்தேகங்களைக் கேட்க வந்திருந்தார். விளக்கிச் சொன்னேன். போகும்போது என்னிடமிருந்த பாகவத புத்தகத்தைக் கடனாகப் பெற்றுச் சென்றார். பல வருடங்கள் ஆகிவிட்டன. புத்தகம் திரும்பி வந்து சேரவில்லை. இன்னும் அவர் படித்து முடிக்கவில்லை போலும்.''

—குரு கணேசன்.

---

வருகிறார்கள். அது தொழில் முறையினால் ஏற்பட்ட காதல். இருவருக்கும் சௌகரியமாக இருந்தது. மற்றப்படி ஒருத்தர் மீதொருவருக்குத் தீவிரமான காதல் என்று சொல்ல முடியாது. பெரும்பாலும் நண்பர்கள் மாதிரிதான் இருவரும் பழகி வந்தார்கள்.

''இன்று சாயந்தரம் அல்லிஸன் இங்கே வருகிறாள். உனக்குச் சம்மதம் தானே நான்ஸி?''

''ஊம்.... ஊம்....'' என்று இழுத்தாள் நான்ஸி.

''நான் வேண்டாமென்று சொன்னால் அவள் வராமலிருந்து விடப் போகிறாளா?' என்று நினைத்துக் கொண்டே சலிப்புடன் தன் படுக்கையில் சாய்ந்தாள். இப்போதைய சூழ்நிலையில் இன்னொருவர் வந்து சேருவது அவளுக்குப் பிடிக்கவில்லை. அதுவும் பெண். அவள் மனத்தில் அவநம்பிக்கையும் போட்டியுணர்ச்சியும் முளைத்தன.

ஆனால், எல்லாம் அல்லிஸனை பார்க்கும் வரையில் தான்.

இவ்வளவு அன்பும் பாசமும் உள்ளவளாக அல்லிஸன் இருப்பாள் என்று கொஞ்சம்கூட அவள் எதிர்பார்க்கவில்லை. உயரமாயும் அழகாயும் இருந்தாள் அல்லிஸன். கண்களில் கதகதப்பு மின்னியது. உடம்பின் ஒவ்வொரு நரம்பிலும் மென்மை தெரிந்தது. பளிச்சென்று பதில் சொன்னாள். பளீரென்று ஜோக்கடித்துச் சிரித்தாள். அதே சமயம் சீரியஸாகவும் அனுதாப உணர்ச்சியோடும் இருந்தாள்.

இருவரையும் அறிமுகப்படுத்தி விட்டுக் கொஞ்ச நேரம் இருந்த பிறகு பீட்டர் புறப்பட்டுப் போய்விட்டார்.

தாங்கள் தனிமையாயிருப்பது பற்றி நான்ஸிக்குச் சந்தோஷமாயிருந்தது.

ஆயிரம் விஷயங்களை அவள் அல்லிஸனுடன் பேசினாள்—விபத்து விஷயத்தைத் தவிர. பாஸ்டன் நகரைப் பற்றி, ஓவியங்களைப் பற்றி, குழந்தைகளைப் பற்றி, பெரியவர்களைப் பற்றி, வைத்தியக் கல்லூரியைப் பற்றி.

அல்லிஸன் தனது வாழ்க்கையைப் பற்றிச் சிறிது சொன்னாள். உடனே நான்ஸியும் வெகு நாளைக்கப்புறம் மனம் திறந்து தன் வாழ்க்கையைப் பற்றி அல்லிஸனிடம் சொன்னாள். மைக்கேலைத் தவிர வேறு யாரிடமும் இவ்வளவு ஒளிவு மறைவில்லாமல் அவள் பேசியது கிடையாது.

அனாதை விடுதியில் தான் வாழ்ந்த வாழ்க்கையைப் பற்றியும் அங்கே தனிமை தன்னை வாட்டியெடுத்ததைப் பற்றியும் பேசிக் கொண்டு வந்தவள், திடீரென்று தன்னையும் அறியாமல் அந்த விபத்தைப் பற்றியும் சொன்னாள்.

மைக்கேலின் அன்னையும் தானும் செய்து கொண்டுள்ள ஒப்பந்தத்தைப் பற்றி அவள் கூறிய போது, அல்லிஸனுக்குக் கோபம் வரவில்லை. அதிர்ச்சி அடையவில்லை. அனுதாபத்துடன் நான்ஸி

சொல்லுவதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாள்.

மரியமைப் பற்றிச் சொன்ன போது மனத்திலிருந்து பெரும பாரத்தை இறக்கிவிட்ட மாதிரி இருந்தது நான்ஸிக்கு.

''இதை. எப்படிச் சொல்வ தென்று எனக்கே தெரியவில்லை....'' என்று தயங்கித் தயங்கிப் பேசினாள். ''நான் அனாதை விடுதியில் வளர்ந்தவள். எனக்கென்று ஒரு குடும்பம் இருந்ததேயில்லை. மதர் சுபீரியர்தான் எனக்கு அம்மா மாதிரி. அத்தை மாதிரி இருந்தார். மரியமைப் பற்றி மைக்கேல் என்னிடம் எவ்வளவோ சொல்லியிருந்தார். அப்படியும் கூட அவரிடம் எனக்கு ஏனோ பாசம்தான் ஏற்பட்டிருந்தது. என்றைக்காவது ஒரு நாள் என்னை அவருக்குப் பிடித்துப் போகும் என்று கனவுகள் கண்டேன். என்றைக்காவது ஒரு நாள் அவரும் நானும் சினேகிதிகளாகி விடுவோம் என்று கிறுக்குத் தனமாய் நினைத்தேன்.'' சொல்லும் போதே நான்ஸியின் கண்களில் கண்ணீர் பளபளத்தது. அல்லிஸன் அதைக் காணா வண்ணம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''மரியம் உனக்கு அம்மாவாக விளங்குவாள் என்று நீ எதிர்பார்த்தாய் அல்லவா?''

''ஆமாம்.'' ஒரு வறட்டுச் சிரிப்புடன் தன் கண்ணீரை விழுங்கிக் கொண்டாள் நான்ஸி. ''நான் அப்படி நினைத்தது சுத்தப் பைத்தியக்காரத்தனம்!''

''இல்லை, நான்ஸி. நீ எதிர்பார்த்தது இயற்கைதான். குடும்பம் என்று எதுவும் இல்லாமல் வளர்ந்து விட்டவள் நீ. மைக்கேலிடம் காதல் ஏற்பட்டதும் அவன் அம்மாவை உன் அம்மாவாக நினைக்க ஆசைப் பட்டிருக்கிறாய். அதில் தவறேது மில்லை. அதனால்தான் மரியம் உன்னிடம் ஒப்பந்தம் செய்து கொண்டது உனக்கு ரொம்ப மனச் சங்கடமாக இருந்திருக்கும்.''

''ஆமாம். மரியமுக்கு என்னிடம மகா வெறுப்பு!''

''அவ்வளவு கடுமையாகச் சொல்லாதே, நான்ஸி. உனக்காக அவள் எவ்வளவு செய்திருக்கிறாள் பார். உன் முகம் அழகானபடி ஆக வேண்டுமென்று இங்கே பீட்டரிடம் உன்னை அனுப்பியிருக்கிறாளே!''

'அது மட்டுமா? இவ்வளவு ஆடம்பரமான சொகுசான வாழ்க்கையை உனக்கு அமைத்துத் தந்திருக்கிறாளே!' என்றும் அல்லிஸன் சொல்ல நினைத்தாள். ஆனால் சொல்லவில்லை.

''ஆனால் நான் மைக்கேலைத் துறந்துவிட வேண்டும் என்றுதானே இவ்வளவு செலவுகளும் செய்கிறாள். மைக்கேலின் வாழ்க்கையிலிருந்து என்னைத் துரத்தியடித்து விட்டாளே! அவளுடைய நிபந்தனையை ஏற்றுக் கொள்வதைத் தவிர எனக்கு வேறு வழி இருக்கவில்லை. அன்று நான் கிடந்த கோலமும், மரியம் வந்து பேசியதும்— அப்பப்பா! நினைக்கவே பயங்கரமான விஷயம்!'' மெல்லப் பெருமூச்சு விட்டாள் நான்ஸி. அவள் குரல் சற்றுச் சாந்தமடைந்தது. ''ஆனால் இந்த மாதிரி இழப்பு இதற்கு முன்னாலேயேும் நான் அனுபவித்திருக்கிறேன்.''

''உன் அப்பா, அம்மா இறந்து

நடுப்பக்க விடை:





பின்னி உருவாக்கிய 56 மீட்டர் அழகு சிந்தும் பட்டாடையில் துரௌபதி

**மகாபாரதத்திலும்,** அன்றாட வாழ்க்கையிலும்...




**து**ரௌபதி

வீரம், மதிப்பு தனிச்சிறப்பு
அறிவாற்றல், எல்லாம்
ஒருங்கிணைந்த தற்காலப் பெண்.
தொலைகாட்சிப் பெட்டியிலும் அவளைப் பார்க்கலாம். உங்கள்
கண்ணாடியிலும் அவளைப் பார்க்கலாம்.
பின்னி அளிக்கும் 'துரௌபதி' சேலைகள், பட்டு, பருத்தி
மற்றும் பிரத்யேகமான பாலியெஸ்டர் கலப்புகளிலும்
அழகான சேலைகள், மற்றும் உடை அலங்கார
துணிகள். உங்கள் விருப்பத்திற் கேற்ப
விதவிதமான வகைகள்.

துரௌபதி கலெக்ஷன்

# பின்னி

அழகு சேர்ப்பவர்கள்!

Interpub/BL/9/89/TAM

போனது உனக்கு நினைவிருக்கிறதா நான்ஸி?''

''மசமசவென்று ஞாபகம் இருக்கிறது. என் அம்மா இறந்தபோது நான் ரொம்பச் சின்னக் குழந்தை. அது நினைவேயில்லை. அம்மா என்னை அனாதை விடுதியில் கொண்டு போய் விட்டபோதுகூட நான் சிறுமிதான். அம்மா இறந்து விட்டாள் என்று அனாதை விடுதிக் காரர்கள் சொன்னது மட்டும் ஞாபகம் இருக்கிறது. அப்போது நான் அழுதேன். ஆனால் ஏன் அழுதேன் என்று எனக்கே தெரியாது. எல்லாரும் என்னை அனாதையாக விட்டு விட்டார்கள் என்கிற மாதிரி மனசில் கஷ்டம் ஏற்பட்டது.''

''இப்பக் கூட அப்படி இருக்கிறதா?'' என்று அல்லிஸன் கேட்டாள்.

''இனிமேல் யார் நம்மீது அக்கறை காட்டப் போகிறார்கள்





''அந்தப்புர ராணிகளின் ஸ்டாக் எடுக்கச் சொன்னேனே, ஏதாவது குறையுமா?''

''ஆமாம், மகாராஜா! ஒரு ஏணியையும் ஒரு ராணியையும் காணோம்!''

—நிசா

என்ற ஏக்கம் அடிக்கடி ஏற்படு வதுண்டு. இப்போது மரியமின் பணமும் டாக்டர் பீட்டரின் சினேகிதமும் ஓரளவு ஆறுதல்....''

அல்லிஸன் கேட்டாள்: ''மைக்கேலைப் பற்றி நீ நினைப்பது கிடையாதா, நான்ஸி? அவன் உன்னிடம் திரும்பி வருவானென்று நினைப்பதில்லையா?''

''பல சமயங்களில் மைக்கேலைப் பற்றி நினைக்கிறேன்.

ஆனால்....'' நான்ஸி மௌன மானாள்.

''ஆனால்?''

''ஏன் மைக்கேல் என்னை வந்து பார்க்கவில்லை? அதை நினைத்தால் தான் எனக்குக் குழப்பமாயிருக்கிறது. என் முகம் ரொம்பக் கோரமாயிருக்குமென்று நினைத்துப் பயந்திருப்பானோ என்னவோ. அல்லது என் முகத்தைப் பார்த்துத் தன் மனசு மாறிவிடும் என்று நினைத்திருப்பானோ? எதுவானாலும், எனக்குப் பிளாஸ்டிக் சர்ஜரி நடந்தது அவனுக்குத் தெரிந்திருக்கும். அந்தச் சிகிச்சையினால் என் முகம் குணமடைந்திருக்கும் என்றும் தெரிந்திருக்கும். அப்படியிருந்தும் ஏன் என்னைப் பார்க்க அவன் வரவில்லை? ஏன்? ஏன்?''

தன் கேள்விக்கு அவளிடம் பதில் கிடைக்குமா? அவளை ஆவலுடன் நோக்கினாள் நான்ஸி.

ஆனால் அல்லிஸன் அவளையே திருப்பிக் கேட்டாள்: ''உனக்கு என்ன தோன்றுகிறது?''

''அவன் அம்மா அவன் மனதை மாற்றியிருப்பாள் என்று தோன்றுகிறது. பிரம்மாண்டமான தொழில் சாம்ராஜ்யத்தை வளர்த்துக் காப்பாற்றி வருகிறாள் மரியம். மைக்கேல் அதை ஏற்றுக் கொண்டு குடும்ப கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று எதிர்பார்க்கிறாள். என்னைப் போன்ற ஏழைப் பெண்ணை, அனாதை விடுதியில் வளர்ந்த, படம் போடுகிற பெண்ணை மணப்பது மைக்கேலின் எதிர்காலத்தைப் பாதிக்கும் என்று எடுத்துச் சொல்லியிருப்பாள். அவனுடைய அந்தஸ்துக்கேற்ற பெரிய இடத்துப் பெண்ணை மணப்பதுதான் அவனுடைய முன்னேற்றத்துக்கு உதவும் என்று வற்புறுத்தியிருப்பாள்.''

''அம்மாவின் பேச்சை மைக் கேட்பான் என்றா நினைக்கிறாய்?''

''முன்பெல்லாம் கேட்டதில்லை. ஆனால் இப்போது... இப்போது....'' நான்ஸியின் குரல் தழதழத்தது.

(தொடரும்)

# ஷாக்! ஷாக்! ஷாக்!

**28.11.89** அன்று எங்கள் பில்டிங்கில் உள்ள ஒவ்வொரு ஃப்ளாட்டிலிருந்தும் 'ஆ! ஊ! ஐயோ..! அம்மா!' என்று ஒரே அலறல் சத்தம், எதைத் தொட்டாலும் ஷாக்!

அதற்கு முந்திய வாரத்தில் எங்கள் காலனியில் ஒரு சில வீடுகளில் மட்டும் மின்சாரம் இல்லை. எர்த் ஒயர் பழுதாகி உள்ளதை அறிந்து மின்சாரத் துறைக்கு 'போன்' பண்ணியும் ஆட்கள் வரவில்லை. எங்கள் பில்டிங் சொந்தக்காரர், எதிர் வீட்டில் இருந்து ஒயர் மூலம் கரண்ட் சப்ளை வாங்கி மின்சாரத் தொடர்பு ஏற்படுத்தி, எங்கள் கட்டிடத்திலும் விளக்கு எரிய வைத்தார்.

எதிர் வீட்டிலிருந்து எங்கள் வீட்டிற்கு கரண்ட் தொடர்பு கொண்ட ஒயர் மிகவும் பழசானதாக இருந்ததால், ஒயர் லீக்காகி இது போல் பில்டிங் மொத்தமும் 'ஷாக்' அடிக்கும் நிலைமை ஏற்பட்டு விட்டது!

—ஆர். பாலசரஸ்வதி,



# காதல் மேல் ஆணை

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

## 21

நான்ஸியின் மனத்தில் இருப்பதையெல்லாம் வெளியில் கொண்டு வந்துவிட வேண்டுமென்று அல்லிஸன் நினைத்தாள்.

''நான்ஸி, ஒரு பேச்சுக்குக் கேட்கிறேன். மைக்கேலை இழக்கிற மாதிரி நேர்ந்தது என்று வைத்துக் கொள். ரொம்ப இடிந்து போய் விடுவாயா?''

அவள் அப்பட்டமாக அப்படிக் கேட்டதும் நான்ஸி ஒரு வினாடி துடித்துப் போனாள். அவளால் பதில் கூற முடியவில்லை. அவள் சொல்லக் கூடியதையெல்லாம் அவள் கண்கள் பேசின.

''உனக்கு நேர்ந்திருக்கிற துன்பங்களைப் பங்கு கொள்ள அவனால் முடியவில்லையோ என்னவோ? சில ஆண்கள் அப்படியும் இருப்பதுண்டு, நான்ஸி. சில பேரை ரொம்ப தைரியசாலி என்று நாம் நினைத்திருப்போம். உண்மையில் அவர்கள் அப்படி இருப்பதில்லை.''

கொஞ்ச நேரம் நான்ஸி மௌனமாயிருந்தாள். பிறகு, ''எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரு வேளை என் சிகிச்சையெல்லாம் முடியட்டும், பிறகு வந்து சந்திக்கலாம் என்று மைக் எண்ணியிருக்கிறானோ என்னவோ?''

''அப்படியானால் உனக்கு வெறுப்பாயில்லை? உனக்கு எப்போது அவன் துணை தேவையோ அந்தச் சமயத்தில் வரவில்லையே என்று வெறுப்பு ஏற்படவில்லை?'' அல்லிஸன் விடாமல் துருவினாள்.

நான்ஸியிடமிருந்து ஒரு நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது. ''இருக்கலாம். எனக்குத் தெரியவில்லை. இதைப் பற்றிப் பல தடவை எண்ணிப் பார்த்து விட்டேன். பதில் தான் கிடைக்கவில்லை.''

''காலம் உனக்குப் பதில் சொல்லும், நான்ஸி,'' என்றாள் அல்லிஸன். ''உன் மனத்தை நீ அறிந்து கொள்ள வேண்டும். அதுதான் இப்போது முக்கியம். மனசுக்குள் நீ என்ன நினைக்கிறாய்? பழைய நீ அல்ல. புதிய நீ. புதிய நான்ஸி. உன்னைப் பற்றி நினைக்கையில் உனக்குப் பரிதாபம் ஏற்படுகிறதா? பயமாயிருக்கிறதா? இப்போது நம் தோற்றம் மாறி விட்டதே என்று உன் மீதே உனக்குக் கோபம் வருகிறதா? அல்லது அப்பாடா, பிழைத்தோம் என்று நிம்மதியாக இருக்கிறதா?''

''எல்லாவற்றிலும் கொஞ்சம் கொஞ்சம்,'' என்று நான்ஸி சொன்னதும் அல்லிஸன் சிரித்து விட்டாள். அவளுடன் சேர்ந்து நான்ஸியும் சிரித்தாள். பிறகு, ''உண்மையைச் சொல்லட்டுமா? இது ஒரு பயங்கரமான விஷயமாகத்தான் இருக்கிறது எனக்கு. இருபத்திரண்டு வருடமாகக் கண்ணாடியில் தெரிந்து

---

மூலம்: டேனியல் ஸ்டீல்

கொண்டிருந்த முகம் போய் இன்று வேறே யாருடைய முகமோ தெரிகிற தென்றால் பயங்கரமில்லாமல் வேறென்ன? அதனால்தான் இந்தப் புதிய நான்ஸியைப் பற்றி நான் நினைத்தே பார்ப்பதில்லை!'' என்றாள்.

''பின்னே வேறு எதை நினைக்கிறாய்?''

''மறைக்காமல் சொல்லட்டுமா?''

''சொல்லு.''

''மைக்கேல், மைக்கேல், மைக்கேல்தான். சில சமயங்களில் டாக்டர் பீட்டரைப் பற்றி நினைக்கிறேன்.''

பட்டென்று கேட்டாள் அல்லிஸன். ''பீட்டர் மீது உனக்குக் காதல் ஏற்பட்டிருக்கிறதா?'' இப்படிக் கேட்கிறோமே என்று அவள் கூச்சப்படவில்லை. இப்போது அவள் அல்லிஸன் என்ற வெறும் பெண்ணல்ல. டாக்டர் அல்லிஸன் என்ற மனத்தத்துவ டாக்டர்.

''இல்லை, இல்லை,'' என்று உடனே மறுத்தாள் நான்ஸி. ''பீட்டர் மீது எனக்கு எப்படிக் காதல் பிறக்க முடியும்? அவர் நல்ல மனிதர், நல்ல சினேகிதர். தந்தை முகம் தெரியாதவள் நான். பீட்டர் எனக்குத் தந்தை மாதிரி..... குழந்தைக்குப் பரிசுகள் வாங்கி வ்ருகிற அப்பா போல் அவர் எனக்கு ஏதாவது வாங்கிக் கொண்டு வந்து தருகிறார். அவ்வளவுதான்.... ஆனால் காதல் என்றால் அது மைக்கேல் மீதுதான்.''

''சரி, பொறுமையாய் இரு. என்னதான் நடக்கிறதென்று பார்ப்போம்.'' அல்லிஸன் தன் கைக் கடியாரத்தைப் பார்த்தாள். மணி ஏழாகியிருந்தது. மூன்று மணி நேரமாகப் பேசிக் கொண்டிருக்கிறோம்! ''நான்ஸி, இப்ப மணி என்ன ஆகிறது தெரியுமா?''

நான்ஸியும் தன் கைக் கடியாரத்தைப் பார்த்தாள். ''நேரம் போனதே தெரியவில்லை!'' புன்னகை



செய்து, ''நீங்கள் மறுபடி ஒரு தடவை வரணும், அல்லிஸன். வருவீர்களா? நீங்கள் ரொம்ப சுவாரஸ்யமான பெண்மணி என்று பீட்டர் சொல்லியிருந்தார். அது உண்மைதான்,'' என்றாள்.

''வருகிறேன். நாம் அடிக்கடி சந்தித்துப் பேச வேண்டுமென்பது தான் பீட்டரின் திட்டமும்.''

''இன்றைக்குப் பேசிக் கொண்டிருந்த மாதிரி நாம் பேச வேண்டும்,'' என்றாள் நான்ஸி.

''ஆனால் ஒவ்வொரு தடவையும் மூன்று மணி நேரம் செலவழிக்க என்னால் முடியாது,'' என்று அல்லிஸன் சொன்னதும் இருவரும் சிரித்தார்கள்.

வாசல் வரை வந்து நான்ஸி வழியனுப்பினாள்.

அல்லிஸன் அவள் கைகளை மெல்லப் பற்றிக் கொண்டாள். ''வாரத்துக்கு மூன்று முறை நான் வருவேன், நான்ஸி. ஒரு மணி நேரம் பேசலாம். அதாவது நான் மனத்தத்துவ டாக்டர் என்ற முறையிலும், நீ பேஷண்ட் என்ற முறையிலும். அதன் பிறகு நாம் சினேகிதிகளாகப் பொழுது போக்கலாம். என்ன, சரிதானா?''

''பிரமாதம்!'' என்றாள் நான்ஸி.

இருவரும் கை குலுக்கிவிட்டுப் பிரிந்தார்கள்.

அடுத்த சந்திப்புக்கு இன்னும் இரண்டு நாள் காத்திருக்க வேண்டுமே என்றிருந்தது நான்ஸிக்கு. அந்த ஏக்கத்தைப் பற்றி அவளுக்கே ஆச்சரியமாயிருந்தது.

இருபத்திரண்டு முடிந்து இருபத்து மூன்றாவது பிறந்த நாளும் தாண்டி விட்டது நான்ஸிக்கு.

டாக்டர் பீட்டரின் சிகிச்சையில் முகத்தின் கீழ்ப் பகுதி மொத்தமும் மாறிவிட்டது.

அன்று டாக்டர் அல்லிஸனின் மருத்துவ மனையில் காத்திருந்தாள் அவள். கணப்புக்கு அருகில், ஈஸிசேரில் சாய்ந்து கொண்டு அல்லிஸனின் ஹை ஹீல் காலணிகளின் டக் டக் ஓசையை எதிர்பார்த்து. அல்லிஸன் தன் நோயாளிகளைச் சந்திப்பது இந்த முன்னறையில்தான்.

குறித்த நேரத்துக்கு ஐந்து நிமிடம் முன்னதாகவே நான்ஸி வந்து விட்டாள்.

காலடி ஓசை கேட்டது. நான்ஸி நன்கு நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள். தன் முகத்தை அல்லிஸன் நன்கு பார்க்க வேண்டுமென்பது அவள் எண்ணம்.

''குட்மார்னிங்!'' அறை வாசலில் நின்ற அல்லிஸன் அவளைப் புன்னகையுடன் பார்த்தாள். ''நான்ஸி, இன்று நீ ரொம்ப அழகாக இருக்கிறாய்! இரு, வந்து உன் மோவாயைத் தொட்டுப் பார்க்கிறேன்.''

மெல்ல முன்னே வந்து,



''சாப்பிட்டுட்டுக் கை கழுவாமல் வேகமா நீங்க பாட்டுக்குப் போறீங்களே?''

''ஆபீசுக்கு நேரமாச்சு! பஸ்ஸிலே யார் சட்டையிலாவது துடைச்சுக்கறேன்!''

—எஸ். கிருஷ்ணா.

## இவர் எந்தக் கவிஞருடைய மகள்?



பன்னிரண்டு வயதான விசாலாட்சி, எட்டாவது படிக்கிறார். வழுவூர் ராமையா பிள்ளையின் மகன் சாம்ராட்டிடம் நடனம் கற்று வருகிறார். சினிமாவில் நடித்துச் சிறப்பாகப் பெயர் எடுக்க வேண்டும் என்பதே இவரது லட்சியமாம். அம்மா பெயர்: வள்ளியம்மை. அப்பா: கவிஞர் கண்ணதாசன்.

—பாமாஜி

படம்: பிரபுசங்கர்

---

குனிந்து நான்ஸியின் கீழ் முகத்தைக் கூர்ந்து கவனித்தாள் அல்லிஸன். வெற்றிப் புன்சிரிப்புடன் அவளுடைய கண்களைச் சந்தித்தாள்.

''எப்படி?'' என்று நான்ஸி கேட்டாள். ஆனால் அல்லிஸனின் முகத்தைப் பார்க்கும்போதே பதில் கிடைத்து விட்டது. டாக்டர் பீட்டரின் சாதனை, நான்ஸியைப் பற்றிய மகிழ்ச்சி இரண்டும் அந்த முகத்தில் பிரதிபலித்தன.

''நான்ஸி, நீ அழகாக இருக்கிறாய். ரொம்ப அழகாக இருக்கிறாய்.''

உண்மையிலேயே நான்ஸி வெகு அழகாக மாறிக் கொண்டிருந்தாள். மெல்லிய தோள்களின் மீது வனப்பும் இளமையுமாக எழுந்து நிற்கும் கழுத்து. மென்மையான மோவாய். மிருதுவான உணர்ச்சியூட்டும் உதடுகள். அவளுடைய குணத்துக்கும் சுபாவத்துக்கும் ஏற்ற மாதிரி நேர்த்தியான, பரிபூரணமான வனப்பு அவள் முகத்தில் உருவாகிக் கொண்டிருந்தது. டாக்டர் பீட்டர் தயாரித்த எண்ணற்ற படங்களும் சிற்பங்களும் வீணாகவில்லை.

''நான்ஸி! உனக்குக் கிடைத்திருக்கிற மாதிரியே எனக்கும் அழகான முகம் கிடைக்க வேண்டும்! ரொம்ப ஆசையாயிருக்கிறது!'' என்றாள் அல்லிஸன்.

நான்ஸி மனநிறைவுடன் ஈஸிசேரில் சாய்ந்து கொண்டாள். அவள் முகத்தின் மேற்பாதி இன்னும் கட்டுகளுக்குள் மறைந்துதான் இருந்தது. சில வாரங்களுக்கு முன்பு வாங்கியிருந்த பழுப்பு நிறத் தொப்பியை நெற்றியின் மேலே இழுத்து விட்டுக் கொண்டாள். தன் பழுப்பு நிற உடைக்கு அது நல்ல மாட்சாக இருக்கிறது என்று எண்ணிக் கொண்டாள். வாளிப்பான அழகிய உடல் தனக்கிருப்பதை அவள் உணர்ந்திருந்தாள். இப்போது வெகு அழகான

முகமும் கிடைத்து விட்டதால், தேவதை போல் ஜொலிப்போம் என்று அவளுக்கு நம்பிக்கை ஏற்பட்டது.

''பெரிசாய்க் கூச்சல் போட வேண்டும் போல எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது அல்லிஸன்,'' என்றாள். ''இத்தனைக்கும் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளும்போது என் முகத்தைப் பார்த்துக் கொள்கிற மாதிரியே தோன்றவில்லை. இருந்தாலும் இந்த முகம் எனக்குப் பிடித்து விட்டது.''

''அந்த மட்டில் சந்தோஷம் தான். ஆனால் இந்தப் புதிய முகம் உன்னுடைய பழைய முகம் போல இல்லையென்று உனக்குச் சங்கடமாக இருக்கிறதா?''

''அவ்வளவாக இல்லை. காரணம், என் முகம் மட்டும்தானே மாறப் போகிறது? உடம்பின் மற்றப் பகுதிகள் அப்படியேதானே இருக்கும்? அத்தோடு, என் வாயின் அமைப்பு அழகாயில்லை என்று நான் அடிக்கடி நினைப்பதுண்டு. இப்போது அது மாறி விட்டது.''

''நீ எவ்வளவுக்கெவ்வளவு மாறுகிறாயோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது நான்ஸி. உதாரணமாய், உன் குரலை மாற்றிக் கொள்ளலாம். இனிமையான, மென்மையான குரல் உனக்கு இருக்கிறது. அதை இன்னும் இனிமையாகச் செய்து கொள்ளலாம்.''

நான்ஸியின் முகம் உற்சாகத்தால் பளபளத்தது. ''ஆமாம், ஆமாம்! என்னுடைய பல தன்மைகளை மாற்றிக் கொள்ள முடியும். பாடலாம். பியானோ வாசிக்கலாம்....'' சென்ற நாலு மாத காலத்தில் இதைப் பற்றியெல்லாம் நாம் பேசாமலே இருந்து விட்டோமே என்று அவளுக்கு வருத்தமாகக் கூட இருந்தது.

''இன்னொன்று நான்ஸி. உன் நடை. அதைப் பற்றி நீ நினைத்துப் பார்த்ததுண்டா?''

# இவர் எப்படி செலவில்லாமல் முன்னேறினார்

கே. வி. ஆனந்த் ஆண்கள் வைஷ்ணவக் கல்லூரியில் பி.எஸ்ஸி, பௌதிகமும், லயோலா கல்லூரியில் 'விஷுவல் கம்யூனிகேஷ'னும் படித்து முடித்து விட்ட 23 வயது புகைப்படக்காரர்.

''போட்டோகிராபி ரொம்ப காஸ்ட்லி ஹாபி என்று சொல்வாங்க. எனக்கு அப்படியில்லை. நண்பர்கள் வீட்டு சுப நிகழ்ச்சிகள், கல்லூரியிலே நடக்கும் நிகழ்ச்சிகளுக்கு நானாகவே வலியச் சென்று, ''ஸார், நான் போட்டோ எடுக்கிறேன்,'' என்பேன். அவர்கள் ரோல் பிலிம் வாங்கவும், பிரிண்ட் போடவும் பணம் தந்து விடுவார்கள். ரோல் பிலிமில் கடைசி ஐந்து, பத்து ப்ரேம்களை மிச்சம் பிடிப்பேன். அவற்றை வைத்து எனக்குப் பிடித்த காட்சிகளாகப் போட்டோ எடுத்து விடுவேன். சில சமயம் மற்றவர்கள் செலவில் பிரிண்டும் போட்டுப் பார்த்து விடுவேன். இப்படித்தான் நான் முதலில் கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன்.''

—எஸ். வேதா.






ஸ்டெல்லா மேரி கல்லூரியில் பி.ஏ. (ஆங்கிலம்) படித்துவிட்டு, தபால் மூலம் எம்.ஏ. படித்துக் கொண்டிருக்கும் இருபத்து மூன்று வயது ஜெ. விஜயலட்சுமி வயலின் வாசிக்கக் கற்றுக் கொண்டது ஆறாம் வயதில். இதுவரை 200 முறை மேடைக் கச்சேரி.

ஜி. ஜே.ஆர். கிருஷ்ணனுக்குப் பதின்மூன்று வயதில் வயலின் அரங்கேற்றம்—அதுவும் அப்பாவுடன் கிருஷ்ணகான சபாவில்.

சுமார் 500 தடவைகள் அப்பாவுடனும், 150 முறை தனியாகவும் மேடையில் வயலின் வாசித்திருக்கிறார்.

அப்பா பெயர்: லால்குடி ஜெயராமன்.

தகவல்: ஹரி.

''இல்லையே! நான் நடக்கும் விதத்தை இன்னும் அழகாகச் செய்து கொள்ள முடியும் என்றா சொல்கிறீர்கள்? அட!'' மகிழ்ச்சியுடன் நான்ஸி கை கொட்டினாள் குழந்தை போல. ''ஏன் அல்லிஸன், நான் என் பெயரைக்கூட மாற்றிக் கொள்ளலாம் இல்லையா?''

''பொறு, பொறு!'' என்று அல்லிஸன் கையமர்த்தினாள். ''உன்னுடைய தன்மைகளை இன்னும் அபிவிருத்தி செய்து கொள்ள வேண்டுமே தவிர, ஏற்கெனவே இருந்தது எதையும் இழந்து விட்டோம் என்கிற எண்ணம் உனக்கு ஏற்பட்டு விடக் கூடாது! அது ரொம்ப முக்கியம், நான்ஸி!''

ஆனால் நான்ஸி தனது உற்சாக உலகத்திலேயே இருந்தாள். ''என் குரலை மாற்றிக் கொள்ளப் போகிறேன்—இப்படி!'' என்றவள் கரகரவென்று ஆண்பிள்ளைக் குரலில் கூவினாள்.

''இரு, இரு! டாக்டர் பீட்டர் இந்தக் குரலைக் கேட்டால் போச்சு. உனக்கு ஒரு தாடியும் மீசையும் வாங்கி வந்து பரிசு தந்துவிடுவார்!''

இருவரும் கடகடவென்று சிரித்துக் கொண்டிருந்த சமயம், அல்லிஸன் சட்டென்று சொன்னாள்:

''நான்ஸி, நீ எல்லா விஷயத்திலும் மாறப் போகிறாய், பார்! புதிய குரல், புதிய நடை, புதிய முகம், புதிய பெயர்—எல்லாவற்றிலும் புதியவளாக ஆகிவிடுவாய். ஆனால் ஒன்றில் மட்டும் பழையபடியே இருக்கிறாய்! அதிலும் நீ மாற வேண்டாமா?''

அவள் என்ன சொல்ல வருகிறாள் என்பது நான்ஸிக்குப் புரிந்தது. ''எ... எதைச் சொல்கிறீர்கள்?'' என்றாள் குரல் நடுங்க.

''மைக்கேலின் மீதுள்ள காதல். அதுவும் மாற வேண்டும், நான்ஸி,'' என்றாள் அல்லிஸன்.

(தொடரும்)




## 22

மைக்கேலின் மீதுள்ள காதலை விட்டுவிட வேண்டும் என்று அல்லிஸன் சொன்னதும் நான்ஸிக்குத் தூக்கி வாரிப் போட்டது. என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் அந்த அறையின் நாலு பக்கங்களையும் கண்களைச் சுழற்றினாள்.

கணப்பிலிருந்து இதமான சூடு பரவிக் கொண்டிருந்தது. காலுக்குக் கீழே விரிப்பு மெத்தென்றிருந்தது. ஜன்னலுக்கான திரைச் சீலைகளில் சின்னஞ் சிறிய லேஸ் வேலைப்பாடுகள் காணப்பட்டன. அறையின் இன்னொரு கோடியில் அலமாரி. அதில் புத்தகங்கள் சீராக அடுக்கப்பட்டிருந்தன. சுவரில் இரண்டொரு ஓவியங்கள் மாட்டப்பட்டிருந்தன.

அவளுடைய மனத்தின் வேதனைகளை அல்லிஸன் ஊகித்துக் கொண்டாள். கொஞ்சம் பேச்சை மாற்றலாமென்று, ''ஏன் நான்ஸி, எங்காவது வெளியூருக்குப் போய் வரலாமே நீ? விடுமுறையை உல்லாசமாகக் கழிக்கலாமே?'' என்றாள். நான்ஸியிடமிருந்து பதில் வராததால், ''வெளியூர் போய் வருவதைப் பற்றி உனக்குப் பயமாயிருக்கிறதா?'' என்று கேட்டாள்.

''இல்லை.''

''வருத்தமாக இருக்கிறதா?''

நான்ஸி சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து அவளைக் கூர்ந்து பார்த்தாள். ''என் மனசில் என்ன இருக்கிறதென்று சொல்லட்டுமா? ஒரே ஆத்திரமாயிருக்கிறது. படு ஆத்திரமாயிருக்கிறது. கொலை ஆத்திரமாயிருக்கிறது.''

''யார் மீது?''

மீண்டும் நாற்காலியில் சாய்ந்து கொண்டாள். இப்போது அவள் குரல் சாந்தமடைந்திருந்தது. சோகம் நிரம்பியிருந்தது. ''வேறு யாரைப் பற்றி? மைக்கேலைப் பற்றித்தான். நான் எங்கிருக்கிறேன், என்ன செய்கிறேன் என்று இந்நேரம் அவனுக்குத் தெரிந்திருக்கும். ஏழு மாதத்துக்கு மேலாகிறது. அவன் வருவான் வருவான் என்று எதிர்பார்த்துக்

மூலம்:
டானியல் ஸ்டீல்

தமிழில்: ரா.கி. ரங்கராஜன்



கொண்டேயிருக்கிறேன். வரக் காணோமே?'' சொல்லும்போதே கண்களை மூடிக்கொண்டு, பெருகி வரும் கண்ணீரை அடக்கிக் கொண்டாள்.

அல்லிஸன் மென்மையாகக் கேட்டாள்: ''மைக்கேல் மீது மட்டும் தான் ஆத்திரம் வருகிறதா? உன் மீதே வரவில்லையா?''

''வருகிறது.''

''எதனால்?''

''மைக்கேலின் அம்மாவிடம் இப்படி ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டோமே என்றுதான். சே! என்னையே நான் விற்றுக் கொண்டு விட்டேன்!''

''விற்றுக் கொண்டாயா?''

''ஆமாம்! இந்தப் புதிய மோவாயை, இந்தப் புதிய முகத்தைப் பெறுவதற்காக என்னையே விற்றுக் கொண்டேன்!''

''இல்லை, நான்ஸி. எனக்கு அப்படித் தோன்றவில்லை. நீ அந்த ஒப்பந்தத்துக்கு இணங்கியது ஒரு புதிய முகத்துக்காக அல்ல. ஒரு புதிய வாழ்க்கைக்காக. இல்லாவிட்டால் இந்த இளம் வயதில் உன் வாழ்க் கையே அழிந்து போயிருக்குமே?'' நான்ஸியின் அருகில் அமர்ந்து அவள் தலையை வருடினாள் அல்லிஸன். ''புதிய வாழ்க்கை என்றால், பழைய வாழ்க்கையைச் சேர்ந்த எல்லாவற் றையும் நீ விட்டுவிட வேண்டாமா நான்ஸி?—மைக்கேல் உள்பட.''

''மாட்டேன்! மாட்டேன் என்னால் முடியாது!'' என் முகத்தைப் பொத்திக் கொண் விம்மினாள் நான்ஸி. ''மைக்கே இனிமேல் என்னிடம் வர மாட்டான அல்லிஸன்? வரவே மாட்டானா?''

''உன் கேள்விக்கு மைக்கே தான் பதில் சொல்ல வேண்டும்,



''மனிதச் சங்கிலி போராட்டத்திலே நீ ஏன் கலந்துக்கலே?''

''ஹி... ஹி....! எனக்கு அடிக்கடி முதுகு அரிக்கும்!''

—எஸ். மோகன்

என்றாள் அல்லிஸன். இந்த வாரம் விடுமுறைக்காக அவள் மலைப் பிரதேசத்துக்குச் செல்வதாக இருந்தது. டாக்டர் பீட்டரும் போகப் போகிறார். இரண்டு நர்ஸ்களும் ஏற்கெனவே வெளியூர் சென்று விட்டார்கள் கிறிஸ்துமசுக்காக. நான்ஸியைத் தனியே விட்டுச் செல்ல லாமா, கூடாதா என்று உள்ளூரப் பயமாயிருந்தது அவளுக்கு. பிரக்தியினால் விபரீதமான ண்ணங்கள் தோன்றி விடுமோ அவள் மனத்தில் என்று கூட அஞ்சினாள். ஆனால் நான்ஸியிடம் 'பச்சுக் கொடுத்த வரையில், அவள் வெளிப் பார்வைக்குப் பலவீனமாய்த் தெரிகிறாளே தவிர, உள்ளுக்குள் அவள் மனம் உறுதியோடிருப்பதை றிந்தாள்.

''நான்ஸி, உனக்கு நண்பர்கள் நிறையத் தேவை. நீ வெளியே சென்று பலு பேருடன் பேசிப் பழக வண்டும்.''

''இந்த முகத்துடனா!'' ன்ஸி தன் முகத்தை மூடிக் காண்டிருந்த தொப்பியை கற்றினாள். பெரும் பகுதி கட்டுப் பாடப்பட்டிருந்தது. ''ஜனங்கள் ன்னைக் கண்டு அலறி ஓடுவார்கள்! அவ்வளவு பயங்கரம்!''

''இல்லை, நான்ஸி. அப்படியொன்றும் பயங்கரமில்லை. ஏதோ காயம் ஏற்பட்டு, கட்டுப் போட்டிருக்கிறாய் என்று எல்லாரும் புரிந்து கொள்வார்கள்.''

''இருக்கலாம். ஆனால் இப்போதைக்கு எனக்கு நண்பர்கள் தேவையில்லை. டாக்டர் பீட்டர் கொடுத்த காமெராவே போதும். பொழுது நன்றாகப் போகிறது,'' என்றவள், ''பார்த்தீர்களா? மறந்தே போனேன். உங்களுக்காக ஒன்று கொண்டு வந்திருக்கிறேன்,'' என்று முன்புறம் சென்று ஓர் அட்டைப் பெட்டியை எடுத்துக் கொண்டு திரும்பினாள். காகிதங்களைப் பிரித்தாள்.

அல்லிஸனின் போட்டோ!

மேஜை மீது அதை வைத்து. ''என் அன்பான கிறிஸ்துமஸ் பரிசு. எப்படி இருக்கிறது!'' என்றாள்.

அல்லிஸன் அசந்து விட்டாள்.

மொட்டை மாடியில், சாயங் கால சூரியனின் ஒளி முகத்தில் பளபளக்க, தென்றல் காற்றில் முடி கள் சிலுசிலுக்க, ஆழ்ந்த பார்வை யுடன்...

''நான்ஸி! எப்போது இதை எடுத்தாய்?''

''நீங்கள் பார்க்காத சமயத்தில்!'' என்று நான்ஸி சிரித் தாள்.

''அற்புதமான கிறிஸ்துமஸ் பரிசு, நான்ஸி!''

நான்ஸி அவளிடம் விடை பெற்றாள். ''விடுமுறையை ஜோராகக் கழித்துவிட்டு வாருங்கள். பனிச் சறுக்கு விளையாடப் போவீர் கள் இல்லையா? எனக்கு என்ன கொண்டு வருவீர்கள்?''

''கை நிறையப் பனிக் கட்டி!''

இருவரும் சிரித்தார்கள்.

இந்தப் பெண் இனிமேல் தேறி

விடுவாள் என்று அல்லிஸனுக்கு நம்பிக்கை ஏற்பட்டது.

ஆறேழு மணி நேரமாக, நியூயார்க் நகரத்தின் வீதிகளெங்கும் பனி கொட்டிக் கொண்டிருந்தது. ஆனால் அது எதுவும் மைக்கேலுக்குத் தெரியாது. வழக்கம் போல் தன் வேலையில் மூழ்கிக் கிடந்தான். காலை ஆறு மணிக்கு வந்தவன். இப்போது ஐந்தாகப் போகிறது. அவன் தலை நிமிரவேயில்லை. செக்ரட்டரி கொண்டு வந்து நீட்டிய காகிதங்களில் கையெழுத்துப் போட்டு அனுப்பிக் கொண்டிருந்தான். அப்பாடா! ஒரு வழியாய்க் கான்ஸாஸ் ஸிடி வேலை முடிந்தது. ஹூஸ்டன் கட்டிடு வேலையும் சீக்கிரம் முடிந்து விடும். கோடைக் காலம் வந்தால் சான்பிரான்ஸிஸ்கோ வேலையைக் கவனிக்க வேண்டும். அது ஒரு பெரிய தலைவலி. இருக்கட்டும். அது வேண்டும், இது வேண்டும் என்ற கோரிக்கைகள், காண்ட்ராக்டுகள், பிரசினைகள், மீட்டிங்குகள்— இடைவிடாமல் தலைவலி இருக்கிறதோ நாம் பிழைத்தோமா என்று மைக்கேல் எண்ணிக்கொண்டான்.

டெலிபோன் மணியடித்தது. ''சார், வெளியூரிலிருந்து ஜார்ஜ் பேசுகிறார்.'' என்றார் டெலிபோன் ஆபரேட்டர்.

''மைக் பேசுகிறேன். என்ன ஜார்ஜ், என்ன விஷயம்?''

ஜார்ஜ் வெளியூரிலிருந்து பேசினார். ''மைக்கேல், அம்மா ஒரு மீட்டிங்கில் இருக்கிறார். அதனால் என்னைப் பேசச் சொன்னார். இன்றிரவு நாங்கள் வந்து விடுகிறோம்— அதாவது பனி பெய்யாமல் இருந்தால். பனி பெய்தால் நாளைக்கு வருகிறோம்.''

''அங்கே பனி பெய்கிறதா என்ன?'' என்று மைக்கேல் ஆச்சரியப் பட்டான்.

''இங்கேயா... இங்கே ஒன்றுமில்லை... அங்கே நியூயார்க்கில் கடுமையான பனிப் புயல் அடிக்கிறதாமே? டி.வி.யில் அறிவித்தார்களே?''

மைக்கேல் எழுந்து போய் ஜன்னலுக்கு வெளியே பார்த்து விட்டுத் திரும்பினான். ''ஆமாம், கடுமையான பனி தான். ஸாரி, நான் கவனிக்கவில்லை.''

'சே! என்ன பிள்ளை இவன்!' என்று சலித்துக் கொண்டார் ஜார்ஜ். வேலை வேலை என்று உயிரை விட்டுக் கொண்டிருக்கிறான் எப்போதும். அசல் அம்மாவை போலவே. தங்களையும் வருத்திக் கொண்டு, தங்கள் மீது அன்பு செலுத்துவோரையும் வருத்திக் கொண்டு...

''சரி, பரவாயில்லை. நாளை ராத்திரி கிறிஸ்துமஸ் டின்னருக்குக் கட்டாயம் நீங்கள் வீட்டுக்கு வர வேண்டும். உங்கள் அம்மா சொல்லச் சொன்னார்கள்,'' என்றார் ஜார்ஜ். ''சிநேகிதர்கள் சில பேர் டின்னருக்கு வருகிறார்களாம். நீங்களும் அப்போது இருக்க வேண்டுமென்று சொல்லச் சொன்னார்கள்.''

மைக்கேல் அலுப்புடன் ஒரு



## துணையாவது! மந்திரியாவது!

டி. ஆர். பாலுவுக்கு மத்திய அரசில் துணை மந்திரி பதவி தரப்படும் என்பதெல்லாம் வெறும் வதந்தி தானாம். முதல்வருக்கு நெருக்கமான 'செல்வப்' பிரமுகர் ஒருவரிடம் இது பற்றிக் கட்சிக்காரர்கள் சிலர் கேட்க, ''நீங்க வேறு! மாறனுக்கு பதவி வாங்கறதுக்குள்ளாகவே இங்க நம்ம மரியாதை ஆட்டம் கண்டிருச்சு. இதில் இன்னொரு ஆளுக்கு மந்திரி பதவியா.... நமக்கே அது நியாயமாப் படுதா?'' என்றாராம்.

—விக்ரம் சிங்

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

ள் குழந்தைக்கு நான்காம்
ந்திலிருந்தே பாலோடு திட
வும் தேவை. அப்போது
லாக் அனுகூலம் அளியுங்கள்.

**ஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு
ஸெரிலாக் ஊட்டும் போதும்.
சத்து. கார்போஹைட்ரேட்.
ழப்பு. வைட்டமின், மற்றும்
பொருட்கள் ஆகிய எல்லா
ஷாக்குச் சத்துக்களும் சரியான
த்தில் உங்கள் குழந்தைக்குக்
க்கிறது.

**அனுகூலம்:** ஸெரிலாக்
யில் குழந்தைகளுக்குக்
ாளே ஆசை.

**ிப்பதில் அனுகூலம்:**
லாக் ஏற்கனவே
ாகக்கப்பட்டது; பாலும்
ரையும் கலந்தது. காய்ச்சி
நீரில் கலந்தாலே போதும்

**தெடுக்க அனுகூலம்:**
ாது ஸெரிலாக், மூன்று
வேறு வகைகளில்!

*ாரமான முறையில்*
*ிக்கவும், சரியான*
*த்தில் போஷாக்கு*
*க்கவும் டின்னில்*
*பட்டுள்ள குறிப்புகளை*
*செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து

4 மாதங்களிலிருந்து

6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




/FSL/5112/TAM

**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

பெருமூச்சை வெளியே விட்டான்.

சில சினேகிதர்களாம், சில சினேகிதர்கள்! இருபது முப்பது பேர் இருப்பார்கள். அவர்களை அவனுக்குத் தெரியவே தெரியாது. அப்படியே தெரிந்திருந்தாலும் பிடிக்கவே பிடிக்காது.

அவர்களுடன் கூட நிச்சயமாய் ஒரு பெண்ணும் இருப்பாள். பெரிய இடத்துப் பெண். கல்யாணமாகாதவள். அவனுக்கு ஏற்றவள்...

கிறிஸ்துமஸையே வெறுக்கும்படி பண்ணி விடுவார்கள்...

''ஸாரி, மிஸ்டர் ஜார்ஜ். நான் வருகிற மாதிரி இருக்காது. அம்மாவிடம் நான் மன்னிப்புக் கேட்டதாகச் சொல்லுங்கள். வேறே முக்கியமான வேலை இருக்கிறது.''

''என்ன வேலை?'' ஜார்ஜ் திகைத்தார்.

''போன வாரமே அம்மாவிடம் சொல்ல நினைத்திருந்தேன். மறந்துவிட்டது. அந்த ஹூஸ்டன் காண்டிராக்டுதான்—முடிக்க வேண்டுமென்று பார்க்கிறேன். முடியமாட்டேன் என்கிறது. அம்மாவிடம் சொல்லுங்கள். புரிந்து கொள்வாள்.'' ஹூஸ்டன் வேலை மிக முக்கியமானது. அதை அவன் ரொம்பத் திறமையாகக் கவனித்துக் கொண்டிருந்தான். அது அம்மாவுக்கும் தெரியும். அதைச் சொல்லி அம்மாவை மடக்கிவிட முடியும்.

''நல்லது. அம்மாவுக்குக் கொஞ்சம் ஏமாற்றமாகத்தான் இருக்கும். பரவாயில்லை. நீங்கள் வேலையைக் கவனிக்கிறீர்கள் என்று சந்தோஷப்படுவார்,'' என்றார் ஜார்ஜ். ''ஆனால் கிறிஸ்துமஸ் பண்டிகையை நீங்கள்...''

''அதெல்லாம் பிரமாதமாய்க் கொண்டாடப் பிளான் போட்டிருக்கிறேன். அம்மாவை நான் கேட்டதாகச் சொல்லுங்கள். நாளைக்குப் போன் செய்கிறேன்.''

''ஓகே. கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கள்,'' என்று சொல்லிப் போனை வைத்தார் ஜார்ஜ். அவர் முகத்தில் புன்னகையும் மனத்தில் திருப்தியும் நிறைந்தன. 'கிறிஸ்துமஸைப் பிரமாதமாய்க் கொண்டாடப் போகிறேன்' என்று மைக்கேல் சொன்னதைக் கேட்டுச் சந்தோஷப்பட்டார். அவன் கொஞ்ச நாளாகக் கிறுக்குத்தனமான வாழ்க்கை நடத்தி வருகிறான். இனி அது கொஞ்சம் மாறும். கொண்டாட்டம், கேளிக்கை என்று அவன் மனம் மாறினால் நல்லதுதான். சின்னப் பையன். வாழ்க்கையை அனுபவிக்கட்டும்...

இங்கே மைக்கேலின் அறையில் டெலிபோன் இடைவிடாமல் அடித்துக் கொண்டிருந்தது. ஒருவர் மாற்றி ஒருவராக அவனுக்குக் கிறிஸ்துமஸ் வாழ்த்துச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

''சே! கிறிஸ்துமஸாம் கிறிஸ்துமஸ்! பாழாய்ப் போக!'' என்று வாய் விட்டுத் திட்டிய வண்ணம் போனை வைத்தான்.

'களுக்' என்று வாசற்படியில் ஒரு சிரிப்புச் சத்தம் கேட்டது. நிமிர்ந்தான்.

ஓர் இளம் பெண் ஓவியமாக நின்றிருந்தாள்.

(தொடரும்)



# 23

தமிழில்:

## காதல் மேல் ஆணை

அறை வாசலில் அந்தச் சிரிப்பு ஓசையைக் கேட்டதும் மைக்கேல் ஆச்சரியத்துடன் நிமிர்ந்து பார்த்தான். 'கிறிஸ்துமசாம் கிறிஸ்துமஸ்!' என்று எரிச்சலுடன் தான் சொன்னதைக் கேட்டுத்தான் அவள் சிரித்திருக்கிறாள் என்பது புரிந்தது.

நீலக் கண்கள்; தோளில் வழிந்து விழும் சுருட்டை முடி; க்ரீம் நிற மேனி.

ஜினேகிதன் பென் தன் கீழே டிசைன் உதவியாளராகப் புதிதாய் அமர்த்தியிருந்த பெண் அவள் என்று தெரிந்தது. ஆனால் அவளை இதுவரை அவன் நன்றாகப் பார்த்தது கிடையாது. இவளை மட்டுமல்ல— மேஜைமீது அவன் கையெழுத்துக்காகக் காத்திருக்கும காகிதங்களைத் தவிர எதைத்தான் மைக்கேல் கவனித்திருக்கிறான்!

''கிறிஸ்துமஸ வாழ்த்து எல்லாருக்கும் இப்படித்தான் சொல்வீர்களா?'' என்று சிரித்துக்கொண்டே அவள் உள்ளே வந்தாள்.

''ரொம்ப வேண்டியவர்களுக்கு மட்டும்தான் அப்படி!'' புன்னகை செய்தான் மைக்கேல். எதற்கு அவள் வந்திருக்கிறாள் என்று அவனுக்குத் தெரியவில்லை. நாம் கூப்பிட்டனுப்பவில்லையே என்று எண்ணிக் கொண்டான். பென்னின் உதவியாளான இவளுக்கும் நமக்கும் நேரடியான தொடர்ப்பு எதுவும் கிடையாதே?



''நான் ஏதாவது செய்ய வேண்டுமா மிஸ்...'' என்றவன் அவள் பெயர் மறந்து விட்டதால் அப்படியே நிறுத்திக் கொண்டு அவளை நோக்கினான்.

''வெண்டி,'' என்று தன் பெயரைத் தெரிவித்தாள் அவள். ''உங்களுக்குக் கிறிஸ்துமஸ் வாழ்த்துச் சொல்லலாமென்று வந்தேன்.''

சரிதான், காக்கா போலிருக்கிறது. தனக்குள் சிரித்துக்கொண்டு, ''உட்கார்,'' என்றான். பிறகு, ''நான் ஒரு உம்மணா மூஞ்சி என்று உனக்குத் தெரிந்திருக்குமே?'' என்றான் வேடிக்கையாக.

''ஆமாமாம்! ஆபீசில் நேற்றிரவு கிறிஸ்துமஸ் கொண்டாட்டம் நடந்தது. பிறகு டின்னர் இருந்தது. எதற்கும் நீங்கள் வராததிலிருந்தே புரிந்தது!'' என்றாள் வெண்டி புன்னகையுடன். ''நீங்கள் கடும் உழைப்பாளி என்று எல்லாரும் சொல்கிறார்கள்.''

''உழைப்பது உடம்புக்கு நல்லது.''

''உடம்புக்கு நல்லது இன்னும் எவ்வளவோ விஷயங்கள் இருக்கிறது.'' காலை ஒன்றன் மீதொன்றாகப் போட்டுக் கொண்டாள் அவள். அந்தக் கால்களின் அழகை ஒரு வினாடி மைக்கேல் கவனித்தான். மறு வினாடி அந்த எண்ணத்தை

மூலம்:
டானியல் ஸ்டீல்

ரா.கி.ரங்கராஜன்

மறந்தான். அந்தக் கார் விபத்துக்குப் பிறகு இம் மாதிரியான எண்ணங்களை அவன் நினைப்பது கிடையாது.

''எனக்குச் சம்பள உயர்வு கிடைத்திருக்கிறது, அதற்கும் தாங்க்ஸ் சொல்லிவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்,'' என்றாள் அவள்.

புன்னகை செய்யும்போது அவள் பற்கள் முத்துப் போல் [illegible]ிடுவதைக் கண்டான் மைக்கேல். இந்தப் பெண் எதற்காகத்தான் வந்திருக்கிறாள்? சம்பள உயர்வு போதாது என்று சொல்வதற்காகவா? போனஸ் கேட்பதற்காகவா?

''நீ தாங்க்ஸ் சொல்ல வேண்டியது பென்னுக்குத்தான். உன் சம்பள உயர்வுக்கும் எனக்கும் சம்பந்தம் கிடையாது,'' என்றான்.

''அப்படியா?'' என்றவாறு அவள் எழுந்து கொண்டாள். இவனிடம் பேசுவதில் எந்த அர்த்தமும் இல்லையென்று தோன்றியது. ஜன்னல் வழியே வெளியே பார்த்தாள். ஜன்னல் விளிம்பில் ஐந்தாறு அங்குல உயரத்துக்குப் பனி உறைந்திருந்தது.

''இந்த வருடம் கிறிஸ்து ம[illegible]க்குப் பனி கொட்டப் போகிறது. இன்றிரவு வீட்டுக்குப் போய்ச் சேருவதே பெரிய கஷ்டமாக இருக்கும் என்று தோன்றுகிறது!'' என்றாள்.

''உண்மை தான். நான் வீட்டுக்குப் போகப் போவதில்லை,'' என்றவன் சிரிப்புடன், ''என்னை ஆபீசில் சங்கிலி போட்டுக் கட்டி வைப்பதற்காகவே அதோ அதை வைத்திருக்கிறார்கள்!'' என்று அறையின் ஓரமாக இருந்த நீண்ட சோபாவைச் சுட்டிக் காட்டினான்.

'உங்களுக்கு நீங்களேதான் சங்கிலி போட்டுக் கட்டிக் கொண்டிருக்கிறீர்கள்!' என்று வெண்டி நினைத்தாள். சொல்லவில்லை. ''மெர்ரி கிறிஸ்துமஸ்!'' என்று வாழ்த்துச் சொல்லிவிட்டுப் புறப்பட்டு விட்டாள்.

மைக்கேல் திரும்பி உட்கார்ந்தான். மேஜை மீதிருந்த கடிதங்களில் கையெழுத்திட்டான். பிறகு வெண்டியிடம் சொன்னது போலவே





## தாடியா? மீசையா?

எனது மைத்துனன் நெல்லையிலிருந்து சென்னைக்குப் பஸ்ஸில் வந்திருந்தான். என் அண்ணன் அவனை வரவேற்றுப் பிறகு கேட்டார்: ‘வந்தது தாடிக்காரர் தயவிலா, அல்லது மீசைக்காரர் தயவிலா?’

எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அவர் விளக்கிய பிறகுதான் தெரிந்தது. தாடிக்காரர் என்றால் திருவள்ளுவர் போக்குவரத்துக் கழகம், மீசைக்காரர் என்றால் கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகம்!

—இரா. வேங்கடசுப்ரமணியன்

---

அந்தச் சோபாவில் போய்ப் படுத்துக் கொண்டான்.

அன்று ராத்திரி மட்டுமல்ல, மறு நாள் ராத்திரியும்கூட அங்கேயே பொழுது கழிந்தது. அதிலே அவனுக்குச் சந்தோஷமே ஏற்பட்டது.

அந்த வருடம் கிறிஸ்துமஸ் பண்டிகை சனி ஞாயிறில் வந்துவிட்டதால் யாருமே அவன் எங்கே போனானென்று தேடவில்லை. ஆபீசைக் கூட்டுகிற ஆயாக்கள் உள்பட எல்லாருமே லீவில் போய்விட்டார்கள். வெள்ளிக்கிழமை முதல் ஞாயிற்றுக்கிழமை இரவு வரை மைக்கேல் ஆபீஸிலேயே அடைந்து கிடந்தது வாட்ச்மேனுக்கு மட்டுமே தெரிந்திருந்தது.

ஒரு வழியாய்க் கிறிஸ்துமஸ் கொண்டாட்டங்கள் முடிந்த பின்னர் தன்னுடைய சூனியமான ஜாகைக்குத் திரும்பினான் மைக்கேல். இனி யாரும் வர மாட்டார்கள் என்று நினைத்துக் கொண்டான்.

கிறிஸ்துமஸ், அதைப் பற்றிய நினைவுகள் எல்லாம் போயாகிவிட்டன.

கதவுக்கு வெளியே ஒரு பெரிய பூங்கொத்து கிடந்தது. அம்மா அனுப்பியது.

எடுத்துப் பார்த்துவிட்டுக் குப்பைத் தொட்டியில் போட்டான்.

சான்பிரான்ஸிஸ்கோவில் நான்ஸி, மைக்கேலைக் காட்டிலும் நன்றாகவே கிறிஸ்துமஸ் பண்டிகையைக் கழித்தாள். ஆனால் அவளும் தனிமையில்தான் இருந்தாள். சர்ச்சுக்குப் போய்விட்டுத் திரும்பி, தானே ஒரு கேக் தயாரித்துச் சாப்பிட்டு, மொட்டை மாடியில் கிறிஸ்துமஸ் பாட்டுக்கள் பாடினாள். கிறிஸ்துமஸைப் பற்றி நினைக்கவே வேண்டாம் என்றுதான் அவள் விரும்பினாள். ஆனால் ஊரெங்கும் நிரம்பியிருந்த கோலாகலத்தை எப்படிப் பாராத மாதிரி இருக்க முடியும்? நல்ல வேளை, இங்கே அன்னியர்களின் நடுவே கிறிஸ்துமஸ் கொண்டாடுவது கொஞ்சம் ஆறுதலாயிருந்தது.

கிறிஸ்துமசுக்காக இரண்டு பரிசுகள் வந்திருந்தன. ஒன்று, டாக்டர் பீட்டர் கொடுத்த அழகான கைப் பை. இன்னொன்று அல்லிஸன் தந்த ஒரு ஹாஸ்யப் புத்தகம்.

தின்பண்டங்களைச் சுவைத்து முடித்த பின்னர், கையில் அந்தப் புத்தகத்துடன் ஒரு நாற்காலியில் சுருட்டி மடக்கிக் கொண்டாள்.

படித்து முடித்தபோது மணி ஆறாகியிருந்தது. கால்களை நீட்டிச் சோம்பல் முறித்துக் கொண்டாள். எங்காவது வெளியில் போய் வரலாம் போலிருந்தது. கோட்டையும் தொப்பியையும் அணிந்து கொண்டாள். காமெராவைத் தோளில் மாட்டிக் கொண்டாள்.

இப்போதெல்லாம் வெளியே போகவோ, ஓட்டலில் வேண்டியதை வரவழைத்துச் சாப்பிடவோ நான்ஸி தயங்குவதில்லை. தலையைத் தாழ்த்திக் கொண்டு முடியைப் புரள விட்டு முகத்தில் பெரும்பகுதியை மறைத்துக் கொள்வதால் அவளைப் பார்த்து யாரும் திடுக்கிடுவது



## ஏற்கனவே ஒரு பெண்ணால்...



தான் துணைத் தலைவராக இருக்கும் திட்டக் கமிஷனில் ஒரு பெண்ணை உறுப்பினராகச் சேர்த்திருப்பதாக தேவிலாலிடம் ஹெக்டே சொன்னார். தேவிலாலின் பதில்:

''ஏற்கெனவே பெண்களால்தான் உங்கள் பெயர் கெட்டது. அப்புறம் கூட ஏன் பெண்ணின் பின்னால் சுற்றுகிறீர்கள்?''

—ஆதாரம்: கரெண்ட், 6.1.90

---

கிடையாது. ஓட்டல்களில் சர்வர் 'தாங்க் யூ' என்று சொல்லும்போது பதிலுக்குப் புன்னகை கூடச் செய்தாள். முகத்தில் கட்டுடன் வெளியே போய்வருவது ரொம்பக் கஷ்டமாக இருக்கும் என்று முன்பு நினைத்திருந்தாள். அப்படி இருக்கவில்லை.

வெளியே புறப்படுமுன் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள்.

அவள் உதட்டில் ஒரு புன்னகை பிறந்தது. அந்தப் புன்னகை அவளுக்குப் பிடித்திருந்தது. புதிய நான்ஸியின் புதிய புன்னகை! முகத்தில் பாக்கி சிகிச்சைகளையும் டாக்டர் பீட்டர் செய்து முடித்தபின் எப்படி இருப்போம் என்று யோசனை செய்து பார்த்தாள். பிரமாதமாகத் தான் இருப்போம். 'என் கனவுக் கன்னியை உருவாக்குகிறேனாக்கும்!' என்று டாக்டர் பீட்டர் அடிக்கடி சொல்வதுண்டு. அந்தக் கனவுக் கன்னி எப்படியிருப்பாளோ! இப்போதைக்கு இந்தப் புன்னகை அழகாகத்தான் அமைந்திருக்கிறது....

காற்று சுகமாக வீசிக் கொண்டிருந்தது. பனி எதுவும் இல்லை. புகைப்படம் எடுப்பதற்கு அருமையான நேரம்....

கடலை நோக்கி மெதுவே நடந்தாள் நான்ஸி. தெருக்கள் பெரும்பாலும் வெறிச்சிட்டுக் கிடந்தன. எல்லாரும் கிறிஸ்துமஸ் விருந்துகளை மூக்குப் பிடிக்கத் தின்றுவிட்டு, சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டு, டி.வி.யின் எதிரே குறட்டை விட்டுக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது!

அந்தக் காட்சியை கற்பனை செய்து பார்த்தபோது அவளுக்கே சிரிப்பு வந்தது. அந்தச் சிரிப்பில் தன்னை மறந்து நடந்தவள் எதிலோ இடறி விழப் போனாள். கீச் என்றச் சின்னக் கத்தலுடன் சமாளித்து எழுந்து கொண்டாள். நல்ல வேளை கையை ஊன்றிக்கொண்டு விட்டதால் விழவில்லை. டாக்டர் பீட்டர் மிகவும் எச்சரிக்கை செய்திருந்தார்— வேகமாக நடக்கவோ, ஓடியாடவோ, கீழே விழவோ கூடாது என்று.

ஒரு நிமிஷம் கழித்துத்தான் அவளுக்கு ஞாபகம் வந்தது. தான் கீச் சென்று கூவியபோது இன்னொரு கீச்சுச் சத்தமும் கேட்டதே, யார் அது?

குனிந்து பார்த்தாள். ஒரு சின்ன நாய்க் குட்டி. அவள் காலை இடறி விட்டது அதுதான். பந்து மாதிரி இருந்த அந்த நாய்க் குட்டி புசுபுசுவென்ற ரோமத்துடன் அவளை பார்த்து முறைத்தது. முன்னங்காலை உயர்த்தி அவளைப் பார்த்து கீச்கீச்சென்று மறுபடி குரைத்தது.

''ஓகே, ஓகே! ரொம்ப சாரி,'' என்று குனிந்து அதைத் தட்டிக் கொடுத்தாள் நான்ஸி. ''கோபிக்காதே. நீகூடத்தான் என்னை இடறி விட்டாய்!''

அது வாலை ஆட்டி மெலிதாகக் குரைத்தது. அதன் உருவம் வேடிக்கையாக இருந்தது. பசியுடன் இருக்கிற மாதிரி தோன்றியது. அதற்குச் சாப்பிடக் கொடுப்பதற்குத் தன்னிடம் எதுவும் இல்லையே என்று நான்ஸி வருத்தப் பட்டாள்.

மறுபடியும் ஒரு முறை புன் சிரிப்புடன் அதைத் தட்டிக் கொடுத்து விட்டு எழுந்தாள். காமெராவைச் சரி யாக மாட்டிக் கொண்டு, ''ஓகே! பை பை!'' என்று சொல்லிவிட்டு நடந்தாள்.

இரண்டு அடி நடந்திருக்க மாட்டாள். திரும்பிப் பார்த்தபோது கூடவே அதுவும் வந்து கொண்டிருந்தது. பிறகு அவளுக்குப் பக்கமாக எம்பி எம்பிக் குதித்துக் கொண்டு வந்தது.

''இதோ பார், சமர்த்தில் லையா? உன் வீட்டுக்குப் போ'' என்று கூறிவிட்டு நடந்தாள். ஆனால் அவள் ஓர் அடி எடுத்து வைத்தால், அதுவும் ஓர் அடி எடுத்து வைத்தது. அவள் நின்றதும் அதுவும் தெருவில் உட் கார்ந்து கொண்டது. அவள் எப்போது புறப்படுவாள் என்று காத்திருந்த மாதிரி அவள் முகத்தையே பார்த்தது.

சிரிப்பு வந்தது நான்ஸிக்கு. குனிந்து அதன் கழுத்தைத் தடவிப் பார்த்தாள். காலர் எதுவும் தட்டுப் படவில்லை. திடீரென்று ஓர் எண்ணம்— இதைப் போட்டோ எடுத் தாலென்ன?

குதிப்பதும், ஆடுவதும், ஓடுவதும் போஸ் கொடுப்பதுமாகப் பலவகையாக விளையாட்டுக் காட்டியது அது. ரொம்பக் குஷியான நாய்க் குட்டி. நிறையப் படம் எடுத்தாள்.

அரை மணி நேரம் ஓடி விட்டது. அது நான்ஸியை விட்டுப் போவதாக இல்லை.

ஒரு புது நண்பன்!

''சரி, என்னோடு வா!'' என்றாள்.

அவளுடன் கடற்கரைக்கு அது வந்தது. கடைகளையும், மனிதர் களையும், டூரிஸ்ட்டுகளையும் வியா பாரிகளையும் படகுகளையும், பறவை களையும், குடிகாரர்களையும் அவள் ஏகப்பட்ட படம் பிடித்தாள்.

ஒரு நிமிடம் கூட அந்த நாய்க் குட்டி அவளை விட்டுப் பிரியவில்லை.

கடைசியில் காப்பி சாப்பிட லாமென்று ஒரு நடைபாதை ஓட்டலுக்குள் நுழைந்தாள்.

அதுவும் கூடவே வந்தது.

தரையில் தட்டை வைத்ததும் அது சாப்பிட்டுவிட்டு அவளைப் பார்த்து மெதுவே குரைத்தது.

அந்தப் பக்கமாய் போன ஒருவர் அதை தட்டிக் கொடுத்து, ''பெயர் என்ன?'' என்று நான்ஸியை விசாரித்தார்.

''தெரியாது. இது எங் கிருந்தோ வந்து என்னுடன் ஒட்டிக் கொண்டு விட்டது.'' என்றாள் நான்ஸி.

ரொம்ப நாளைக்கப்புறம் மனம் பூரா ஒரு சந்தோஷம் நிறைந்த மாதிரி இருந்தது அவளுக்கு.

(தொடரும்)



ஆதிநாயகத்தின் வீட்டில் விருந்தாளியாக ஒரு மாதமாய்த் தங்கியிருந்தார் டி.வி. நிலையத்தில் வேலை பார்த்து ரிட்டயர்ட் ஆன ரத்தினசாமி. பொறுமையிழந்த ஆதிநாயகம் நாசூக்காய் ''ரொம்ப நாளாயத் தங்கிட்டீங்களே' என்று கேட்டதற்குப் பதில் வந்தது:

''தங்கலுக்கு வருந்துகிறேன்.''

—ஆர். ரத்தினசாமி

# காதல் மேல் ஆணை

## 24

நாயைத் தட்டிக் கொடுத்த அந்தப் புதியவர், ''இந்த மாதிரி ஒரு நாய்க் குட்டி அனாதையாய்த் திரிகிறது என்று ஜீவகாருண்ய சங்கத்துக்குத் தெரிவித்தீர்களா?'' என்று நான்ஸியை விசாரித்தார்.

''இன்னும் இல்லை,'' என்று நான்ஸி பதிலளித்ததும் ''அவர்களிடம் தெரிவித்து விடுங்கள்,'' என்று சொல்லிவிட்டுச் சென்றார்.

நான்ஸி எழுந்து கொண்டாள். 'வீட்டுக்குப் போகலாம். இது கூடவே வந்தால் ஜீவகாருண்ய சங்கத்துக்குத் தெரிவிக்கலாம்' என்று நினைத்துக் கொண்டாள்.

அது கூடவே வந்தது. ஏதோ தான் அவளுடன் வெகு நாளாய் வசித்து வருகிற மாதிரி அவள் வீட்டை அடைந்ததும் நின்றது.

நான்ஸி அதை மாடிக்கு எடுத்துச் சென்று ஜீவகாருண்ய சங்கத்துக்குப் போன் செய்து, இன்னின்ன அடையாளமுள்ள ஒரு நாய்க் குட்டி தன்னுடன் ஒட்டிக் கொண்டிருக்கிறது என்று தெரிவித்தாள்.

''அந்த மாதிரி நாய் காணவில்லையென்று யாரும் ரிப்போர்ட் பண்ணவில்லை,'' என்றார்கள்.

என்ன செய்யட்டும் என்று நான்ஸி கேட்டாள்.

''ஒன்று, நீங்களே அதை வைத்துக் கொள்ளலாம். அல்லது தூக்க மருந்து கொடுத்து, தெருக் கோடியில் கொண்டு போய் விட்டு விடுங்கள்,'' என்றார்கள்.

தூக்க மருந்தா! தெருக் கோடியில் கொண்டு போய் விடுவதா! அந்த யோசனையைக் கேட்கும்போதே நான்ஸிக்குக் கோபம் வந்தது. தரையில் அந்த நாய்க் குட்டியின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு ஆதரவாக அதை அணைத்துக் கொண்டாள்.

''இதோ பார், நீ ரொம்ப அழுக்காக இருக்கிறே. குளிக்கலாமா?'' என்று கேட்டாள்.

நாய்க் குட்டி தன் நாக்கையும் நீட்டி வாலையும் ஆட்டிற்று. அதை அள்ளி எடுத்துக் கொண்டு போய்த் தண்ணீர்த் தொட்டியில் போட்டாள். அது தண்ணீரை வாரியடிக்குமோ என்று முதலில் கொஞ்சம் பயமாக இருந்தது. ஏனெனில் முகத்திலுள்ள கட்டில் ஈரம் படக்கூடாதென்று டாக்டர் பீட்டர் எச்சரித்திருந்தார்.

ஆனால் அது கொஞ்சம் கூட எதிர்ப்புக் காட்டாமல் சமர்த்தாய்க் குளித்தது. தேய்த்துக் குளிப்பாட்டினாள். தேய்க்கத் தேய்க்க அதன் நிறமே மாறிவிட்டது!

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

—மூலம்: டேனியல் ஸ்டீ

நம்பிக்கை நட்சத்திரம்

கட்டுரையில் 

குமுதம் 4.1.90 இதழில் ''சுப்புடு தேர்ந்தெடுத்த நம்பிக்கை நட்சத்திரங்களில்,'' மிருதங்க வித்வான் கே.ஆர். கணேஷின் படம் போட்டிருந்தது. அவரைப் பற்றி எழுதும்போது தந்தை ராதாகிருஷ்ணன் நல்ல நட்டுவனார் என்று எழுதியிருந்தது. மேற்படி இளம் வித்வானின் தந்தை குடந்தை கே.எம். ராஜப்பா அய்யர் ஆவார்.

—குடந்தை ராமனாதன்

குளித்த பின்னர் முன்னைக் காட்டிலும் அழகாக இருந்தது. சொந்தக்காரர் யாரும் வந்து அதை வாங்கிக் கொண்டு போய் விடக் கூடாது என்று கூட நினைத்தாள் நான்ஸி.

அவள் இதுவரை நாய் வளர்த்தது கிடையாது. அனாதை விடுதியில் யாருமே நாய் வைத்துக் கொள்ளக் கூடாது. பாஸ்டன் வீட்டிலும் அப்படித்தான். குடித்தனக்காரர்கள் நாய், பூனை வளர்க்கக் கூடாது என்று சொல்லி விட்டார்கள்.

ஆகவே இந்த நாய்க் குட்டியிடம் கண்டதும் காதல் ஏற்பட்டு விட்டது நான்ஸிக்கு. இங்கே யாரும் இதைத் தடை செய்யமாட்டார்கள்.

குந்தி உட்கார்ந்து கொண்டு துவாலையால் அதன் உடம்பைத் துடைத்தாள். நாலு காலையும் தூக்கிக் கொண்டு அது புரண்டு உருண்டது சந்தோஷத்துடன்.

இதற்கு ஒரு பெயர் வைக்க வேண்டுமே? நான்ஸி யோசித்தாள். பிறகு, ''ஃப்ரெட் என்று உனக்குப் பெயர் வைக்கட்டுமா?'' என்று அதனிடமே கேட்டாள்.

அது இரண்டு தரம் குரைத்தது. அதைச் சம்மதத்துக்கு அறிகுறி என்று எடுத்துக் கொண்டு, ''ஃப்ரெட்! ஃப்ரெட்!'' என்று கூப்பிட்டாள்.

அவள் உள்ளத்தில் ஒரு பரவசம் நிறைந்தது. காரணம், மைக்கேல் சின்ன வயதில் ஒரு நாய்க் குட்டி வளர்த்தானாம். அதன் பெயர் ஃப்ரெட் என்று அவனே சொல்லியிருக்கிறான். அது நினைவு வந்ததால்தான் இந்த நாய்க் குட்டிக்கும் ஃப்ரெட் என்று பெயர் சூட்டினாள்.

'ஃப்ரெட்!' என்று அதை அழைக்கும் போதெல்லாம் மைக்கேலின் நினைவு வந்து அவள் கண்களில் நீர் நிறைந்தது.

விடுமுறைக்காக வெளியூர் போயிருந்த அல்லிஸன் திரும்பி விட்டாள். அவளிடம் தன்னுடைய நாய்க் குட்டியை அறிமுகம் செய்து வைத்து, அது தன்னிடம் வந்து சேர்ந்த விவரத்தையும் நான்ஸி சொன்னாள்.

''அழகான நாய்க் குட்டி. பெயர் என்ன வைத்திருக்கிறாய்?'' என்று அல்லிஸன் கேட்டபோது 'ஃப்ரெட்' என்று மட்டுமே சொன்னாள். 'மைக்கேலுக்காக அந்தப் பெயரை வைத்திருக்கிறேன்' என்று சொல்லவில்லை. மைக்கேலின் நினைவை இன்னும் விடாப் பிடியாய்ப் பிடித்துக் கொண்டிருக்கிறோம் என்பதைக் காட்டிக் கொள்ள அவளுக்கே வெட்கமாயிருந்தது.

இப்போதெல்லாம் அவள் ஃப்ரெட்டுடன் நிறைய உலாவச் சென்றாள். சில சமயம் டாக்டர் பீட்டரும் அவளுடன் வந்தார். முகத்திலுள்ள கட்டுக்களைப் பற்றி அவள் கவலைப்படுவதில்லை.

மாதங்கள் செல்லச் செல்ல அவளுடைய முகம் மிக அழகாக உருப் பெற்றுக் கொண்டிருந்தது. முகம் மட்டுமல்ல, மனம் கூட, முதிர்ச்சியும் உறுதியும் அடைந்து கொண்டிருந்தது.

அவளுடைய குரலுக்குப் பயிற்சி கொடுப்பதற்கு ஒருவர்

நியமிக்கப்பட்டிருந்தார். அவர் தந்த பயிற்சியில் நான்ஸியின் குரல் மிக இனிமையாக மாறியிருந்தது. குரலை ஏற்றி இறக்கி அவள் பேசுவது தனி அழகோடு விளங்கியது.

அந்தப் பயங்கரக் கார் விபத்து நடந்து இப்போது ஒரு வருஷமாகிவிட்டது.

''அதற்குள் பன்னிரண்டு மாசம் ஓடிவிட்டது பார்த்தாயா?'' என்று ஒருநாள் அல்லிஸன் ஆச்சரியப்பட்டாள்.

''ஆமாம்! போன மே மாதம் விபத்து நடந்தது!'' நான்ஸி பெருமூச்சு விட்டாள்.

''ஏன் நான்ஸி, உன்னிடம் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று உனக்கே நம்பிக்கை உண்டாக வில்லையா?''

''ஏற்படுகிறது. ஆனால் நடுநடுவே, நான் மைக்கேலைப் பற்றி நினைக்கும் போது சோர்வு உண்டாகிறது,'' என்று மெதுவே பதிலளித்தாள் நான்ஸி.

அவளுடைய நம்பிக்கை நூலிழையில் ஒட்டிக் கொண்டிருந்தது.

மைக்கேல் வருவான்– என் இருப்பிடத்தை எப்படியாவது அறிந்து கொண்டு என்னைத் தேடி வருவான்.

நானும் அவனுடைய அம்மாவும் செய்து கொண்ட ஒப்பந்தம் தூள் தூளாகும்...

நான்ஸி எதிர்பார்த்துக் கொண்டே இருந்தாள்.

நியூயார்க் நகரெங்கும் உற்சாகத்தின் வண்ணச் சிறகுகள் விரிந்து கொண்டிருந்தன. பழுப்பு நிறச் செடி கொடிகள் பச்சைப் பசேலென்று நிறம் மாறிக் கொண்



டிருந்தன. மரங்களிலும் புதர்களிலும் புஷ்பங்கள் பூத்துக் குலுங்கத் தொடங்கின.

இந்த வசந்த பருவம் எப்போதுமே மைக்கேலைக் கவருவது வழக்கம்.

இன்றைக்கும் அப்படித்தான்.

அறையிலேயே அடைபட்டுக் கிடந்து வந்த அவனுக்கு, பச்சையாக எதையாவது பார்க்க வேண்டும் போலிருந்தது.

அலுவலகத்திலிருந்து வெளியேறி, பக்கத்திலிருந்த பூங்காவை அடைந்தவன், நடமாட்டமில்லாத மூலைக்குச் சென்று ஒரு பெஞ்சில் உட்கார்ந்து கொண்டான். இங்கே யாரும் வரமாட்டார்கள், தனிமையை அனுபவிக்கலாம் என்று எண்ணியிருந்தவனை—

''இங்கே நீங்கள் அடிக்கடி வருவதுண்டா?''

—திடீரென்று வந்தது ஒரு கேள்வி.

தூக்கிவாரிப் போட அவன் நிமிர்ந்து பார்த்தான்.

பென்னின் அலுவலகத்தில் அவனுடைய உதவியாளராக இருக்கும் வெண்டிதான் நின்று கொண்டிருந்தாள்.

''வந்து... நான்... உண்மையில் நான் இங்கே வந்ததே கிடையாது. சீசன் பிரமாதமாய் இருக்கிறதாலே ஒரு ஆசை...''

''எனக்கும்தான்...'' என்றாள். அவள் கையில் ஐஸ்கிரீம் இருந்தது. அதைச் சப்பியபடி பேச அவளுக்கே கூச்சமாயிருந்தது. ஒரு பெரிய கட்டி உருகிக் கீழே விழுந்து விடும் போலிருந்தது. சட்டென்று அதை நக்கி விழுங்கினாள்.

''ரொம்ப ருசி போலிருக்கிறது?'' என்று சிரித்தபடி கேட்டான் மைக்கேல்.

''ஆமாம். உங்களுக்கு வேணுமா?'' பள்ளிக்கூட சிறுமி

'உத்தம புருஷன்' படத்தின் நூறாவது நாள்விழா முதல்வர் கலைஞர் தலைமையில் ராகவேந்திரா கல்யாண மண்டபத்தில் நடந்தது. இதில் கலந்து கொண்டு கலைஞர்களை வாழ்த்திப் பேசிய ரஜனிகாந்த்




கலைஞர் கவனிப்பாரா

மாதிரி ஐஸ்கிரீமை அவனிடம் நீட்டினாள் வெண்டி.

''வேண்டாம், தாங்ஸ். இப்படி உட்காரேன்,'' என்றான் மைக்கேல்.

பார்க்கில் தனிமையாக உட்கார்ந்திருந்ததை இவள் பார்த்து விட்டாளே என்று ஒரு புறம் தர்மசங்கடமாக இருந்தாலும், இந்த இனிய மாலைப் பொழுதில் இவளுடன் இருப்பது பிடித்திருந்தது. இவளும் இனிமையான பெண்.

அன்றொரு நாள் கிறிஸ்துமஸ் வாழ்த்துச் சொல்வதற்காக அவன் அலுவலகத்துக்கு வந்த பிறகு பல தடவை போகும்போது வரும்போது வெண்டியும் அவனும் பார்த்துக் கொண்டதுண்டு.

அவள் அவனருகே உட்கார்ந்து மிச்ச ஐஸ்கிரீமையும் சாப்பிட்டு முடித்தாள்.

''இப்ப உன் அலுவலகத்தில் என்ன வேலை நடந்து கொண்டிருக்கிறது?'' என்று மைக்கேல் கேட்டான்.

''கான்ஸாஸ் ஸிட்டி, ஹூஸ்டன் கட்டிட வேலைகளைப் பற்றித்தான் விவரங்கள் தயாரித்துக் கொண்டிருக்கிறோம். எப்பவும் உங்களைக் காட்டிலும் ஐந்தாறு மாதம் பின்தங்கியே எங்கள் வேலை நடக்

''என் கையில இருக்கற காசையெல்லாம் போட்டதோடே, கடன் வாங்கி எப்படியோ இந்த மண்டபத்தைக் கட்டி முடிச்சுட்டேன். கலைஞர்கூட அண்ணா அறிவாலயத்துல ஒரு கல்யாண மண்டபம் கட்டியிருக்காரு. தேதி கேட்டு அண்ணா அறிவாலய கல்யாண மண்டபத்துக்கு வர்றவங்களை, கலைஞர் என் கல்யாண மண்டபத்துக்கு அனுப்புனார்ன்னா எனக்கு வசதியா இருக்கும். பாவம் பையன் பொழைக்கட்டும்னு கலைஞர் இதைச் செய்யணும்'' என்றார்.

தகவல்: ப்ரியதர்சினி

ல்யாணமண்டபத்தை?

கிறது. உங்கள் அடிச்சுவட்டைப் பின்பற்றி நடப்பது சுவாரஸ்யமாகத் தான் இருக்கிறது.''

மைக்கேல் புன்னகை செய்து, ''பென் உன்னை எப்படி நடத்துகிறான்? கண்ணியமாகவா? அல்லது கொத்தடிமை மாதிரி நடத்துகிறானா?'' என்றான்.

''அவருக்கு அப்படியெல்லாம் வேலை வாங்கத் தெரியாது!''

''ஆமாம்.'' பென்னைப் பற்றி நினைக்கையில் அவன் உதட்டில் புன்சிரிப்புப் பிறந்தது. ''அவனும் நானும் ரொம்ப வருஷங்களாகச் சினேகிதம். அவன் என் சகோதரன் மாதிரி.''

''தங்கமான மனிதர்!'' என்றாள் அவள்.

மைக்கேல் மௌனமாகத் தலையசைத்தான். பென்னைப் பார்த்து எவ்வளவு நாளாகிறது! நேரமே கிடைப்பதில்லை. தப்பு, நேரமே ஒதுக்கிக் கொள்வதில்லை.

பென்னின் வாழ்க்கையில் என்னென்ன நடந்து கொண்டிருக்கின்றனவோ! அவனுக்குத் தெரியாது. பல மாதங்களாயிற்று பென்னைப் பார்த்துப் பேசி.

இந்த எண்ணங்களில் மூழ்க மூழ்க ஒரு குற்ற உணர்ச்சி அவனை உறுத்தியது.

வெண்டி கேலியாகக் கேட்டாள். ''என்ன மிஸ்டர் மைக்கேல், ரொம்ப இன்பமான நினைவுகளில் மூழ்கி விட்டீர்கள் போலிருக்கிறதே?''

அவனிடமிருந்து ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது. ''வசந்த காலம் வந்தாலே நான் கிறுக்கனாக ஆகிவிடுகிறேன். போன ஒரு வருஷத்தில் என்னென்ன நடந்தது என்று நினைவுபடுத்திக் கொள்வது என் வழக்கம்.''

அவள் ஒரு புன்னகையுடன் அவனை நோக்கினாள். மைக்கேல் வெறிச்சிட்ட பார்வையுடன் எட்டத்தில் தெரிந்த சிறிய ஏரியைப் பார்த்த வண்ணமிருந்தான். ஏரியின் நீர்ப் பரப்பு சலனமில்லாமலிருந்தது. சில வாத்துக்கள் மட்டுமே சளசளத்தபடி சென்றன. பூங்காவில் நடமாட்டத்தையே காணோம்.

''போன வருஷம் இந்த நாளில் நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'' திடீரென வெண்டி கேட்டாள்.

கேள்வி சாதாரணமானது தான். எந்த நோக்கமும் இல்லாமல் பொதுவாகத்தான் கேட்டாள்.

ஆனால் மைக்கேலின் இதயத்தைக் கத்தி போல் வெட்டியது அது.

ஒரு வருஷம் முன்பு... அந்த விபத்து...

அவன் சட்டென்று எழுந்து கொண்டான். ''ஆபீசில் ஒரு மீட்டிங் இருக்கிறது. நான் போகணும்.''

விடுவிடுவென்று நடந்து போகிறவனைப் பார்த்தவாறு நின்றாள் வெண்டி.

ஏன் இந்த மனிதன் இப்படிச் சட்டென்று வெட்டிக் கொண்டு போகிறான்? நாம் என்ன கேட்கக் கூடாததைக் கேட்டு விட்டோம்?

அவளுக்குப் புரியவில்லை.

(தொடரும்)



ஜகதலப்பிரதாபன்
படத்தில்
மோகன்–திவ்யா

மயக்கும் காலுக்கு
மலிவான காலணி ஏன்?

# காதல் மேல் ஆணை



## 25

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்
மூலம்: டேனியல் ஸ்டீல்

சுத்த முரட்டுத்தனமாய் மைக்கேல் எழுந்து போய்விட்டானே, அப்படி என்ன நாம் சொல்லிவிட்டோம் என்று திகைத்தபடியே வெண்டி தன் அலுவலகத்துக்குத் திரும்பினாள்.

ஆனால் பத்து நிமிடத்துக்கெல்லாம் அவனை மறுபடி சந்திப்போம் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

ஆபீசில் நடக்கவிருக்கும் மீட்டிங்கிற்கு அவள் வர வேண்டுமென்று பென் சொல்லியிருந்தான். சான்பிரான்ஸிஸ்கோவில் அவர்கள் கட்டப் போகும் மருத்துவ மனையைப் பற்றி விவாதிப்பதற்காகவே அந்த ஆலோசனைக் கூட்டம் கூட்டப்பட்டிருந்தது. அந்த மருத்துவ மனையின் உள் அலங்காரங்கள் ஒரு முக்கியமான விஷயமாக இருந்தது. ஆகவேதான் கலை டிசைன்கள் தயாரிக்கும் வெண்டியை வரும்படி பென் அழைத்திருந்தான்.

ஆலோசனைக் கூட்டத்துக்கு மரியம் தலைமை வகித்தாள். அவளுக்கு உதவியாக ஜார்ஜும் வந்திருந்தார். சான்பிரான்ஸிஸ்கோ மருத்துவ மனை குறித்துப் பெரும்பாலான பொறுப்பை மைக்கேல் தான் ஏற்றிருந்தான். தன் சொந்த வாழ்க்கையின் கவலைகளை மறப்பதற்காக அவன் இதில் மூழ்கியிருந்தான். அவன் அம்மாவும் அதையேதான் விரும்பினாள்.

இந்தக் காண்டிராக்ட் வேலையைப் பலத்த போட்டிகளுக்கிடையே அவள் பெற்றி

### அம்மாடியோவ்!



நமது சிறுநீரகத்தில் உள்ள சின்னச் சின்னக் குழாய்களையெல்லாம் எடுத்து நுனியோடு நுனி நீளமாக வைத்தால் நாற்பது மைல் நீளத்துக்கு வரும்.



ருந்தாள். ஆகவே இதில் மைக்கேல் முழுத் திறமையையும் காட்டி அபாரப் புகழ் பெற வேண்டு மென்பது அவள் ஆசை.

விவாதங்கள் சுவாரஸ்ய மாயும் காரசாரமாகவும் இருந்தன. மரியம் குடைந்து குடைந்து கேட்ட கேள்விகளுக்கு வெண்டி துளியும் சளைக்கவில்லை. சரியாகப் பதில் சொன்னாள். இவ்வளவு புத்திசாலி யாக இருக்கிறாளே என்று மைக் பிரமித்துப் போனான்.

வெளியே வருகையில் பென் அவள் தோளைத் தட்டி, ''பிரமாதம் வெண்டி! பிய்த்துக் கட்டிவிட்டாய்!'' என்று அவளைப் பாராட்டினான். அதற்குள் அவனுடைய செக்ரட்டரி அவனைக் கூப்பிடவே விடைபெற்றுப் போய் விட்டான்.

வெராந்தாவில் தனியாக நடந்து கொண்டிருந்தவள், அருகிலேயே மைக்கேலும் வருவதைக் கண்டாள். 'இரு' என்று அவன் சொல்வதைக் கேட்டு ஆச்சரியம் ஏற்பட்டது.

மைக்கேல் அவளருகில் வந்து, ''வெண்டி, நீ சொன்ன யோசனைகள் ரொம்ப நன்றா யிருந்தது. நீயும் நானும் சேர்ந்து சான்பிரான்ஸிஸ்கோ திட்டத்தை அருமையாய் நடத்துவோம் என்று நினைக்கிறேன்,'' என்றான்.

''நன்றி சார்,'' என்ற போது வெண்டியின் முகத்தில் பெருமை பள பளத்தது. மைக்கேலே பாராட்டுகிறான் என்றால் அது சாதாரணமா என்ன! ''வந்து... சார்.. சாயந்தரம் உங்கள் மனசை ஏதோ புண் படுத்தி விட்டேன்.. உங்கள் சொந்த விஷயத்தை நான் கிளறியத் தப்பு தான்... ரொம்ப ஸாரி...''

அவளுடைய சங்கடத்தைக் காண மைக்கேலுக்கு வருத்தமா யிருந்தது. கையை உயர்த்தி அவள் பேச்சை நிறுத்தினான். அவளை நோக்கிக் குனிந்து புன்னகை செய்தான். ''நான்தான் முரட் டுத்தனமாய் நடந்துகொண்டு விட் டேன். உன்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டியவன் நான்தான், அதற்கு ஈடு செய்கிற மாதிரி உன்னை இன்று இரவு டின்னருக்கு அழைத்துச் செல்கிறேன். என்ன?''

அவளுக்கு மட்டுமல்ல, அவனுக்கே கூட ஆச்சரியம் ஏற் பட்டது, தன்னை அறியாமல் வந்துவிட்ட அந்த வார்த்தைக்காக.

டின்னரா!

ஒரு வருடத்துக்கு மேலா யிற்று ஒரு பெண்ணுடன் அவன் டின்னர் சாப்பிட்டு.

இருக்கட்டும். இவள் நல்ல பெண். தன் வேலையைச் சிறப்பாகச் செய்கிறாள். நிஜமாகவே வருத்தப் படுகிறாள்.

அவள் அவனை ஏறிட்டுப் பார்த்தபடி நின்றிருந்தாள். அவள் கன்னங்கள் ரோஜா நிறத்தில் பிரகாசித்தன. முகத்தில் சங்கடம் பரவியிருந்தது.

''வந்து... நான்... நீங்கள்...''

''உனக்கு வேறு ஏதாவது வேலை இருக்கிறதா?''

''இல்லையில்லை. சந்தோஷமாக வருகிறேன்.''

''அப்படியானால் இன்னும் ஒரு மணி நேரத்தில் உன் வீட்டுக்கு வந்து உன்னை அழைத்துப் போகிறேன்.'' அவளுடைய முகவரியைத் தனது சிறிய குறிப்பு நோட்டில் எழுதிக் கொண்டு தன் அலுவலகத்துக்குத் திரும்பினான்.

சொன்ன நேரத்துக்கு டாணென்று வெண்டியின் ஜாகையை அடைந்தான் மைக்கேல். அந்த வீட்டின் அமைப்பு அவனைக் கவர்ந்தது. நாலு குடித்தனங்கள் இருந்த வீடு அது. வெண்டியின் ஜாகைதான் இருப்பதற்குள் சிறியது. ஆனால் வீட்டின் பின்புறம் அழகிய சிறிய தோட்டமொன்று இருந்தது. பழைய கலைப் பொருள்களும் நவீனமான பொருட்களும் வாங்கி, கச்சிதமாக அலங்கரித்திருந்தாள். சிறிய வெள்ளிப் பொம்மைகளுக்கும் பளபளவென்று பாலிஷ் போட்டு வைத்திருந்தாள். சுவர்களுக்கு இனிமையான வர்ணம் தரப்பட்டிருந்தது.

அவள் கலந்து கொண்டு வந்த பானங்களை இருவரும் மெல்ல அருந்தினார்கள். சிறிது நேரம் அலுவலக விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்படி இப்படியென்று நேரம் ஆகிவிட்டது.

''ஓட்டமும் நடையுமாகப் போய்ச் சேர வேண்டும். இல்லையா? அல்லது ஓட்டலுக்குப் போகாமல் வேறெங்காவது போகலாமா?'' என்று வெண்டி கேட்டாள்.

தான் மனத்தில் நினைத்திருந்ததையே அவளும் சொன்னது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவள் கண்களில் ஒருவிதமான குறும்புத்தனம் மின்னுவது போலிருந்தது. ஆனால் நிச்சயமாகத் தெரியவில்லை. எந்தப் பெண்ணுடனும் அவன் வெளியே போய் நீண்ட காலமாகிவிட்டது. ஏதேனும் தப்பாகப் புரிந்துகொண்டு எதையும் கெடுத்துவிடக் கூடாது என்று நினைத்துக் கொண்டான்.

''வேறெங்கே போகலாம் என்று நினைக்கிறாய்?''

''ஏன், ஆற்றங்கரைக்குப் பிக்னிக் போகலாமே? அங்கே உட்கார்ந்து கொண்டு படகுகளை வேடிக்கை பார்க்கலாம்,'' என்றாள் வெண்டி.

சிறுமியின் குறுகுறுப்பு அவள் பேச்சில் பரபரப்பதை அவன் கண்டான்.

''பிக்னிக் என்றால் கையில் எடுத்துப் போவதற்கு நொறுக்குத் தீனி ஏதேனும் வைத்திருக்கிறாயா?''

''என்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள்?'' என்று ரோஷமாகச்



## பழி தீர்க்க வழி!

ரஷ்ய சக்கரவர்த்தியான மகா பீட்டர், தன் ராணி செய்த துரோகத்தை ஒரு நாள் கண்டுபிடித்தார். அந்தக் கள்ளக் காதலனைச் சிரச் சேதம் செய்தார். அந்தத் தலையை ஒரு ஜாடியில் பதப்படுத்தி வைத்து, ஜாடியை ராணியின் கண்ணில் எப்போதும் படுமாறு அவளுடைய படுக்கையறையிலேயே வைத்தார்.

—வி.

சமையலறைக்குச் சென்றவள் ஒரு கூடை நிறையத் திண்பண்டங்களும் ரொட்டியும் பழங்களும் எடுத்துக் கொண்டு திரும்பினாள்.

இருவரும் சில தெருக்கள் நடந்தபின் ஆற்றங்கரையை அடைந்தார்கள். காலியாயிருந்த ஒரு பெஞ்ச்சில் உட்கார்ந்தார்கள்.

முன்னிரவு வேளை மனோரம்மியமாக இருந்தது. ஆகாயத்தில் நட்சத்திரங்கள் பளீரென்று மின்னின. ஆற்றில் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் படகுகள் பாய் மரத்தை விரித்துக் கொண்டு சென்றன.

வசந்த காலத்தின் ஜிலு ஜிலுப்பு தன் இதயத்தில் புகுவதை உணர்ந்தான் மைக்கேல். கொண்டு வந்திருந்த பிஸ்கெட்டுகளை வாய் நிறையத் திணித்துக் கொண்டு, ''வெண்டி, இதற்கு முன் நீ எங்கே வேலை பார்த்தாய்?'' என்று கேட்டான்.

அவள் மகிழ்ச்சியுடன் தலையசைத்தாள். ''இதுதான் என் முதல் வேலை. விண்ணப்பித்த உடனேயே கிடைத்து விட்டது. கல்லூரியில் பட்டம் வாங்கியதுமே நேரே உங்களிடம் வேலைக்கு வந்துவிட்டேன்.''

''எனக்குக் கூட இதுதான் முதல் வேலை,'' என்றான் அவன். தன் அம்மாவைப் பிடித்திருக்கிறதா என்று அவளைக் கேட்க மனம் துடித்தது. ஆனால் கேட்கத் துணியவில்லை. பிடித்திருக்கிறது என்று அவள் பொய் சொல்ல வேண்டியிருக்கும். அது நியாயமில்லை. இந்தப் பெண் உண்மையில் அம்மாவை வெறுத்துக் கொண்டு தான் இருப்பாள். தன் அம்மாவின் கீழே வேலை செய்வது எத்தனை கொடுமை என்று அவனுக்குத் தெரியும்.

''உங்களுக்கு நல்ல எதிர் காலம் இருக்கிறதென்று நம்புகிறேன்,'' என்று அவள் கேலியாகச் சொல்ல அவன் வாய்விட்டுச் சிரித்தான்.

''அடுத்தாற்போல் நீ என்ன செய்யப் போகிறாய், வெண்டி? கல்யாணம் செய்துகொண்டு குழந்தைகள் பெற்றுக் கொள்வாய். இல்லையா?''

''இருக்கலாம். ஆனால் இப்போதைக்கு இல்லை. வேலையில் நன்றாக முன்னேறிய பிறகுதான் கல்யாணம். முப்பது வயதுக்குப் பிறகு.''

அவன் சிரித்தபடி ''அப்பப்பா! காலம் எவ்வளவு மாறிவிட்டது! முன்னெல்லாம், பெண்கள் கல்யாணம் கல்யாணம் என்றுதான் அலைவார்கள்,'' என்றான்.

''இப்போதும் கூடச் சில பெண்கள் அப்படித்தான் இருக்கிறார்கள்,'' என்றாள் அவள்.

எடுத்து வந்திருந்த தின்பண்டங்களைத் தின்று அவர்கள் வயிறு நிரம்பியிருந்தது.

''நீங்கள் எப்போது கல்யாணம் செய்துகொள்ளப் போகிறீர்

## ஃப்ரிஜ்ஜின் இன்னொரு பயன்



எஸ்கிமோக்களும் ஃப்ரிஜ் உபயோகிக்கிறார்கள். ஆனால் பண்டங்களைக் குளிர்ச்சியாக வைத்திருப்பதற்காக அல்ல, வெளியே வைத்தால் குளிரில் மிகவும் இறுகிப் போய், சாப்பிட முடியாததாகிவிடும் என்பதால்.

கள்?'' என்று அவள் கேட்டாள்.

ஆவலுடன் அவள் பார்ப் பதைக் கண்டுகொண்ட மைக்கேல், படகுகளை வெறித்துப் பார்த்தபடி 'ஊகூம்' என்று தலையை அசைத்தான்.

''எப்போதுமே பண்ணிக் கொள்ளப் போவதில்லையா?''

மறுபடியும் தலையை அசைத்து அவளைக் கூர்ந்து பார்த்தான் அவன்.

அவன் கண்களில் ஒரு பரிதா பத்தைக் கண்டாள் வெண்டி. அடுத்த கேள்வியைக் கேட்கலாமா வேண்டாமா என்று ஒரு வினாடி யோசித்தவள், கேட்கலாமென்று தீர்மானித்தாள். ''ஏன்?''

''கல்யாணத்துக்கே அர்த்த மில்லாமல் போய் விட்டது,'' ஒரு கணம் நிறுத்தி, தன் கைகளைப் பார்த்தபடி முகம் குனிந்திருந்தான் அவன். பிறகு மீண்டும் அவளை நோக்கிப் பார்வையை உயர்த்தி னான். ''போன வருஷம் எனக்குச் கல்யாணம் நடக்கவிருந்தது. கல்யா ணத்துக்காகப் போய்க் கொண்டிருந் தோம் என் காதலியும் நானும் பென்னும்... ஒரு விபத்து நேரிட்டது. அதில் அவள்... அவள் இறந்துவிட்டாள்.''

அவன் அழவில்லை. ஆனால் அவன் உடம்பு மொத்தமும் பொடிப் பொடியாக உதிர்வது போலிருந்தது.

பயந்துபோய், கண்களை அகல விரித்து அவனைப் பார்த்தாள் வெண்டி. ''ரொம்பப் பயங்கரமாய் இருக்கிறதே!''

''ஆமாம். பயங்கரம்தான். நான் இரண்டு மூன்று நாள் மயக்க மாய்க் கிடந்தேன்... எனக்கு நினைவு வந்தபோது அவள் போய் விட்டாள்...''

யாரிடமும் சொல்லாத விஷயத்தை, சினேகிதன் பென் னிடம் கூடச் சொல்லாததை இவளிடம் சொல்லத் தோன்றியது.



அவர்: இந்த கிரைண்டர் ரொம்ப நல்லா வேலை செய்யுது. **E.M.V.** மோட்டாராச்சே!

நண்பர்: அதென்ன ஈ.எம்.வி. மோட்டார்?

அவர்: என் மாமனார் வாங்கித் தந்த மோட்டார்!

---

''இரண்டு வாரம் கழித்து, ஆஸ்பத்திரியிலிருந்து வெளியே வந்ததும் அவள் வீட்டுக்குப் போனேன். சுத்தமாய்க் காலியாக இருந்தது... அவளுடைய பொருள்களை ஏலக் கம்பெனி எடுத்துப் போய் விட்டதாம்... அவள் வரைந்திருந்த ஓவியங்களை ஆஸ்பத்திரி நர்ஸ்கள் திருடிக் கொண்டு போய்விட்டார்கள்... அவள் ஓவியம் தீட்டுகிறவள்...''

இருவரும் வெகு நேரம் மௌனமாக இருந்தார்கள். பின்னர் அவன், ''அன்று முதல் எனக்கு வாழ்க்கையில் எதுவும் இல்லாமல் போய் விட்டது. வெறும் சூனியம்...'' என்றான். மறுபடியும் மறுபடியும் அதே வார்த்தையைச் சொன்னவாறு அவளை நிமிர்ந்து பார்த்தான்.

வெண்டியின் கண்களில் கண் ணீர் தளும்பிக் கொண்டிருந்தது. ''ஸாரி மைக்கேல். கேட்பதற்கே கஷ்டமாயிருக்கிறது.''

இந்த ஒரு வருடத்தில் முதல் தடவையாக அவன் வாய்விட்டு அழுதான். தாரை தாரையாகக் கண்ணீர் வழிய, தன்னையும் மறந்து அவளை இழுத்து அணைத்துக் கொண்டான்.

(தொடரும்)










# இதோ பிரெஸ்டீஜ்

## அவ்டி மேட்

## கொஞ்சம் கூடத்தொல்லை தராத பிரஷர்குக்கர் ஒவ்வொரு தினமும் உபயோகிப்பவர்களால் உருவாக்கப்பட்டது, பிரச்னைகள் இல்லாதது



நீங்கள் கேட்டீர்கள் அல்லவா? உடனே உங்களுக்கு சௌகரியமான அனைத்து அம்சங்களும் உள்ள, தொல்லையே தராத பிரஷர் குக்கரை உருவாக்குவதில் நாங்கள் தீவிரமாக முனைந்தோம்.

கைப்பிடிகளால் கஷ்டம் ஏற்படாதிருக்கும் வண்ணம் அவற்றைத் திருத்தி அமைத்தோம். அவற்றைப் பாதுகாக்க ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஃப்ளேம் கார்டு பொருத்தினோம். இவற்றின் இணைப்புகள் தொழிற்சாலையில் துல்லியமாகப் பொருத்தப்பட்டன.

தெளிவான விசில் சப்தத்தினை வெளியிடும் ஒரு புதிய வெயிட் வால்வினை நாங்கள் உருவாக்கினோம். இதன் பிரத்தியேக கிளாஸ் கலந்த நைலான் கௌல் உங்கள் விரல்களைப் பாதுகாக்கிறது.

பிரெஸ்டீஜின் மற்ற அனைத்து சிறப்பம்சங்களும் இதிலும் உள்ளன — அதிக பாதுகாப்பளிக்கும் ஜிஆர்எஸ், டபிள் லாக்கிங் ஸிஸ்டம். எப்போதும் போலவே அதிக கனம் வாய்ந்த அடிப்பாகத்தையும் நாங்கள் அளிக்கிறோம்: எனவே மற்ற குக்கர்களைப் போல உபயோகத்திற்குப் பின் உங்கள் குக்கர் எவ்வகையிலும் உருமாறாது.

**இவற்றின் விளைவு**

ஒவ்வொரு நுண்ணிய அம்சத்திலும் மேன்மை வாய்ந்த குக்கர் ஒன்று — அதற்கு நாங்கள் இட்டுள்ள பொருத்தமான பெயர்:

**பிரெஸ்டீஜ்**

**அவ்டி மேட்**

**நீங்கள் ஒரு பிரஷர் குக்கரில் என்னவெல்லாம் இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்களோ, அவ்வளவும், அதற்கு மேலும்!**

TTK தயாரிப்பு

# ஆசைப்பா

# 26

**தமிழில்: ரா.கி. ரங்கராஜன்**

மைக்கேலுடன் எவ்வளவுதான் நெருங்கிப் பழகினாலும் அவன் மனம் வேறெங்கோதான் இருக்கிறது என்பதை வெண்டி கொஞ்ச நாளிலேயே கண்டு கொண்டாள்.

அன்று இருவரும் வெண்டியின் வீட்டையொட்டி இருந்த நீச்சல் குளத்துக்குச் சென்றிருந்தார்கள். கரையோரமாக இருந்த சாய்வு நாற்காலியில், ஒரு பேப்பருடன் உட்கார்ந்திருந்தான் மைக்கேல்.

நியூயார்க் வெய்யில் பளீரென்று பிரகாசித்துக் கொண்டிருந்தது. கையில் பானங்களுடன் வந்தாள் வெண்டி.

''மைக்கேல், நம்முடைய கான்ஸாஸ் ஸிடி அலுவலகத்தைக் கவனித்துக்கொண்டு வருகிறாளே ஒரு பெண், அவளைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்றாள் அவள்.

அவன் தலையை உயர்த்தவில்லை. செய்தித் தாளைப் பார்த்தபடியே இருந்தான். ஆனால் அவன் கவனம் அதிலும் இல்லை என்று அவளுக்குத் தெரிந்தது.

''மைக்!'' மறுபடியும் கூப்பிட்டாள்.

''...என்ன?''

''கான்ஸாஸ் ஸிடி அலுவலகத்தில்...'' என்று மீண்டும் ஆரம்பித்தவள் அவன் கவனத்தைத் திருப்புவது வீண் முயற்சி என்று கண்டு கொண்டதால் அந்தப் பேச்சை நிறுத்திக்கொண்டு, ''மைக், இன்னும் கொஞ்சம் ட்ரிங்க் கொண்டு வரட்டுமா?'' என்றாள்.

''என்னது? ஆமாம், ஆமாம். நான் ஆபீசுக்குக் கிளம்பணும். நேரமாகிறது,'' என்றான் அவன்.

''அழகுதான்,'' என்று முகத்தை நொடித்தாள் வெண்டி.

அவள் முகத்தை உற்றுப் பார்த்தான் மைக்கேல். கொஞ்சம் சிந்தனை செய்திருந்தால் அந்த முகத்திலிருந்த ஆசையையும் தாபத்தையும் அவனால் கண்டிருக்க முடியும். ஆனால் அவன் சிந்தனை செய்வதே கிடையாது என்றாகி விட்டது.

''இதோ பார் வெண்டி, அந்த சான்பிரான்ஸிஸ்கோ மருத்துவ மனை வேலை ரொம்ப முக்கியமானது. அடுத்த இரண்டு வருஷத்துக்கு அந்த வேலையே எனக்குச் சரியாயிருக்கும்.''

''அந்த வேலை இல்லாவிட்டால் இன்னொரு வேலை!'' வெண்டி பெருமூச்சு விட்டாள். ''நீங்கள் எனக்கு எந்தச் சமாதானமும் சொல்லத் தேவையில்லை.''

அவளுடைய கோபம் அவனுக்கு எரிச்சல் மூட்டியது. கையிலிருந்த பேப்பரைக் கீழே போட்டுக் காலால் கெந்தி எறிந்தான்.

சொன்னால் சொன்ன நேரத்துக்கு அவன் வருவதில்லை என்பதே வெண்டியின் கோபத்துக்குக் காரணம்.

''நேற்று இரவு ஒன்பதரை மணிக்கு நீங்கள் என் வீட்டுக்கு வருவதாகச் சொல்லி விட்டு எத்தனை மணிக்கு வந்தீர்கள்? பன்னிரண்டரை மணிக்கு! நம்மோ

டின்னர் சாப்பிடுவதற்காகக் காத்திருந்த நண்பர்களெல்லாம் திரும்பிப் போய்விட்டார்கள்! அவர்களுடன் நானும் போயிருக்க வேண்டும்!''

''போவதற்கென்ன? எனக்காக ஏன் வீட்டில் உட்கார்ந்திருந்தாய்?''

''ஏனென்றா கேட்கிறீர்கள்? ஏனென்றால் எனக்கு உங்கள் மீதுள்ள காதல்! அதனால்தான் உங்களுக்காகவே காத்துக் கொண்டிருந்தேன்!'' படபடவென்று பேசினாள் வெண்டி. ''உங்கள் மனசில் என்னதான் இருக்கிறதோ புரியவில்லை. உங்களை யாரோ கட்டி இழுத்துக் கொண்டு போய்விடப் போகிறார்கள் என்று பயந்த மாதிரி, ஆபீஸ் நாற்காலியோடு நாற்காலியாய் உங்களைச் சங்கிலி போட்டுக் கட்டிக் கொள்கிறீர்கள். என்ன பயம்? சொல்லுங்கள். என்னிடம் காதல் ஏற்பட்டு விடுமென்று பயப்படுகிறீர்களா? அப்படியே காதல் ஏற்பட்டால் தான் என்ன? அது அவ்வளவு பயங்கரமான விஷயமா?''

''அபத்தமாய்ப் பேசாதே, வெண்டி. என் வேலை எப்படிப்பட்டதென்று உனக்குத் தெரியும். வேறு யாரைக் காட்டிலும் நன்றாகவே தெரியும்.''

அவள் சூடாகவே பதிலளித்தாள். ''உண்மை. நன்றாய்த் தெரியும். அதனால்தான் தேவைக்கு மேலேயே ஆபீசைக் கட்டிக்கொண்டு அழுகிறீர்கள் என்று சொல்கிறேன். அது உங்களுக்கு ஆபீசல்ல. ஒளிந்து கொள்ள ஒரு இடம். என்னிடமிருந்து தப்பிப்பதற்காக, உங்களிடமிருந்தே நீங்கள் தப்பிப்பதற்காக வைத்திருக்கிற இடம்!

''சுத்தப் பைத்தியக்காரத்தனம் உன் பேச்சு!'' விருட்டென்று எழுந்து கொண்டான் மைக்கேல். நீச்சல் குளத்தை ஒட்டியிருந்த சிறிய தோட்டத்தின் பாதையில் குறுக்கும் நெடுக்குமாய் நடை போட்டான்.

அன்று ஆற்றங்கரையில், வெண்டியை அணைத்துக்கொண்டு, தனக்கும் நான்ஸிக்குமிருந்த காதலைப் பற்றிச் சொல்லி, துயரம் தாங்காமல் அழுத பிறகு, வெண்டியுடன் மைக்கேல் கொஞ்ச நாள் சந்தோஷமாக இருந்தான். விடுமுறைகளில் அவளுடன் வெளியூர்களுக்குச் சென்று வந்தான். ஆனால் அவன் உள்ளம் அவளிடம் ஈடுபாடு கொள்ளவில்லை.

''வெண்டி, நான் ஆரம்பத்திலேயே உன்னிடம் சொல்லிவிட்டேன்...'' என்று சொல்லத் தொடங்கியவனைக் குறுக்கிட்டாள் வெண்டி.

''ஆமாம்! சொன்னீர்கள். நம் விவகாரம் ரொம்பத் தூரம் போகக் கூடாதென்று சொன்னீர்கள். நாம் கல்யாணம் செய்து கொள்வது இயலாதென்று சொன்னீர்கள். இல்லையென்று நான் சொல்லவில்லை. ஆனால் நடைபிணமாக, வாழ்க்கையை வாழப் பயப்படுகிறவராக இருப்பேனென்று சொல்லவில்லை. நீங்கள் என்னோடு இருக்கும் நேரத்தைக் காட்டிலும் உங்கள் டெலிபோனுடன் இருக்கும் நேரம்தான் அதிகம்! என்னைக் காட்டிலும் டெலிபோனிடம் தான் உங்களுக்கு அதிகப் பிரியம் என்று கூடச் சொல்வேன்!''

''சரி, சரி, இப்ப என்ன அதற்கு?'' என்றான் மைக்கேல் சலிப்புடன்.



அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள் வெண்டி. தன் உடம்பு முழுதும் சில்லென்று ஒரு நடுக்கம் பரவுவதை உணர்ந்தாள். 'சே! இருதயம் என்பதே இல்லாதவர் இவர். இவருடன் வாழ நினைப்பது பைத்தியக்காரத்தனம்,' என்று எண்ணிக் கொண்டாள். அதே சமயம் அவனிடம் தென்பட்ட ஒரு பலம், ஒரு அழகு, ஒரு முரட்டுத்தனம், ஒரு பரிதாபம்—இவை அவனிடம் அவளைக் காந்தம் போல ஈர்த்தன. அவனுடைய வேதனை எவ்வளவு பெரிது என்பதை உணர்ந்தாள். அவனுக்கு ஒரு துணை எத்தனை அவசியம் என்பதும் அவளுக்குத் தெரிந்தே இருந்தது. அவனைப் பரிவுடன் அணைத்துக்கொண்டு தன் அன்பு மொத்தத்தையும் கொட்ட நினைத்தாள்.

ஆனால் அவன் கடுகத்தனையும் அவளிடம் ஈடுபாடு காட்டக் காணோமே!

காரணம், அவள் நான்ஸி யல்ல. வெண்டி. இருவருக்குமே அது புரிந்திருந்தது.

முத்திட்டு நிற்கும் தன் கண்ணீரை அவன் கண்டுவிடக் கூடாதென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு மௌனமாகத் தன் வீட்டுக்குள்ளே சென்றாள். சமையலறையை அடைந்தவள், பானங்களைக் கலக்கிக் குடித்தாள். அவள் தேகம் படபடத்துக் கொண்டிருந்தது. கண்களை மூடிக்கொண்டு ஒரு நிமிஷம் நின்றாள். மைக்கேலை அணைத்துக் கொண்டு ஆறுதல் சொல்ல வேண்டும் போலிருந்தது. ஆனால் யாருடைய ஆறுதலுக்கும் அணைப்புக்கும் அப்பாற்பட்டவனாக அவன் ஆகிவிட்டான் என்று தோன்றியது.

ஒவ்வொரு வாயாக நிதானமாய்க் குடித்துவிட்டுக் கிளாஸை வைத்தபோது அவனுடைய கைகள் தன் முதுகை மெல்லத் தொடுவதை உணர்ந்தாள். தன் பின்னே அவன் இருப்பது தெரிந்தும் அவள் எதுவும் சொல்லாமல் நின்றிருந்தாள். அவன் கரங்களுக்குள் புகுந்து கொள்ள இதயம் துடித்த போதிலும் வேண்டாமென்று தீர்மானித்தாள்.

''வெண்டி, நீ எனக்கு



வேண்டும்,'' என்றான் மைக்கேல்.

உள்ளமும் உடலும் அவனுக்காக ஏங்கித் தவித்த போதிலும் பல்லைக் கடித்துக் கொண்டாள். ''நீங்கள் சற்று முன்னால் சொன்னீர்களே, அதே போல் நானும் சொல்கிறேன்—சரி, சரி. இப்ப என்ன அதற்கு?''

''வெண்டி, என்னை மன்னித்து விடு. யாரேனும் என்னை ரொம்ப விரட்டினால் எனக்குப் பொறுப்பதில்லை...'' அவன் குரல் மென்மையாக ஒலித்தது.

''அதற்குப் பெயர் விரட்டல் இல்லை. காதல். விரட்டலுக்கும் காதலுக்கும் உங்களுக்கு வித்தியாசம் தெரியாததுதான் பரிதாபம். ஆமாம், இப்படித்தான் நான்ஸியிடமும் நடந்து கொண்டீர்களா?''

அவள் முதுகை வருடிக் கொண்டிருந்த அவன் கை சட்டென நின்றது. அது விறைத்துக் கொள்வதையும் அவள் உணர்ந்தாள்.

ஆனால் தன். பேச்சை நிறுத்திக்கொள்ள அவள் தயாராயில்லை. அவன் மனம் புண் படட்டும் என்றுகூட நினைத்தாள்.

''நான்ஸியையும் இப்படித்தான் காதலிக்கப் பயந்தீர்களா, மைக்கேல்? அவள் செத்துப் போனது உங்களுக்குச் சௌகரியமாய்ப் போய்விட்டது, இல்லையா? இனிமேல் யாரையும் காதலிக்க வேண்டிய அவசியமில்லை. சும்மா வானும் சோகம் கொண்ட மாதிரி வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கலாம். அப்படித்தானே?'' என்று சடசடவெனப் பேசிக் கொண்டே போனாள்.

''வெண்டி! என்ன தைரியம் இருந்தால் நீ இப்படியெல்லாம் பேசுவாய்! நான் உன்னிடம் அந்தரங்கமாகச் சொன்னதை இப்படித் திரித்துப் பேச என்ன கொழுப்பு உனக்கு!'' மைக்கேல் கத்தினான்.

அவனை அந்தக் கோபத்தில் பார்க்கும்போது வெண்டிக்கு அவன் அம்மா மரியமின் நினைவு வந்தது. அவளைப் போலவே இவனும் இருதயமில்லாதவனோ என்று எண்ணினாள்.

''நான் எதையும் திரித்துச் சொல்லவில்லை, மைக்கேல். என் மனசில் தோன்றியதைச் சொன்னேன். அவ்வளவுதான்.'' என்றாள்.

சட்டென்று அவள் தோள்களை இறுக்கிப் பிடித்துத் தன்னோடு இழுத்துக் கொண்டான் மைக்கேல்.

''விடுங்கள் என்னை...'' என்று அவள் திமிறியது பலன் தரவில்லை.

சமையலறையின் கடியாரம் டிக்டிக்கென்று ஓசையெழுப்பி, அந்த அறையில் அவர்களுக்கிடையே ஏற்பட்டிருந்த நிசப்தத்தை அதிகப் படுத்திக் காட்டியது.

மைக்கேல் எதுவும் பேசாமல் ஜன்னல் வழியே தோட்டத்தைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான்.




புராதன கிரேக்க நாட்டில் பெண்கள் தங்கள் வயதைக் கல்யாணமான நாளிலிருந்துதான் கணக்கிட்டார்கள்.

கல்யாணமானால்தான் பெண்ணுக்கு உண்மையான வாழ்க்கை தொடங்குகிறது என்பது அவர்கள் கருத்து.

இதோ! ரூ.4/-* பெறுமான சூப்பர் சலுகை!
கிஸான் மற்றும் டிப்பி'ஸ் ஜாம், சாஸ் மற்றும் ஸ்குவாஷுடன்!




ஒரு பாக்கெட்
"கிஸான் மில்க் ட்ரீம்" பிஸ்கட்

# இலவசம்! இலவசம்! இலவசம்! இலவசம்!




*ஒவ்வொரு 500 கிராம்/700 மி.லி.
கிஸான் ஜாம்/சாஸ்/ஸ்குவாஷ்
பாட்டிலுடன் அல்லது ஒவ்வொரு
500 கிராம்/400 கிராம்/ 700மிலி
டிப்பி'ஸ் ஜாம்/சாஸ்/ஸ்குவாஷ்
பாட்டிலுடன் சுமார் நான்கு
ரூபாய் பெறுமான 100 கிராம்
"கிஸான் மில்க் ட்ரீம்" பிஸ்கட்
பாக்கெட் இலவசம்!
முந்துங்கள்! இச்சலுகை சரக்கு நீடிக்கும்
வரை தமிழ்நாடு, ஆந்திரா, கேரளா,
கோவா, கர்னாடகா மற்றும்
பாண்டிச்சேரி பிரதேசங்களில் மட்டுமே!

Visesh/KPL/8953/Tam

மைக்கேலுடன் கொண்டிருந்த இந்த உறவு அர்த்தமில்லாதது என்று வெண்டி உணர்ந்தேயிருந்தாள். அவனிடம் ஒருவகை அச்சம் கூட ஏற்பட்டது.

பெண்ணிடம் சொல்லி நம்மை வேலையை விட்டுத் தள்ளும்படி சொன்னாலும் சொல்வான் என்று எண்ணினாள்.

''மைக்....'' என்று மெல்ல அழைத்தாள்.

அவன் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

''வெண்டி, சில சமயம் நான் ரொம்ப மடையனாக நடந்து கொள்கிறேன்,'' என்றான்.

''உண்மைதான்!''

சமையலறையின் தரையில் படுத்திருக்கும் மைக்கேலைப் பார்த்துச் சிரித்தாள் அவள். அவனுடைய மோவாயில் முத்தமிட்டாள். ''ஆனால் நீங்கள் எவ்வளவு மடையனாக இருந்தாலும் உங்களிடம் எனக்கு அளவற்ற காதல்தான்.''

''இல்லை, வெண்டி. என்னைக் காட்டிலும் சிறந்தவன் உனக்குக் கிடைப்பான்...'' மைக்கேலின் குரல் தழுதழுத்தது. வெண்டியின் மனத்தை முதல் தடவையாக இப்போதுதான் அறிந்து கொண்ட மாதிரி இருந்தது அவனுக்கு.

''உன்னிடம் நான் இப்படி... தப்பாக நடந்து கொண்டதைப் பற்றி எனக்கே வெறுப்பாய் இருக்கிறது வெண்டி.''

''உஸ்...'' அவன் உதடுகளைத் தன் விரலால் மூடினாள் அவள். அரை மணிக்கு முன்பு இருந்ததைக் காட்டிலும் சாந்தமாக அவன் முகம் மாறியிருப்பது தெரிந்தது.

''மைக்... மைக்கேல்.. நான்ஸியை உங்களால் மறக்க முடியவில்லையா?'' என்று கேட்டாள்.

(தொடரும்)



''என்ன திடீர்னு மானேஜர் ரூம்லருந்து 'சாமியே சரணம் ஐயப்பா'னு கோரஸா குரல் கேட்குது?''

''மானேஜர் ஐயப்ப பக்தர். லேட்டா வர்றவங்களையெல்லாம் பத்து தடவை சரணம் போடச் சொல்லிட்டார்!''

—நடேஷ் ஷா



## அபூர்வ தலை

ஜெர்மனியில், ஹாம்பர்க் துறைமுகக் கடற்கரையில் ஹாரிரோஸன் பெர்க் விசித்திரமான பொருட்களைச் சேகரிக்கும் ஆர்வம் உள்ளவர்.

அவரிடமுள்ள புராதனப் பொருட்களில் முக்கியமானது, பாடம் செய்யப்பட்ட ஒரு மனிதத் தலை. தென் அமெரிக்க சிவப்பு இந்தியப் பழங்குடியினர் பாடம் செய்து வைத்திருந்த தலையாம் இது.

—ஆர்.

## தகம்

### பாதையோரத்துப் பாரிஜாதங்கள்
(எழில் வேந்தன் –பக்.68 –ரூ.6 –நவ இந்தியா பதிப்பகம், 132, காவேரி நகர், தஞ்சாவூர் 613 005)

தேசத்தைப் பார்!
வராத தட்சணைக்காக
எத்தனை சீதைகளுக்குச்
சிமெண்ணெய்க் குளியல்!

–புதுக் கவிதைகள்.

### சபரிமலை சாஸ்தா ஸ்ரீ ஐயப்ப சுவாமி
(ஆபஸ்தம்பன் –பக்.64 –ரூ.5 –சங்கீதவாணி, 91, வி.எம். தெரு, சென்னை 600 004)

ஐயப்பனின் மகிமையோடு, விரதம் இருக்க வேண்டிய விதி முறைகளையும் கூறுகிறது.

### பாரதிதாசன் படைப்புத் திறன்
(ந. இராமநாதன் –பக்.232 –ரூ.20 மணிவாசகர் பதிப்பகம், 55, லிங்கித் தெரு, சென்னை–600 001)

'காதலின் மூலக் கதை' போன்ற நான்கு தலைப்புகளில் பாவேந்தரின் பாட்டுக்களைக் குறித்த ஆராய்ச்சி. 1960–ல் முதல் பதிப்புக்கு வாழ்த்துரை தந்த பாரதிதாசன், தம்மைப் பற்றி, 'நன்றெனப் பட்டதைச் செய்வேன்; பகைவருக்கு அஞ்சேன்; வாய்ப்பு நேர்ந்த போதெல்லாம் பிறரைத் தூக்கி விடுவதில் சோர்ந்ததே இல்லை' என்று குறிப் பிட்டிருக்கிறார்.

### சந்திரனுக்குப் பயணம்
(நெ.சி. தெய்வசிகாமணி –பக்.68 –ரூ.7 – பாலர் பதிப்பகம், 309 லிங்கித் தெரு, சென்னை–600 001)

சந்திரனைப் பற்றியும் சந்திர மண்டலப் பயணம் பற்றியும் சிறுவர்களுக்கான விளக்கம்.

### நாடி சாஸ்திரம்
(பழனி எம்.பி. தங்கவேல் சாமிகள் –பக்.92 – ரூ.9 –அருணோதயம், 3, கௌடியா மடம் சாலை, சென்னை–600 014)

சித்த வைத்திய நூல்.

> பழமைக்குப் பழமையாகவும், புதுமைக்குப் புதுமையாகவும் விளங்குகின்ற தெய்வத் தமிழ் மொழியின் முதலெழுத்து 'அ'. இறுதியெழுத்து 'ன்'. தெய்வத் தமிழில், தெய்வப் புலவர் திருவள்ளுவரால் இயற்றப்பட்ட தெய்வ நூலாகிய திருக்குறளும் 'அ'வில் தொடங்கி 'ன்'னில் முடிகிறது.
>
> –'திருக்குறள் முத்து' என்ற புத்தகத்திலிருந்து.

### புதிய சிந்தனைகள் புதிய கவிதைகள்
(இரா. கோவிந்தசாமி –பக்.52 –ரூ.12 – கவிஞர் தமிழ்த் தென்றல், 5, சபாபதி வீதி, கே.கே.புதூர், கோயம்புத்தூர்–641 038)

நல்ல நோக்கத்துடன் எழுதப்பட்டவை.

### 1990 ராசிபலன்
(புலியூர் பாலு –பக்.80 –ரூ.5·75 –பாரதி பதிப்பகம், 108, உஸ்மான் சாலை, சென்னை–600 017)

சோதிடப் புத்தகம்

### 1. அரசு என்றால் என்ன?
(மொழிபெயர்ப்பு: நா. தர்மராஜன் – பக்.164 –ரூ.6 –யு.எஸ்.எஸ்.ஆர். புக் சென்டர்)

மார்க்சிய – லெனினியக் கண் ணோட்டத்தில் ஆய்வு. அரசாங்கம் எப்படி உருவாகிறது? பூர்ஷ்வா அரசுகளின் தன்மை என்ன? சோஷலிஸ்டு அரசு எப்படிப்பட்டது?

### 2. பி. எங்கெல்ஸ் எழுதிய ''லூத்விக் ஃபாயர்பாகும் மூலச் சிறப்புள்ள ஜெர்மன் தத்துவ ஞானத்தின் முடிவும்''
(மொழிபெயர்ப்பு: இரா. பாஸ்கரன் – பக்.148 –ரூ.6 –இரண்டு புத்தகங்களும்: யு.எஸ்.எஸ்.ஆர். புக் சென்டர், 553, மவுண்ட் ரோடு, சென்னை–600 018)

டென்மார்க்கைச் சேர்ந்த தத்துவ ஞானியின் நூலைப் பற்றி எங்கெல்ஸ் ஏன் விரிவான விமரிசனம் எழுதினார் என்று விளக்கம்.

### பாகவதத் தேன்துளிகள்
(பாணன் –பக்.124 –ரூ.10 –வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, சென்னை–600 017)

பாகவதத்தில் உள்ள சில சுவையான நிகழ்ச்சிகள்.

### 1. திருக்குறள் முத்து
(ஆ.வே. இராமசாமி –பக்.88 –ரூ.9 – திருவள்ளுவர்)

திருக்குறளின் பாக்களில் உள்ள பல்வேறு நயங்களைக் கூறுகிறது.

### 2. வாழ்க்கையில் முன்னேறுவது எப்படி?
(ஆ.வே. இராமசாமி –பக்.92 –ரூ.9 –இரண்டு புத்தகங்களும் திருவள்ளுவர் பதிப்பகம், வைரிசெட்டிப் பாளையம், திருச்சி மாவட் டம்–621 012)

தமிழ்நாட்டு, வெளி நாட்டு அறிஞர்களின் பொன்மொழிகள், வாழ்க்கை அனுபவங்கள், இவற்றின் அடிப்படையில் முன்னேற்றத்துக்கான கருத்துக்கள்.

பாரதிதாசன் படைப்புத்திறன்



''அஜாருதீன் நியுசிலந்திலே ஆடறைப் பற்றி இன்னி ஹிந்துவிலே ஏதாவது வந்திருக்கா?''

''என்ன அத்தனை ஆர்வம்?''

''நியுசிலந்துக்கு ஸ்பெல்லிங் தெரியணும்.''

—க.ர.

''எவனோ பிராடு எழுதின கடிதத்தை அலட்சியப்படுத்தும்மா. இறந்தவன் வருகிறது எல்லாம் இந்த நூற்றாண்டில் நம்புவதற்கில்லே.''

மறுநாள், ''அம்மா, இந்தக் கடிதத்தை இன்ஸ்பெக்டர் கிட்டே கொடுக்காமலே வந்துட்டியா?'' என்று நீட்டிய கடிதத்தை வாங்கிப் பார்த்து அதிர்ந்து போனாள் ரேணுகா.

'இறந்தவன் இருக்கிறேன்' என்று துவங்கியது கடிதம்.

காரில் போகும் போதெல்லாம் சாரிகாவின் மனத்தில் கேள்வி உறுத்தியது. அம்மாவின் புலம்பல். 'ஐயோ! உனக்கும் வந்துவிட்டதா? அந்த ரகோத்தமன் சொன்னானே இந்தக் கடிதம் கிடைத்த சில நிமிடத்தில் மரணம் சம்பவிக்கும் என்று. உன்னை வெளியே போக விட மாட்டேன்.''

ஸ்டூடியோ வாசலில் வித்தியாசமான ஆள் தெரிந்தான். தானாக நெருங்கி வந்து சொன்னான். ''அது உன் அம்மாவுக்கு அனுப்பிய கடிதம். அதை நீ ஏன் கொண்டு வந்தாய்? அதை நீ வைத்திருக்கக் கூடாது. அனுப்பி விடு.''

கடிதத்தை நீட்டினாள். ''...யே கொண்டு போய்க் கொடுத்து விடேன்.''

''நோ. நான் கொண்டு போகக் கூடாது. வாங்கவும் கூடாது. இதை வைத்திருக்கும் நபருக்குத்தான் உடனே மரணம் சம்பவிக்கும்.''

''அதெல்லாம் நம்பமாட்டேன். அரை மணி நேரமாக வைத்திருக்கிறேன். என்ன செத்தா போய்விட்டேன்?'' கைப் பைக்குள் போட்டுக்கொண்டு செட் உள்ளே போனாள்.

பின்தொடர்ந்த ரகோத்தமனை நிறுத்தினாள்.

வந்து நின்ற காரிலிருந்து இறங்கிய ரேணுகாவிடம் ஓடினார் ரகோத்தமன். ''அது உனக்காக வைக்கப்பட்ட கடிதம். அநியாயமாக உன் மகள் சாகப் போகிறாள். வாங்கு. அதை வாங்கு....'' அலறினார். ''வாங்கு!'' என்றவர் ரேணுகாவைத் தொடர்ந்து செட்டுக்குள் போனார்.

ராட்சத விளக்குகள் எரிய காமெராவுக்கு முகத்தைக் காட்டிக் கவலையே இல்லாமல் சிரித்துக் கொண்டிருந்தாள் அந்தச் சாரிகா. ''உட்காரும்மா, இதோ வரேன்.''

''மகளே. அவசரம். ஒரு நிமிஷம் வாயேன். ப்ளீஸ், டைரக்டர் சார்....''

''இரும்மா. அந்த அவர் சமாசாரம்தானே? பத்து நிமிஷம் இந்த ஷாட் முடிந்ததும் வரேன். அவரை என் நாற்காலியில் உட்காரச் சொல்.''

அவளுக்குப் பின்னாலிருந்த ராட்சத ப்ரூட் லாம்ப் மிக அபாயகரமாக ஆடியது.

அவள் பெயர் பொறித்த நாற்காலியில் அமரப்போன ரகோத்தமன் அங்கே இருந்த சாரிகாவின் கைப்பையை எடுத்து மடியில் வைத்துக் கொள்ள—டான்ஸ் மூவ்மெண்ட்டுக்காக அந்த சாரிகா விலகிப் போக அந்த ப்ரூட் லாம்ப் கனமான ஸ்லோமோஷனுடன் சாய, அதன் முகப்பு போகுமிடத்தில் அந்த ரகோத்தமன் இருந்தான். கையில் பையுடன், அதனுள்ளே கடிதத்துடன்.




# 27

மூலம்:
டானியேல்
ஸ்டீல்

'இப்போதும்கூட நான்ஸியைக் காதலித்துக் கொண்டுதான் இருக்கிறீர்களா?' என்று வெண்டி கேட்டதும், நீண்ட நிமிடங்களுக்கு மைக்கேல் மௌனமாக இருந்தான். பிறகு மெல்லத் தலையை அசைத்தான். அவன் கண்களில் கண்ணீர் தளும்பி நின்றது. ஏதும் பேசாதவனாக எழுந்துகொண்டு அடுத்த அறைக்குச் சென்று உடைகளை மாற்றிக் கொண்டான்.

சமையலறையின் மூலையில் இருந்த முக்காலியில் தொற்றினாற் போல் வெண்டி உட்கார்ந்து கொண்டு, அவன் கண்களில் பார்த்த வேதனையைப் பற்றி யோசனை செய்தாள்.

உடையணிந்துகொண்டு அவன் திரும்பி வந்தபோதுகூட வெண்டி தன் சிந்தனையிலேயே ஆழ்ந்தவாறு உட்கார்ந்திருந்தாள். ஏறிட்டு அவனை நோக்கியபோது அவளுக்கு ஆச்சரியமே ஏற்பட்டது.

அலுவலகத்துக்குச் செல்லத் தயாராய் அவன் உடை மாற்றிக் கொண்டிருந்தான். ஒரு கையில் அவனுடைய சூட்கேஸ் இருந்தது. மறு கையில் ஸ்வெட்டரை மடித்துப் போட்டுக் கொண்டிருந்தான்.

இன்றைக்கு ஞாயிற்றுக் கிழமை. அப்படியும் ஆபீசுக்குப் போகிறான். அது மட்டுமல்ல. ராத்திரி வெகுநேரம் அங்கேயேதான் தங்கியிருக்கப் போகிறான். அதற்காகத்தான் அந்த ஸ்வெட்டர் என்று அவளுக்குப் புரிந்தது.

மனமிடிந்து போனாலும், ''நாளை உங்களைச் சந்திக்கலாம் இல்லையா?'' என்று கேட்டாள். அப்படிக் கேட்டதைப் பற்றி அவளுக்குத் தன்மீதே கோபம் வந்தது. வெறும் கேள்வியல்ல, இவனிடம் பிச்சை கேட்கிறோம் என்று வெறுப்பு ஏற்பட்டது. 'சே! என்ன மனிதன் இவன்!' என்று எண்ணிக் கொண்டாள்.

'ஊகூம்' என்கிற மாதிரி அவன் தலையசைத்தது அவள் வெறுப்பை இன்னும் அதிகரித்தது.

''ராத்திரி இரண்டு மணி மூன்று மணி வரையில் எனக்கு ஆபீசில் வேலை இருக்கும். அதன் பிறகு என் ஜாகைக்குத் திரும்ப வேண்டும். நாளைக்குத் தேவையான துணிமணிகள் அங்கேதான் இருக்கிறது,'' என்றான்.

சற்று முன்னால் அவனிடமிருந்த மென்மை போய்விட்டது. வழக்கமான முரட்டுத்தனம் குடியிருந்தது. பழைய மைக்கேலாக— யதார்த்தத்திலிருந்து நழுவியோடும் மைக்கேலாக— அவன் மீண்டும்

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்

மாறிவிட்டான்.

''இவ்வளவுதான் இவன். இத்தோடு நம் கையை விட்டுப் போய்விட்டான்!' என்று தெரிந்தது அவளுக்கு. அப்படியும்கூட அவனை விட்டுவிட மனம் வரவில்லை.

''ஆபீசில் பார்க்கிறேன்,'' என்றாள் அவளாகவே.

தன் வருத்தம் குரலில் தென் பட்டு விடாமல் பாடுபட்டு அடக்கிக் கொண்டாள். சிறிது புன்னகை செய்யக்கூட முயன்று, வாசல்வரை சென்று அவனை வழியனுப்பினாள்.

அவன் சும்மாவானும் அவள் நெற்றியில் வேகமாக ஒரு முத்தத்தைப் பதித்துவிட்டு விரைந்து சென்றான். திரும்பிப் பார்க்காமலே நடந்தான்.

வெண்டி உள்ளே திரும்பிக் கதவைச் சாத்திக்கொண்டாள்.

அழுகை உடைத்துக்கொண்டு வந்தது. மைக்கேலை இழந்தாயிற்று என்று அவளுக்கு நிச்சயமாகவே புரிந்தது.

அங்கே சான் பிரான்ஸிஸ்கோவில் டாக்டர் பீட்டருடன் காரில் சென்று கொண்டிருந் தாள் நான்ஸி.

இப்போதெல்லாம் ஒவ் வொரு ஞாயிறன்றும் அவர்கள் வெளியே செல்வது வழக்க மாயிருந்தது. காலை பதினொரு மணிக்கெல்லாம் அவள் வீட்டுக்கு வந்து அழைத்துப் போனார் பீட்டர்.

சாலையில் போக்குவரத்தே இல்லை. ஆகாயத்தில் பறக்கிற மாதிரி நான்ஸியின் உள்ளத்தில் ஓர் உல்லாசம் ஏற்பட்டிருந்தது. டாக்டர் பீட்டருடன் ஓட்டலுக்குச் செல்வதும், சாப்பிடுவதும், கடற் கரைக்குப் போவதும், தங்கள் தங்கள் பழைய கதைகளைப் பரி மாறிக் கொள்வதும் வாடிக்கையாக இருந்தது. அந்த வாடிக்கை நான் ஸிக்குப் பிடித்திருந்தது. டாக்டர்



பீட்டரினால் அவள் வாழ்க்கையே மாறிக் கொண்டிருந்தது. தன்னுடைய பழைய கனவுகள் மெய்யாகவும், புதிய புதிய கனவுகள் பூக்கவும் டாக்டர் பீட்டர் பாடுபடுகிறார் என்பது அவளுக்குப் புரிந்தது.

இன்று கிராமப்புறத்திலிருந்த ஒரு சிற்றுண்டிச் சாலையில் அவர்கள் மதிய உணவு சாப்பிட்டார்கள்.

முகத்தின் மேல்பகுதியில் கட்டு இருந்த போதிலும், அதை மறைக்க வினோதமான தொப்பிகளை அணிந்த போதிலும், வாழ்க்கையில் ஒரு பிடிப்பு ஏற்பட்டிருந்தது அவளுக்கு.

கண்களைச் சுற்றிய பகுதிகளில் மட்டுமே கட்டுப் போடப்பட்டிருந்தது இப்போது. அதற்காக் கறுப்புக் கண்ணாடி அணிந்திருந்தாள். நெற்றியின் பெரும் பகுதியும் மறைந்திருந்தது.

அப்படியும்கூட அவள் முகம் அலாதி அழகுடன் பிரகாசித்தது. டாக்டர் பீட்டர் அற்புதம் விளைவித்திருந்தார் அவள் முகத்தில். கண்ணாடியில் பார்க்கும்போதெல்லாம் தான் எவ்வளவு பெரிய அழகியாக மாறிக் கொண்டிருக்கிறோம் என்று அவள் உணர்ந்தாள். அதன் பயனாக அவள் உள்ளத்தில் தன்னம்பிக்கை ஊற்றெடுத்தது. அவள் மிக நாகரிகமான, பிரகாசமான உடைகளை அணிந்தாள். எடை குறைந்து, அவள் நடையில் ஒரு துள்ளல் உண்டாகியிருந்தது.

பயிற்சி காரணமாக அவள் குரலும் மாறியிருந்தது. புதிய குரலில் பேசுவதே இன்பமாக இருந்தது.

மொத்தத்தில் தானொரு புதுப் பிறவி எடுத்துக்கொண்டு வருவதில் மனம் மகிழ்ந்தாள்.

ஒயின் அருந்துகையில், ''உங்களுக்கு ஒன்று சொல்லட்டுமா டாக்டர்? என் பெயரைக் கூட மாற்றிக் கொள்ளலாம் என்று பார்க்கிறேன்,'' என்றாள். முன்னொரு நாள் இதே விஷயத்தை அல்லிஸனுடன் பேசியபோது ஏனோ அசட்டுத்தனமாக இருந்தது நினைவு வந்தது. டாக்டர் பீட்டரிடம் ஏன் அதே விஷயத்தை இப்போது சொன்னோம் என்று நினைத்துக் கொண்டாள்.

ஆனால் ஒரே வினாடியில் அவளை உற்சாகமூட்டினார் அவர். ''ஓ! நீ இப்ப முழுக்க முழுக்கப் புதுமைப் பெண்ணாக மாறியிருக்கிறாய். ஒரு புதுப் பெயரும் இருப்பது பொருத்தம்தானே? என்ன தப்பு?'' என்றவர், ''ஏதாவது பெயர் யோசித்து வைத்திருக்கிறாயா? சொல்லு,'' என்றார்.

''தீர்மானம் எதுவும் பண்ணவில்லை. ஆனால்... மேரி என்று வைத்துக் கொள்ளலாமா என்று...''

ஒரு நிமிடம் யோசனை செய்தவர், ''நல்ல பெயர்தான். எனக்குப் பிடித்திருக்கிறது. ஏன்




அந்தப் பெயரைத் தேர்ந்தெடுத்தாய்?'' என்றார்.

''அது என் அம்மாவின் பெயர். அனாதை விடுதியில் என்னைப் பிரியமாய்க் கவனித்துக் கொண்ட கன்யாஸ்திரீயின் பெயரும் அதுதான்.''

''பிரமாதம்!'' என்று பாராட்டினார் டாக்டர்.

மேரிக்குச் சந்தோஷமாயிருந்தது. ஒரு புன்னகையுடன் நாற்காலியில் சாய்ந்து கொண்டாள்.

மேரி! தனக்குள் சொல்லிப் பார்த்துக் கொண்டாள். மன நிறைவு ஏற்பட்டது.

டாக்டர் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு புகையை வெளியேற்றியவாறு, ''பெயரை என்றிலிருந்து மாற்றிக்கொள்ள எண்ணியிருக்கிறாய்?'' என்று கேட்டார்.

''தெரியவில்லை...''

''இன்றைக்கே இப்போதே மாற்றிக்கொள். புதுப் பெயர் பழக்கமானால் நல்லதுதானே மேரி?'' பேசப் பேச அவருக்கு உற்சாகம் பீரிட்டது. ''போட்டோ எடுக்க ஆரம்பித்திருக்கிறாயல்லவா! அந்தத் தொழிலுக்கு உன் புதுப் பெயரை வைத்துக் கொள்ளலாமே?''

''தொழிலா!'' நான்ஸி சிரித்தாள். டாக்டருடைய தீவிரம் அவளுக்கு வேடிக்கையாக இருந்தது. ''புகைப்படம் எடுத்து உங்களுக்கும் அல்லிஸனுக்கும் கொடுத்துக் கொண்டிருக்கிறேன். அதற்குப் பெயர் தொழிலா?''

''இதுவரை அப்படி இருந்தாய் போதும். உன் எல்லைகளை இனி விரிவுபடுத்திக்கொள்.''

முன்பே பலமுறை இப்படிச் சொல்லியிருந்தார் டாக்டர். மெல்லிய புன்சிரிப்புடன் உறுதியாகத் தலையசைத்தாள் நான்ஸி.

---



''பிரம்மச்சாரி (பேச்சிலர்) விபத்திலே செத்துட்டா என்ன ஆவான்?''

''பேய்ச்சிலர் ஆவான்!''

''என்ன, இந்தப் பேய், கையிலே செக் வச்சிட்டு, பாங்க் வாசல்லே அழுதுகிட்டு நிக்குது?''

''அதுக்கு அந்த பாங்க்லே அக்கௌவுண்ட் கிடையாது. ஆனால் யாரோ, அகௌண்ட் பேயி செக் கொடுத்துட்டாங்க!''

மகள் பேய்: அம்மா, நான் பெண்கள் காலேஜ் பக்கம் பேய்ட்டு வர்றேன்!

''என்னங்க, இந்த ஓட்டல்லே காப்பி டம்ளரும், இட்லியும் இப்படிப் பறக்குதே?''

''ஆவி பறக்கும் இட்லி, காப்பி கிடைக்கும்னு போர்டிலே போட்டிருக்கே, அதுதான்!''



அப்பா பேய்: ஏண்டி, பொண்டாட்டியா நீ? என் மகளுக்குக் கல்யாணம் செய்ய மனுசனா அலையறேன்! ஒரு வாய் ஆவி பறக்கற காப்பி தர முடியலையா?

—பாமாஜி



''வேண்டாம் டாக்டர். இதைப் பற்றி நாம் பேச வேண்டாம்.''

''நீ சரியென்று சொல்கிற வரையில் நான் சொல்லிக் கொண்டு தான் இருப்பேன்.'' டாக்டர் பீட்டர் பிடிவாதமான குரலில் தொடர்ந்தார். ''இதோ பார், நான்ஸி. உன் திறமையை நீ வீணடிக்கக் கூடாது. நீ ஓவியம் தீட்டினாலும் சரி, புகைப்படம் எடுத்தாலும் சரி, உன்னுள் இருக்கும் கலைத் திறனை நீ வெளிக் கொணரத்தான் வேண்டும். நீ எடுத்த புகைப்படங்களை வைத்து ஒரு கண்காட்சி நடத்தலாமே?''

''டாக்டர்!'' மேஜை மீதிருந்த பானத்தை எடுத்து மடக்கென்று குடித்தாள் நான்ஸி.

கண்காட்சி!

முன்பு நடத்திய ஓவியக் கண்காட்சியும் அங்கு வந்த மைக்கேலும்...

அவள் நெஞ்சில் வேதனை பாய்ந்தது.

''வேண்டாம் டாக்டர்! நான் கண்காட்சிகள் நடத்தியதெல்லாம் போதும்!''

டாக்டர் அதட்டலாய்ச் சொன்னார்.

''சரி, என்னையே போட்டோ எடுத்துக்கொண்டு இரு. என்னிடமே கொடுத்துக் கொண்டிரு! அதுதான் உன் வாழ்க்கை என்றால் நான் என்ன பண்ண முடியும்?''

''வந்து... நான்...''

அவர் மென்மையாகப் புன்னகை செய்து அவள் கையை மெல்லத் தட்டிக் கொடுத்தார். ''நான்ஸி, உன்னிடம் ஏகப்பட்ட திறமை இருக்கிறது. கஞ்சத்தனமாய் அதைப் பூட்டி வைக்காதே. ஒளித்து வைக்காதே. அது உனக்கே நியாயமில்லை. உன் புகைப்படங்களை வைத்து ஒரு கண்காட்சி நடத்து. 'புகைப்படங்கள் எடுத்தவர் மேரி,' என்று விளம்பரம் செய்து கொள். அந்தப் பெயரில் உன்னை யாருக்கும் தெரியாது. புகைப்படக் கண்காட்சி வெற்றி பெறவில்லையென்றால் மேரி என்கிற பெயரை விட்டுவிடு. பழையபடி எனக்காகவே படம் எடுத்துக் கொண்டிரு. எப்படியானாலும் முயற்சி செய்யாமலிருக்காதே. உனக்கு நீயே ஒரு சந்தர்ப்பம் கொடு.''

அவருடைய குரலில் இருந்த கெஞ்சல் அவளை இளக்கியது. புதிய பெயரில் தன்னை யாருக்கும் தெரியாது என்ற அவருடைய வாதம் யோசிக்க வைத்தது. புதிய பெயரில் புதிய வாழ்க்கை ஆரம்பிக்கலாம்...

இருந்த போதிலும் ஏதோ ஒன்று அவள் நரம்புகளை உறைய வைத்தது. மறுபடியும் கலை வாழ்க்கை... கண்காட்சி...

மைக்கேல் அவள் கண்முன் வந்து நின்றான்.

(தொடரும்)

---

''அந்தப் பெண்ணுக்கும் அந்த ஆளுக்கும் என்ன தகராறு?''

''செத்துப்போன அவள் புருசனுக்குப் பதிலா இவரு கள்ள ஓட்டு போட்டுட்டாராம். இனிமேல் நான் உன் கூடத்தான் வாழ்வேன்னு அடம் பிடிக்கிறாளாம்.''

—சிங்கை சிகாமணி



''ராமேசுவரம் போகலாம்னு இருக்கேன்.''

''குழந்தைக்காகவா?''

''இல்லே. இலவசமா துப்பாக்கி கிடைக்குமேன்னு.''





என்றைக்காவது ஒரு நாள் நாங்கள் இருவரும் சந்தித்தால்கூட எங்களைப் பிணைக்கக் கூடியது எதுவுமில்லை என்பது புரிந்து விடும்... வெறும் கனவுகள்....

# 28

''என்ன மேரி, நான் சொன்ன விஷயம் சரிதானே மேரி?'' என்று டாக்டர் பீட்டர் மறுபடியும் கேட்டார்.

வேண்டுமென்றே 'மேரி' என்று தன்னுடைய புதுப் பெயரால் கூப்பிடுகிறார் என்று நான்ஸிக்குப் புரிந்தது.

மறுபடியும் ஒரு கலை வாழ்க்கையா! ஓவியங்கள் தீட்டுவதற்குப் பதில் புகைப்படங்கள் எடுத்து, அந்தப் புகைப் படங்களை வைத்துக் கண்காட்சி நடத்துவதா!

''யோசனை செய்கிறேன் டாக்டர்,'' என்றாள்.

முதல் தடவையாய் அவள் இறங்கி வந்தது பீட்டருக்கு மிகிழ்ச்சியாக இருந்தது. ''யோசனை என்ன மேரி? சரியென்று சொல்லு,'' என்றார்.

''இத்தனை வருஷங்களாக இருந்த பெயரை மாற்றிக்கொண்டு புதுப் பெயர் வைத்துக் கொள்வது என்னவோ போலிருக்கிறது.''

''ஏன்? உனக்கு ஒரு புதிய முகம் கிடைத்திருக்கிறதே, அதுகூட என்னவோ போல்தான் இருக்கிறதா?''

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

மூலம்: டானியல் ஸ்டீல்

''சே, சே! நீங்களும் அல்லிஸனும் செய்த உதவியால் இந்தப் புதுமுகம் கிடைத்திருக்கிறது,'' என்றாள் நான்ஸி. இவ்வளவு அழகான முகம் கிடைப்பதற்காக ஒவ்வொரு பெண் உயிரையே கொடுத்திருப்பாள் என்று அவள் உணர்ந்திருந்தாள். இருந்தாலும் தன் நன்றியை வார்த்தையால் சொல்லத் தெரியவில்லை.

''இனிமேல் உன்னை நான் மேரி என்றே கூப்பிடுகிறேன். வாய்த் தவறுதலாக நான்ஸி என்று கூறி விட்டால் என் காலை ஒரு மிதி மிதி!''

''காமெராவினாலேயே உங்கள் முதுகில் ஒன்று போடுகிறேன்!'' என்று அவள் சிரித்தாள்.

ஓட்டலில் உணவை முடித்துக் கொண்டு இருவரும் வெளியே நடந்தார்கள். கடைகளின் வாசலில் நின்று வேடிக்கை பார்ப்பதும், சில சமயம் உள்ளே போய்ப் பிடித்ததை வாங்குவதுமாக, மனத்தில் உல்லாசம் நிறைந்திருந்தது அவளுக்கு.

அவளுடைய நாய்க்குட்டி ஃப்ரெட் அவர்களுக்கு முன்னால் துள்ளித் துள்ளி ஓடிக் கொண்டிருந்தது. இப்போதெல்லாம் அதற்கு அவளுடைய நடவடிக்கைகள் பழக்கமாகி விட்டன. அவள் கடைக்குள் நுழைந்தால் அவள் திரும்பி வரும் வரையில் காருக்குள் சாதுவாய் உட்கார்ந்து கொண்டிருக்கும். நடந்து சென்றால் கூடவே புறப்படும்.

ஒரு மணி நேரம் நடந்த பிறகு டாக்டர் பீட்டர் அவளை உற்று நோக்கினார். ''களைப்பாயிருக்கிறதா?'' என்று கேட்டார். அவளுக்குத் தேகத்தில் பலம் வருவதற்காகப் பலவகையான உடற்

பயிற்சிகளை அவர் கொடுத்து வந்தார். இருந்தாலும்கூட அவளுக்கு அடிக்கடி சோர்வு ஏற்படுவதையும் கவனித்தார். விபத்து ஏற்பட்ட பிறகு இந்தப் பதினேழு மாத காலத்தில் அவளுக்குப் பதினாறு ஆபரேஷன் நடந்திருந்தது. இன்னும் ஒரு வருடம் போனால், களைப்பு என்பதையே அறியாத பலசாலியாகி விடுவது நிச்சயம்.

''என்ன, திரும்பலாமா?'' என்றார்.

''ஆமாம், டாக்டர்.''

அவர் அவள் முகத்தை நோக்கி, ''இன்னும் ஒரு வருஷம் தான். பிறகு நீ என்னை எந்தப் பந்தயத்திலும் தோற்கடித்து விடுவாய். காரணம், என்னிடம் இல்லாத ஒரு அனுகூலம் உன்னிடம் இருக்கிறது,'' என்றார்.

''என்ன அனுகூலம்?''

''இளமை.''

''உங்களுக்கும்தான் இளமை இருக்கிறது.'' என்று அவள் சொன்னதும் டாக்டர் சிரித்து விட்டார். ஆனால் தனக்கும் அவளுக்கும் இருபது வருட வித்தியாசம் இருப்பதை அவர் மறக்கவில்லை. கண்களில் சோகம் படர, ''நான்ஸி...'' என்றார் மெல்ல. மேரி என்ற அவளுடைய புதுப் பெயர் ஒரு வினாடி மறந்துவிட்டது அவருக்கு.

''என்ன டாக்டர்?''



''அவனை... மைக்கேலை இப்போதும் நினைத்துக்கொண்டு தான் இருக்கிறாயா?''

அவர் பார்வையில் தென்பட்ட வேதனையைக் கண்டதும், ''இல்லை... இல்லை...' என்று சொல்ல வேண்டும் போலிருந்தது அவளுக்கு. ஆனால் அவளால் பொய் சொல்ல முடியவில்லை. குப்பென்று தன் கண்களில் கண்ணீர் பொங்குவதை அறிந்து அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது.

''ஆமாம் டாக்டர்... எப்போதும் மைக்கேல் நினைவாகவே இருக்கவில்லை. ஆனால் அடிக்கடி நினைத்துக் கொண்டிருக்கிறேன்,'' என்றாள்.

''இப்போதும்கூட அவன் மீது உனக்குக் காதல் இருக்கிறதா?''

அதற்குப் பதில் சொல்லுமுன் அவர் முகத்தை ஆழ்ந்து கவனித்தாள் அவள். ''தெரியவில்லை, டாக்டர். அவனும் நானும் வாழ்ந்த வாழ்க்கை... அந்த நாட்கள்... அடிக்கடி ஞாபகம் வருகிறது. ஆனால் அதற்கெல்லாம் இனிமேல் அர்த்தம் கிடையாது. அன்று இருந்த பெண்ணல்ல நான். மாறிவிட்டேன். அவனும் மாறியிருப்பான். அந்தக் கார் விபத்து நிச்சயமாய் அவன் மனசில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியிருக்கும். என்றைக்காவது ஒரு நாள் நாங்கள் இருவரும் சந்தித்தால் கூட எங்களைப் பிணைக்கக் கூடியது ஏதுவுமில்லை என்பது புரிந்துவிடும்... வெறும் கனவுகள்... அதுதான மிஞ்சியிருக்கிறது இப்போது. சில சமயம் எனக்கு என்ன தோன்றுகிறது தெரியுமா?''

''என்ன?''

''அவனை ஒருமுறை நேரில் பார்த்துவிட்டால், அத்தோடு எல்லாம் முடிந்து விடும் என்று தோன்றுகிறது. மனசில் கொஞ்சநஞ்சம் இருக்கும் காதலும் அத்துடன் ஒழிந்து விடும் என்று நினைக்கிறேன். ஆனால் அவனை நான் இனிமேல் பார்க்கப் போவதேயில்லை.'' குரலில் உறுதியை வரவழைத்துக்குக் கொண்டு மீண்டும் சொன்னாள். ''என் கனவுகளையெல்லாம் மறந்து விட வேண்டியது தான்.''

''அது அவ்வளவு சுலபமில்லை,'' என்றார் பீட்டர்.

அவர் குரலில் ஒரு துயரம் தெரிவதை அவள் உணர்ந்தாள். தனக்கு நேரிட்ட மாதிரியே அவருக்கும் காதல் தோல்வி ஏற்பட்டிருக்குமோ என்று தோன்றியது. அதனால்தான் நம் மனத்தை இவரால் நன்கு புரிந்துகொள்ள முடிகிறதோ?

''டாக்டர், நீங்கள் ஏன் கல்யாணம் செய்து கொள்ளாமலே இருக்கிறீர்கள்? நான கேட்பது தப்பானால் மன்னியுங்கள்.''

''தப்பு ஒன்றுமில்லை. நான் சுயநலக்காரன். எனக்கு என் தொழில்தான் முக்கியம். கல்யாணம் செய்து கொண்டு வீட்டோடு உட்கார்ந்து கொள்ள என்னால் முடியாது. அவ்வளவுதான்.''

## போட்டி முடிவு

கங்கை அமரன், வைரமுத்து, நா. காமராசன், மு. மேத்தா இந்தக் கவிஞர்களில் ஆங்கிலத்திலும் எழுதிய சினிமாப் பாடலாசிரியர்கள் யார், யார்?

விடை: வைரமுத்து, கங்கை அமரன்.

குலுக்கலில் பரிசு பெற்றவர்:
கே. அந்தோணி ராஜ்
வெள்ளாலிய கோட்டை



''ஊகூம். நான் நம்ப மாட்டேன். வேறே ஏதோ ஒன்று இருக்கிறது.''

அவள் கண்ணிமைக்காமல் அவரைப் பார்த்தாள். பீட்டர் புன்னகை செய்தார்.

நீண்ட நேரம் மௌனமாயிருந்த பிறகு மெதுவே சொன்னார்.

''ஒரு பெண்ணை நான் காதலித்தேன். அவளை முதல் முதலில் நான் பார்த்தது டாக்டர் என்ற முறையில். ஆமாம். அவள் நோயாளி. நானும் அவளும் காதலித்தோம். ஒருநாள், இரண்டு நாளல்ல— பன்னிரண்டு வருடங்கள்!''

''பன்னிரண்டு வருடம்?''

''ஆமாம். ஆனால் அவள் கல்யாணமானவள். அவள் கணவனும் ஒரு டாக்டர் தான். நானும் அவளும் எத்தனையோ திட்டங்கள் தீட்டினோம். அவள் விவாகரத்து செய்து என்னை மணப்பது என்று பல முறை தீர்மானித்தோம். ஆனால் அவளுடைய கணவன், அவளுடைய குடும்பம், என் தொழில்—இதையெல்லாம் யோசித்து ஒவ்வொரு முறையும் எங்கள் தீர்மானத்தை ஒத்திப் போட்டுக் கொண்டிருந்தோம். கடைசியில் ஒரு நாள்...''

''ஒரு நாள்?''

''அவள் இறந்து விட்டாள். நாலு வருஷமாகிறது.'' அதைச் சொல்கையில் அவர் கண்கணிலிருந்து நீர் வழிந்து கன்னங்களை நனைத்தது. ''அந்தத் துயரத்தில் நான் மூழ்கியிருந்தபோது தெம்பு கொடுத்தவள் டாக்டர் அல்லிஸன் தான். அதனால்தான் உனக்கும் அவளையே துணையாக இருக்கச் சொன்னேன்.''

''அவர் ஓர் அற்புதமான டாக்டர். நீங்களும்தான்,'' என்றாள் அவள். ''ஸாரி, டாக்டர். நான் உங்கள் துன்ப நினைவுகளை கிளறி விட்டுவிட்டேன்.''

''அதெல்லாமில்லை.'' டாக்டர் காரைக் கிளப்பினார். ஃப்ரெட் தாவியோடி வந்து அவள் மடியில் அமர்ந்து கொண்டது.

''உன் முகத்துக்குச் செய்ய வேண்டிய சிகிச்சைகள் இந்த வருஷக் கடைசிக்குள் முடிந்துவிடும். உன் புகைப் படங்களின் கண்காட்சியோடு நீ புது வருஷத்தை ஆரம்பிக்கலாம் என்ன?'' என்றார் பீட்டர்.

''செய்யலாம்,'' என்றாள் அவள். புகைப்படக் கண்காட்சி நடத்தும் யோசனை அவளுக்குப் பிடித்திருந்தது. மைக்கேலைப் பற்றி பீட்டரிடம் தான் பேசியதும் பீட்டர் தன்னுடைய காதல் கதையை அவளிடம் கூறியதும் ஏதோ ஒரு வகையில் அவள் மனசில் தைரியம் ஏற்படுத்தியிருந்தது. ''புகைப்படக் கண்காட்சியைப் பற்றி யோசனை செய்கிறேன் டாக்டர்...''

''யோசனை கீசனையெல்லாம் வேண்டாம்! எனக்கு வாக்குக் கொடு,'' என்றவர் செருகியிருந்த கார் சாவியை வெளியே எடுத்துத் தன் தொடையின் கீழே

## இதுதான்டா ரௌடி



**அ**மெரிக்காவில் பிரபல கள்ளச் சாராய ரௌடியாகத் திகழ்ந்த ஜான் டிவிஞ்சர், போலீசாரிடம் தான் சிக்காமலிருப்பதற்காக, தன் கைரேகைகளை மாற்றிக் கொண்டான். எப்படி?

திராவகத்தில் தன் கையைத் தோய்த்துக் கொண்டான். வாரக் கணக்கில் அந்தப் புண்ணின் வேதனையைப் பொறுத்துக் கொண்டான்.

ஆனால் என்ன துரதிர்ஷ்டம்!

புண் ஆறிய பிறகும் ரேகைகள் மாறவில்லை. பழையபடியே இருந்தன.

வைத்துக் கொண்டார். ''நீ சரியென்று சொன்னால்தான காரைக் கிளப்புவேன். இல்லா விட்டால், என்னிடமிருந்து பலவந்த மாகச் சாவியைப் பறித்து நீயேதான் ஓட்ட வேண்டும்.''

''வேண்டாம், வேண்டாம், புகைப்படக் கண்காட்சி நடத்த நான் ஒப்புக் கொள்கிறேன்.''

''அட, ரொம்ப சுலபமாய்ப் பணிந்து விட்டாயே?''

''அதிருக்கட்டும். கண்காட் சியை எப்படி நடத்துவது? ஏற் பாடெல்லாம்...''

''அந்தப் பொறுப்பை என்னிடம் விடு?'' என்றார் டாக்டர் பீட்டர்.

அவளை அவர் வீட்டு வாசலில் இறக்கிவிட்ட போது அந்தி கவிந்து கொண்டிருந்தது. அவளைப் பிரிகிறோமே என்று நினைக்கையில் டாக்டரின் உள்ளத்தில் சோகம் படர்ந்தது.

''நன்றாய்ப் படுத்துத் தூங்கு. நாளைக் காலை ஆஸ்பத் திரிக்கு வந்து விடவேண்டும்,'' என்றார். மறுநாள் அவள் முகத்தின் கட்டுக்களை மேலும் கொஞ்சம் அகற்ற வேண்டும். அடுத்த இரண்டு மாதத்தில் மேலும் சில ஆப ரேஷன்கள் இருக்கின்றன. டிசம்பருக்குள் அறுவைச் சிகிச் சைகள் முடிந்து விடும். அதன்பின் அவள் முகத்தில் எந்தத் திரையும், எந்தக் கட்டும் இருக்காது...

''உள்ளே வருகிறீர்களா டாக்டர்?'' என்று அவள் அழைத் தாள். 'இல்லை, பிறகு வருகிறேன்' என்று கூறியது ஏனோ அவளுக்கு நிம்மதி தந்தது.

கையாட்டி விடை கொடுத்த னுப்பியதும் வேகமாக வீட்டுக்குள் சென்றாள். சற்று முன் மனத்தில் ஏற்பட்டிருந்த ஓர் எண்ணம் அவள் நடையில் வேகம் கூட்டியது.

பரபரவென்று அலமாரியைத் திறந்து ஒரு பெரிய பையை எடுத்துத் தரையில் வைத்துக் கொண்டாள். அதன் ஜிப்பை நீக்கி, உள்ளிருந்ததை எடுத்துத் தன் முன் பிரித்து வைத்துக கொண்டாள்.

அது ஓர் ஓவியம். முற்றுப்பெறாத ஓவியம்.

இயற்கைக் காட்சி. அதில் ஒரு பெரிய மரம். அதன் மீது ஒரு சிறுவன் உட்கார்ந்திருக்கிறான்.

''இதை எப்போது பூர்த்தி செய்வாய்?'' என்று முன்னொரு நாள் மைக்கேல் கேட்டது அவளுக்கு நினைவு வந்தது.

ஓவியத்தைப் பூர்த்தி செய்து, தங்கள் திருமணத்தன்று மைக் கேலுக்குக் கல்யாணப் பரிசாக அதைக் கொடுக்க எண்ணி யிருந்தாள்.

பதினெட்டு மாதங்கள் ஓடி விட்டன.

இப்போது இந்த ஓவியத்தைப் பூர்த்தி செய்வதென்று தீர்மானித் தாள்–

டாக்டர் பீட்டருக்குப் பரிசு கொடுப்பதற்காக.

(தொடரும்)






ஆஸ்திரேலியாவில் மக்கள் கடற்கரைகளை அசுத்தப்படுத்தி விட் டார்கள். தற்போது கடற்கரை களைச் சுத்தப்படுத்துகிற இயக்கம் தொடங்கியிருக்கிறது. மக்கள் கவ னத்தை இழுப்பதற்காகக் கடற் கரைப் பக்கம் மீன் உருவத்தில் பலரை நடமாட விட்டிருக்கிறார்கள். மீனுக்கும் இதற்கும் என்ன சம் பந்தம்? உண்டு. மீன்கள், அசுத்தத் தைச் சுத்தப்படுத்துகின்றன.

–மா. சோமு



## உங்கள் பணச்செல்வாக்கு எவ்வாறு வளர்ச்சியுறுகிறது என பாருங்கள்...




**8500 க்கும்
அதிக இடங்களில்
ஒரே சமயத்தில்,
சென்ட்ரல்கார்டு
உதவியுடன்.**




# Centralcard

மேலும் விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள சென்ட்ரல் பாங்க் ஆஃப் இந்தியாவின் கிளையுடன் தொடர்பு கொள்ளவும்.

இட நல்லாதரவு: காட்டேஜ் இண்டஸ்ட்ரீஸ் எம்போரியம், கோலாபா, பம்பாய்.

# காதல் மேல் ஆணை

29

மூலம்:
டானியல் ஸ்டீல்

காலை நேரம் நல்ல குளிரும் பனியுமாக இருந்தது. மேரி (நான்ஸி) தன் அழகிய கோட்டை இழுத்துப் போர்த்துக்கொண்டு நடந்தாள். எப்போதும்போல ஃப்ரெட் துள்ளிக் குதித்துக் கொண்டு அவளுடன் கூடவே வந்தது.

அல்லிஸனின் கிளினிக்கை நோக்கிச் சென்று கொண்டிருந்த மேரிக்கு, அந்தக் குளிரிலும் பனியிலும் கூட, உற்சாகமாக இருந்தது. நாய்க் குட்டியைப் பார்த்துப் புன்னகை செய்தபடி அல்லிஸனின் அறைக்குள் நுழைந்தாள்.



''ஹலோ! நான் மேரி வந்திருக்கேன்!'' என்று அறிவித்துவிட்டு, அறையிலிருந்த பெரிய நிலைக் கண்ணாடி முன் நின்று தன்னை ஒரு முறை பார்த்துக் கொண்டாள். சில மாதங்களுக்கு முன்பு டாக்டர் பீட்டர் பரிசளித்த உடை எவ்வளவு நன்றாக இருக்கிறது!

தன் கண்களை அவள் கண்ணாடியில் பார்த்துக் கொள்வது இதுதான் முதல் தடவை. இப்போதெல்லாம் அவள் கறுப்புக் கண்ணாடி அணிவதில்லை. நெற்றியின் மேல் பகுதியில் இரண்டொரு மெல்லிய நாடா மட்டுமே இருந்தன. இன்னும் சில மாதங்களில் அதுவும் அகற்றப்பட்டு விடும். அத்துடன் சிகிச்சை முடிந்து விடுகிறது.

''என்ன, கண்ணாடியில் அழகாய்த் தெரிகிறாயா, நான்ஸி?'' குரல் கேட்டது.

அல்லிஸன் தன் பின்னால் நிற்பதையும் பிரியமாகப் புன்னகை செய்வதையும் மேரி கண்டாள். ''ஆமாம், அழகாகத்தான் தெரிகிறேன்,'' என்றாள். ''புதிய தோற்றம் எனக்குப் பழக்கமாகிவிட்டது. உங்களுக்குத்தான் இன்னும் பழக்கமாகவில்லை,'' என்றாள். உதட்டில் சிரிப்பும் கண்ணில் குறும்புத்தனமும் பளிச்சிட்டன.

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்

''என்ன சொல்கிறாய்?''

''இன்னும் என்னை நான்ஸி என்றே கூப்பிடுகிறீர்களே? இப்போது என் பெயர் மேரி.''

''ஸாரி. அடிக்கடி மறந்து போகிறது,'' என்றாள் அல்லிஸன்.

மேரி தான் வழக்கமாக உட்காரும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். ''பழைய விஷயங்களை மறப்பது கஷ்டமான காரியம்தான்.''

அதைச் சொல்லும்போது அவள் முகம் இறுகுவதை அல்லிஸன் கவனித்தாள். தன் மனத்தில் இருப்பதை அவள் மேலும் வெளிப்படுத்தட்டும் என்று காத்திருந்தாள்.

''பழைய நினைவுகளை மறக்க வேண்டும் என்று கொஞ்ச நாளாய் முயற்சி செய்து வருகிறேன். ஒரு வழியாய் அவனைப் பற்றிய எண்ணங்களை விட்டொழித்து விட்டேன்.'' கணப்பில் எரிந்து கொண்டிருந்த ஜ்வாலைகளைப் பார்த்தபடி மெதுவான குரலில் சொன்னாள் மேரி.

''அவன் என்றால்? மைக்கேலைச் சொல்கிறாயா?''

'ஆம்' என்று மேரி தலையை அசைத்து முகத்தை உயர்த்தினாள். அதில் ஒரு தீவிரம் தென்பட்டது.

''அவனை ஒரு வழியாய் மறந்து விட்டேன் என்று எப்படிச் சொல்கிறாய், மேரி?''

''நான் தீர்மானம் பண்ணி விட்டேன். அதனால் சொல்கிறேன். வேறு வழி? அந்தக் கார் விபத்து ஏற்பட்டு ஏறத்தாழ இரண்டு வருடம் ஆகப்போகிறது. கணக்காய்ச் சொல்வதென்றால் பத்தொன்பது மாதம் ஆகிவிட்டது. இன்னும் அவன் என்னைத் தேடி வரவில்லையே? என்ன வந்தாலும் சரி, என்னோடுதான் வாழ்வேன், எது வேண்டுமானாலும் பண்ணிக்கொள் என்று தன் அம்மாவிடம் சொல்லவில்லையே? நடந்தது நடந்தாயிற்று என்கிற மாதிரி விட்டுவிட்டானே?'' அல்லிஸனின் கண்களை நேருக்கு நேர் பார்த்தபடி அவள் சொன்னாள்: ''அவன் என்னை விட்டு விட்டான். நானும் அவனை விட்டுவிட வேண்டியதுதானே?''

''அது அவ்வளவு சுலபமில்லை. அவனை நீ ரொம்பக் காலமாகக் காதலித்து வந்திருக்கிறாய்.''

''ஆமாம். ரொம்பக் காலமாக. அப்படியிருந்தும்கூட அவன் என்னை மறந்து விட்டான்.''

''உன் மனசுக்கு இப்போது நிம்மதியாக இருக்கிறதா?''

''ஆமாம். முன்னெல்லாம் என் மீதே எனக்குக் கோபம் வரும். இப்போது அப்படியில்லை. அவன்மீது தான் கோபம் வருகிறது.''

''அவன் அம்மாவோடு ஒப்பந்தம் செய்து கொண்டாயே அதை எண்ணி உன்மீதே உனக்குக் கோபம் வரவில்லை?'' இந்தக் கேள்வி அவளை சங்கடப்படுத்தும் என்பதை உணர்ந்திருந்தும், மனத்தத்துவ சிகிச்சைக்காக வேண்டுமென்றே கேட்டாள் அல்லிஸன்.

''எனக்கு வேறு வழியிருக்கவில்லை.'' என்றாள் மேரி மீண்டும்.

''உன் மீதே உனக்கு வருத்தம் ஏற்படுமே? அதுவும் இல்லையா?''

''இல்லை. என்னைக் கைவிட்டதற்காக மைக்கேலுக்கு வருத்தம் இல்லாதபோது நான்மட்டும் எதற்காக வருத்தப்பட வேண்டும்? விபத்துக்குப் பிறகு என்னை வந்து பார்க்க வேண்டுமென்று ஒரு நாளாவது முயற்சி செய்திருப்பானா? என்னை நினைத்து ஒரு ராத்திரியாவது தூக்கமில்லாமல் தவித்திருப்பானா?''



''நீ மட்டும் ராத்திரியில் தூக்க மில்லாமல் தவிக்கிறாயா நான்ஸி?''

''மேரி என்று கூப்பிடுங்கள்!'' என்று எரிச்சலுடன் பதிலளித்தாள் அவள். ''நானொன்றும் தூக்க மில்லாமல் தவிக்கவில்லை. என் கனவுக் குப்பைகளுடன் போதுமென் கிற அளவுக்கு வாழ்ந்தாயிற்று. எல்லா வற்றையும் தூக்கி எறிந்து விட்டேன்.''

அவள் குரல் உறுதியாகத் தொனித்தது. இருந்தாலும் நிச்சயப் படுத்திக் கொள்ள விரும்பினாள் அல்லிஸன். ''சரி, இனிமேல்? மைக் கேலின் இடத்தை நிரப்பப் போகிறவர் யார்? டாக்டர் பீட்டரா?'' என்றாள்.

''இல்லை. நான் என் புதிய வாழ்க்கையில் இறங்கப் போகிறேன். —புகைப்படத் தொழிலில். நியூ மெக்ஸிகோவிற்குப் போக வேண்டு மென்று எனக்கு ரொம்ப நாளாக ஆசை. அங்கே சில அருமையான இடங்கள் இருக்கிறது. புகைப்படம் பிடிக்க அற்புதமான இடங்கள். திட்ட மெல்லாம் போட்டு வைத்திருக் கிறேன்.'' அவள் உற்சாகமாகப் பேசு கிற மாதிரிதான் இருந்தது. அதே சமயம் ஏதோ ஒரு சோகத்தை மறைப் பதற்காக முகத்தில் முகமூடி போட்டுக்கொண்ட மாதிரியும் தோன்றியது. மைக்கேலை இனி நினைக்கப் போவதில்லை என்று அவள் எடுத்துக்கொண்ட தீர்மானம் தான் அந்தச் சோகத்துக்குக் காரணம் என்று அல்லிஸன் புரிந்து கொண்டாள்.

''நான் திரும்பி வர மூன்று வார காலம் ஆகும், என்றாள் மேரி.

''அதற்குப் பிறகு?''

''வேலை, வேலை, வேலை தான்! அது ஒன்றுதான் என் மனசில் இருக்கிறது. என் புகைப்படக் கண் காட்சிக்கான எல்லா ஏற்பாடுகளும் செய்து வைப்பதாகப் பீட்டர் சொல்லி

யிருக்கிறார். ஜனவரி மாதம் கண் காட்சி நடக்கும். அந்தச் சமயம் நீங்கள் எங்கேயும் போய்விடக் கூடாது.''

''போக மாட்டேன்.''

''ஏற்கெனவே நான் நிறையப் போட்டோ எடுத்து விட்டேன். பீட்டரிடம் கூட இன்னும் காட்ட வில்லை. சில புகைப் படங்கள் அவருக்குப் பிடிக்கும் என்று நினைக் கிறேன்.''

''நான்ஸி, ஸாரி, மேரி, நீ எது எது செய்தாலும் பீட்டருக்குப் பிடிக்கும்,'' என்ற அல்லிஸன், அவளை உற்றுப் பார்த்துக் கேட்டாள்: ''ஏன் மேரி, மைக்கேலின் இடத்தைப் பீட்டர் நிரப்புவாரா?''

மேரி தயங்கினாள். ''மைக் கேலுக்குக் கொடுத்த இடத்தைப் பீட்டருக்குக் கொடுக்கலாமென்று தான் நானும் பார்க்கிறேன். முடிய வில்லை. எதுவோ ஒன்று என்னைத்



''நம்ம கபில், ஒரு கேட்சை ஒரு நொடியிலே கோட்டை விட்டுட்டார்!''

''அப்படியா? அப்புறம் 'ஸ்லோ மோஷனில்' காட்டும்போதுகூடப் பிடிக்கலியா?''

—ராஜா சிங்

தடுக்கிறது. அவர் என்னிடம் காட்டும் அன்பை என்னால் திருப்பிக் கொடுக்க முடியவில்லையே என்று எனக்குக் குற்ற உணர்வு ஏற்படுகிறது. அவர் எனக்காக எவ்வளவு செய்திருக் கிறார்....''

''டாக்டர் பீட்டர் ரொம்பப் பொறுமைசாலி.''

''ஆமாம். அதனால்தான் அவர் மனசைத் துன்புறுத்துகிறேனோ என்று வருத்தமாயிருக்கிறது,'' என்ற போது மேரியின் கண்கள் கலங்கின.

மெக்ஸிகோ செல்வதற்கான விமான டிக்கெட்டுடன் நடந்தபோது மேரியின் மனம், கடந்த இரண்டு வருட வாழ்க்கையை எண்ணிப் பார்த்தது.

இனி ஒரு புதிய வாழ்வு ஆரம்பமாகிறது. மேரி என்ற புதிய பெண் பிறந்து விட்டாள். நான்ஸி என்ற பெயர் போய்விட்டது. எல்லாருக்கும் அது மறந்து விட்டது.

ஆமாம். மைக்கேலே அந்தப் பெயரை மறந்தாயிற்று. நாம் மட்டும் எதற்கு அதை ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும்?

டிக்கெட்டுக்கான பணத்தைப் பெற்றுக் கொண்ட பெண், தன் எதிரில் நிற்கும் மேரியை ஏறிட்டுப் பார்த்தாள். வைத்த கண்ணை எடுக்க முடியாமல் பார்த்தபடியே இருந்தாள். மேரியின் பளீரென்ற புன்சிரிப்பு, ஒவ்வோர் அசைவிலும் தென்பட்ட ஒயில்—அங்கே இருந்த எல்லாரையுமே பிடித்து நிறுத்தியது. ‘யார் இந்த அழகுக் குமரி?’ என்று கேட்கிற மாதிரி ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டே நகர்ந்தார்கள்.

முகத்தில் புன்னகையும் நடையில் ஒரு துள்ளலுமாக, அருகிலிருந்த பல்பொருள் அங்காடிக்குள் நுழைந்தாள். ஏதாவது அழகான பொருள் வாங்கிக்கொள்ள வேண்டும் என்று தோன்றியது. ஒவ்வோர் இடமாகப் பார்த்துக்கொண்டே போனாள். தொப்பிகள், ப்ரேஸ்லட்கள், ஸ்கார்ஃபுகள், கைப் பைகள், ஜாக்கெட்கள், காலணிகள்—இப்படிப் பலவற்றை எடுத்து எடுத்துப் பார்த்தபடி நடந்தாள். கடைசியில் ஒரு வெள்ளைக் காஷ்மீர் ஸ்வெட்டரைத் தேர்ந்தெடுத்தாள். தன் மேனி நிறத்துக்கும் கருங் கூந்தலுக்கும் அது ரொம்ப மேட்சாக இருக்கும் என்று தோன்றியது. டாக்டர் பீட்டர் ரொம்பப் பாராட்டுவார் என்று எண்ணிக் கொண்டாள்.

இன்னொரு கடையை அடைந்தபோது ஒரு சாக்கலெட் பெட்டி வாங்கினாள். அதை அல்லிஸனுக்கு அனுப்பி வைக்கும்படி கடைக்காரரிடம் சொல்லி, பெட்டியுடனிருந்த கார்டில் ‘மிக்க நன்றி அல்லிஸன்’ என்று எழுதினாள்.

அந்தச் சமயத்தில்தான் அவள் சட்டென்று நின்றாள்.

பென்! மைக்கேலின் நண்பன் பென்!

அசல் அவனே தானா? அல்லது அவனுடைய ஆவியா?

கடைக்காரர் மீதிப் பணத்தைக் கொடுத்தபோது கூட, அவள் அதைக் கவனிக்காமல் வெறித்து அவனை நோக்கியபடியே நின்றாள்.

சில அடிகள் தூரத்தில் பென் நிற்கிறான்! பெண்களுக்கான பெட்டிகள் அடுக்கி வைக்கப்பட்டிருப்பதை ஆராய்ந்தபடி நிற்கிறான்!

யுகம் யுகமாகச் சிலையாகி விட்ட மாதிரி மேரி அசையாமல்



# காதல் மேல் ஆணை

தமிழில்: ரா.கி. ரங்கராஜன்

மூலம்: டேனியல் ஸ்டீல்

நின்றாள். பிறகு பென்னை நோக்கி நகர்ந்தாள்.

அவனை அருகில் போய்ப் பார்க்கவேண்டும் போல, தொட வேண்டும் போல, என்ன பேசுகிறான் என்பதைக் கேட்க வேண்டும் போல ஒரு பைத்தியக்கார ஆசை அவளுள் எழுந்தது. அவனுக்கு நம்மை அடையாளம் தெரியுமா என்று யோசித்தாள். அடையாளம் தெரிந்துகொண்டால் நன்றாயிருக்கும் என்றுகூட ஒரு வினாடி நினைத்தாள். ஆனால் அவனுக்குத் தன்னைத் தெரியப் போவதில்லை என்று நிச்சயமாகப் புலப்பட்டது.

அதுவும் நல்லதுதான். அவனுக்கு அருகிலேயே நிற்கலாம். எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் அவனைப் பார்த்துக் கொண்டிருக்கலாம்.

மைக்கேலை இவன் சந்தித்து எத்தனை நாளாகிறதோ? மைக்கேலின் நிறுவனத்தில் இவனுக்கு ஒரு வேலை போட்டுத் தரப் போவதாக இருந்ததே, அந்த வேலையை இவன் ஏற்றுக் கொண்டிருப்பானா?

இன்னும் நெருங்கிப் போய் நின்றவள், அவன் பார்த்துக் கொண்டிருந்த பெட்டிகளையே தானும் எடுத்துப் பார்த்தாள். ஆனால் அவனிடமிருந்து கண்ணை எடுக்கவில்லை.

சட்டென அவன் இவள் பக்கம் திரும்பினான். புன்னகை செய்தான். அவனுடைய வழக்கமான இனிய புன்னகை.

ஆனால் அவளை கடுகத்தனையும் அடையாளம் கண்டு கொள்ளவில்லை. மாறாக அவளுடைய அழகைக் கண்டு பிரமித்தவனாக, அவள் கையிலிருந்த நாய்க்குட்டி ஃப்ரெட்டைத் தட்டிக் கொடுத்தான். ''அழகான குட்டி,'' என்றான். அது குதித்தபடி ஓடியது.

அவனுடைய குரலை வெகு நாளைக்கப்புறம் கேட்டபோது அவளுக்குக் கால்கள் தளர்ந்தன. நாயைத் தட்டிக் கொடுத்த அவன் கைகள் தன் உடம்புக்கு வெகு அருகில் இருந்ததால் அவளுக்குள் ஒரு தெம்பு ஏற்பட்டது. பென்னைக் கண்டதால் தன் உள்ளம் இவ்வளவு பாடுபடும் என்று அவள் சிறிதும் நினைக்கவில்லை.

அந்த... அந்தக் கார் விபத்துக்குப் பிறகு... மைக்கேலுக்கும் தனக்குமுள்ள ஒரே இணைப்பான பென்...

கண்ணில் தளும்பிய கண்ணீரை விழுங்கிக் கொண்டு, பார்வையைத் தாழ்த்தியவாறு, அவன் பரிசீலித்துக் கொண்டிருந்த பெட்டிகளை நோக்கினாள். அவளையும் அறியாமல் அவள் கை கழுத்திலிருந்த செயினைத் தடவிக் கொண்டது. கல்யாணம் செய்து கொள்வதற்குப் புறப்பட்ட அந்த



இரவில், பென் அவளுக்குத் திருமணப் பரிசாகக் கொடுத்த செயின். இன்னும் அவள் அதை அணிந்து கொண்டிருந்தாள்.

''கிறிஸ்துமஸ் பரிசு வாங்குகிறீர்களா?'' என்று கேட்டாள். இப்படி அவனிடம் பேச்சுக் கொடுக்கக் கூச்சமாக இருந்தது. ஆனால் அவனுடன் பேச வேண்டுமென்ற ஆவலை அவளால் அடக்க முடியவில்லை.

தன் குரலைக் கேட்டு அவன் அடையாளம் கண்டுகொள்வானோ என்று மறுபடியும் நினைத்துக் கொண்டாள். ஆனால் தன் குரலும் அடியோடு மாறியிருக்கிறது என்பது நினைவு வந்தது.

இப்போதும் அவன் சும்மாவானும் புன்னகை செய்தான் – அறிமுகமில்லாத





உலகம் பிறந்தது எனக்காக படத்தில் சத்யராஜ்–ரூபிணி

இரண்டு பேர் புன்னகை புரிவது போலவே.

''ஓர் இளம் பெண்ணுக்காகப் பரிசு வாங்கப் பார்க்கிறேன். என்ன வாங்குவதென்று தெரியவில்லை,'' என்றான்.

''அவள் எப்படி இருப்பாள்?''

''அமர்க்களமாக இருப்பாள்.''

மேரிக்குச் சிரிப்பு வந்தது. பென் எப்போதும் இப்படித்தான் விளையாட்டாகப் பேசுவான்.

''அவளுக்குச் செம்பட்டை முடி. வந்து... உயரம்... உங்களைப் போலவே,'' என்றான் பென். சொல்லிவிட்டு அவளைக் காலோடு தலை மறுபடியும் பிரமிப்புடன் பார்த்தான். அதைக் கவனித்த மேரிக்குப் புன்னகை செய்வதா கோபப்படுவதா, என்று தெரியவில்லை.

''இது போன்ற பெட்டிகள் அவளுக்கு நிச்சயமாய்ப் பிடிக்குமா?'' என்று கேட்டாள். இதெல்லாம் கவர்ச்சியான பரிசு என்று அவளுக்குத் தோன்றவில்லை.

''நானும் அவளும் வெளியூருக்கு உல்லாசப் பயணம் போகப் போகிறோம். அந்தப் பயணம் அவளுக்கு ஒரு ஸர்ப்ரைசாக இருக்க வேண்டுமென்று பார்க்கிறேன். ஒரு பெட்டி வாங்கி அதற்குள் விமான டிக்கெட்டை வைத்துத் தரப் போகிறேன்.''

டிக்கெட்டை ஒளித்து

வைத்துத் தருவதற்காக இவ்வளவு விலையுயர்ந்த பெட்டியா? ஒவ்வொன்றும் ஐந்நூறு டாலருக்குக் குறையாதே? பென்னா இவ்வளவு ஊதாரித்தனமாகச் செலவு செய்கிறான்? இந்த இரண்டு வருஷத்தில் பணக்காரனாகி விட்டான் போலிருக்கிறது.

''அதிர்ஷ்டக்காரப் பெண் தான் அவள்,'' என்றாள்.

''இல்லை. நான்தான் அதிர்ஷ்டக்காரன்.''

''தேனிலவு போகிறீர்களா?'' இப்படி அவன் சொந்த விஷயத்தில் மூக்கை நுழைக்கிறோமே என்று சங்கடமாயிருந்தாலும், அவனைப் பற்றிய செய்திகளை அறிந்து கொள்வதில் உற்சாகம் பிறந்தது. பல தகவல்களை இவன் சொல்லக் கூடும்... மைக்கேலைப் பற்றியும் ஒரு வேளை... ஒரு வேளை....

புன்னகையை விட்டு விடாமல், பற்றில்லாமல் பேசுகிற மாதிரி பாசாங்கு செய்தாள்.

பென் சொன்னான்: ''இல்லை. ஒரு பிஸினஸ் விஷயமாகதான் நானும் அவளும் போகப் போகிறோம். ஆனால் அவளுக்கு அது தெரியாது. இந்தப் பழுப்பு நிறப் பெட்டி நன்றாயிருக்குமா? அல்லது அந்தக் கரும்பச்சை தேவலையா?''

''சிவப்புப் பட்டை போட்ட அந்தப் பழுப்புப் பெட்டி பிரமாதமாயிருக்கும் என்று தோன்றுகிறது.''

''நானும் அப்படித்தான் நினைத்தேன்.''

சேல்ஸ் பெண்ணிடம் பணத்தைக் கொடுத்துவிட்டு,




அந்தப் பெட்டியை நியூயார்க்கிற்கு அனுப்பி வைக்கும்படி பென் சொன்னான்.

அப்படியானால்! இவன் இன்னும் நியூயார்க்கில்தான் இருக்கிறானா!

''ரொம்ப நன்றி மிஸ்... மிஸ்...''

''மேரி,'' என்றாள் அவள். ''உங்களுக்காகப் பெட்டி தேர்ந்தெடுத்துத் தந்ததில் எனக்கும் சந்தோஷம்தான். அனாவசியமாய் உங்கள் சொந்த விஷயங்களைக் கேட்டதுதான் தப்பு, ஹாலிடே என்றாலே எனக்குக் கிறுக்குத்தனம் வந்துவிடுகிறது.''

''எனக்கும் அப்படித்தான்,'' என்றான் பென். ''இந்த ஊரில் பருவ நிலை நன்றாக இருக்கிறது. கிட்டத்தட்ட நியூயார்க் மாதிரி.''

''நியூயார்க்கில்தான் நீங்கள் வசிக்கிறீர்களா?''

**வாழ்க்கை**

வாழ்க்கை ஒரு வெங்காயம். அதை ஒவ்வொருவரும் அழுது கொண்டே உரிக்கிறோம்.



‘‘என் பிள்ளையை நான் 27 நாள் பிரசவ வேதனை அனுபவித்தபின்தான் பெற்றேன்!’’ என்றார் ஓர் அரசியல் தலைவரின் அன்னை.

அன்னை: அஞ்சுகம் அம்மையார்.

பிள்ளை: மு. கருணாநிதி.

ஆதாரம்: ‘அண்ணா— சில நினைவுகள்’ என்ற நூல்.

—எஸ் பொன்னுசாமி.

---

‘‘ஆமாம். அதுதான் என் ஊர். ஆனால் வேலை விஷயமாக வெளியூர்களிலேயே சுற்றிக் கொண்டிருப்பேன்.’’

அவனுடைய பதில் மேரிக்கு ஏமாற்றமாயிருந்தது. மைக்கேலுடன்தான் வேலை பார்க்கிறானா என்பது இப்போதும் தெரியவில்லையே? அதை எப்படி வெளிப்படையாகக் கேட்பது? கேட்க முடியாது.

அவளுக்கு வெறுப்பாக இருந்தது.

இதோ இங்கே பென்னின் முன்னால் நின்று கொண்டிருக்கிறேன். பேசிக் கொண்டிருக்கிறேன். என் வாழ்க்கையிலிருந்து மறைந்தே போய் விட்ட —மறைந்து போக வேண்டிய — ஒருவனைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். எதற்காக?

பென் அவளைக் கூர்ந்து பார்த்தான்— அவளைப் பற்றி ஏதோ வொன்று அவன் நெஞ்சை நெருடுகிற மாதிரி.

ஒரு நிமிஷம் அவளுக்கு இருதயமே நின்றுவிட்ட மாதிரி இருந்தது. என்னை இவன் தெரிந்து கொண்டு விட்டானோ? இல்லை. அவனுடைய அன்னியமான புன்னகையே அடையாளம்.

நெற்றியின் மேல்புறம் போடப்பட்டிருந்த நாடாவை அவன் பார்க்கா வண்ணம், கூந்தலைத் தள்ளிவிட்டுக் கொண்டாள்.

‘‘உங்களை ஒன்று கேட்கிறேன், தப்பாக எண்ணக் கூடாது,’’ என்றான் பென். ‘‘என்னுடன் ஒரு ட்ரிங்க் சாப்பிட நீங்கள் வரமுடியுமா? இன்னும் கொஞ்ச நேரத்தில் நான் போக வேண்டிய நியூயார்க் விமானம் புறப்பட்டு விடும். அதற்குள் போய்விட்டு வந்து விடலாம்.’’

அவன் புன்சிரிப்புக்குப் பதில் புன்சிரிப்பு வழங்கியவாறு அவள் தலையசைத்தாள்.

‘‘ஸாரி, என் விமானம் இதோ புறப்பட்டு விடும்! இருந்தாலும் உங்கள் அழைப்புக்கு ரொம்ப நன்றி, மிஸ்டர் பென்,’’ என்றாள்.

அவனுடைய புன்னகை சட்டென்று மறைந்தது.

‘‘என் பெயர் எப்படித் தெரியும் உங்களுக்கு?’’ என்று திடுக்கிட்டான்.

(தொடரும்)

## சந்திப்பு



முன்னொரு காலத்தில் ஓர் ஆண் ஒரு பெண்ணைச் சந்தித்து, ‘‘என்னைக் கல்யாணம் செய்து கொள்வாயா?’’ என்று கேட்டான். அவள் ‘‘மாட்டேன்’’ என்றாள்.

அதன் பிறகு, அவர்கள் இருவரும் மிகவும் சந்தோஷமாக வாழ்ந்தார்கள்.

—யா.




# 31

மேரி தன் தவறை உணர்ந்தாள்.

வாய் தவறி, 'பென்' என்று அவன் பெயரைச் சொல்லி விட்டோமே!

''ஸேல்ஸ் பெண் உங்கள் பெயரைச் சொன்னபோது கவனித்தேன்,'' என்று சட்டெனச் சமாளித்தாள்.

தோள்களைக் குலுக்கிக் கொண்டு அவளைப் பார்த்தான் பென். இவ்வளவு அழகான பெண்ணுடன் அதிக நேரம் இருக்க முடியவில்லையே என்று அவனுக்கு வருத்தமாக இருந்தது. அலுவலகத்தில் உதவியாளராக இருக்கும் வெண்டி மீதுதான் அவனுக்குக் காதல். சென்ற சில வாரங்களாக அவனுக்கும் அவளுக்கும் நெருக்கம் அதிகரித்திருந்தது. இருந்தாலும்கூட இந்த அழகான பெண்ணுடன் அமர்ந்து பானம் அருந்த வேண்டும் போல ஆசை ஏற்படவே செய்தது. இன்னும் சிறிது நேரத்தில் வெளியூர் போய் விடுவதாக வேறு சொல்கிறாளே!

''எந்த ஊருக்குப் போகிறீர்கள், மிஸ் மேரி?'' என்று கேட்டான்.

''நியூ மெக்ஸிகோவிற்கு.''

பள்ளிக்கூடப் பையன் போல் ஏமாற்றத்தால் அவன் முகம் வாடியது. அதைக் கண்டு அவள் சிரித்தாள்.

''சே! நீங்கள் நியூயார்க் போகிறீர்களாக்கும் என்று ஆசையாய் எதிர்பார்த்தேன். நாம் இரண்டு பேரும் சேர்ந்து பிரயாணம் செய்யலாமே? ஹூம்!''

''நீங்கள் பரிசுப் பெட்டி வாங்கிப் போகிறீர்களே, அந்தப் பெண்ணின் காதில் உங்கள் பேச்சு விழுந்தால் ரகளைதான்!''

அவள் வேடிக்கையாய்க் கண்ணடிக்க, இருவரும் சேர்ந்து சிரித்தார்கள்.

''சரி, அடுத்த தடவையாவது எனக்கு அந்தப் பாக்கியம் கிட்டட்டும்!'' என்றான் பென்.

''நீங்கள் சான்பிரான்ஸிஸ்கோவுக்கு அடிக்கடி வருவதுண்டா?''



''இதுவரை இல்லை. இனி அடிக்கடி வருவேன்,'' என்றான் அவன். பிறகு அந்தப் பரிசுப் பெட்டியைப் பார்த்த வண்ணம் ஒரு புன்னகையோடு, ''வருவோம்,'' என்று திருத்திச் சொன்னான். ''என் கம்பெனி இந்த ஊரில் ஒரு பெரிய வேலையே ஏற்றுக் கொண்டிருக்கிறது. அதனால் நியூயார்க்கைக் காட்டிலும் இங்கேதான் அதிகம் இருப்பேன்.''

''அப்ப நாம் மறுபடி சந்திக்க வாய்ப்பு இருக்கிறது,'' என்றபோது மேரியின் குரலில் வருத்தம் படர்ந்திருந்தது. எவ்வளவு தடவை சந்தித்தாலும் பென் பென்தான. மைக்கேல் ஆகமாட்டான்.

புறப்படுகிற நேரமாகிவிட்டது.

செக் எழுதிக் கொடுத்துக் கொண்டிருக்கும் பென்னை ஒரு நிமிடம் பார்த்தவாறிருந்தவள், அவன் கையை மெல்ல அழுத்திவிட்டுப் புறப்பட்டாள்.

அவனுக்கு அவள் செய்கை ஆச்சரியமாயிருந்தது.

''கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கள்,'' என்று கிசுகிசுப்பான குரலில் சொல்லிவிட்டு மேரி புறப்பட்டாள்.

செக்கைப் பூர்த்தி செய்து கொடுத்து விட்டுத் திரும்பிப் பார்த்தான். பென். அவள் போய் விட்டதை அறிந்து ஏமாற்றத்துடன் இருந்தான். எவ்வளவு திடீரென்று மறைந்துவிட்டாள்!

கிறிஸ்துமஸ் கூட்டத்தை விலக்கிக் கொண்டு கடையின் எல்லாப் பகுதிகளிலும் தேடிப் பார்த்தான். எங்கேயும் அவளைக் காணவில்லை.

கடையின் வேறொரு வாசல் வழியாக வெளியேறிய மேரி ஒரு டாக்ஸியை நிறுத்தி ஏறிக் கொண்டாள். ஒரு பிராணிகள் காப்பகத்தை அடைந்து நாய்க் குட்டியை அங்கே ஒப்படைத்தாள். தான் ஊரிலிருந்து திரும்பிவரும் வரையில் அதைப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லிவிட்டு, தன் ஜாகைக்குப் போய்த் தேவையானவற்றை எடுத்துக் கொண்டு விமான நிலையத்துக்குப் புறப்பட்டாள்.

கிளம்புமுன் தன் அறையை ஒரு முறை பார்த்துக்கொண்டாள்—இனி இங்கே திரும்பி வரப் போவதில்லை என்பது போல. நான்ஸி என்ற பணிப் பெண்ணின் கடைசி நிமிடங்கள் இவை. மேரி என்ற பெண்ணின் புதிய வாழ்க்கையின் ஆரம்ப நிமிடங்கள்.

வெளியே வந்தவள் கதவை மெல்லச் சாத்தி, 'குட் பை!' என்றாள், தனக்கு மட்டுமே கேட்கும் குரலில்.

பென்னுக்கு குட்பை. மைக்கேலுக்கு குட் பை. அவளுக்குத் தெரிந்த, அவள் அன்பு செலுத்துகிற அனைவருக்கும் குட்பை.

சூட்கேஸை ஒரு கையில் தூக்கிக் கொண்டு, தோள்மீது காமெராவைப் போட்டுக்கொண்டு வேகமாகப் படியிறங்கினாள். அவள் கண்களில் கண்ணீர் பொங்கிக் கொண்டிருந்தது.

நியூ மெக்ஸிகோவில் அவருடைய விடுமுறை கிடுகிடுவென்று ஓடி விட்டது.



சான்பிரான்ஸிஸ்கோவிலிருந்து புறப்பட்ட தினத்தன்று பென்னை எதிர்பாராத விதமாகச் சந்தித்து பெரும் அடியாக அவள் இதயத்தில் வலி ஏற்படுத்தியிருந்தது. மறந்து விட்ட பழைய நினைவுகளை அது கிளறி விட்டதே காரணம்.

ஆனால் மனத்தைச் சாந்தப் படுத்திக் கொண்டு, வேலையில் தீவிர மாக இறங்கியதால் அந்த வலி மறைந் தது: யாருடனும் அனாவசியமாகப் அவள் பேசவில்லை. தன் சிந்தனைகளி லேயே மூழ்கியிருந்தாள்.

கொஞ்சம் கொஞ்சமாக அவள் மனத்தில் சுமை இறங்கியது.

அங்கே பனிச் சறுக்கு விளையாட்டுக்களை நிறையப் புகைப்படம் எடுத்தாள். தானும் விளையாட வேண்டும் போல் ஆசையாக இருந்தது. ஆனால் விபத்து எதையும் ஏற்படுத்திக் கொள்ளக் கூடாது என்று டாக்டர் பீட்டர் எச்சரித்திருந்ததால் விளையாட்டில் சேரவில்லை.

ஜனக் கூட்டத்தின் நடுவே சுதந்திரமாக, கூச்சமில்லாமல் நடமாட முடிந்தது. கடந்த ஒன்றரை



ஆண்டுகளாக, முகத்தில் கட்டுடன் வெளியே போகச் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தவளுக்கு, இப்போது ஒரே ஒரு மெல்லிய ரிப்பன்தான் நெற்றியின் மேற்புறத்தில் இருந்தது. புதிய புதிய உடைகள் அணிந்து, அற்புதமான அழகுடன் அவள் செல்வதைப் பார்த்தவர்கள் பார்த்துக் கொண்டே நின்றார்கள்.

சான்பிரான்ஸிஸ்கோவுக்குத் திரும்பிய போது அவள் புதுப் பிறவி எடுத்திருந்தாள். மேரி என்ற புதுப் பெயர்கூடச் சட்டப்படி கிடைத்து விட்டது.

இருந்த போதிலும் தன் அறையை அடைந்து, உடை மாற்றிக் கொண்டு ஹாய்யாகக் காலை நீட்டிப் படுத்தபோது என்னவோ ஒரு சோர்வு — ஏமாற்றம் — அவளைப் பிடித்துக் கொண்டது.

முகத்திலிருந்த கடைசி நாடாவையும் டாக்டர் பீட்டர் அகற்றிய பிறகு, அவளுடைய சிகிச்சை முற்றும் முடிந்த பிறகு, அப்புறம் என்ன?

அவளுடைய புகைப்படங் களின் கண்காட்சிக்கு டாக்டர் பீட்டர் ஏற்பாடு செய்திருந்தார். அதன் மூலம் புதிய வாழ்க்கை மலரப் போவது நிச்சயம். மேரி என்ற புதுப் பெயரில் புகழ் பெறப் போவது நிச்சயம்.

இருந்தும்.... இருந்தும்.... ஒரு தனிமையுணர்ச்சி தன்னை வாட்டுவது போல் உணர்ந்தாள்.

மறுநாள் காலை ஆறு மணிக் கெல்லாம் அவள் எழுந்துவிட்டாள். கடைத் தெருவுக்குப் போய்ச் சில புகைப்படங்கள் எடுத்தாள் — கண்காட்சியில் வைப்பதற்காக. பிறகு டாக்டர் பீட்டரின் மருத்துவ மனையை அடைந்தாள்.

அவளுடைய தோற்றத்தைக் காலோடு தலை பார்த்துப் பிரமித்தார் டாக்டர். ‘‘மேரி, நீ எவ்வளவு

அழகாக இருக்கிறாய் தெரியுமா? அதுவும் அந்தத் தொப்பி ரொம்பப் பிரமாதம்!''

மேரி தன் தொப்பியைக் கழற்றிக் கசக்கிச் சுருட்டிக் குப்பைக் கூடைக்குள் போட்டாள். ''டாக்டர், நான் தொப்பி அணிவது இதுதான் கடைசி தடவை.''

''ஆமாம். இனி முகத்தில் எதையும் நீ மறைக்கத் தேவையில்லை. ஆகவே தொப்பி அணிய வேண்டிய அவசியமே இருக்காது.''

''எல்லாம் உங்களால்தான் டாக்டர்,'' என்ற போது மேரியின் கண்கள் கசிந்தன. அவரை அப்போதே அங்கேயே அணைத்துக் கொள்ள வேண்டும் போல் அவள் நெஞ்சம் நெகிழ்ந்தது. அவர் அவள் கண்களுக்கு வெறும் டாக்டராகத் தெரியவில்லை. நண்பராகத் தோன்றினார். அவருக்கு எப்படி விருப்பமோ அப்படி இருக்க அவள் தயாராயிருந்தாள்.

''டாக்டர், வெளியூர் போயிருந்தபோது உங்களை அடிக்கடி நினைத்துக் கொண்டேன். நீங்கள் இல்லாமல் என்னவோ போலிருந்தது,'' என்று கூறி மெல்ல அவர் கையைத் தொட்டுவிட்டு, சிகிச்சைக்கான நாற்காலியில் உட்கார்ந்து கண்களை மூடிக் கொண்டாள். காத்திருந்தாள்.

அவளை ஒரு நிமிடம் பார்த்தவாறு நின்றுவிட்டு, அவளுக்கெதிரில் இருந்த சுழல் முக்காலியில் அவர் உட்கார்ந்தார், ''மேரி, இன்றைக்கு நீ ரொம்பத்தான் அவசரப்படுகிறாய்.''

''இருபது மாதங்கள் காத்துவிட்டேனே, டாக்டர்? அவசரம் இருக்காதா?''

''நிச்சயம், நிச்சயம்!''

ட்ரேயில் சிறிய சிகிச்சைக் கருவிகள் கிளிங் கிளிங் என்று ஓசையிடுவதை அவள் கேட்டாள். நெற்றியில் கூந்தலைத் தொட்டாற்போல் ஒட்டப்பட்டிருந்த நாடா மெல்ல உரிக்கப் படுவதை உணர்ந்தாள். சருமத்தை விட்டு அந்த நாடா ஒவ்வொரு மில்லி மீட்டராக அகல அகல, அவள் உள்ளம் ஒவ்வொரு மில்லி மீட்டராகச் சுதந்திரத்தை அனுபவித்தது.



சற்றைக்கெல்லாம் டாக்டரின் முக்காலி நகர்த்தப்படும் சத்தத்தைக் கேட்டாள்.

''மேரி, நீ இனி கண்ணைத் திறக்கலாம். எழுந்து கண்ணாடியில் போய்ப் பார்.''

இதுவரை ஆயிரம் முறை அவள் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்திருப்பாள். ஒவ்வொரு முறையும் முகத்தில் கட்டு இருக்கும். தையல் இருக்கும். சிகிச்சை நடந்து கொண்டிருக்கிறது என்பதற்கு ஏதாவது ஓர் அடையாளம் இருக்கும். சுத்தமாக, முழுசாக முகத்தைப் பார்த்தது இரண்டு வருடங்களுக்கு முன்பு நான்ஸியாக இருந்த போதுதான்....

எழுந்து கண்ணாடியின் முன் போய் நிற்கவே அவளுக்குப் பயமாயிருந்தது. மெல்ல மெல்ல அடி வைத்து, தயங்கித் தயங்கிச் சென்று பார்த்த மறு வினாடி—

ஆனந்தத்தால் அவள் முகம் மொத்தமும் மலர்ந்தது. சந்தோஷம் தாங்காமல் அவள் கன்னங்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வடிந்தது.

அவள் பின்னால் சற்றுத் தள்ளி டாக்டர் பீட்டர் நின்றிருந்தார். தனியாக அவளை விட்டுச் செல்லவே அவர் விரும்பினார். இது அவளுக்கே சொந்தமான நேரம். அவளுடைய ஆனந்த நிமிடங்களை அவள் தனியாகவே துய்க்கட்டும் என்று நினைத்தார்.

''கடவுளே! கடவுளே! எத்தனை அழகு!''

அவர் மெதுவாய்ச் சிரித்தார். ''அழகாயிருப்பது யாரோ இல்லை. நீ தான் மேரி!''

அவளால் பேச முடியவில்லை. மௌனமாய்த் தலையை அசைத்தாள். டாக்டரைத் திரும்பிப் பார்த்தாள். அவளால் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

''டாக்டர்!'' என்று கூவியவள் பாய்ந்து சென்று அவரை இறுக அணைத்துக் கொண்டாள்.

(தொடரும்)

---

இந்த ஐந்து பெண்களின் முகத்தையும் திருஷ்டிப்படாமல் கூர்ந்து நோக்குங்கள். காலம்: இரண்டே இரண்டு வினாடி.

ஆயிற்றா? கண்ணை மூடிக் கொள்ளுங்கள். இன்னும் இரண்டு வினாடி அவகாசம். படத்தில் உள்ளவர்கள் பொட்டுடன் சேர்த்து விபூதியும் எத்தனை பேர் இட்டிருந்தார்கள்?

சரியாகச் சொல்லிவிட்டீர்கள் என்றால்—

1. உங்களுக்குப் பிரமாதமான கண் பார்வை.

2. சூப்பர் ஞாபக சக்தி.

3. நீங்கள் இரண்டு வினாடிக்கு மேல் பார்த்து விட்டீர்கள்.

—சிகரா

---



## ஏன் விளையாடவில்லை?

காமன்வெல்த் விளையாட்டுகளில் கலந்துகொண்ட பாகிஸ்தான் அணியில் பெண்களே கிடையாது. காரணம், உடை விஷயம்.

—மு.

ரா.கி.ரங்கராஜன்

32



# தலை மேல் ஆணை

மேரியை மெல்ல விலக்கி, அவளுடைய கண் முனைகளில் துளிர்த்து நிற்கும் கண்ணீரைத் துடைத்துவிட்டார் டாக்டர் பீட்டர்.

''இதோ பார், மேரி, இனி மேல் நீ எங்கே வேண்டுமானாலும் போகலாம். எங்கே இஷ்டப்பட்டாலும் சுற்றலாம். உன் நிகழ்ச்சி நிரலில் முதல் ஐட்டம் என்ன?''

''ஏகப்பட்ட வேலைகள் இருக்கிறது,'' என்று உற்சாகமாகச் சொன்னபடி, டாக்டருடைய சுழல் நாற்காலியில் உட்கார்ந்த மேரி விர்ரென்று நாலைந்து தட்டாமாலை சுற்றினாள் உல்லாசமாக.

''போச்சு! போச்சு!'' என்று வேடிக்கையாகப் பதறினார் டாக்டர் பீட்டர். ''கீழே விழுந்து கையைக் காலை முறித்துக் கொள்ளப் போகிறாய்! என் சிகிச்சை மொத்தமும் தண்டமாகி விடப் போகிறது!''

''நொண்டிக் கொண்டாவது வெளியே போய் இன்றைய தினத்தைக் கொண்டாடப் போகிறேனாக்கும்!'' என்றாள் மேரி. ''ஏனென்றால் என் வாழ்க்கையில் இது ஒரு முக்கியமான நாள்!''

''உன்னோடு நானும் வரலாமில்லையா?'' என்று கேட்ட போது அவர் குரலில் லேசான ஏக்கம் இருப்பது அவளுக்குத் தெரிந்தது. அவர் மனம் அவளுக்கும் புரிந்தது. 'சிகிச்சை முடிந்து விட்டது. டாக்டரினால் ஆகக்கூடிய எல்லா உதவிகளும் முடிந்துவிட்டன. இனி மேல் இவள் நம்மை ல[illegible]யும் பண்ணமாட்டாள்' என்று அவர் எண்ணுவதை மேரி ஊகித்துக் கொண்டாள்.

''கிறுக்குத்தனமாய்ப் பேசாதீர்கள் டாக்டர்!'' அவர் கைகளைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, கண்களை நேருக்கு நேராய்ப் பார்த்தாள். ''என் வாழ்க்கையில் உங்களுக்கென்று ஓர் இடம், ஒரு நேரம் எப்போதுமே உண்டு, டாக்டர். உங்களுக்கும் அது தெரியும். நான் இன்று உயிருடன் இருக்கிறேன் என்றால் அது உங்களால்தான், டாக்டர்.''

''இல்லை, மேரி. அதற்கு வேறொருவர் காரணம்,'' என்றார் டாக்டர்.

மரியம் என்று பெயரைக் குறிப்பிடவில்லை. அந்தப் பெயரைக் கேட்கவே மேரிக்கு மகா வெறுப்பு. என்பது அவருக்குத் தெரியும். ஏன் மரியமின் மீது இவளுக்கு அவ்வளவு வெறுப்பு என்பது மட்டும் அவருக்குப் புரியாத விஷயம்.

''மேரி, உனக்கு என்னால் ஏதோ கொஞ்சம் உதவி செய்ய முடிந்தது. அதில் எனக்குச் சந்தோஷம். உனக்கு எப்போது என்ன தேவையென்றாலும் நான் செய்யத் தயார்.....''

''அப்படியா? சரி, இன்று பகல் எனக்குச் சாப்பாடு போடுங்கள்!'' என்றாள் மேரி சிரித்த வண்ணம். ''எந்த ஓட்டலுக்கு வரச் சொல்கிறீர்களோ, அங்கே வருகிறேன்.''

கடற்கரைக்கு அருகே இருந்த ஒரு ரெஸ்ட்டாரண்டை அவர் குறிப்பிட்டார்.

''நான் சில புகைப் படங்கள் எடுக்க வேண்டும். முன்னாடி போகிறேன்,'' என்று புறப்பட்ட மேரி, முதலில் கடைத் தெருவுக்குச் சென்றாள்.

அன்றைய நாள் அவளுக்கு மிக ஸ்பெஷலாய்த் தோன்றியது. டாக்ஸியில் போகையில் தன் பாங்க் புத்தகத்தை எடுத்துப் பார்த்துக்கொண்டாள். ஏற்கனவே சில புகைப்படங்களை விற்றதில் கணிசமான தொகை சேர்ந்திருந்தது.

விலையுயர்ந்த பளிச் சென்ற உடைகள் வாங்கி அணிந்து கொண்டாள். பிறகு சலூனுக்குச் சென்று முடிவெட்டிக் கொண்டாள். ரொம்பக் காலம் கழித்து முழு முகத்தையும் கூச்சமில்லாமல் சலூன்காரருக்குக் காட்டுவதில் மகிழ்ச்சி ஏற்பட்டது. புதிய காலணிகளும் கைப்பையும் வாங்கிக் கொண்டாள். அடுத்தது, பிடித்தமான சென்ட்.

ரெஸ்ட்டாரண்டுக்குக் கிளம்பிய போது, தங்க ஆபரணங்கள் விற்பனை செய்யும் கடையொன்று கண்ணில் பட்டது.

வெகு நாட்களாக மனத்திலிருந்த ஓர் ஆசை.... ஆனால் இருக்குமோ இருக்காதோ....

டாக்டர் பீட்டர் ஒரு பாக்கட் கடியாரம் வைத்திருப்பதைப் பார்த்திருக்கிறாள். அதை அவருக்கு ரொம்பப் பிடிக்கும். அடிக்கடி பாக்கெட்டிலிருந்து எடுத்துப் பார்ப்பதை அவள் கவனித்திருக்கிறாள்.

அந்தப் பாக்கெட் கடியாரத்துக்கு ஒரு தங்கக் கூடு வாங்கித் தர வேண்டுமென்று அவள் நினைத்ததுண்டு.

இன்று கடையில் விசாரித்த போது, அவள் மனத்தில் நினைத்திருந்தது போலவே ஒன்று இருந்தது. அதைப் பரிசுக் காகிதத்தில் கட்டி வாங்கிக் கொண்டு, டாக்டர் குறிப்பிட்டிருந்த ரெஸ்ட்டாரண்டுக்குள் நுழைந்த போது—

கண்கள் விரிய வியப்புடனும் பிரமிப்புடனும் அவளைப் பார்த்து ரசித்தவர்கள் பலர்.

ஆனால் டாக்டர் பீட்டரின் பார்வையில்தான் உளப்பூர்வமான பிரியம் தெரிந்தது.



**மூலம்:
டானியேல்
ஸ்டீல்**










ப. கந்தசாமி

## இனி ஒரு மகன் இல்லையே!



ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியாரின் ஒரே மகன் தீர்த்தாரப்பன். அந்த தீர்த்தாரப்பன் இளம் வயதில் இயற்கை எய்தி விட்டான்.

தம் இனிய நண்பரின் ஒரே மகன் இறந்து விட்டதை அறிந்த கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஒரு இரங்கற்பா எழுதி, ரசிகமணி டி.கே.சிக்கு அனுப்பினார்.

அதைப் படித்து அதன் இலக்கியச் சுவையில் ஈடுபட்ட ரசிகமணி, கவிமணிக்கு, ''இவ்வளவு அழகான இரங்கற்பா பெறும் பொருட்டு இறந்து போக இனியொரு மகன் எனக்கு இல்லையே...'' —என்று எழுதினார்.

—முளங்குழி பா. லாசர்

''மேரி, நீதானா! நிஜமாகவே நீதானா!'' என்றார்.

''டிரெஸ் பிடித்திருக்கிறதா?''

''பிடித்திருக்கிறதாவா! என்னை அடித்துக் கீழே தள்ளுகிற மாதிரி இருக்கிறது. காலை பூராவும் நீ கடைத் தெருவில்தான் சுற்றினாயா?''

''பின்னே? இன்று எனக்கு ஒரு ஸ்பெஷல் நாளாயிற்றே?''

டாக்டர் பீட்டர் அவளை ஆழ்ந்த புன்னகையுடன் நோக்கினார். ''மேரி, நீ சந்தோஷமாக இருப்பதைப் பார்க்க எனக்கும் சந்தோஷம்.''

''என் சந்தோஷத்துக்குக் காரணம், என் முகம் அழகாக மாறினது மட்டுமில்லை, டாக்டர். என் புகைப்படக் கண்காட்சி ஆரம்பமாகப் போகிறது. அந்தச் சந்தோஷம். ஒரு புதிய வாழ்க்கை தொடங்கப் போகிறேன். அந்தச் சந்தோஷம். அப்புறம்... அப்புறம்... நீங்கள்...'' அந்தக் கடைசிச் சொல்லை ரொம்ப மென்மையாகச் சொன்னாள்.

''உனக்காகவே நான் இன்று பிற்பகல் கிளினிக்கை மூடிவிட்டு வந்திருக்கிறேன்,'' என்றார் டாக்டர். ஷாம்பேய்னுக்கு ஆர்டர் கொடுத்தார். ''அடுத்து எங்கே போகிறோம், மேரி?''

''கடற்கரையில் உலாவச் செல்லலாம்,'' என்றாள் அவள். டாக்டருக்காக வைத்திருக்கிற பரிசை எப்போது கொடுக்கலாம் என்று அவள் மனம் யோசித்துக் கொண்டேயிருந்தது.

கடற்கரையில் சில்லென்று காற்று வீசிய போதிலும், இறுக்கமான கம்பளிக் கோட்டு அவளைக் காப்பாற்றியது.

கைகோத்து நடந்து கொண்டிருந்தவள் நின்றாள். ''டாக்டர், உங்களுக்காக ஒரு பரிசு...''

''என்னது?'' அவள் கொடுத்த சிறிய பாக்கெட்டைப் பரபரவென்று பிரித்தவர், உள்ளேயிருந்த தங்கக்

# கைனெடிக் ஹோண்டா கின்னஸ் சாதனை புத்தகத்தில் இடம்பெறுகிறது !

கைனெடிக் ஹோண்டா உலகிலேயே மோட்டாரில் செல்லத்தக்க சாலைகளில் உயர்வான பிரதேசங்களில் சவாரி செய்து வென்றுள்ளது — கடல் மட்டத்தைவிட 18,380 அடிக்கு மேலுள்ள — வடக்கின் கார்டுங்லா கணவாய் உச்சிவரையிலும்!

**திருமதி மற்றும் திரு யோகானந்த்** இந்த மகத்தான சாதனையை ஜூன் 7, 1989 அன்று அவர்களுடைய கைனெடிக் ஹோண்டா உதவியினால் செய்து முடித்த முதல் ஜோடியாகும்.

புனே-யிலிருந்து வடக்கிற்கு ஸ்கூட்டர் சவாரி செய்து திரும்பிய மொத்த தூரம் 11,000 கி.மீ.-க்கு 31 நாட்கள் ஆயிற்று. குஜராத்திலுள்ள கட்ச் பிரதேசத்தில் 200 கி.மீ. சதுப்பு நிலத்தைக் கடந்து, ராஜஸ்தானின் தார் பாலைவனத்தில் 600 கி.மீ. சவாரி செய்து, மத்திய பிரதேசத்தின் அடர்ந்த அமர்-கந்தக் காட்டில் 250 கி.மீ. சென்று, ஹிமாலய பிரதேசத்தின் கரடுமுடான ஸோஜிலா கணவாயினூடே 3,700 கி.மீ. பயணம் செய்து வந்துள்ளனர்.



கைனெடிக் ஹோண்டா மீண்டும் அதன் உள்ளுரத்தை நிரூபித்துள்ளது — அதுவும் தாறுமாறான தட்பவெட்ப நிலைகளில் 49°C லிருந்து -23°C வரையிலும், கரடுமுரடான, மலைப் பிரதேசத்திலும், வரண்ட பாலைவனத்திலும், சதுப்பு நிலத்திலும், கடும் குளிரான ஐஸிலும் — பாதிப்பு ஏதுமின்றி கடந்து வந்துள்ளது. சிங்கிள் பிரேக் டவுனோ அல்லது வழியில் எந்த பாகத்தை மாற்றியதோ இல்லை.

கைனெடிக் ஹோண்டாவிற்கு இன்னுமோர் புகழாரம்

**KINETIC HONDA**
SIMPLER ■ SAFER ■ SUPERIOR

WAMS 147/89

கடியாரக் கூட்டைப் பார்த்து அசந்து விட்டார்.

''மேரி, என்ன இதெல்லாம்?'' என்று மெதுவான குரலில் அவளைக் கடிந்து கொண்டார்.

''ஏன் டாக்டர், நீங்கள்தான் எனக்கு எதுவும் வாங்கி வருவதில்லை. நானாவது உங்களுக்கு வாங்கித் தருகிறேனே,'' என்று கண்ணைச் சிமிட்டிக்கொண்டு மேரி சொல்ல, இருவரும் சேர்ந்து சிரித்தார்கள்.

அவளை அவள் வீட்டு வாசலில் இறக்கிவிட்ட போது, ''டாக்டர், ஒரு நிமிடம் உள்ளே வருகிறீர்களா? உங்களுக்காக இன்னொன்றும் வைத்திருக்கிறேன்,'' என்றாள் மேரி.

''இன்னொன்றா? என்ன?''

''மாடிக்கு வாருங்களேன், காட்டுகிறேன்.''

அவள் வேறு எதுவும் பேசாமல் மாடிப் படியேறினாள். அவர் பின்னால் தொடர்ந்தார்.

அறையைத் திறந்தவள் விளக்கைப் போடாமல் நேரே ஜன்னலோரத்துக்குச் சென்றாள். அங்கே நிறுத்தி வைக்கப்பட்டிருந்த ஓவியத்தை டாக்டரின் பக்கமாகத் திருப்பி, பிறகு விளக்கைப் போட்டாள்.

---



இதுவரை இந்தியாவில் எந்த ஆணழகனுக்கும் கிடைத்திராத பெருமை இந்திய ஆணழகன் பிரேம் சந்துக்குக் கிடைத்துள்ளது. இந்திய அரசு இந்த ஆண்டு அவருக்கு பத்மஸ்ரீ பட்டம் கொடுத்திருக்கிறது.

—மலையமான்.

---

## சாபமா?

சாதாரணமாக எந்த ஒரு முனிவர் சாபம் கொடுக்க நேர்ந்தாலும் சபிக்கப்பட்டவர்கள் வருந்துவதும்—அந்தச் சாபம் பலிக்காமல் போக மாற்றும்



---

அந்த ஓவியத்தில் இயற்கைக் காட்சியொன்றைக் கண்டார் டாக்டர். அதில் ஒரு பெரிய மரம் தெரிந்தது. மரத்தின் கிளையில் ஒரு சிறுவன் காலைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

நியூ மெக்ஸிகோவுக்கு விடுமுறைக்காகப் புறப்படும் முன்பே அந்த ஓவியத்தை அவள் பூர்த்தி செய்துவிட்டாள். ஆனால் டாக்டரிடம் அதைக் கொடுப்பதற்கு ஒரு ஸ்பெஷல் தினம் வர வேண்டுமென்றுதான் காத்திருந்தாள்.

அவர் அவளை எதுவும் புரியாமல் பார்த்தார்.

''இது உங்களுக்குத்தான் டாக்டர். ரொம்ப நாள் முன்பு நான் ஆரம்பித்த ஓவியம். அப்படியே விட்டிருந்தேன். உங்களுக்குக் கொடுப்பதற்காகவே பூர்த்தி செய்தேன்.''

மைக்கேல்... திருமண தினத்தன்று மைக்கேலுக்குக் கொடுப்பதற்காக வைத்திருந்த ஓவியம்...

''மேரி...'' குரல் தழுதழுக்க ஓவியத்தைப் பார்த்தார் அவர். ''இதை நான் எடுத்துக் கொள்வது நியாயமல்ல. உன் படைப்புக்களை ஏற்கனவே ஏராளமாய் எனக்குத் தந்திருக்கிறாய்.... அப்புறம் கண்காட்சியில் வைக்க உன்னிடம் எதுவும் இருக்காது.''

கோருவார்கள். இதுவே உலக நியதி.

தண்ணீர் மொள்ளும் சப்தத்தை யானை தண்ணீர் குடிப்பதாக எண்ணி 'சப்த வேதி' என்ற சப்தம் கேட்ட இடம் நோக்கிப் பாயும் அஸ்திரத்தை விட்டு ரிஷிகுமாரனை கொன்று விடுகிறார் தசரதர். விவரம் தெரிந்தவுடன் மனம் கலங்கி பயந்து போனாலும், ரிஷியிடம் போய் நடந்த சம்பவத்தைச் சொல்லி விடு கிறார் தசரதர். ரிஷியால் ஏற்றுக் கொள்ள இயலுமா? கண்ணிழந்த நிலை யில் மகனையும் இழந்து உயிரையும் இழக்கும் சூழ்நிலை! சபித்து விடுகிறார் தசரதரை. 'என்னைப் போல் புத்திர சோகத்தினால் உனக்கும் மரணம் சம்பவிக்கட்டும்,' என்று.

சபிக்கப்பட்ட தசரதன் வருந் தினாரோ? மகிழ்கிறார்! ஏன்? புத்திர பாக்கியத்துக்கு ஏங்கித் தவம் இருக்கும் நிலை! ரிஷி வாக்கு பொய்க்காது. அதனால் புத்திர பாக்கியத்துக்கு ஆசி வழங்கியதாகவே ரிஷியை வணங்குகிறார்.

—பாலானந்தா உபன்னியாசத்திலிருந்து:

—என். பாலு

சந்தோஷம்

''இதுவரை நான் எடுத்த புகைப்படங்களைத்தான் உங் களுக்குக் கொடுத்திருக்கிறேன், டாக்டர். இது ஓவியம். நான் புனர்ஜன்மம் எடுத்ததற்கான அடையாளம். நான் மறுபடியும் ஓவியம் தீட்ட ஆரம்பித்திருக்கிறேன் டாக்டர். ஓவியம் என்பது எனக்கு எவ்வளவு உயிரான விஷயம் என்று உங்களுக்குத் தெரியாது. ப்ளீஸ், நீங்கள் இதை வாங்கிக் கொள்ளத் தான் வேண்டும்,'' என்றாள்.

''ரொம்ப அற்புதமான ஓவி யம், மேரி. தாங்க்யூ,'' என்றார் டாக்டர் பீட்டர்.

மறுநாள் அவளுடைய புகைப்படக் கண்காட்சி ஆரம்பித்தது. காலையிலேயே கண்காட்சி சாலைக்குச் சென்று ஏற்பாடுகளைச் செய்துவிட்டுத் திரும்பியிருந்தாள்.

''புகைப்படங்களை நீ சொன்ன இடத்தில், சொன்ன விதத் தில் மாட்டியிருந்தார்களா?'' டாக்டர் அக்கறையுடன் விசாரித்தார்.

''நான் கிழித்த கோட்டைத் தாண்டவில்லை. கண்காட்சி சாலை யின் பொறுப்பாளர் உங்கள் நண்பரா யிற்றே? நீங்கள் ரொம்பக் கண்டிப்பு டன் சொல்லி வைத்திருக்கிறீர்கள் போலிருக்கிறது. ஆனால்....''

''ஆனால் என்ன மேரி?''

''எனக்கென்னவோ 'புகைப்படக் கலைஞர்' என்று ஒரு பட்டம் ஒட்டிக் கொள்வது பிடிக்க வில்லை.''

''பிடித்தாலும் பிடிக்கவிட்டா லும் நீ புகைப்படக் கலைஞர்தானே? பார்த்துக் கொண்டே இரு. மலை மலையாகப் புகழ் வந்து குவிந்து உனக்கு மூச்சுத் திணறப் போகிறது!'' என்றார் டாக்டர் பீட்டர்.

அவர் சொன்னபடியே நடந் தது.

அவளுடைய புகைப்படங் களைப் பாராட்டிப் பத்திரிகைகள் பக்கம் பக்கமாக எழுதின.

''என்ன சொன்னேன்! ஒரே நாளில் நீ நட்சத்திரமாகிவிட்டாய்!'' என்றார் டாக்டர் பீட்டர். ''உன் புகைப்படங்கள் தேவையென்று ஆர்டர் மேல் ஆர்டராக வரப் போகிறது, பார்!''

''உங்களுக்குப் பைத்தியம் தான் பிடித்திருக்கிறது!'' என்று மேரி சிரித்தாள்.

ஆனால் மீண்டும் அவர் சொன்னது போலவே நடந்தது.

நாட்டின் மூலை முடுக்கிலிருந் தெல்லாம் போனுக்கு மேல் போன் போட்டுக் கூப்பிட்டு ஆர்டர் தந்தார் கள்.

மைக்கேலின் நண்பன் பென் னும் கூப்பிட்டான்.

(தொடரும்)

"எங்கள் கெல்வினேட்டர் ரெஃப்ரிஜிரேட்டரில்
ஆறு பக்கங்களும் எஃகினால்
ஆனது"





ஆமாம். எல்லா கெல்வினேட்டர்
ரெஃப்ரிஜிரேட்டரின் ஆறு பக்கங்களுமே
கோல்டு ரோல்டு எஃகினால் ஆனவை. இந்த
உயர்ந்த தரமுள்ள எஃகு கூடுதல்
வலுவூட்டுகிறது; உங்கள்
ரெஃப்ரிஜிரேட்டரின் ஆயுளை நீடிக்கிறது.
உங்களுககு, பல்லாண்டு நம்மகமான சேவை செய்கிறது.

**கெல்வினேட்டரின் சிறந்த நன்மைகள்.**

* உலகப்புகழ்பெற்ற 'பவர்-ஸேவர்' கம்ப்ரெஸர். இதனால் குளிர்விக்கும் முறை அதிகரிக்கிறது.
* அதிகப் பொருள்கள் வைக்க அதிக இடம்.
* பலவித ரகங்களில். ஒன்பது மாடல் களில், ஒன்பது கவர்ச்சிமிகு வண்ணங்களில் கிடைக்கின்றன.



கெல்வினேட்டர் ரெஃப்ரிஜெரேட்டர்கள், கோடிக்கணக்கான
குடும்பங்களின் ஒரு பகுதி.







இல்லத்துக்கு இன்ப மகிழ்ச்சியைக் கொண்டு வருவீர். கொண்டு வருவீர் ஒரு

# கெல்வினேட்டர்

விற்பனை செய்து சேவை செய்வோர் எக்ஸ்போ மெஷினரி லிமிடெட் பிரகதி டவர், 26, ராஜேந்திரா ப்ளேஸ், நியூ டெல்லி-110 008

Mutual 5099d/TM

# காதல் மேல் ஆணை

**33**



பென்னிடமிருந்து போன் வந்தது ஒரு வியாழக்கிழமை மாலை.

இருட்டறையில் ஒரு பிலிமை டெவலப் செய்து கொண்டிருந்த போது டெலிபோன் மணியடித்தது. துவாலையில் கையைத் துடைத்துக் கொண்டு வெளியே வந்து போனை எடுத்தாள். கூப்பிடுகிறவர் டாக்டர் பீட்டராக இருக்கும் என்றுதான் அவள் நினைத்தாள். அன்று மாலை எத்தனை மணிக்குச் சந்திக்கலாம் என்பது பற்றி போன் செய்து சொல்வதாக அவர் கூறியிருந்தார்.

புகைப்படக் கண்காட்சியின் விளைவாக ஆர்டர்கள் மலையாகக் குவிந்திருந்தன. சாயந்தரம் வெளியே போவதற்குள் நிறைய பிலிம்களை டெவலப் செய்துவிட வேண்டும் என்று எண்ணியிருந்தாள்.

''ஹலோ.''

''மிஸ் மேரியா?''

''ஆமாம்,'' என்றாள். அந்தக் குரலை அவளுக்கு அடையாளம் தெரியவில்லை. டாக்டர் அல்ல என்றறிந்ததும் அவள் முகத்தில் இருந்த புன்சிரிப்பு மறைந்து விட்டது.

''வந்து... நீங்களும் நானும் சந்தித்திருக்கிறோமா இல்லையா என்று எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. வந்து... போன தடவை இந்த ஊருக்கு வந்திருந்தபோது மேரி என்று ஒருவரைச் சந்தித்தேன். ஷாப்பிங் செய்து கொண்டிருந்தபோது... நான் ஒரு பெட்டி வாங்கினேன். அப்போது... உங்களை...''

மூலம்:
டானியேல் ஸ்டீல்

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்



**தோல்வி வந்தால் அது உனக்கு மிக பிரியமானது போல் காட்டிக்கொள். வெற்றியடைந்தால், அது உனக்கு மிகப் பழக்கப்பட்டதுபோல் காட்டிக்கொள்.**

**—ஹிட்ச்காக்**

---

நினைத்ததைச் சொல்லத் தெரியாமல் மடத்தனமாய்த் திணறினான்.

நீண்ட நேரத்துக்கு மேரி எதுவும் பேசாமல் மௌனமாகவே இருந்தாள்.

பென்! கடவுளே எப்படி என்னைக் கண்டுபிடித்தான்? எதற்காகக் கூப்பிடுகிறான்?

''நீங்கள்... அந்த மேரிதானே நீங்கள்?'' என்றான் பென் மீண்டும்.

'இல்லை' என்று சொல்லத் தான் முதலில் தோன்றியது. ஆனால் எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்? ''இருக்கலாம்.'' என்றாள் சுருக்கமாக.

''அதுதானே பார்த்தேன்!'' என்றான் பென். அவன் குரலில் மகிழ்ச்சி நிறைந்திருந்தது. ''கண்காட்சியில் உங்கள் புகைப் படங்களைப் பார்த்தேன். விசாரித்ததில் உங்கள் விலாசம் கொடுத்தார்கள். நான் உங்கள் படங்களைப் பார்த்து அப்படியே சொக்கிப் போய்விட்டேன். என்னோட உதவியாளர் மிஸ் வெண்டியும்தான்.''

ஓ! இந்தப் பெண்ணுக்காகத் தான் அன்றைக்குப் பெட்டி வாங்கினானா? கேட்க வேண்டும் போல் மேரிக்குள் ஒரு குறுகுறுப்பு ஏற்பட்டது. ஆனால் கேட்பது நன்றாக இருக்காது. மௌனமாக ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, ''என் புகைப் படங்கள் உங்களுக்குப் பிடித்திருப்பதைப் பற்றி ரொம்ப சந்தோஷம், மிஸ்டர் பென்,'' என்றாள்.

''அட! என் பெயரை ஞாபகம் வைத்திருக்கிறீர்களே!''

கடவுளே! வாய் தவறிச் சொல்லி விட்டோமே! ''நான் பெயர்களை மறப்பது கிடையாது.'' என்று சமாளித்தாள்.

''நீங்கள் அதிர்ஷ்டக்காரர். எனக்கு ஞாபக சக்தி ரொம்ப மோசம். அதிருக்கட்டும் மிஸ் மேரி, உங்களை நேரில் சந்தித்துச் சில விஷயங்கள் பேச வேண்டுமே?''

''எதைப் பற்றி?'' என்றாள் மேரி. பேசுவதற்கு என்ன விஷயம் இருக்கிறது என்று அவளுக்குப் புரியவில்லை.

''அதாவது, இங்கே சான்பிரான்ஸிஸ்கோவில் நாங்கள் ஒரு மருத்துவ ஸென்ட்டர் கட்டிக் கொண்டிருக்கிறோம். ரொம்பப் பிரம்மாண்டமான திட்டம். உங்களை ஸ்பெஷலாய்ப் புகைப்படங்கள் எடுக்கச் சொல்லி அலங்காரமாக ஒவ்வொரு கட்டிடத்திலும் வைக்கலாம் என்று நினைக்கிறோம். ஆனால் என்னென்ன படம் எடுப்பது என்பதைப் பற்றித் தெளிவான ஐடியா இல்லை. அதற்குத்தான் உங்களுடன் நேரில் பேச வேண்டும். இது உங்கள் வாழ்க்கையில், உங்கள் தொழிலில், ஒரு மாபெரும் முன்னேற்றமாக இருக்கும் மிஸ் மேரி.''



## நட்பு



ஒரே புத்தகத்தை ரசிக்கும் இருவருக்கிடையே மலரும் நட்புக்கு இணையானது எதுவும் கிடையாது.
—எர்விங் ஸ்டோன்



அவன் குரலில் பெருமை பீரிட்டுக் கொண்டிருந்தது. மறு முனையில் 'ஹா!' என்று ஒரு சந்தோஷக் கூச்சல் புறப்படுமென்று எதிர் பார்த்தான். அல்லது 'அப்படியா!' என்று பிரமிப்புக் கொப் புளிக்கக் கேட்பாள் என்று நினைத்தான்.

அப்படி எதுவுமில்லாமல், ''நீங்கள் எந்த நிறுவனத்தில் வேலை பார்க்கிறீர்கள்?'' என்று அமைதியாகக் கேட்டாள் மேரி. என்ன பதில் வருமென்று அவளுக்குத் தெரிந்திருந்த போதிலும், அவள் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது.

'' 'கார்ட்டர்—ஹிலியர்டு' நிறு வனம். நியூயார்க்.''

''ஓ... உங்கள் ஆர்வத்துக்கு நன்றி. ஆனால் எனக்கு அதில் விருப்பமில்லை.''

''என்ன, என்ன!'' அதிர்ச்சியால் அவன் துள்ளிவிட்டான். ''எனக்குப் புரியவில்லையே? ஏன் விருப்பமில்லை?''

''அதைப் பற்றி விவாதிப்பதற் கில்லை, மிஸ்டர் பென். விருப்பமில்லையென்றால் விட்டு விடுங்களேன்.''

''எதற்கும் நாம் நேரில் சந்தித்துப் பேசுவோமே?''

''வேண்டாம்.''

''நான் ஏற்கெனவே என்




—நடேஷ் ஷா

ஆபீசுக்குச் சொல்லி விட்...''

''வேண்டாம் என்றுதான் சொல்லி விட்டேனே? நீங்கள் கூப் பிட்டதற்கு ரொம்பத் தாங்ஸ்.''

மெதுவாக டெலிபோனை வைத்துவிட்டு, இருட்டறைக்குத் திரும்பினாள் அவள்.

'கார்ட்டர்—ஹிலியர்டு! அவர் களிடம் எதுவும் வைத்துக்கொள்ளத் தேவையில்லை. அவ்வளவுதான். எப்போது மைக்கேல் என்னை மனை வியாக ஏற்றுக் கொள்ளத் தயாரா யில்லையோ அப்போதே அவனுடன் சம்பந்தம் விட்டுப் போயிற்று. புகைப் படங்கள் விஷயமானாலும் சரி, வேறெந்த விஷயமானாலும் சரி, அவன் உறவே வேண்டாம்.

இருட்டறையின் கதவை மூடிக் கொள்ளும் சமயம் மறுபடியும் போன் அடித்தது.

பென்னாகத்தான் இருக்கும். வெட்டொன்று துண்டு இரண்டாகப் பேசி இந்த விஷயத்தை இத்துடன் கத்திரித்துவிட வேண்டும்.

போனை எடுத்தவள் கத்தினாள்: ''முடியாது, முடியாது! எனக்கு விருப்பமில்லை என்று எவ்வளவு தடவை சொல்வது?''

ஆனால் கூப்பிட்டது பென் அல்ல. டாக்டர் பீட்டர். ''அம்மாடியோ! ஏன் இப்படிச் சத்தம் போடுகிறாய், மேரி? நான் என்ன செய்து விட்டேன்!'' என்று கூறிக் கொஞ்சம் திகைத்துக் கொஞ்சம் சிரித்தார்.

அவர் குரலைக் கேட்டதும்



பூமி, தான் செய்த
உதவிக்காக மரத்தைக்
கெட்டியாகப் பிடித்து
வைத்துக்கொள்கிறது.
வானம் அப்படியில்லை.
மரத்தைச் சுதந்திரமாக
விட்டு விடுகிறது.

—தாகூர்.

மேரிக்கு நிதானம் ஏற்பட்டது. ''ஸாரி, டாக்டர். கொஞ்சம் முன்னால் எவனோ ஒரு கிறுக்கன் போன் செய்து எரிச்சல் மூட்டி விட்டான்.''

''புகைப்படக் கண்காட்சி விஷயமாகவா?''

''ஆமாம்.''

''அவர்கள் ஏன் உன் டெலிபோன் நம்பரைக் கொடுக்கிறார்கள்? என்ன விஷயம் என்று அவர்களே கேட்டு வைத்துக்கொள்ள வேண்டியது தானே?'' என்றார் டாக்டர் கோபமாக.

''ஆமாமாம். அவர்களிடம் சொல்லி வைக்கிறேன்.''

எவனோ ஒருவன் மேரியை வருத்தப்படுத்தி விட்டானே என்று டாக்டருக்கு உளைச்சல் ஏற்பட்டது. ''மேரி, நீ... இப்போது எப்படி இருக்கிறாய்?''

''ஒன்றுமில்லை, நன்றாகத் தான் இருக்கிறேன்,'' என்று அவள் சொன்ன போதிலும், அந்தக் குரலில் ஒரு நடுக்கத்தை உணர்ந்தார் அவர்.

''ஒரு மணி நேரத்தில் நான் அங்கே வருகிறேன். போன் அடித்தால் எடுக்காதே. நான் வந்து பேசிக் கொள்கிறேன்.''

இன்னும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு அவர் போனை வைத்தார்.

மேரிக்கு உறுத்தலாயிருந்தது, டாக்டரிடம் உண்மையைச் சொல்லாமல் மறைத்து விட்டோமே என்று.

பீட்டரிடம் சொன்னதுபோல் பென் 'எவனோ ஒரு கிறுக்கன்' அல்ல. மைக்கேலிடம் வேலை பார்க்கிறவன். அதனால்தான் அவனிடம் எரிச்சல் ஏற்பட்டது என்பதை டாக்டரிடம் சொல்ல அவள் இஷ்டப்படவில்லை. இன்னமும் கூட மைக்கேல் என்றாலே மனசை என்னவோ பண்ணுகிறது என்பதை எப்படிச் சொல்லுவது?

அன்று இரவு பென் அவளைக் கூப்பிடவில்லை. ஆனால் மறுநாள் காலை மறுபடியும் போன் செய்தான்.

''மிஸ் மேரி, நான் பென் பேசுகிறேன்.''

''இதோ பாருங்கள், நேற்றே என் முடிவைச் சொல்லி விட்டேன். இதில் எனக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை.''

''நான் என்ன சொல்கிறேன் என்பதைக் கேட்டுக் கொள்ளாமலே பேசுகிறீர்களே? என்னுடனும் மிஸ் வெண்டியுடனும் ஓட்டலில் சாப்பிட வரக் கூடாதா? அப்போது பேசலாமே? அதிலென்ன கஷ்டம்?''

'கஷ்டம்தான் பென், கஷ்டம் தான்' என்று நினைத்துக் கொண்டாள் மேரி. ''ஸாரி, மிஸ்டர் பென். எனக்கு வேலை இருக்கிறது.''

''சரி மிஸ் மேரி. ஆனால் ஒன்று. தொழில் முறையில் நீங்கள் செய்வது மாபெரும் தவறு. உங்கள் புகைப்பட விற்பனைகளைக் கவனித்துக் கொள்ளும் ஏஜெண்ட் யாரேனும் இருந்தால் அவரைக் கேட்டுப் பாருங்கள். நான் சொன்னதைத்தான் சொல்வார்.''

''நல்லது. எனக்கு ஏஜெண்ட் யாரும் கிடையாது. என் விஷயங்களை நானேதான் கவனித்துக் கொள்கிறேன். யாரையும் கேட்க வேண்டிய அவசியம் இல்லை.''

''அது இன்னும் தப்பு, மிஸ் மேரி. அதற்கு நான் கொஞ்சம் நாள் கழித்துப் பேசுகிறேன்.''

''தாங்க்ஸ். ஆனால் அனாவசியமாய்ச் சிரமப் படாதீர்கள்.''

பிப்ரவரி மாதம். காலை எட்டு மணி. இன்னும் வெய்யில் வரவில்லை. நியூயார்க் நகரம் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தது.

பென் தன் அலுவலகத்தை அடைய லிப்டில் ஏறினான்.

பத்தரை மணிக்கு மரியமைப் பார்த்து, சான்பிரான்ஸிஸ்கோவில் வேலைகள் எப்படி நடந்து கொண்டிருக்கின்றன என்பதைத் தெரி விக்க வேண்டும். எல்லாம் உற் சாகமான நல்ல செய்திகள்தான்.

சூட்கேஸைத் திறந்து, காகிதங்களையும் தஸ்தா வேஜுகளையும் மேஜை மீது ஒழுங்கு படுத்தி வைத்தான். எல்லா வேலை களும் சிறப்பாக முடிந்திருந்தன. ஒன்றே ஒன்றுதான் தடைப்பட்டு விட்டது. —மேரி விஷயம்.

அவளுடைய புகைப்படக் கண்காட்சியிலிருந்து வாங்கி வந்த சில படங்களைப் பார்த்தான். ஒரு பெரு மூச்சு வெளிப்பட்டது.

இப்போதும் ஒன்றும் கெட்டு விடவில்லை.

இந்தப் படங்களைப் பார்த்ததுமே மரியமுக்கும் மைக்கேலுக்கும் ரொம்பப் பிடித்து விடும். மேரியின் ஸ்டைலும் புகைப் படம் எடுக்கும் நேர்த்தியும் புரியும்.

ஒருவேளை மரியமே மேரியுடன் நேரில் பேசக்கூடும். புகைப் படங்களுக்கான ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போடும்படி செய்யக் கூடும்.

அப்படி நினைத்ததுமே பென்னுக்கு ஒரு புனி உற்சாகம் ஏற்பட்டது.

மேரிக்கு மறுபடி போன் செய்தான். இது பைத்தியக்காரத் தனம் என்று புரிந்தது அவனுக்கு. சான்பிரான்ஸிஸ்கோவில் இப்போது காலை ஐந்தே கால் மணி. தூக்கத்திலிருந்து எழுந்து பேசுவாள் மேரி. ஒருவேளை அரைத் தூக்கத்தில் பேசினால் ஒப்புக்கொள்ளக் கூடும்.

''ஹலோ...'' என்றாள் மேரி ஒரு சிறிய கொட்டாவியுடன்.

''வந்து... மிஸ் மேரி, உங்களை இந்த நேரத்தில் கூப்பிட்டதற்கு ரொம்ப ஸாரி. நான்தான் பென். நியூயார்க்கிலிருந்து பேசுகிறேன். இன்று காலையில் நான் என் நிறு வனத்தின் தலைவியுடன் பேசப் போகிறேன். அந்த மெடிக்கல் ஸென்டருக்காக நீங்கள் ஸ்பெஷலாய்ப் புகைப்படம் எடுத்துத் தரப் போகிறீர்கள் என்று அவரிடம் சொல்ல விரும்புகிறேன்.''

மேரி என்ன பதில் சொல்லப் போகிறாள்? (தொடரும்)




மூன்றே நிமிடம்தான் அவகா சம்.

சுப்பிரமணியம் ஒரே நிமிடத்தில் தன் மனைவியின் கண்களைக் கண்டு பிடித்தார்.

பாஸ்கரன் மூன்று நிமிடம் முடியச் சில விநாடிகள் இருந்தபோது கண்டுபிடித்தார்.

தேவதாஸ், ராதாகிருஷ்ணன் இருவரும் மூன்று நிமிடங்களுக்குள் கண்டு பிடிக்க முடியவில்லை.

படங்கள்: பிரபு சங்கர்

# 34

போனில் மேரி பதில் சொல்லு முன்பே நிச்சயமாய் அவள் சீறத்தான் போகிறாள் என்று பென்னுக்குத் தெரிந்து விட்டது. மறுமுனையில் தென்பட்ட நிசப்தம் அவன் சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்தது.

திடீரென்று மேரியின் குரல் கேட்டது. ''அந்த... அந்த... யாருடனோ பேசப் போகிறீர்கள் என்பதைச் சொல்வதற்காகவா காலை ஐந்து மணிக்குக் கூப்பிட்டீர்கள்? என்ன பிஸினஸ் இது? நான் முடியாதென்று சொல்லி விட்டேனா இல்லையா? மிஸ்டர் பென், உங்களுக்குப் புண்ணியமாகப் போகட்டும், என்னை விட்டுவிடுங்கள். இனிமேலும் தொந்தரவு செய்தால் என் டெலிபோன் நம்பரை மாற்றிக் கொள்ள வேண்டியதுதான்...''

அவள் பேசுவதைக் கேட்டவாறே பென் கண்களை மூடிக்கொண்டு யோசனையில் ஆழ்ந்தான். அதற்குக் காரணம் மேரியின் கோபம் அவனைச் சங்கடப்படுத்தியது மட்டும் அல்ல.

இந்தக் குரல்... வேடிக்கைதான்.... இதை எப்போதோ எங்கேயோ கேட்டிருக்கிறோம். எங்கே? மேரியின் குரல் மாதிரி இது இல்லை. இன்னும் உரத்ததாக, இன்னும் இளமையாக... அவன் ஞாபகங்கள் சிதறின. யாரோ ஒருத்தருடைய குரல் இதே போல் இருக்குமே யார்? 'புண்ணியமாய்ப் போகட்டும்'' என்ற வார்த்தை சொல்வதுண்டு.

போனில் கேட்ட கோபமான பேச்சு அவன் சிந்தனையைக் கலைத்தது. மேரியுடன் பேசிக் கொண்டிருக்கிறோம் என்பதை நினைவூட்டியது.



''வந்து... ரொம்ப ஸாரி மிஸ் மேரி,'' என்றான். ''நான் இந்த வேளையில் கூப்பிட்டது தப்புதான். ஆனால் நான் என்ன நினைத்தேனென்றால்...''

''நீங்கள் என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய பீற்றல் மருத்துவ ஸென்ட்டர் பற்றி நான் உங்களுடன் பேசவோ, விவாதிக்கவோ, யோசனை செய்யவோ, பரிசீலிக்கவோ தயாராயில்லை! போதுமா? தயவு பண்ணி ஆளை விடுங்கள்!'' போனைப் படக்கென்று வைத்தாள் மேரி.

'விட்டு விட்டேன்! விட்டு விட்டேன்!' என்று தனக்குள் வாய் விட்டுச் சொல்லிய வண்ணம் பென்னும் போனை வைத்தான்.

அறை வாசலில் கதவில் சாய்ந்தாற்போல் நின்றிருந்த மைக்கேலை அவன் கவனிக்கவில்லை.

''என்னத்தை விட்டு விட்டாய் என்பதை எனக்குச் சொல்லலாமா?''

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்

உள்ளே
வசதியான
பெரிய
சோபாவில்
ர்ந்து
ன்.

உன்னைப்
து சந்
இருக்கிறது
போது
ருந்து

சொன்

க்கும்
த பிறகு
டி என்
ஆனால்
என்ன
க! சான்
கோவில்
இருக்க
இந்தக்
ஜஸ்ட்
கொள்
ாயிருக்

இனி
பிரான்
லேயே
படி
றாம்
என்று
ண்டல்
ன்.
டும்,
ருடன்
டிருந்

விட்டு
நான்
ந்த
ஒன்று
தன்
ப ச்



சொறிந்து கொண்டே சலிப்புடன் சொன்னான் பென். ''அங்கே ஒவ்வொரு வேலையும் நாம் போட்ட திட்டப்படி கச்சிதமாய் நடந்திருக்கிறது. ரிப்போர்ட்களைப் பார்த்ததும் உன் அம்மா ஆனந்தத்தில் குதிப்பது நிச்சயம். ஒரே ஒரு கோளாறுதான். பெரிய விஷயமில்லை. ஆனால் அதுவும் என் இஷ்டப்படி அமைந்திருந்தால் எல்லாமே கச்சிதமாக முடிந்திருக்கும்.''

''என்ன, பெரிய பீடிகை போடுகிறாய்?''

# மகிழ்ச்சிகரமான குடும்பங்களில் நிறைந்திருப்பது 3ரோஸஸ் திருப்தி



ப்ரூக் பாண்ட் அளிக்கும்
3ரோஸஸ் ப்ரீமியம் டஸ்ட் டீ.
சிறந்த நிறம், அதிக திடம்,
நிறைந்த சுவை.

மேலும் மேலும் டீ கோப்பைகள்

**3ரோஸஸ்**

**ப்ரீமியம் டஸ்ட் டீ**

 **ப்ரூக் பாண்ட்**







everest/S90/561 TAM

''சொல்கிறேன். அங்கே ஒரு புகைப்படக் கலைஞர் இருப்பது தெரிந்தது. பெண். பிரமாதமான புகைப்படக்காரி. சும்மா டப்பா காமெராவை வைத்துக்கொண்டு படம் எடுக்கிறவள் அல்ல. நிஜமாகவே அற்புதமான திறமைசாலி. அவளுடைய புகைப்படக் கண் காட்சியை சான்பிரான்ஸிஸ்கோவில் பார்த்தேன். அவளைப் படம் எடுக்கச் சொல்லி நம்முடைய மருத்துவ சென்ட்டரில் ஒவ்வொரு பிரதான வெராந்தாவிலும் மாட்டவேண்டும் என்று ஆசைப்பட்டேன். முக்கியமான இடங்களில் பெரிய பெரிய புகைப் படம் மாட்ட வேண்டுமென்று நம் முடைய மீட்டிங்கில் முன்பே தீர் மானித்திருக்கிறோம். இல்லையா? அதனால் கேட்டேன்.''

''சரி.''

''அண்ட விடவில்லை என்னை. பேசவே தயாராயில்லை என்று சொல்லிவிட்டாள்.'' தோல்வியின் அடி பென்னின் முகத்தில் படர்ந்திருந்தது.

''ஏனாம்? புகைப்படம் எடுப்பதை வியாபாரமாக்கப் பிடிக்க வில்லையா?''

''அப்படியும் தெரிய வில்லையே? ஆரம்பத்திலிருந்தே பிடி கொடுக்காமல் மறுக்கிறாள். ஏனென்று எனக்குப் புரியவில்லை!

மைக்கேலின் உதட்டில் குறுநகை தவழ்ந்தது. 'இதுகூடத் தெரியவில்லையே உனக்கு!' என்பதுபோல் நண்பனைப் பார்த்தான். ''என் அசட்டுத் தோழனே, உனக்குப் புரியா விட்டாலும் எனக்குப் புரிந்துவிட்டது. நம்மிடம் நன்றாய்க் கறக்க வேண்டு மென்றுதான் பிகு பண்ணிக் கொள் கிறாள் அவள். நாம் எவ்வளவு பெரிய ஆள் என்று அவளுக்குத் தெரியும். ஆகவே தனக்கு இஷ்டமில்லை என்பதுபோல் கிராக்கி பண்ணிக் கொண்டால் பெரிய தொகைக்குக் காண்டிராக்ட் செய்து கொள்ளலாம் என்று கணக்குப் போடுகிறாள்! ஆனால் உண்மையிலேயே அவ்வளவு திறமைசாலியா?''

''பிரமாதமான கெட்டிக்காரி. மாதிரிக்கு அவளுடைய சில புகைப் படங்களைக் கொண்டு வந்திருக் கிறேன். பார்த்தால் நீ மயங்கி விடுவாய்'' என்ற பென் தன் சூட் கேஸிலிருந்து சில புகைப்படங்களை எடுத்து மேஜை மீது போட்டான்.

ஆனால் மைக்கேல் அவைகளைப் பார்க்கவில்லை. ''சரி, இவைகளை அப்புறமாய்ப் பார்க் கிறேன். நீ சொல்வதைப் பார்த்தால் அவள் கேட்கிற தொகையை கொடுக்க வேண்டியதுதான். நான் உன்னிடம் வேறொரு விஷயம் கேட்க எண்ணினேன்.''

மைக்கேலின் குரலில் இருந்த தீவிரத்தைப் பென் கவனித்தான்.

## எலிப் பிள்ளை



பரண் மீது சுத்தம் செய்யும்போது அங்கே இருந்த இந்த எலிக் குஞ்சுகளைக் கண்டேன். படம் எடுத்து விட்டேன்.

—ஆர். கிருஷ்ணமூர்த்தி



''ஏதேனும் சீரியஸ் சமாசாரமா?''

''இல்லையில்லை. அதைப் பற்றி எப்படிப் பேசுவதென்று எனக்கே தெரியவில்லை. வந்து... என்னைச் சுற்றி என்ன நடக்கிறதென்பதை நான் கவனிக்காமலேயே இருந்திருக்கிறேன். அதாவது, உனக்கும் உன் உதவியாளராக இருக்கிறார்களே அந்த வெண்டிக்கும் ஏதாவது....''

இதற்குப் பதில் சொல்லுமுன் மைக்கின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான் பென். மைக்கேல் கோபப்படுவதாகவோ வருத்தப்படுவதாகவோ தெரியவில்லை. விஷயம் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ஆவல் காட்டுவதாகத்தான் தோன்றியது.

வெண்டியும் மைக்கேலும் சிநேகிதமாக இருந்தது பென்னுக்குத் தெரியும். ஆனால் மைக்கேலுக்கு அவளிடம் ஆழ்ந்த காதல் எதுவும் கிடையாதென்பதும் தெரியும். இருந்தாலும் தன் நண்பன் கைவிட்ட பெண்ணைத் தான் காதலிப்பது அவனுக்கு என்னவோ போலிருந்தது. அந்த விஷயம் மைக்கேலுக்குத் தெரியும்போது அதை அவன் எப்படி எடுத்துக் கொள்வானோ என்று சங்கடப்பட்டுக் கொண்டிருந்தான்.

சான்பிரான்ஸிஸ்கோவுக்கு அவனும் வெண்டியும் ஆபீஸ் வேலையாய்ச் சேர்ந்து சென்றபோது இருவருக்குள்ளும் காதல் மலர்ந்து விட்டது. 'இது நமக்குத் தேனிலவு' என்று வெண்டி அடிக்கடி பரிகாசம் செய்து கொண்டிருந்தாள்.

''என்ன பென், என் கேள்விக்குப் பதிலைக் காணோம்?'' என்றான் மைக்கேல். அவன் உதட்டில் தவழ்ந்த குறும்புப் புன்னகை' எனக்கு எல்லாம் தெரியும்' என்று சொல்லாமல் சொல்லியது.

''முன்பே உன்னிடம் சொல்லாதது தப்புதான், மைக். நானும் வெண்டியும் ஒருவரையொருவர் காதலிக்கிறோம். அதில் உனக்கு... உனக்கு...''

''எனக்கு எதுவும் இல்லை, பென்,'' என்றான் மைக்கேல். ''நானும் அவளும் கொஞ்ச நாள் பழகினோம். உண்மைதான். ஆனால் அவளுக்கும் எனக்கும் சரிப்பட்டு வரவில்லை. வெண்டி சொல்லியிருப்பாளே என்னைப் பற்றி?''

''அவள் எதுவும் சொன்னது கிடையாது. நீ சந்தோஷமாக இல்லை என்று மட்டும்தான் சொல்லியிருக்கிறாள். அது ஒன்றும் புதிய விஷயமில்லையே?''

மைக்கேல் சிறிது மௌனமாகியிருந்த பின், ''வெண்டி ரொம்பத் தங்கமான பெண். நான் அவளுக்கு ஏற்றவனல்ல. ஏன், நீ கூடத்தான் ஏற்றவனல்ல,'' என்றான் புன்னகையுடன். ''உன் காதல் இப்படியே நின்று விடுமா? அல்லது...''

பென் வெட்கத்துடன் தலையை அசைத்து, ''ஆமாம், மைக் நாங்கள் கல்யாணம் செய்து கொள்வதாகத்தான் இருக்கிறோம்.'' என்றான்.

''கல்யாணம்... கல்யாணம்...'' பென்னை நம்ப முடியாமல் பார்த்தான் மைக்கேல். 'சிநேகிதனின் வாழ்க்கையில் இவ்வளவு பெரிய திருப்பம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் எதுவும் தெரியாத மடையனாக நாம் இருந்



''அந்த வாலிபால் பிளேயர் ஏன் 'லவ் ஆல்'னு சொல்ல இந்தப் பயம் பயப்படறார்?''

''அவருக்கு எயிட்ஸாம்!''

—நஷா

திருக்கிறோமே என்று நினைக்கையில் அவனுக்கு வருத்தமாக இருந்தது.

''ஏன் மைக், எங்கள் கல்யாணத்தில் உனக்கு ஏதாவது ஆட்சேபணை உண்டா?''

''ஆட்சேபணையா! சீச்சீ! எதுவும் கிடையாது. இத்தனை நாளும் நீ என்னிடம் சொல்லவில்லையே என்று நினைத்தேன். அவ்வளவுதான்.''

''ஸாரி மைக். கல்யாணத் தேதி நிச்சயமானதும் உனக்குச் சொல்லுகிறேன். இன்னொரு விஷயம். என் கல்யாணத்தின் போது நீதான் எனக்கு...''

சட்டென்று நகத்தைக் கடித்துக் கொண்டான் பென். 'நீதான் எனக்கு மாப்பிள்ளைத் தோழனாக இருக்க வேண்டும்,' என்றுதான் அவன் சொல்ல வந்தான்.

மைக்கேலின் திருமணத்தின் போது அவன் மாப்பிள்ளைத் தோழனாக இருப்பதென்று திட்டமிட்டிருந்தும் திருமணத்துக்கு முன்பே அந்தக் கோர விபத்து ஏற்பட்டு எல்லாம் கெட்டு விட்டதும் பென்னுக்கு நினைவு வந்தது. மேலே சொல்லாமல் நிறுத்திக் கொண்டது அதனால்தான்.

மைக் மெல்ல எழுந்து கொண்டான். ''அதற்குத்தான் நிறைய நாள் இருக்கிறதே? பார்த்துக் கொள்ளலாம்,'' என்று சொல்லி நண்பனின் கையை குலுக்கினான்.

ஆனால் அவன் கண்களில் வேதனை படர்ந்து விட்டது நன்றாகவே தெரிந்தது. அந்தத் துன்ப நினைவு அவன் மனத்திலும் ஏற்பட்டு விட்டது பென்னுக்குப் புரிந்தது.

''கங்கிராஜுலேஷன்ஸ்,'' என்று கூறி மறுபடியும் பென்னின் கைகளைக் குலுக்கினான் மைக்கேல். அவன் முகத்தில் கள்ளம் கபடமற்ற புன்சிரிப்புப் பரவியிருந்தது. இருந்தாலும்கூட அதன் பின்னே வேதனை மறைந்தேயிருந்தது.

''நீ அந்த சான் பிரான்ஸிஸ்கோ பெண் பிள்ளையைப் பற்றி மனசை உழப்பி கொள்ளாதே. நீ சொல்கிற அளவுக்கு அவள் கெட்டிக்காரியாயிருந்தால், எத்தனை பணம் வேண்டுமானாலும் கொடுத்து அவளை மடக்கி விடுவோம். கட்டாயம் மசிந்து விடுவாள். பணத்துக்காகத்தான் அவள் பேரம் பண்ணுகிறாள்.''



''உனக்கு பத்ம 'பூசணி' விருது கொடுத்தது எதுக்காக என்று இப்பத்தான் புரியுது!''

—இராம. மாதவன்

''இருக்கலாம்.''

''இருக்கலாமென்ன நிச்சயமாய் அது தான்,'' என்று கூறி விட்டு மைக்கேல் புறப்பட்டான்.

தனக்கும் வெண்டிக்குமுள்ள காதலை ஒருவழியாய் நண்பனுக்குத் தெரிவித்து விட்டோம் என்று ஒருபுறம் பென்னுக்கு ஆறுதலாயிருந்தது. மறுபுறம் மூளையில்லாமல் மாப்பிள்ளைத் தோழன் விஷயத்தைச் சொல்லி அவன் மனசில் வேதனை ஏற்படுத்தி விட்டோமே என்று உறுத்தலாயும் இருந்தது.

ஆனால், இத்தனை நாளாகியும் மைக்கேல் அதையெல்லாம் மறக்காமல் இருக்கிறானே! நான்ஸியை நினைக்கும்போதே அவன் கண்கள் கலங்குகிறதே!

பென்னுக்கு ஆச்சரியமாயிருந்தது.

(தொடரும்)

# காதல் மேல் ஆணை



## 35

மைக்கேல் புறப்பட்டுப் போன பிறகு சிறிது நேரத்துக்குப் பென்னுக்கு வருத்தமாகவே இருந்தது. 'என் கல்யாணத்தில் மாப்பிள்ளைத் தோழனாக இருக்கிறாயா?' என்று கிட்டத்தட்டக் கேட்டு, நண்பனின் உள்ளத்தில் வேதனை ஏற்படுத்தி விட்டோமே என்று வருந்தினான். சட்! நம்மையறியாமல் வந்துவிட்டதே! தன்னைத்தானே நொந்தபடி தலையை அசைத்துக் கொண்டு மேஜை மீதிருந்த வேலையில் மூழ்கினான். இன்னும் ஒரு மணி நேரத்தில் மரியமுடன் மீட்டிங் இருக்கிறது.

கதவு திறந்திருந்த போதும் இரண்டு முறை டொக் டொக் என்று தட்டிவிட்டு வெண்டி உள்ளே நுழைந்தாள். புன்சிரிப்புடன், ''என்ன பென், இன்னும் உட்கார்ந்திருக்கிறே? மணி ஆகிவிட்டதே! இன்னும் ஐந்து நிமிடத்தில் நாம் மரியமின் அறையில் இருக்க வேண்டும்,'' என்றாள்.

''டயமாகி விட்டதா என்ன?'' மேஜையிலிருந்து தலையை நிமிர்த்தியவன் அவளைப் பார்த்ததும் முகம் மலர்ந்தான். அவளுடைய கச்சிதமான அலங்காரம் அவன் மனதுக்குப் பிடித்திருந்தது. ''வெண்டி, கொஞ்சம் முன்னாடி மைக்கிடம் சொல்லி விட்டேன்,'' என்றான். அவன் முகம் மலர்ந்திருந்தது.

''என்ன சொன்னாய்?'' என்றாள் வெண்டி. அவள் மனம் சான் பிரான்ஸிஸ்கோ மருத்துவமனைத் திட்டத்தைப் பற்றியும் மரியமுடன் நடக்கவிருக்கும் மீட்டிங்கைப் பற்றியுமே எண்ணிக்கொண்டிருந்தது. அதுவும் மரியம்— அந்த ஆதிக்க நிற அதிகார உருவம்— எப்போதுமே அவளுக்குக் கிலி ஏற்படுத்துவது வழக்கம்.

''கிறுக்கு! நம்மைப் பற்றிச் சொன்னேன் என்கிறேன்! அதிலே அவனுக்குச் சந்தோஷம் என்று தோன்றியது.''

''அப்படியா? எனக்கும் சந்தோஷம்.'' என்றாள் வெண்டி. பென்னுக்குச் சந்தோஷம் என்றதால் தான் அவளுக்கும் மகிழ்ச்சி ஏற்பட்டதே தவிர, மற்றப்படி மைக்கேலைப் பற்றி துளியும் அவள் கவலைப்படவில்லை. கருணையில்லாதவன், உணர்ச்சி இல்லாதவன், எவ்வளவு நெருங்கிக் கொஞ்சினாலும் வேறெங்கோ கவனமாக இருப்பவன் என்று மைக்

மூலம்: டானியல் ஸ்டீல்



கேள்வி மீது அவளுக்கு எரிச்சல்தான் ஏற்பட்டது. கொஞ்ச நாள் சேர்ந்து வாழ்ந்தோம் என்பதே அவளுக்கு மறந்து விட்டது.

''என்ன புறப்படலாமா?''

கிளம்ப வேண்டியதுதான். அந்தப் புகைப்படக்காரப் பெண் மேரியை இன்று கூடக் கூப்பிட்டுப் பேசிப் பார்த்தேன். அதெல்லாம் முடியாதென்று சொல்லிவிட்டாள்.''

''ஆச்சரியம்தான்.'' என்று வெண்டி கூற, இருவரும் பேசியவாறே லிஃப்டை அடைந்தார்கள்.

மரியமின் அலுவலகத்துக்குச் செல்லும் பிரத்தியேக லிஃப்ட் அது. தரை, சுவர்கள், கூரை முதலிய எல்லாப் பக்கமும் மெத்தென்ற விரிப்புப் போடப்பட்டிருந்தது. வழுக்கிக்கொண்டு லிஃப்ட் மேலே செல்லுவது சொர்க்கத்துக்குச் செல்கிற மாதிரி சுகமான அனுபவம்.

சட்டென்று கதவு திறந்து கொள்ள, கம்பீரமான மரியமின் அலுவலகம் தென்பட்டது. வெளிப்புறம் பார்த்தால் என்ன அற்புதமான இயற்கைக் காட்சி!

உள்ளங்கை வியர்த்து, கைப்பிடியிலிருந்த ஃபைல் கசகசப்பதை உணர்ந்தாள் வெண்டி. மரியமைப் பார்க்கப் போகும் ஒவ்வொரு முறையும் அவளுக்கு அப்படித்தான் இருக்கும். என்னதான் மரியம் இனிமையாகப் பேசினால்கூட. அந்த இனிமைக்கும் கவர்ச்சிக்கும் ஒயிலுக்கும் பின்னே கறார் கண்டிப்பு மறைந்திருப்பதை அவள் அறிவாள்.

மரியமின் கண்ணாடிச் சுவர்கள் கொண்ட அறையை நோக்கி நடக்கையில், ''ஏன்? படபடப்பாயிருக்கிறதா?'' என்று அவளை நோக்கி ரகசியமாகக் கேட்டான் பென்.

**தமிழில்:**
**ரா.கி.ரங்கராஜன்**

''இல்லாமலிருக்குமா?''

ஒருவரையொருவர் பார்த்துச் சிரித்தவண்ணம் உள்ளே நுழைந்து, மீட்டிங் அறையில் தங்கள் ஆசனங்களில் அமர்ந்தார்கள். தரையோரமாக தொட்டிகளில் செடிகள் வளர்க்கப்பட்டிருந்தன. சுவர்களில் புகழ் பெற்ற ஓவியர்களின் படைப்புக்கள் மாட்டப்பட்டிருந்தன.

அறுபத்தைந்தாவது மாடியில் இருந்தது மரியமின் அலுவலகம். அங்கிருந்து கீழே பார்த்தபோது வெண்டிக்குத் தலை சுற்றியது. விமானத்தில் பயணம் செய்கிற மாதிரி இருந்தது. ஒரே ஒரு வித்தியாசம், இங்கே பரிபூரண நிசப்தம் நிலவியது. துளி ஓசைகூட இல்லாமல் வேலைகள் நடப்பதுதான் மரியமுக்குப் பிடிக்கும்.

கண்ணாடிப் பரப்புக் கொண்ட நீண்ட மேஜையின் இரு புறமாக இருபத்திரண்டு பேர் அமர்ந்திருந்தார்கள். மரியம் உள்ளே வந்தாள், ஒருபுறம் மைக்கேலும், இன்னொரு புறம் ஜார்ஜும் புடைசூழ. மரியமின் ஸ்டெனோ கை நிறைய பைல்களுடன் பின்தொடர்ந்து வந்தாள். ஜார்ஜ் ஏதோ தீவிரமாக மைக்கேலுடன் விவாதித்துக் கொண்டிருந்தார். கொஞ்ச நாளாக முக்கியப் பொறுப்புக்களை அவனிடம் ஒப்படைந்து வந்ததால வேலைப்பளு குறைந்ததில் அம்மாடி என்றிருந்தது அவருக்கு.

ஒரு முறை கூடியிருப்பவர்களை நோக்கி, எல்லோரும் வந்திருக்கிறார்களா என்று கவனித்தாள் மரியம். அழகாகவும் கச்சிதமாகவும் உடையணிந்து, பளிச்சென்ற முத்து மாலைகளை அணிந்திருந்தாள். விரல்களில் நகப்பூச்சு கருமையாக இருந்தது. மற்றப்படி முகத்துக்கு மேக்கப் எதுவும் போட்டுக்கொள்ளவில்லை.

அம்மாவின் முகம் வழக்கத்துக்கு விநோதமாக மிகவும்

---

## வீராணத்தைக் கூவத்தில் போடுங்கள்



வீராணம் திட்டம், தி.மு.க. ஆட்சி முதல் முறையாக வந்த பொழுது கொண்டு வரப்பட்ட திட்டம். அதற்காக சென்னையிலிருந்து பழைய மகாபலிபுரம் ரோடு வழியாக—பண்ருட்டி எல்லை வரை போடப்பட்ட சுமார் ஆயிரக்கணக்கான ராட்சச சிமெண்ட் கான்கிரீட் பைப்புகள் கேட்பாரற்றுக் கிடக்கின்றன.

மீண்டும் தி.மு.க.அரசு வந்து ஒன்றரை ஒன்னரை ஆண்டு ஆகும் இந்த சமயம் கூட அந்தப் பைப்புகள் பற்றியோ—திட்டம் பற்றியோ பேச்சு—மூச்சு இல்லாமல் இருப்பதின் மர்மம் என்ன?

உடனே ஒரு திட்டத்திற்கு அந்த பைப்புகளைப் பயன்படுத்துவது கஷ்டம் என்றாலும், சென்னையில் அழுக்கு வாடையோடு ஓடும் கூவம் ஆற்றில் இந்த ராட்சச பைப்புகளை மேலும்—கீழும் பொருத்தி அதன் வழியாக அந்தத் தண்ணீர் பக்கிங்காங் கால்வாய் வழி கடலில் சேர்க்கச் செய்வது நியாயமானது—அறிவுபூர்வமானது.

வாசகர் தலையங்கம்: —எஸ். மேகநாதன், விருத்தாசலம்.

வெளிறிப் போயிருக்கிறது என்று மைக்கேலுக்குத் தோன்றியது. சான்பிரான்ஸிஸ்கோ மருத்துவ மனைத் திட்டத்தால் ஏகப்பட்ட வேலை போலிருக்கிறது என்று எண்ணிக் கொண்டான். அது மட்டுமிருக்காது. அதைப் போல மேலும் பத்துத் திட்டங்களை இழுத்துப் போட்டுக் கொண்டிருப்பாள். அதுதான் அம்மாவின் சுபாவம். நிறுவனம் செய்யும் ஒவ்வொரு வேலையிலும் தலையிட்டுக் கொண்டேயிருப்பாள். அப்புறம் ஏன் களைப்பு ஏற்படாது?

மகன் முன்னேற்றம் குறித்து மரியமுக்கு ரொம்பப் பெருமை. சென்ற இரண்டு வருடங்களாக என்னமாய் முழுகிவிட்டான் வேலையில்! வாரிசு என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்! பெரிய பெரிய தொழில் சாம்ராஜ்யங்கள் ஆரோக்கியமாக, பலம் வாய்ந்ததாக விளங்குவது இப்படிப்பட்டவர்களின் ரத்தத்தால் தான்.

ஸ்டெனோவிடமிருந்து ஒவ்வொரு ஃபைலாக வாங்கிப் பார்த்து, ஒவ்வொரு இலாகாத் தலைவர்களாகக் கூப்பிட்டு விசாரிக்கத் தொடங்கினாள் மரியம். போன மீட்டிங்கின்போது என்னென்ன பிரசினைகள் பேசப்பட்டன, அவைகளுக்கு எப்படித் தீர்வு கண்டார்கள் என்று கேட்டறிந்தாள்.

பென்னின் முறை வந்தது. அவனும் வெண்டியும் தாங்கள் சான்பிரான்ஸிஸ்கோ போய் வந்ததையும், அங்கே ஏற்பட்டு வரும் முன்னேற்றங்களைப் பற்றியும் விவரித்தார்கள். திட்டம் அருமையாக நிறைவேறுகிறதென்ற மகிழ்ச்சி முகத்தில் பளபளக்க, மைக்கேலைப் பெருமையுடன் பார்த்தாள் மரியம்.

''ஒரு சின்னப் பிரசினை,'' என்று மெதுவாக சொன்னான் பென்.

''பிரசினையா? என்ன?''

''ஒரு இளம் பெண். புகைப் படக்காரி. அவள் எடுத்த புகைப்

படங்கள் சிலதை நாங்கள் பார்த்தோம். அவளைப் புகைப்படம் எடுக்கச் சொல்லி நமது மருத்துவமனையில் முக்கியமான இடங்களில் வைக்க வேண்டுமென்று பார்த்தோம். அவள் முடியாதென்று சொல்லி விட்டாள்.''

மரியம் முகம் சுளித்தாள். ''ஏனாம்? ஏன் முடியாதென்றாள்?''

''அதென்னவோ'' பேச்சு எடுத்ததுமே முடியாதென்று சொல்லி விட்டாள்.''

''யாருடைய நிறுவனத்துக்காக நீ பேசுகிறாய் என்று அவளுக்குத் தெரியுமா?''

மைக்கேலுக்கும் சரி, பென்னுக்கும் சரி, சிரிப்பு வந்தது. அடக்கிக் கொண்டார்கள். தன் ஸ்தாபனத்தைப் பற்றி மரியமுக்கு ஏகப்பட்ட நம்பிக்கை. பெயரைச் சொன்னால் போதும் பறந்தடித்துக் கொண்டு வருவார்கள் என்று எண்ணுவாள்.

''சொன்னேன். அதிலொன்றும் அவள் மசியக் காணோம். இன்னும் சொல்லப் போனால் நம் ஸ்தாபனத்தின் பெயரைக் கேட்டு அவளுக்குக் கோபம் வந்த மாதிரி கூடத் தோன்றியது.'' என்றான் பென்.

''கோபம் வந்ததா? ஏன்?''

மரியமின் முகத்தில் கடுமை பரவியது. யாரந்தச் சின்னப் பெண்? காட்டர்—ஹிலியர்டு என்ற பெயரைக் கேட்டதும் நடுநடுங்க வேண்டாமோ?

''கோபம் என்று நான் சொன்னது சரியில்லை. பயந்து போய் விட்டாள் என்று சொன்னால் சரியாயிருக்கும்.'' என்று பென் திருத்திக் கொண்டான்.

மரியமைச் சமாதானப் படுத்துவதற்காக அப்படிச் சொன்னதற்குப் பலன் இருந்தது. அவள் கன்னங்களில் ஏறியிருந்தது சிவப்பு.

---

# கேவலப்படுத்தாதீர்!



ஒரு நாட்டு அரசின் ஒவ்வொரு ரூபாய் செலவின் பெரும் பகுதி, பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிக்கல் நாட்ட வேண்டும். வேலை வாய்ப்புகளை அதிகரிக்க வேண்டும்.

இவ்வருட பட்ஜெட்டில் இந்தக் கோட்பாடுகளுக்குப்படாத 'ஆயிரம் கோடிகள்' என்ற விவசாயக் கடன்களுக்கான செலவீடு ஒவ்வொரு இந்தியனின் மனதையும் உறுத்தவே செய்கிறது.

ஆனால் இந்த செயலை தொலை நோக்கோடு பார்க்கும்பொழுது, இந்திய விவசாயிகளின் நாணயத்தையே சந்தேகிப்பது போல் அமைகிறது. வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க அவர்கள் தயங்கியதில்லை. இயற்கையின் சீற்ற காலங்களில், கடனைத் திருப்பித்தருவது ஒத்தி போடுவது சகஜமானதுதான். ஆனால் வாங்கிய கடனைத் திரும்பத்தர வேண்டாமென்பது, ஒரு விஷ விதையை விதைப்பது போன்ற செயல்தான். இம்மாதிரி கடன் ரத்துக்கள் ஒரே முறைதான் என்று சொல்லப்பட்டாலும் ஒரு முறை, பல முறைகளுக்கு உரமிட்டு விடுமென்பது நிச்சயம். விவசாயமும், தொழில் துறையும் ஒன்றை ஒன்று சார்ந்ததுதானே...? எங்களுடைய இம்மாதிரி கடன்களையும் ரத்து செய்யுங்கள் என்று தொழிலதிபர்களும் அடுத்து அரசு ஊழியர்களுக்கும் இச் சலுகை வேண்டும் என்று போராட மாட்டார்களா?

வாசகர்: —தலையங்கம்: ஆர். லதா, சென்னை.





சற்றே குறைந்தது. ''அவளை விட்டுவிடக் கூடாதென்றா சொல்கிறாய்? அந்த அளவுக்குக் கெட்டிக்காரியா?'' என்றாள்.

''எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது. உங்களுக்குக் காட்டுவதற்காக சில சாம்பிள் படங்கள் கொண்டு வந்திருக்கிறேன், பாருங்கள், உங்களுக்கேத் தெரியும்.''

''சாம்பிளா? உன்னோடு பேசவே அவள் தயாராயில்லை என்றாயே, எப்படிப் படம் மட்டும் கிடைத்தது?''

''அவளுடைய புகைப்படக் கண்காட்சியில் வாங்கினேன். விலை கொஞ்சம் அதிகம்தான். உங்களுக்குத் தேவையில்லையென்றால் நானே பணம் கொடுத்து எடுத்துக் கொள்கிறேன்.''

வெண்டி பக்கத்து மேஜையில் இருந்த பெட்டியைத் திறந்து புகைப் படங்களை எடுத்து வந்தாள். முக்கியமாக மூன்று கலர் போட்டோக்களை எடுத்துக் காட்டினாள்.

ஒன்று, சான்பிரான் ஸிஸ்கோவில் ஒரு பூங்கா. அதில் ஒரு வயோதிகர் பார்க் பெஞ்சில் உட்கார்ந்து கொண்டு, சில குழந்தைகள் விளையாடுவதைப் பார்த்தவாறிருந்தார். அவர் கண்களில் பரிவு தெரிந்தது. இன்னொன்று, துறைமுகக் காட்சி. ஏகப்பட்ட கூட்டத்தின் நடுவே ஒருவன் திண்பண்டங்கள் விற்றுக் கொண்டிருந்தான். மூன்றாவது, சான்பிரான்ஸிஸ்கோ நகரத்தின் சூரியாஸ்தமனக் காட்சி.

பென் எதுவும் சொல்லவில்லை. புகைப்படங்களை நிமிர்த்தினாற்போல் வைத்துவிட்டு எட்டப் போய் நின்று கொண்டான்.

என்லார்ஜ் செய்யப்பட்ட பெரிய புகைப்படங்களாகையால் ஒவ்வொரு நுணுக்கமும் பளீரென்று

தெரிந்தது. அவற்றின் அழகில் எல்லாரும் மயங்கிப் போனார்கள். மரியம் கூட வியப்பினால் வாயடைத்துப் போனாள் சிறிது நேரத்துக்கு. கடைசியில் மெல்லத் தலையை அசைத்து, ''நீ சொன்னது சரிதான். பென். வளைத்துப் போடுவதற்குத் தகுதியுள்ளவள்தான். இந்தப் பெண்'' என்றாள்.

''சந்தோஷம், மேடம்.''

''என்ன மைக், நீ என்ன நினைக்கிறாய்?'' மகன் பக்கம் திரும்பிப் பார்த்தாள்.

மைக்கேல் அந்தப் படங்களைப் பார்த்த வண்ணம் சிந்தனையில் ஆழ்ந்து போயிருந்தான். படங்களின் கலைச் சிறப்பில், தேர்ந் தெடுத்திருந்த விஷயங்களில்— ஏதோ ஒன்று அவன் மனத்தை உறுத்தியது என்னவோ ஒரு விதத்தில் அவை தனக்குப் பழக்கமானவை போல் தோன்றியது. என்னவென்று புரிய வில்லை. அவன் உள்ளம் கட்டிப் போடப்பட்ட மாதிரி இருந்தது. அந்த மயக்கத்தை உதறி எறிய அவன் போராட வேண்டியிருந்தது. இந்தப் புகைப்படங்கள் ஏன் தன் மனத்தை உறுத்த வேண்டுமென்பது தெரியா விட்டாலும், ரொம்பச் சிறந்த படங்கள் என்பதை அவனும் ஒப்புக் கொள்ள வேண்டியிருந்தது. தங்கள் நிறுவனம் கட்டும் கட்டிடங்களின் அழகையும் தரத்தையும் இவை உயர்த்துமென்று எண்ணினான்.

''என்ன, மைக், எனக்குப் பிடித்திருக்கிற அளவுக்கு உனக்குப் பிடித்திருக்கிறதா?'' என்றாள் மரியம். மைக்கேல் பதில் சொல்ல வார்த்தை வராமல் தலையை ஆட்டினான்.

மரியம் நேரத்தை வீணடிக்க விரும்பவில்லை. ''பென், இந்தப் பெண்ணை எப்படி வழிக்குக் கொண்டு வரப் போகிறாய்?''

''எனக்கும் அதுதான் தெரியவில்லை.''

''பணத்தால் சரிக்கட்ட வேண்டி யதுதான். வேறென்ன? அவள் எப்படி இருக்கிறாள்? நீ நேரில் பார்த்தாயா?''

''முந்தின தடவை சான் பிரான்ஸிஸ்கோவுக்குப் போயிருந்த போது பார்த்தேன். அற்புதமான அழகுள்ள பெண். கற்பனையில்தான் அப்படி ஒரு பெண்ணைப் பார்க்க முடியும். அவ்வளவு பரிபூரணமான உடம்பு. பார்த்தால் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான். இனிமையான சுபாவம்— அதாவது, இனிமையாக இருக்க வேண்டுமென்று அவள் நினைக்கும்போது மட்டும்! பிரமாதமான கலைத் திறமை கொண்டவள். புகைப்படத் துறைக்கு வருவதற்கு முன்னால் ஓவியம் வரைந்து கொண்டிருந்தாளாம். ஏழை யில்லை, விலையுயர்ந்த உடை அணிந்திருந்தாள். யாரோ ஒரு நடுத்தர வயது மனிதர் அவளுக்கு ஆதரவு கொடுத்து வருவதாகக் கண்காட்சி மானேஜர் சொன்னார். அவர் ஒரு பிரபலமான பிளாஸ்டிக் சர்ஜனாம். அதையெல்லாம் பார்க்கும் போது பணத்துக்காகப் பேரம் பண்ணு கிறவள் என்று தோன்றவில்லை.''

பென் பேசிக் கொண்டே போனான்.

ஆனால் மரியமின் சிந்தனைகள் வேறெங்கோ பறந்தன.

அப்படி இருக்குமா? அப்படிக் கூட இருக்குமா?

(தொடரும்)



நடிகரிடம், டைரக்டர்:

''தெலுங்கு டப்பிங் படமெல்லாம் தமிழ்லே பிரமாதமா ஓடுகறது வாஸ்தவம்தான். அதுக்காக திரேஷ்ங்கற உங்க பெயரை திரேச வர்மா ரெட்டின்னு மாத்திப்பேங்கறது கொஞ்சம் கூட நல்லா இல்ல சார்.''

—சிக்கல்.



தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

# காதல் மேல் ஆணை

## 36

அந்தப் புகைப்படக்காரியைப் பற்றி பென் சொன்ன தகவல்கள் மரியமின் சிந்தனைகளைக் கிளறிவிட்டன. அவளாக இருக்குமா என்ன?

''அந்தப் பெண்ணுக்கு என்ன வயதிருக்கும்?'' என்று கேட்டாள்.

''நிச்சயமாகச் சொல்ல முடியாது. நான் பார்த்தபோது தலைக்கு ஒரு பெரிய தொப்பி வைத்திருந்தாள். அது அவள் முகத்தை மறைத்திருந்தது. இருபத்து நாலு இருபத்தைந்து இருக்கலாம். நிச்சயமாய் இருபத்தாறுக்கு மேல் இல்லை. எதற்குக் கேட்கிறீர்கள்?'' என்றான் பென். அந்தப் பெண்ணின் வயதைப் பற்றி மரியம் ஏன் விசாரிக்கிறாள் என்று அவனுக்குப் புரியவில்லை.

''ஒன்றுமில்லை.... சும்மா தான். ஆவலாயிருந்தது. நீயும் வெண்டியும் இவளை அமர்த்த வேண்டுமென்று நினைத்தது தப்பில்லை. பாராட்ட வேண்டிய விஷயம். இவள் எதனால் முரண்டு பண்ணுகிறாள் என்று தெரியவில்லை. நானே முயற்சி பண்ணிப் பார்க்கிறேன். எப்படியும் இன்னும் சில வாரங்களில் நான் சான்பிரான்ஸிஸிகோவிற்குப் போக வேண்டியிருக்கும். அப்போது பார்க்கிறேன். உன்னைப் போன்ற இளைஞனிடம் முடியாதென்று சொல்லியிருக்கலாம். ஆனால் என்னைப் போன்ற கிழவியிடம் மறுக்க முடியாது.''

தன்னைக் கிழவி என்று மரியம் சொல்லிக் கொள்வதைக் கேட்டுப் பென் புன்னகை செய்தான். இவளா கிழவி! கட்டு மஸ்தான நடுத்தர வயதுப் பெண் என்று வேண்டுமானால் சொல்லலாம். தொளதொளப் பாட்டியாக இவள் ஒரு நாளும் ஆக மாட்டாள்.

ஆனால் அவள் முகத்தைப் பார்த்தபோது அவனுக்குத் திகைப்பாயிருந்தது. திடீரென்று வெளிறிவிட்ட மாதிரி... திடீரென்று உடம்பு கிடம்பு சரியில்லையா என்ன?

எனினும் வேறு பேச்சுக்கு இடம் கொடுக்காமல் மரியம் எழுந்து கொண்டாள். இவ்வளவு தூரம் வந்ததற்காக எல்லோருக்கும் நன்றி கூறி விட்டு, தன் அறையை நோக்கி நடந்தாள். அவள் எழுந்ததுமே மீட்டிங் முடிவடைந்தது.

---

மூலம்: டானியல் ஸ்டீல்

பித்தளைப் பட்டங்கள் பொருத்தப்பட்ட கதவைத் திறந்து கொண்டு தன் அறைக்குள் சென்றாள். அவளைப் பின் தொடர்ந்து அவளுடைய ஸ்டெனோ சென்றாள். ம ற்ற அனைவரும் ஒவ்வொருவராக லிஃப்டை அடைந்தார்கள். அனைவரின் முகத்திலும் திருப்தி நிலவியது. மீட்டிங்கின்போது ஏதாவது ஒரு விஷயத்தில் மரியமுக்குக் கோபம் ஏற்பட்டு விடுவது வழக்கம். ஆனால் இன்று வழக்கத்துக்கு விரோதமாக மரியம் மென்மையாகவும் இனிமையாகவும் நடந்துகொண்டாள். அதை நினைக்கையில் பென்னுக்கு மறுபடி சந்தேகம் வந்தது. மரியமுக்கு உடல்நிலை சரியில்லையோ...

எல்லோரும் போய் விட்டார்கள் ஜார்ஜிடமும் மைக்கேலிடமும் அவன் விடைபெற்றுக் கொண்டிருந்த சமயம்—

மரியமின் கதவைத் திறந்து கொண்டு அவளுடைய ஸ்டெனோ ஓடிவந்தாள்.

''மிஸ்டர் மைக்கேல்... உங்கள் அம்மா...''

முதலில் உள்ளே ஓடியவர் ஜார்ஜ்தான். மைக்கேலும் பென்னும் ஒரு நிமிடம் நிலைகுலைந்து பிறகே உள்ளே சென்றார்கள்.

மரியமுக்கு என்ன மாத்திரை உடனே தர வேண்டும் என்றும் அது எங்கே இருக்கிறதென்றும் ஜார்ஜுக்குத்தான் தெரிந்திருந்தது. மரியமைக் கைத்தாங்கலாகப் பிடித்து, சாய்வு நாற்காலியில் அமர்த்தி, மாத்திரையும் தண்ணீரும் தந்தார்.

மரியம் மூச்சு விடச் சிரமப்பட்டுக் கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கவே பயமாயிருந்தது மைக்கேலுக்கு. இன்னும் கொஞ்ச நேரத்தில் அம்மா இறந்துவிடப் போகிறாள் என்று எண்ணி விட்டான். கண்களில் கண்ணீர் ததும்ப, டெலிபோனிடம் ஓடி, அவசர அவசரமாக டாக்டரைக் கூப்பிட எண்களைச் சுழற்ற ஆரம்பித்தான்.

ஆனால் அதற்குள் மரியம் கையை அசைத்து, 'வேண்டாம்' என்று சைகை காட்டினாள். ஏதோ ரகசியம் பேசுவது போல ரொம்பக் கிசுகிசுப்பான குரலில், ''எனக்கு ஒன்றுமில்லை, மைக். கொஞ்சம் லேசாய்க் கிறுகிறுப்பு. இப்படி அடிக்கடி ஏற்படுவது உண்டு. டாக்டரைக் கூப்பிடாதே,'' என்றாள்.

இப்படி அடிக்கடி ஏற்படுகிறதா? மைக்கேலுக்கு அது புதுத் தகவலாயிருந்தது. ஆனால் ஜார்ஜுக்குத் தெரியும் போலிருக்கிறது. மாத்திரை எங்கே இருக்கிறதென்பதைக்கூடத் தெரிந்து வைத்திருக்கிறாரே! என்ன செய்ய வேண்டுமென்பது அவருக்குத் தெரிந்திருக்கிறதே! கடவுளே! என்னைச்

## கண்ணா அழறே?

''மிட்டாய் வாங்க அம்மாகிட்டே ஒரு ரூபா[illegible] கேட்டேன். ஐம்பது பைசா தான் கிடைத்தது.''

'''மிட்டாய் வாங்க அம்மா கிட்டே ஒரு ரூபாய் வேணுமென்றால், நீ இரண்டு ரூபாய் கேட்கணும். அப்போதான் உனக்கு ஒரு ரூபாய் கிடைக்கும். உனக்கு சைக்கிள் வேண்டுமென்றால் நீ ஸ்கூட்டர் கேட்கணும்! அப்போதான் சைக்கிள் கிடைக்கும். அதேபோல, நீ பெரியவனாகிக் கல்யாணம் பண்ணும் வேளையில் வரதட்சணையாகக் கார் கேட்டால்தான் ஸ்கூட்டர் கிடைக்கும். நான் சொன்னது புரிந்ததா?''

''புரிந்தது. நான் பெரியவனாகிக் கல்யாணம் பண்ணிக் கொள்ளணும்னா, பெண்ணுக்குப் பதிலாகப் பெண்ணின் அம்மாவைக் கேக்கணும். அப்போதான் பெண் கிடைக்கும்னு புரியுது.''

—டெல்லி தூர்தர்ஷன் காலை ஒளி பரப்பில் கேட்டு ரசித்தவர்
—'சக்திப்ரியா'



சுற்றியுள்ள உலகத்தில் என்ன நடக்கிறதென்பதையே அறியாத முட்டாளாக இருந்திருக்கிறேனே, சென்ற சில மாதங்களாக!

முகம் வெளுத்து, தேகம் மெல்ல நடுங்க, நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்திருக்கும் அம்மாவைப் பார்த்தான் மைக்கேல். மேஜைமீது ஜார்ஜ் விட்டுச் சென்றிருந்த மாத்திரைப் புட்டியை லேசாய்க் கவனித்தான். இருதய நோய்க்கான மருந்து என்று தெரிந்தது.

''அம்மா.'' அன்னையின் அருகிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அவள் கையை மெல்லப் பற்றினான்.'' இப்படி அடிக்கடி உங்களுக்கு வருகிறதா?'' என்று வினவிய போது, அவள் முகத்தைப் போலவே இவன் முகமும் வெளுத்து விட்டது.

மரியம் கண்களைத் திறந்து முதலில் மைக்கேலையும் பிறகு ஜார்ஜையும் பார்த்துப் புன்னகை செய்தாள்.

''கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை,'' என்றாள். இப்போதும் மெல்லிய குரலில்தான் பேசினாள் என்றாலும் முன்னைக் காட்டிலும் வலுவாக இருந்தது. ''நான் ஜம்மென்று இருக்கிறேன்!''

''இல்லையம்மா. நீங்களொன்றும் ஜம்மென்று இல்லை. எனக்கு உண்மை தெரிந்தாக வேண்டும்..''

பென்னுக்கு, தான் அனாவசியமாக இங்கே மூக்கை நீட்டிக் கொண்டிருக்கிறோமோ என்று தோன்றியது. ஆனால் அவனும் வெளியே போக விரும்பவில்லை. சற்று முன் பார்த்த காட்சி அவனை அதிர்ச்சியுறச் செய்திருந்தது. மாபெரும் மரியம் கூடக் கடைசியில் ஒரு மனிதப் பிறவிதான்! என்னதான் விலையுயர்ந்த உடை அணிந்திருந்தாலும் மகா பலவீனமானவள்தான்! நோயில் அடிபடுகிறவள் தான்! மகனுடன் பேசிக் கொண்டிருக்கும் அவளைப் பார்த்தபோது, உலர்ந்த சருகைப் போலக் காட்சியளித்தாள்.

''சொல்லுங்கள் அம்மா...'' மைக்கேல் அவள் கைகளை மெல்ல அழுத்தினான்.

''சொல்கிறேன் கண்ணா, சொல்கிறேன்,'' என்றாள் மரியம். ஒரு முறை நன்றாக மூச்சு விட்ட பின் நாற்காலியில் அமர்ந்து உட்கார்ந்து, கால்களை நன்றாகத் தொங்கப் போட்டுக் கொண்டாள். தன் ஒரே செல்வத்தை நோக்கி நேராகப் பார்த்தாள். ''என் இருதயம்தான்.... பல வருஷங்களாக அது கோளாறு... உனக்குத் தெரிந்ததுதானே?''

## மனோ காட்டில் திடீர் மழை

இனிமையான குரல் வளம் சீர்கெட்டுப் போய் விட்டதால் ஒரு பிரப(ா)ல பின்னணிப் பாடகரால் பாட முடியாமல் போய் விட்டது. திரையுலகிற்கு மாபெரும் அதிர்ச்சியாகி விட்டது. அவருக்குப் பதிலாக யாரைப் பாட வைத்துப் பாடல் பதிவை நடத்துவது என்று புரியாமல் இசையமைப்பாளர்கள் தவிக்கிறார்கள். இப்போது மனோவுக்கு நிறைய வாய்ப்புக்கள் வருகிறது. தினமும் ஏழெட்டு பாடல்கள் பாடுகிறார் மனோ.

(பின்னணிப் பாடகர் மனோவின் தாயாருக்கு உடல் நலம் சரியாக இல்லாத சமயத்தில், இந்த வருமானம் பெரும் உதவியாக இருந்தது. இதை 'மனோ'வும் என்னிடம் நேரிடையாகச் சொன்னார்.

—ராஜ்.



''''இல்லையம்மா.. இவ்வளவு நாட்களாக எனக்குத் தெரியாது.''

''சரி. , இப்போது தெரிந்து விட்டதில்லையா?'' பதவிசான குரலில் பேசினாள் மரியம். ''நான் தொண்டுக் கிழவியாகத் தொண்ணூறு வயது வரை வாழ்ந்தாலும் வாழ் வேன். அல்லது சீக்கிரமே என் ஆயுள் முடிந்தாலும் , முடிந்துவிடும். காலம் தான் சொல்லவேண்டும். தற் சமயத்துக்கு இந்த மாத்திரைகள் என் உயிரைப் பிடித்து வைத்திருக்கின்றன. இவ்வளவுதான் விஷயம். போதுமா?''

''அப்படியானால் நீங்கள் ரிடையராக வேண்டியதுதான்.'' பிடிவாதம் பிடிக்கும் குழந்தைபோல் அம்மாவைக் கவலையுடன் பார்த் தான் மைக்கேல். ''அதுவும் உடனடி யாக ஓய்வு பெற வேண்டும்.''

மரியம் சிரித்தாள். சிரித்து விட்டுத் தன் உறுதுணையான ஜார்ஜைப் பார்த்தாள். ஆனால் அவர் அவளுடன் சேர்ந்து சிரிக்கவில்லை. அவரும் கவலையடைந்திருக்கிறார் என்பதை அவர் முகம் காட்டியது.

''அதுமட்டும் ஒரு நாளும் இல்லை. மண்டையைப் போட்டுக் கீழே விழுகிற வரையில் தான் இங்கே தான் இருப்பேன். ஏகப்பட்ட வேலைகள் பாக்கி இருக்கின்றன. வீட்டுக்குப் போனால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும். நாள் பூரா மொட்டு மொட்டென்று வீட்டில் உட்கார்ந்து கொண்டு என்ன செய்வது? டெலிவிஷனில் டான்ஸ்களைப் பார்த்துக் கொண்டு, சினிமாப் பத்திரிகைகளைப் படித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கச் சொல்கிறாயா?''

''ஏன், அதிலே என்ன தப்பு?'' என்று மைக்கேல் சொன்னதும் எல்லாரும் சிரித்தார்கள். ''அல்லது—'' அம்மாவை ஒருமுறை பார்த்துவிட்டு ஜார்ஜை ஒருமுறை பார்த்தான். ''நீங்கள் இரண்டு பேரும் கல்யாணம் செய்து கொண்டு வேலையிலிருந்து ரிடையராகி வெளியூரில் போய் உல்லாசமாக இருக்கலாமே!''

தட்டென்று ஒரு நிசப்தம்!

இருபது வருஷமாக ஜார்ஜுக்கும் மரியமுக்கும் நெருக்கம் இருந்து வருகிறதெனினும் இப்போது தான் முதல் தடவையாக உடைத்துப் பேசிவிட்டான் மைக்கேல்.

ஜார்ஜின் முகம் குங்குமமாகச் சிவந்துவிட்டது. ஆனால் அவர் கோபப்பட்டதாகத் தெரியவில்லை.

''மைக்கேல்!'' மரியம் அதட்டிய போது அவள் குரலில் பழைய கண்டிப்புத் தென்பட்டது. ''ஜார்ஜை வைத்துக்கொண்டு என்ன வெல்லாம் பேசுகிறாய்?'' என்றாள். ஆனால் அவளும்கூட மைக்கேலின்

யோசனையைக் கேட்டு அதிர்ச்சியடைந்ததாகவோ கோபம் கொண்டதாகவோ தெரியவில்லை.

''சரி. சரி போதும். நான்ரிடையராவதைப் பற்றிய பேச்சுக்கே இடமில்லை. கொஞ்சம் உடம்பு சரியில்லாதிருக்கலாம். மற்றப்படி எனக்கு இளம் வயதுதான். உனக்குப் பிடிக்கிறதோ பிடிக்கலையோ இன்னும் கொஞ்ச நாளைக்கு என்னைக் கட்டிக்கொண்டு மாரடிக்கத்தான் வேண்டும்.''

தன் பேச்சு எடுபடாது என்பதை மைக்கேல் உணர்ந்தான். ஆனால் ஒரேயடியாகச் சரணாகதி செய்துவிடாமல் கொஞ்சம் கெத்தாக இருப்பது என்று தீர்மானித்தான். ''சரி போகட்டும். உடம்பை அலட்டிக் கொள்ளாமலாவது இருங்கள். தயவு பண்ணிப் பிரயாணம் கிரயாணமெல்லாம் வேண்டாம். சான்பிரான் ஸிஸ்கோவுக்கு நீங்கள் போகத் தேவையில்லை. அதையெல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன். நீங்கள் வீட்டில் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்.''

மரியம் அவனைப் பார்த்துச் சிரித்தவாறே மெதுவாகத் தன் மேஜையை நோக்கிச் சென்றாள். அங்கிருந்த கூடை நாற்காலியில் போய் உட்கார்ந்தபோது அவள் உடல் தள்ளாடி, முகத்தில் மிதமிஞ்சிய களைப்புத் தென்பட்டது.

அடுத்து அவள் என்ன செய்யப் போகிறாளென்பதை எல்லாரும் கவலையுடன் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

''தயவு பண்ணி எல்லாரும் வெளியே போய் அவரவர் வேலையைக் கவனியுங்கள். எல்லாரையும் தான் சொல்கிறேன். உங்களுக்கு வேலை இல்லையோ என்னவோ, எனக்கு வேலை இருக்கிறது,'' என்றாள் மரியம்.

''அம்மா, உங்களை நான் வீட்டுக்கு அழைத்துப் போகிறேன்—இன்றைக்கு ஒரு நாளைக்காவது,'' என்றான். மைக்கேல், சண்டை போடுகிற குரலில்.

ஆனால் மரியம் அதை மறுத்துத் தலையை அசைத்தாள்.

''உனக்காக நான் சீக்கிரமாய் வேண்டுமானால் வீட்டுக்குப் போகிறேன். அவ்வளவுதான். நீ இத்தனை அக்கறை காட்டியதற்கு ரொம்ப நன்றி. டாடா! பை! பை!'' என்றவள் ''ரூத்!'' என்று தன் ஸ்டெனோவை அழைத்தாள்.

அவள் வந்ததும், கதவை நோக்கிக் கை காட்டினாள். அவள் கதவைத் திறந்து விட்டு நின்றாள். வேறு வழியில்லாமல் அவர்கள் ஒருவர் பின்னொருவராக வெளியேறினார்கள்.

கதவு முழுசாகச் சாத்திக் கொள்ளும் வரைகூடக் காத்திருக்கவில்லை மரியம். டெலிபோனை நெருங்கினாள்.

தனக்குத் திடீரென்று இருதயத்தில் அதிர்ச்சி ஏற்பட்டது ஏன் என்று அவளுக்குத் தெரிந்தேயிருந்தது. 'மனசை உழப்பிக் கொண்டால் இப்படித்தான்' என்று எண்ணிக் கொண்டாள்.

ஆனால் பென் சொன்ன தகவலைப் பற்றி எப்படி உழப்பிக் கொள்ளாமல் இருப்பது?

கடியாரத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டபின் டயலைச் சுழற்றினாள்—சான்பிரான்ஸிஸ்கோவில் இருக்கும் அந்தப் புகைப் படக்காரிக்கு.

(தொடரும்)

அந்த நட்சத்திரம்
(புதுப் பாடகன் படத்தில் அமலா.)

அமலா படப்பிடிப்புக்கு வரும்போது கம்பெனி செலவில் எதுவுமே சாப்பிடுவதில்லை. உதவியாளர்களையும் கம்பெனி டீ, காப்பி குடிக்க விடுவதில்லை. படப்பிடிப்புக்கு வரும்போது பிளாஸ்கில் டீ, காப்பி வாங்கி வந்து குடிக்கச் சொல்கிறார்!

# காதல் மேல் ஆணை



தமிழில்: ரா. கி. ரங்கராஜன்

இரண்டு மூன்று முறை அங்கே போன் மணியடிக்கும் சத்தம் கேட்டது.

மரியம் காத்திருந்தாள்.

அந்தப் பெண்ணாகத்தான் இருக்கும் என்று ஏன் நாம் நிச்சயமாக நினைக்கிறோமென்பது அவளுக்கே தெரியவில்லை. ஆனால், மேரி என்கிற அந்தப் பெண்ணைப் பற்றி பென் சொன்னது முதல் நான்ஸிதான் அவள் என்று தோன்றியது.

சான்பிரான்ஸிஸ்கோவுக்குச் செல்லும்போது நேரிலேயே பார்த்துவிடலாம். அப்போது நிச்சயமாகத் தெரிந்துவிடும். அல்லது அப்போதும் கூடத் தெரியாதோ என்னவோ. ஒரு வேளை அவளிடம் ஏகப்பட்ட மாறுதல்கள் ஏற்பட்டிருக்கக் கூடும். கடைசி வரையில் தெரியாமலே போகக் கூடும்....

அவள் யோசித்துக் கொண்டிருந்த சமயத்தில் மறு முனையில் போனை யாரோ எடுத்தார்கள். 'ஹலோ' என்றார்கள்.

ஒரு வினாடி மரியம் மூச்சை ஒரு முறை மெல்ல இழுத்து வெளிவிட்டு, தன்னை அமைதிப்படுத்திக் கொண்டாள். அரை மணி நேரத்துக்கு முன்பு இருதய வலியால் கஷ்டப்பட்ட மரியமாக இப்போது இருக்கவில்லை. அவள் புலன்கள் முழுக்க அவள் கட்டுப்பாட்டில் இருந்தன.

''மிஸ் மேரி, நான் மரியம் ஹிலியர்டு பேசுகிறேன்—நியூயார்க்கிலிருந்து,'' என்றாள் மென்மையான குரலில்.

மேரியின் பேச்சு சுருக்கமாகவும் உணர்ச்சியற்றும் இருந்தது. சில வார்த்தைகளே பேசினாள்.

மூன்று வாரம் கழித்து ஒரு செவ்வாய்க் கிழமை பிற்பகல், நாலு மணிக்கு மரியமைச் சந்திப்பதாக மேரி சொன்னாள். அதைத் தன் டயரியில் குறித்துக் கொண்டாள் மரியம். பின்னர் நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு கண்களை மூடிக் கொண்டாள்.

டெலிபோனில் பேசுவதற்கு முன்பு எவ்வளவு தெரிந்திருந்ததோ அதற்கு மேல் புதிதாக எந்தத் தகவலும் மரியமுக்குத் தெரியவில்லை, போனில் பேசிய பிறகு.

இருக்கட்டும், இருக்கட்டும், இன்னும் மூன்றே வாரம்தான்.

---

மூலம்: டானியல் ஸ்டீல்

சந்திப்பின்போது எதுவுமே நடக்காமல் போகலாம்.... ஆனால் அந்தப் பெண்ணிடம் சில விஷயம் பேசியாக வேண்டும்...

இன்னும் மூன்று வாரம் நாம் உயிருடன் இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்....

குறித்த நாளும் வந்தது. சான்பிரான்ஸிஸ்கோ நகரில், ஆடம்பர ஓட்டலில் தங்கியிருந்த மரியமுக்கு, மணி நாலை நெருங்க நெருங்க, இருப்புக் கொள்ளவில்லை. அவளுடைய அறையிலிருந்து வெளியே பார்க்கும்போது நகரமும் கடற்கரையும் அற்புதமான அழகுடன் தெரிந்தன. ஆனால் அதை ரசிக்கும் மனநிலையில் மரியம் இருக்கவில்லை.

மேரியைப் பற்றியே மனத்தை உழப்பிக் கொண்டிருந்தாள்.

அவள் எப்படி இருப்பாள்?

டாக்டர் பீட்டர் இரண்டு வருடத்துக்கு முன்பு வாக்களித்தபடி நிஜமாகவே அவளை அதிசயிக்கத் தக்க வகையில் மாற்றியிருப்பாரோ? பெண்ணுக்கு அவளை அடையாளம் தெரியவில்லை. ஆனால் மைக்கேல் அடையாளம் கண்டு கொள்வானோ?



அந்தப் பெண் இப்போது வேறு யாரையாவது காதலித்து வாழ்க்கையை மாற்றிக் கொண்டிருப்பாளோ? அல்லது மைக்கேலைப் போலவே அவளும் வாழ்க்கை வெறுத்து, யாருடனும் ஒட்டாமல் ஒதுங்கி வாழ்ந்து கொண்டிருப்பாளோ?

இவள், மைக்கேல் உயிராய்க் காதலித்த அந்தப் பெண்ணாகத்தான் இருப்பாளா? அல்லது பென் யாரோ ஒரு சாதாரணப் புகைப்படக்காரியைப் பார்த்ததை வைத்து நாம்தான் அலட்டிக் கொண்டிருக்கிறோமோ?

நாற்காலியில் உட்கார்ந்திருந்தவள் இந்தக் காலையும் அந்தக் காலையும் மாற்றி மாற்றிப் போட்டுக் கொண்டாள். கைக்குட்டையிலிருந்து சிகரெட் கேசை எடுத்தாள். புத்தம் புதிது. கிறிஸ்துமசின் போது ஜார்ஜ் பரிசளித்தது. ஓரத்தில் அழகாக அவள் பெயர் பச்சைக் கற்களில் பதிக்கப்பட்டிருந்தது.

நாற்காலியில் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டாள். மிகவும் களைப்பாக இருந்தது. வெகு நேரம் விமானப் பிரயாணம் செய்து இன்று காலைதான் சான்ஸ்பிரான்ஸிஸ்கோவுக்கு வந்திருந்தாள். இன்று பூரா ஓய்வு எடுத்துக் கொண்டு நாளைக்கு அந்தப் பெண்ணைச் சந்திக்கலாம். ஆனால் அவளைப் பார்ப்பதை ஒரு நாள்கூடத் தள்ளிப் போட மரியமுக்குப் பொறுமையிருக்கவில்லை. உண்மை தெரிய வேண்டும்.... தெரிந்தாக வேண்டும்....

நிமிர்ந்து சுவர்க் கடியாரத்தைப் பார்த்தாள். மணி நாலே கால் காட்டியது. நியூயார்க்கில் இப்போது ஏழே கால் ஆகியிருக்கும். மைக்கேல் இன்னும் தன் அலுவலகத்தில் உட்கார்ந்து கொண்டு வேலை செய்து கொண்டிருப்பான். ஆனால் அவன் சினேகிதன் பென் ஜாலியாக

ஊர் சுற்றிப் பார்க்கக் கிளம்பி யிருப்பான், காதலி வெண்டியுடன்.

பென் பொறுப்புணர்ச்சி இல்லாத பையன்—மைக்கேல் மாதிரி சீரியஸானவன் அல்ல என்று எண்ணிக் கொண்டாள். கூடவே இன்னோர் எண்ணமும் தோன்றியது. பென் சந்தோஷமாயிருக்கிறான். மைக்கேல் மாதிரி எப்போது பார்த்தாலும் சோகத்தில் மூழ்கியிருக்கவில்லை.

இரண்டு வருடத்துக்கு முன் நாம் செய்தது தப்பான காரியமோ? கிறுக்குத்தனமாக அப்படிச் செய்துவிட்டோமோ? அந்தப் பெண்ணை அப்படி ஒதுங்கியிருக்கச் சொல்லியிருக்க வேண்டாமோ? இல்லையில்லை. நாம் செய்தது சரிதான். அவள் மைக்கேலுக்குக் கொஞ்சமும் ஏற்றவளில்லை. கொஞ்ச நாள் போகட்டும். மைக்கேல் தனக்கேற்ற வேறொரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து விடுவான். சந்தேகமில்லை. மைக்கேலுக்கு என்ன குறைச்சல்? அழகு இருக்கிறது, பணம் இருக்கிறது, அந்தஸ்து இருக்கிறது. அமெரிக்காவின் மாபெரும் நிறுவனங்களில் ஒன்றின் அதிபதியாக வரப் போகிறவன். ஆற்றல், திறமை, மென்மை, கவர்ச்சி எல்லாம் உள்ள இளைஞன்.

மகனைப் பற்றி நினைத்த போது மரியமின் நெஞ்சு நெகிழ்ந்தது.

எவ்வளவு தங்கமான பிள்ளை! ஆனால் இப்படித் தனிமையில் வாடுகிறானே! நம்மிடமிருந்து விலகி விலகிப் போகிறானே! அவன் இருதயத்தின் ஒரு பகுதி விண்டு விழுந்துவிட்டது. அது திரும்ப அவனிடம் வரவேயில்ல. நல்ல வேளையாய், மணிக் கணக்கில் சிடுசிடுவென்று இருப்பதும் மதுவில் மூழ்குவதும் இப்போது ரொம்பக் குறைந்திருக்கிறது. ஆனால் கண்களில் சூனியம், சோர்வு. பாலைவனத்தில் சிக்கிக் கொண்ட மனிதன் போராடி மீண்டு வந்த பிறகு, இத்தனை பாடும்



## ஜன-கண-அப்புறம்?

சமீபத்தில் மேட்டுப் பாளையத்தில் அகில இந்திய அளவில் கேரம் விளையாட்டுப் போட்டி நடைபெற்றது. பரிசளிப்பு விழாவன்று இறுதியில் தேசிய கீதம் என்று நிகழ்ச்சி அமைப்பாளர் கூறவும், அனைவரும் 'ஜனகணமன' என ஆரம்பித்து இரண்டு வரியில், 'தாதா' என்கிறதோடு நிறுத்திக்கொண்டார்கள். அதற்கு மேல் யாருக்குமே பாடத் தெரியவில்லை. கேசட், ரெக்கார்டு இருக்கிறதா என்று தேடினார்கள். கிடைக்கவில்லை. தேசிய கீதம் அவமானப்பட்டது மனசுக்குக் கஷ்டம் ஏற்படுத்தியது.

—மு. தேன்மொழி கல்யாணசுந்தரம்.

கேஸட்டுகளையும், ரெகார்டுகளையும் பயன்படுத்துவது கூட நியாயமென்று நான் கூற மாட்டேன். தாய் நாட்டின் தேசீய கீதத்தை உரத்த குரலில் வாய்விட்டுப் பாடுவதில் என்ன கூச்சம்?

ஒரு நிகழ்ச்சி எனக்கு நினைவு வருகிறது. சோவியத் கலை விழா சென்னையில் நடைபெற்ற சமயம். நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கிக் கொண்டிருந்தேன். அது அவர்களது நிகழ்ச்சி. அது முடிந்த பிறகு இந்திய தேசிய கீதம் இசைக்கப்படும் என்று கலைஞர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. (கேசட் உதவியோடுதான்.) கடைசி நிகழ்ச்சியில் பங்கு பெற்ற அத்தனை சோவியத் கலைஞர்களும் நிகழ்ச்சி முடிந்த மறுநொடி நெஞ்சு நிமிர்த்தி, நேர்ப் பார்வை பார்த்து முகத்தை மலர வைத்துக் கொண்டு நமது தேசிய கீதத்துக்காகக் காத்திருந்த விதம்— முண்டியடித்துக் கொண்டு முதலில் வெளியேறிவிட வேண்டும் என்ற மனநிலையில் இருந்த நமது பார்வையாளர்களையும் ஆணியடித்து நிற்க வைத்தது.

—ஃபாத்தி[illegible]பு

எதற்காகப் பட்டோம் என்பது தெரியாமல் விழிக்கிற மாதிரி.

வாழ்க்கையை எவ்வளவு ஆனந்தமாக அனுபவிக்கலாம்! எதையும் மைக்கேல் அனுபவிப்பதாகத் தெரியவில்லை. நம்மைப் போல வேலையில் சந்தோஷமாக இருக்கிறானா என்றால் அதுவுமில்லை.

வேலைகளைப் பற்றி நினைக்கையில் அவள் எண்ணங்கள் மெல்ல மெல்ல ஜார்ஜை நோக்கித் திரும்பின. அவளுடைய வேலைப் பளுவை எத்தனை குறைக்கிறார் அவர்! முக்கியமான முடிவுகள், ஆக்கபூர்வமான வேலை, அதனால் கிடைக்கும் புகழ்—இவற்றை மட்டுமே அவளுக்கு விட்டுவிட்டு, மற்ற அனைத்தையும் தானே செய்கிறார். பத்துப் பதினைந்து வருடத்துக்கு முன்னாலேயே ஜார்ஜிடம் அக்கறை காட்டியிருக்கலாம். வேலையிலேயே மூழ்கி இருந்து விட்டோம். மைக்கே லின் அப்பா இறந்தது முதல் யாரிடமுமே ஈடுபாடு இல்லாமல் போய் விட்டது....

அழைப்பு மணி ஒலித்தது.

மரியம் திடுக்கிட்டு எழுந்து கொண்டாள். தான் எங்கிருக்கிறோம் என்பதுகூட ஒரு வினாடி அவளுக்கு மறந்துவிட்டது. பிறகு சுதாரித்துக் கொண்டாள்.

மணி நாலு இருபத்தைந்து ஆகியிருந்தது. அந்தப் பெண் இருபத்தைந்து நிமிடம் லேட்டாக வந்திருக்கிறாள். மரியமுக்குச் சிறிது கோபம் வந்தாலும் தனியாகச் சிந்தனை செய்ய அவகாசம் கிடைத்ததே! அதைப் பற்றி உள்ளுக்குள் சந்தோஷமாயிருந்தது.

கண்ணாடியில் ஒரு முறை பார்த்துக் கொண்டாள். உடைகள் கண்ணியமாக இருந்தன. முகத்தில் ஒரு கம்பீரமான தோரணையை வரவழைத்துக் கொண்டாள். நாம் அழகாக இருக்கிறோம்.... இன்னும்

இருபது வருடம் போனால்கூட இதேபோல் அழகாக இருப்போம். இந்த மரியமை யாராலும் வெல்ல முடியாது—காலம் உள்பட.

கதவைத் திறந்தாள்.

நளினமான அழகுடன் அந்த இளம் பெண் நின்றிருந்தாள். கலைஞர்கள் வைத்திருக்கும் கைப்பை அவள் கரத்தில் இருந்தது.

''மிஸ் மேரி?''

''ஆமாம்.'' உதட்டில் செயற்கையான புன்னகையுடன் மேரி தலையசைத்தாள். ''மிஸஸ் மரியம்?'' என்று கேட்டாள். ஆனால் கேட்காமலே இவள்தான் மரியம் என்று அவளுக்குத் தெரிந்துவிட்டது. ஆஸ்பத்திரியில் அன்று இரவு மரியமுடன் பேசினாளே தவிர, கண்ணால் பார்க்க முடியவில்லை. கண்களுக்குக் கட்டுப் போட்டிருந்தது. ஆனால் மைக்கேலின் அறையில் அவன் அன்னையின் பல புகைப்படங்களைப் பார்த்திருக்கிறாள். உலகத்தின் எந்த மூலையில் இருந்தாலும் மரியமை அவளால் கண்டுகொள்ள முடியும்.

இரண்டு வருட காலமாக அவள் கனவுகளில் தோன்றி அவளை வாட்டிக் கொண்டிருக்கும் அம்மையார் இவள்தானா!

அம்மாவாக, சிநேகிதியாக இவளுடன் பழக வேண்டும் என்று மேரி முன்னொரு காலத்தில் ஆசைப்பட்டதுண்டு. இப்போது அந்த ஆசை போய்விட்டது.

''சௌக்கியமா?'' மரியம் தன் உறுதியான, சில்லென்ற கையை நீட்ட, அவள் குலுக்கினாள்.

மரியம் கதவை நன்கு திறந்து, ''உள்ளே வரலாமே?'' என்றாள்.

''தாங்க் யூ,'' என்று கூறி உள்ளே வந்தாள் மேரி.

இருவரும் ஒருவரையொருவர் பார்வையால் அளவெடுத்தார்கள். இருவர் பார்வையிலும் எச்சரிக்கையும் இருந்தது. ஆவலும் இருந்தது.

(தொடரும்)

## ஹாஸ்யம்

'சார், உங்க மகளைக் காதலிக்கிறேன். அவளை எனக்குக் கல்யாணம் பண்ணி வையுங்க.''

''நான் முடியாதுன்னா என்ன பண்ணுவே?''

''கடத்திட்டுப் போய்த் தாலி கட்டுவேன்!''

''சீக்கிரம் அதைப் பண்ணுப்பா!''

—சக்தி கமலேஸ்வரன்

●● ●●

''வாரத்துக்கு ஒரு முறை என் ஒய்ப் எனக்கு நகம் வெட்டி விடுவா!''

''ஆகா! எத்தனை பிரியம்!''

''நீ ஒண்ணு! பாத்திரங்களையெல்லாம் நான் தேய்க்கும்போது கீறல் விழாமல் இருக்கத்தான் இந்தக் கரிசனம்!''

—வி. ஆண்டாள்

●● ●●

''அன்புள்ள அப்பாவுக்கு, இன்லண்டு லெட்டர், கவர், விலையெல்லாம் உயர்ந்து விட்டதால், எனக்கு லெட்டர் எழுதிப் பணத்தை வீணாக்க வேண்டாம். ஏதாவது எழுத வேண்டியிருந்தால் மணியார்டர் கூப்பனில் எழுதி விடுங்கள்.''

—எஸ். பொன்னுதுரை

●● ●●

ஏட்டு: போன வாரம் திருட்டுப் போனது பற்றி ஒரு கடிதம் வந்திருக்கு, இன்ஸ்பெக்டர்.

இன்ஸ்பெக்டர்: என்னன்னு?

ஏட்டு: இதுதாண்டா திருட்டு என்று எழுதியிருக்கான் சார்!

—டி. கௌசிகன்

●● ●●

# காதல் மேல் ஆணை

38

மூலம்: டானியல் ஸ்டீல்

இவள்தானா அந்தப் பெண்? மரியமினால் நிச்சயம் செய்து கொள்ள முடியவில்லை. கிட்டத்தட்ட எழுபத்தைந்து லட்சம் ரூபாய் இவளுக்காகச் செலவழித்திருக்கிறோம் என்பது நினைவு வந்தது. கவனமாக அவளைப் பார்த்தாள்.

முன்பு இவளுடைய புகைப்படங்கள் பலவற்றைப் பார்த்திருக்கிறாள். ஆனால் அந்தப் படங்களுக்கும் இதோ எதிரே இருக்கும் பெண்ணிற்கும் எந்த ஒற்றுமையும் தென்படவில்லை.

ஒரு வேளை இவளுடைய குரலைக் கேட்டால் தெரியும். அன்று ஆஸ்பத்திரி அறையில், இருவரும் ஒப்பந்தம் செய்து கொண்டபோது கேட்ட இவளுடைய வேதனை மிக்க, உடைந்து போன குரல் மரியமுக்கு ஞாபகம் வந்தது.

''என்ன சாப்பிடுகிறீர்கள்? டீ வரவழைக்கட்டுமா? அல்லது சோடா?''

''தாங்க்ஸ் மிஸஸ் மரியம். ஒன்றும் வேண்டாம். இப்போதுதான் சாப்பிட்டுவிட்டு வந்தேன்.''

குரலும் எவ்வளவு மாறிவிட்டது!

எவ்வளவு அழகான பெண்! எத்தனை விலையுயர்ந்த ஆடைகள் அணிந்திருக்கிறாள்! நாம் அனுப்பிய தொகையில் பெரும் பகுதியை உடைகளுக்கே செலவழித்திருப்பாள் போலிருக்கிறது!

''உங்கள் உடை ரொம்ப நன்றாக இருக்கிறது, மேரி,'' என்றாள். ''இந்த ஊரில் அவ்வளவு குளிர் இல்லை. நியூயார்க்கில் ரொம்ப மோசம். முழங்கால் மட்டுக்குப் பனி கொட்டுகிறது. நீங்கள் நியூயார்க்கிற்கு வந்திருக்கிறீர்களோ?''

அந்தக் கேள்வி தனக்கு விரிக்கப்படும் வலை என்பது மேரிக்குப் புரிந்தது.

ஆனால் நிஜமாகவே நியூயார்க் நகரம் அவளுக்கு அவ்வளவாகப் பழக்கமில்லை. மைக்கேலை மணந்திருந்தால் நியூயார்க்கிலேயே வசிக்க வேண்டி நேர்ந்திருக்கும்....

''இல்லை, நியூயார்க்கிற்கு நான் அதிகம் வந்ததில்லை. உண்மையில் பெரிய நகரங்களுக்கும் எனக்கும் பொருந்துவதில்லை,'' என்றாள்.

சற்று முன் அவள் நான்ஸியாக இருந்தாள். கண்ணிமைக்கும் நேரம்தான். மீண்டும் மேரியாகி விட்டாள்.

மரியம் புன்னகை செய்தாள். கடலில் பெரிய திமிங்கிலம் சின்ன மீனைக் கண்டு செய்யும் புன்னகை.

''எனக்கென்னவோ நீங்கள் பட்டணத்துப் பெண் மாதிரியாகவே தெரிகிறீர்கள்,'' என்றாள்.

''தாங்க் யூ,'' என்ற மேரி தான் கொண்டு வந்திருந்த புகைப்படங்கள் கொண்ட ஆல்பத்தை மரியமிடம் நீட்டினாள்.

தமிழில்:

ரா.கி.ரங்கராஜன்



ஆல்பம் பெரிதாயும் கனமாயும் இருந்தது. அந்தப் பளுவைத் தாங்க முடியாத மாதிரி அவள் கைகள் மெல்ல நடுங்குவதை மேரி கவனித்தாள்.

வயதாகிக் கொண்டிருக்கிறது. கிழவியாக, பலவீனமாகிக் கொண்டிருக்கிறாள். இத்தனை காலமாக நாம் கொடுத்து வந்த சாபமெல்லாம் பலித்துக் கொண்டிருக்கிறது! மரியமைக் கூர்ந்து கவனிக்கையில் மேரியின் மனசுக்குள் ஒரு குரூர சந்தோஷம் நிலவியது.

ஆனால் மரியம் ஒரு வினாடிக்குள் சுதாரித்துக் கொண்டாள். ஆல்பத்தைப் புரட்டுகையில் அவள் நடுக்கம் நின்றுவிட்டது.

''எங்கள் மருத்துவமனையை உங்கள் புகைப்படங்கள் அலங்கரிக்க வேண்டுமென்று மிஸ்டர் பென் ரொம்ப ஆர்வமாயிருக்கிறார். அது ஏனென்று இப்போது புரிகிறது. உங்கள் புகைப்படங்கள் ரொம்பப் பிரமாதமாய்த்தான் இருக்கிறது. ரொம்ப வருஷமாய் புகைப்படத் துறையில்தான் இருக்கிறீர்களா?'' உள்ளர்த்தம் இல்லாமல்தான் மரியம் கேட்டாள்.

மேரி உடனேயே அதை மறுத்துத் தலையசைத்தாள். ''இல்லை. புகைப்படத் துறை எனக்குப் புதிது. இதற்கு முன் நான் ஓவியம் வரைந்தேன்.''

''ஓ, ஆமாம் பென் சொன்னார்,'' என்றாள் மரியம். தான் பேசிக் கொண்டிருப்பது நான்ஸியாக இருக்கும் என்பதே அவளுக்கு மறந்துவிட்டது. அந்த அளவுக்கு அந்தப் புகைப்படங்களின் அழகில் அவள் மூழ்கி இருந்தாள். ''உங்கள் ஓவியங்களும் இதேபோல் சிறப்பாக இருக்குமா?''

''அப்படித்தான் நினைத்திருந்தேன்,'' என்றாள் மேரி அவளைப் பார்த்துப் புன்சிரிப்புடன். தங்களுக்குள் ஒரு போலியான சம்பாஷணை நடந்து கொண்டிருப்பதுபோல அவளுக்குப் புலப்பட்டது. ஒரு கோணங்கிக் கண்ணாடி வழியே மரியமைப் பார்ப்பது போலிருந்தது அவளுக்கு.

நான் பார்ப்பது அசல் மரியமல்ல, வேறொரு பெண்மணி என்பதுபோல் தோன்றியது.

''பிறகு ஏன் ஓவியத்தை விட்டுப் புகைப்படத்துக்கு வந்தீர்கள்?'' என்று மரியம் கேட்டாள்.

''ஏனென்றால் என் வாழ்க்கையில் எல்லாமே திடீரென்று ஒருநாள் மாறிவிட்டது. நான் புதிய பிறவியாக ஆகிவிட்டேன். ஓவியம் தீட்டுவது என் பழைய வாழ்க்கையின் ஒரு பகுதி. ஆகவே அதையும் விட்டுவிட்டேன். என் பழைய வாழ்க்கை ரொம்ப வேதனையானது.'''

அந்தச் சொற்கள் மரியமை ஓர் உலுக்கு உலுக்கியது.

''புகைப்படக் கலையிலும் நீங்கள் சிறப்பாகத்தான் பிரகாசிக்கிறீர்கள். உங்களுக்கு இந்தத் துறையில் ஊக்கம் கொடுப்பவர் யார்? யாராவது உள்ளூர் பணக்காரரா? இந்த ஊரில் அப்படி நிறைய பேர் இருக்கிறார்களே?''

மீண்டும் ஒரு புன்சிரிப்புடன் மேரி தலையசைத்தாள். நடப்பதெல்லாம் அவளுக்கு விசித்திரமாக இருந்தது. இந்தப் பெண்மணி மேல் வெறுப்பைக் கொட்ட வேண்டும் என்று நினைத்து அவள் இங்கே வந்தாள். ஏனோ, முடியவில்லை. ஆனால் இவளைப் பிடித்துவிட்டது என்றும் சொல்ல முடியாது.

அதே சமயம் இவள் மீது வெறுப்பும் ஏற்பட மாட்டேன் என்கிறதே!

இந்தப் பெரிய மனுஷ தோரணைகளுக்கும் முத்து மாலைகளுக்கும் பின்னே உலர்ந்து ஒடிந்து போயிருக்கும் பெண்மணி அவளுக்குத் தெரிந்தாள். ஒரு பொய்யான முகமூடியை இவள் மாட்டிக் கொண்டிருக்கிறாள். அதன் பின்னால் இலையுதிர் காலத்தின் துன்பங்கள் படிந்துள்ளன. இதோ,

பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் அவர்களின் அண்ணன் மகனே! இளம் கவிஞரே! வருக! வருக! உங்கள் பாரம்பரிய சொத்தான பாட்டாளியின் குரலை எதிரொலிக்கின்ற பணி உங்கள் மூலம் தொடரட்டும். ஏ.கோ.சி.



## கற்பனை ஏர்

கற்பனைகள் மட்டுமே
கவிதையாகி விடாது.

ஓர் இராஜசபைப்
புலவனைப்போல்
கௌரவ நாற்காலியில்
இருக்கும்
என் கற்பனை.

நிஜமெனும்
இராஜன்
எதைச் சொல்கிறானோ
அதையே கற்பனைப் புலவன்
அழகுபடுத்தி அறிவிப்பான்.

அந்த —இராஜனில்லாமல்
மந்திரிசபை அமைக்கிற
மகத்துவம்
பல
கவி தேசங்களில்
நடந்தாலும்
என்னால் அவற்றை
ஏற்றுக்கொள்ள முடியாது.
அவர்களால்—
அவமானப்படவும் என்னால்
முடியாது.

அது —இன்றைய
பாரத தேசத்தின் பாதிப்போ
என்னவோ!

கற்பனைகள் மட்டுமே
கவிதையாகி விடாது.

—பட்டுக்கோட்டை
சண்முகசுந்தரம்

## அலங்காரம்

இதோ, வாழ்க்கையின் மாரிக் காலமும் இவள் கால்களைக் கவ்வ ஆரம்பித்துவிட்டது...

மேரி தன் நினைவுகளை உதறிக் கொண்டாள். என்னவோ கேட்டாளே, என்ன? ஞாபகம் வந்தது. ''வந்து... ஒரு நண்பர் தான் இந்தத் துறையில் என்னைப் புகுத்தினார். அவர் ஒரு டாக்டர். புகைப்படத் துறையில் என்னை ஊக்கப்படுத்தியவர் அவர்தான். இந்த ஊரில் பிரபலமானவர். அவருக்கு எல்லாரையும் தெரியும்.''

''டாக்டர் பீட்டர். இல்லையா?'' மரியமையும் அறியாமல் எங்கிருந்தோ அந்தச் சொற்கள் வெளிப்பட்டு விட்டன.

அந்தக் கேள்வியின் அதிர்ச்சியில் இரண்டு பேருமே ஒரு வினாடி வாயடைத்துப் போய் விட்டார்கள்.

''உங்களுக்கு அவரைத் தெரியுமா?''

''வந்து... ஆமாம்.'' ஒரு நீண்ட நிமிடம் மௌனமாயிருந்த மரியம் அவளை நேருக்கு நேராக உற்றுப் பார்த்துச் சொன்னாள். ''ஆமாம், நான்ஸி. அவரை எனக்குத் தெரியும். உன்னை அவர் மகா அழகியாக மாற்றியிருக்கிறார். பிரமாதமான சிகிச்சைதான். இல்லையா?'' வந்தது வரட்டும் என்று மரியம் அந்தக் கேள்வியை வீசினாள். நாம் பைத்தியக்காரியாகத் தோன்றினாலும் பரவாயில்லை. உண்மை தெரிந்தாக வேண்டும்!

''நீங்கள் ஏதோ தப்பாக நினைத்திருக்கிறீர்கள். என் பெயர் நான்ஸி இல்லை,'' என்றாள் மேரி. ஆனால் அப்படிச் சொல்லும்போதே அவள் தூள் தூளாக நொறுங்கிப் போனாள். கண் முனையில் நீர் ததும்பி நின்றது. சரேலென்று எழுந்தவள் ஜன்னலருகே சென்று மரியமுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு நின்றாள். ''எப்படி... எப்படித் தெரிந்தது உங்களுக்கு?''

புத்த மதத்தைச் சார்ந்த பிளேடு?

'அசோகா' பிளேடு.

அரச குல பிளேடு எது?

'பிரின்ஸ்.'

விக் வைத்திருக்கும் பிளேடு எது?

'டோபா'ஸ்.

ஒரு நாளில் இரு தடவை சரியான மணி காட்டும் பிளேடு?

ஸெவன் ஓ க்ளாக்

என்று கேட்டபோது கோபத்தினால் அவள் குரல் நடுங்கியது.

இரண்டு வருடங்களுக்கு முன் கேட்ட அதே குரல்! மரியம் நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து கொண்டாள். அவளுக்கு ஒருபுறம் களைப்பாக இருந்தாலும் மறுபுறம் நிம்மதி ஏற்பட்டது.

''நான்தான் நான்ஸி என்று யார் சொன்னார்கள் உங்களுக்கு?'' என்று மேரி அதட்டலாகக் கேட்டாள்.

''யாரும் சொல்லவில்லை. நானே ஊகித்தேன். எதனால் அப்படி ஊகித்தேன் என்று எனக்கே தெரியவில்லை. பென் உன்னைப் பற்றி முதல் தடவை சொன்னபோதே அது நீயாகத்தான் இருக்கும் என்று எனக்குத் தோன்றி விட்டது. பல விஷயங்கள் பொருந்தியிருந்தன....''

''வந்து.....''

நாக்கைக் கடித்துக் கொண்டாள் மேரி. மைக்கைப் பற்றிக் கேட்க கிட்டத்தட்ட வாயெடுத்து விட்டாள். சே! அவன் நினைவு என்னை விட்டுப் போகவே போகாதா?

''இப்போது எதற்காக நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள்? நம்முடைய ஒப்பந்தத்தை மறுபடி புதுப்பித்துக் கொள்வதற்காகவா?'' சட்டெனத் திரும்பினாள் தன்னைச் சித்திரவதை



அரசியல்வாதிக்குப் பிடித்த பிளேடு?

'சுவிஸ்' பிளேடு.

—சு. முத்துராமலிங்கம்
படம்: என். செல்வன்

செய்துகொண்டிருக்கும் மரியமை நோக்கி.

''இல்லை நான்ஸி, இல்லை! எதையும் நான் புதுப்பித்துக் கொள்ளத் தேவையில்லை. நீ நான் கொடுத்த வாக்கை நன்றாய் காப்பாற்றி வருகிறாயே?'' என்றாள் மரியம் களைப்பு நிறைந்த குரலில். வழக்கத்துக்கு விரோதமாக அவள் குரலில் ஒரு மூப்புத் தென்பட்டது. ''ஏனென்று எனக்கே தெரியவில்லை. ஆனால் உன்னைப் பார்ப்பதற்காகத் தான் இங்கே வந்தேன். உன்னோடு பேசுவதற்காக. நீ யாரென்று தெரிந்து கொள்ள, நீ நான்ஸிதானா என்று தெரிந்து கொள்ள வந்தேன்.''

''திடீரென்று இப்போது என்ன வந்தது? இரண்டு வருஷத்துக்குப் பிறகு ஏன் என்னிடம் திடீர் அக்கறை?'' மேரியின் குரலில் நஞ்சும், கண்களில் வெறுப்பும் நிறைந்திருந்தது.

''எழுபத்தைந்து லட்ச ரூபாய் செலவழித்து நீங்கள் போட்ட திட்டம் நன்றாய் நிறைவேறியிருக் கிறதா என்று பார்க்க ஆசை? அப்படித் தானே? என்ன? கொடுத்த பணத்துக்குத் திருப்தி ஏற்பட்டதா? ஏன் பேசாமலிருக்கிறீர்கள்? இப்ப சந்தோஷம்தானே?''

மரியம் ஒரு நிமிடம் பேசாதிருந்தாள். இந்த முகத்துக்காக, இந்த மாற்றத்துக்காக ரொம்பப் பெரிய விலை கொடுத்துவிட்டோம் என்று அவள் உள்ளம் கூறியது. நாம் செய்தது ஆரம்பத்திலிருந்தே தப்பு. ஆனால் இனிமேல் காலம் கடந்து விட்டது. இவளும் மாறிவிட்டாள், மைக்கேலும் மாறிவிட்டான்., நாமும் மாறிவிட்டோம். இனி யாருமே எதையுமே மாற்றிக் கொள்ள முடியாது. மைக்கேலும் சரி. இந்தப் பெண்ணும் சரி, தங்களுக்கு வேறு உலகங்களைத் தேடிக் கொள்ள வேண்டியது தான்...

''மேரி, நீ இப்போது ரொம்ப அழகான பெண்ணாக மாறி யிருக்கிறாய்,'' என்றாள்.

''நன்றி. டாக்டர் பீட்டர் ரொம்ப நன்றாகத்தான் சிகிச்சை செய் திருக்கிறார். ஆனால் இது சைத்தானுடன் செய்து கொண்ட ஒப்பந்தம் மாதிரி. என் வாழ்க்கையையே விலையாகக் கொடுத்து அல்லவா. இந்த முகத்தை வாங்கியிருக்கிறேன்!'' வெறுப்புடன் ஒரு பெருமூச்சை வெளியிட்டாள் மேரி.

''என்னைச் சைத்தான் என்கிறாய்? பரவாயில்லை,'' என்றாள் மரியம். ''அன்றைக்கு நான் செய்தது சரியான காரியம் என்றுதான் தோன்றியது.''

''இன்றைக்கு?'' என்று மேரி சீறினாள். ''இன்று மைக்கேல் சந்தோஷமாக இருக்கிறாரா? என்னைத் தொலைத்துத் தலை முழுகினீர்களே, அதற்குப் பலன் கிடைத்ததா மிஸஸ் மரியம்? உங்கள் புனிதமான பணி வெற்றி அடைந்ததா?''

மரியமைப் பார்க்க பார்க்க அவளுள் ஆத்திரம் மேலிட்டது. அவளை அறைந்து கீழே தள்ளி மிதித்து நசுக்க வேண்டும் போல் சினம் மூண்டது.

(தொடரும்)

# காதல் மேல் ஆணை

டேனியல் ஸ்டீல்

மேரியின் கேள்வி மரியமைத் தலை குனிய வைத்தது.

''இல்லை, மேரி. மைக்கேல் சந்தோஷமாக இல்லை. நீ எப்படிச் சந்தோஷமாக இல்லையோ அது போலவே அவனும் சந்தோஷமாக இல்லை. அவன் தன் வாழ்க்கையை மாற்றிக் கொண்டு விடுவான் என்று நினைத்தேன். நீயும் மாற்றிக் கொள்வாய் என்று எதிர்பார்த்தேன். ஆனால் நீ மாற்றிக் கொள்ளவில்லை என்று என்னுள் ஏதோ ஒன்று சொல்கிறது. உன்னைக் கேட்கவும் முடியவில்லை. கேட்பதற்கு எனக்கு எந்த உரிமையும் கிடையாது.''

''ஆமாம், உங்களுக்கு உரிமை கிடையாது தான்,'' என்றாள் மேரி. 'அதிருக்கட்டும். அவருக்குக் கல்யாணம் ஆகி விட்டதா?''

'ஆகவில்லை' என்ற பதில் வரவேண்டும் என்று உள்ளம் பிரார்த்தனை செய்தது. அதே சமயம் இப்படி நினைக்கிறோமே என்று தன் மீதே அவளுக்குக் கோபம் வந்தது.

''ஆகிவிட்டது,'' என்றாள் மரியம்.

''என்ன!'' என்று விட்டுத் தட்ட வாய் விட்டே கூறிவிட்டாள் மேரி. ஒரு கணம் மூச்சு நின்றுவிட்டது.

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்











மரியம் சொன்னாள்:

''ஆமாம், அவன் கல்யாணம் செய்து கொண்டு விட்டான்—வேலையை! வேலை, வேலை, வேலை, வேலையுடன் வாழ்கிறான், வேலையுடன் சாப்பிடுகிறான், வேலையுடன் தூங்குகிறான். வேலைதான் அவனுக்கு மூச்சுக் காற்று, வேலைதான் அவன் மனைவி. வேலையிலேயே என்றென்றும் மூழ்கிவிட வேண்டும் என்பது அவன் திட்டம். அவனை நான் பார்க்கக் கூட முடிவதில்லை.'' என்றாள்.

'நன்றாய் வேண்டும், பாவி! உனக்கு நன்றாய் வேண்டும்!' என்று எண்ணிக்கொண்டாள் மேரி.

''அப்படியானால் நீங்கள் செய்தது தப்பு என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா? மைக்கேலை நான் எவ்வளவு காதலித்தேன்? அந்தக் காதலுக்கு உலகத்தில் எதுவும் ஈடாகாது!'' —சொல்லும் போதே மேரியின் மனத்துக்குள் ஓர் உறுத்தல் ஏற்பட்டது. எதுவும் ஈடாகாது என்று சொல்வது தப்பு! இந்த முகம்! என் முகம்! அந்தக் காதலைக் காட்டிலும் இந்த முகம்தான் பெரியது என்றல்லவா நினைத்து விட்டேன்!''

"உன் காதல் எனக்குப் புரிகிறது மேரி, புரிகிறது," என்றாள் மரியம். "ஆனால் கொஞ்ச நாளில் அவன் மறந்துவிடுவான் என்று நினைத்தேன்."

"மறந்தாரா?"

"அப்படித்தான் தோன்றுகிறது. உன்னைப் பற்றி அவன் பேசுவதே கிடையாது."

"என்னைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டுமென்று அவர் முயற்சி செய்தாரா?"

மரியம் மெதுவாய்த் தலையை அசைத்து, 'இல்லை' என்றாள். ஆனால் தேட முயற்சி செய்யாததற்குக் காரணம் என்ன என்பதைச் சொல்லவில்லை. இவள் இறந்துவிட்டதாக மைக்கேல் நினைத்திருக்கிறான் என்பதைச் சொல்லவில்லை. இந்தப் பொய் அவள் மனத்தைப் பெரும் சுமையாய் அழுத்தியது. இப்போது மேரியின் முகத்தில் வெறுப்புக் கொந்தளிப்பதை அவள் கண்டாள்.

"சரி, எதற்காக என்னைக் கூப்பிட்டீர்கள்? உங்கள் மனத்திலிருந்த சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளத்தானே? தீர்த்துக் கொண்டாயிற்றா? அல்லது என் புகைப்படங்களைப் பார்ப்பதற்காகக் கூப்பிட்டீர்களா? எதற்குக் கூப்பிட்டீர்கள்? எதற்கு?"

"எனக்கே புரியவில்லை. நான்ஸி—ஸாரி, மேரி. உன்னைப் பார்த்தே ஆக வேண்டுமென்று தோன்றியது. அவ்வளவுதான். உன் வாழ்க்கை எப்படி இருக்கிறதென்று பார்க்க..... மேரி, உனக்கு ஒன்று சொல்லட்டுமா? எனக்கு உடல்நிலை நன்றாக இல்லை. நான் அதிக நாள் இருக்க மாட்டேன்," என்று சொல்கையில் மரியமுக்குத் தன் மீதே பரிதாபம் ஏற்பட்டது. இந்தப் பெண்ணிடம் அதைச் சொல்லியிருக்க வேண்டாம் என்றும் எண்ணிக் கொண்டாள்.

ஆனாலும் மேரி அதைக் கேட்டு வருத்தப்பட்டதாகத் தெரியவில்லை. நீண்ட நேரத்துக்கு மரியமை முறைத்துப் பார்த்தபடியே உட்கார்ந்திருந்தாள். பின்னர் அவள் பேசிய போது அவள் குரல் மென்மையாக இருந்தது. பிசிறடித்தது. "கேட்க வருத்தமாயிருக்கிறது, மிஸஸ் மரியம். நீங்கள் அதிக நாள் இருக்கப் போவதில்லை என்று சொல்கிறீர்கள். என் விஷயம் என்ன தெரியுமா? நான் செத்துப் போய் இரண்டு வருடமாகிறது. உங்கள் மகனும்தான். அவரும் இறந்து இரண்டு வருடமாகிறது. இரண்டு பேர் இறந்துவிட்டார்கள்! இரண்டு மரணத்துக்கும் காரணம் யார்? நீங்கள்தான், மிஸஸ் மரியம், நீங்களேதான்! உண்மையைச் சொல்லட்டுமா? உங்கள் மீது எனக்கு எந்த விதமான பரிதாபமும் ஏற்படவில்லை. ஆனால் உங்களுக்கு நான் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். தெருவில் என்னைக் காணுகிறவர்கள் பயந்து நடுங்கி ஓட்டம் பிடிப்பதற்குப் பதிலாக, நின்று பார்த்து, திரும்பிப் பார்த்து, என் அழகை ரசிக்கிறார்கள். அதற்காக என் இருதயத்தின் ஆழத்திலிருந்து உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும். இன்னும் என்னென்னவோ சொல்ல வேண்டும். ஆனால் எதுவும் என்னால் சொல்ல முடியவில்லை. உங்களைப் பற்றி எனக்கு எந்தவித உணர்ச்சியும் ஏற்படவில்லை. என் வாழ்க்கையைக் கெடுத்ததாவது பரவாயில்லை.



மைக்கேலின் வாழ்க்கையைப் பாழ் பண்ணினீர்களே, அதை நினைத்தால் தான் உங்களைப் பற்றிப் பாவமா யிருக்கிறது.''

மரியம் மௌனமாகத் தலையை ஆட்டினாள். மேரியின் பேச்சு அவளை நிலைகுலையச் செய்தது. இவள் சொல்வதெல்லாம் உண்மைதான். இந்த உண்மை எனக்கே இரண்டு வருடமாகத் தெரியும்.... குறிப்பாக, மைக்கேலைப் பற்றி இவள் சொன்னது வாஸ்தவம். இவள் எப்படி இருக்கிறாள் என்றுதான் இதுவரை தெரியாமல் இருந்தது. தன் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்துவதற்காகத்தான் இவள் இங்கே வந்தாள் போலும்...

''நல்லது.... என்ன சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை,'' என்றாள்.

''குட்பை சொல்லுங்கள், போதும்!'' தன் கோட்டையும் ப்ரீஃப் கேஸையும் எடுத்துக் கொண்டு வாசலை நோக்கிச் சென்ற மேரி, கதவருகே ஒரு நிமிடம் நின்றாள். கைப் பிடியைப் பிடித்தவாறு தலை குனிந்தபடி நின்ற போது அவள் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. மெல்லத் திரும்பிப் பார்த்த போது, மரியமின் கண்களிலும் கண்ணீர் வழிவதைக் கண்டாள்.

வேதனையின் சுமையில் மரியமினால் பேச முடியவில்லை. ஆனால் மேரி சுதாரித்துக் கொண்டு சொன்னாள்: ''குட்பை மிஸஸ் மரியம்! மைக்கேலிடம்.... மைக்கேலிடம்... என் அன்பைத் தெரிவியுங்கள்.''

மெல்லக் கதவைச் சாத்திக் கொண்டு அவள் வெளியேறினாள்.

ஆனால் மரியம் அசையவில்லை. இருதயம் இரண்டாக வெடித்துப் பிளந்து விழுகிற மாதிரி ஒரு பயங்கர வேதனை. ஏற்பட்டது. மூச்சுத் திணறியது.

எப்படியோ தட்டித் தடுமாறிக் கையை நீட்டி அழைப்பு மணியின் விசையை அழுத்தினாள்.

இரண்டாம் முறையும் அழுத்திய பிறகு வேலைக்காரி ஓடி வந்தாள். அதற்குள் மரியமுக்கு மயக்கம் போட்டு விட்டது.

மரியமை ஆஸ்பத்திரியில் சேர்த்திருப்பதைக் கேட்டதும் உடனே பதைத்துக் கொண்டு ஓடி வந்தவர் ஜார்ஜ்தான்.

கிடைத்த முதல் விமானத்தில் பயணித்து, சான்பிரான்ஸிஸ்கோவை அவர் அடைந்த போது இரவு பதினொன்றாகிவிட்டிருந்தது.

ஆஸ்பத்திரி வராந்தாவில் தடதடவென்று அவர் நடந்த போது, மரியமை நினைத்து அவருக்குக் கோபம் கோபமாய் வந்தது. ரொம்ப மோசம் இந்தப் பெண்பிள்ளை. எவ்வளவோ சொல்லியும் தனியாகப் போய்க் கொள்கிறேன் என்று புறப்பட்டு வந்துவிட்டாள். என்ன வயதாகி என்ன புண்ணியம்! தன் இஷ்டப்படிதான் நடப்பேன் என்று ஒரு பிடிவாதம்...

மரியம் இருந்த அறையின் கதவை மெல்லத் தட்டியதும், வயதான நர்ஸ் ஒருத்தி அலுப்பும் சலிப்புமாகக் கதவைத் திறந்தாள். ஜார்ஜுக்கும் அலுப்பாகத்தான் இருந்தது. இந்தத் தடவை மரியமிடம் ரொம்பக் கண்டிப்பாகச் சொல்லிவிட வேண்டும் என்று நினைத்தபடி,

''ஓட்டல்லே காசு கொடுக்காமல் சாப்பிட்டேங்கறது வாஸ்தவம்! எல்லோரும் மாவாட்டத்தான் சொல்லுவாங்க. ஆனா, நீங்க போன வாரம் வச்ச சாம்பார் ஒரு வாளி குடிக்கணும்னு சொல்றது கொஞ்சம் கூட நியாயம் இல்லீங்க!''

—சிக்கல் சிங்காரம்

''மிஸஸ் மரியமின் அறைதானே இது? என் பெயர் ஜார்ஜ்,'' என்றார்.

அந்தப் பெயரைக் கேட்டதும் நர்ஸின் முகத்தில் புன்னகை தோன்றியது. ''ஓ, வாருங்கள். உங்களைத் தான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தோம்,'' என்றாள்.

எவ்வளவு விரைவாக வர முடியுமோ அவ்வளவு விரைவாக அவர் வந்திருக்கிறார் என்பதை மரியம் புரிந்து கொண்டாள். ''ஹலோ ஜார்ஜ்,'' என்றாள் புன்னகையுடன்.

''ஹலோ மரியம், எப்படி இருக்கிறீர்கள்?''

''கொஞ்சம் களைப்பாயிருக்கிறது. மற்றப்படி இந்தத் தடவை பிழைத்து விட்டேன். டாக்டர்கள் அப்படித்தான் சொல்கிறார்கள்.''

''இந்தத் தடவை சரி. அடுத்த தடவை?'' அவளைப் பார்த்தபடி அறையின் குறுக்கும் நெடுக்குமாக நடந்தார் ஜார்ஜ். கோபமாக என்னவெல்லாமோ சொல்ல வேண்டும் போலிருந்தது. அடக்கிக் கொண்டார்.

''அடுத்த தடவை வரும்போது பார்த்துக் கொள்ளலாம்,'' என்றாள் மரியம். ''கொஞ்சம் அமைதியாக உட்காருங்கள். உங்கள் படபடப்பைப் பார்த்தால் எனக்கு மறுபடியும் உடம்புக்கு வந்துவிடும் போலிருக்கிறது! என்ன சாப்பிடுகிறீர்கள்? உங்களுக்காக ஏதாவது சாப்பிட எடுத்து வைக்கும்படி நர்ஸிடம் சொல்லியிருக்கிறேன்.''

''எனக்குச் சாப்பாடே பிடிக்கவில்லை.''

''சரி, சரி. நிறுத்துங்கள். நீங்கள் இந்த மாதிரி இருந்து நான் பார்த்ததேயில்லை, ஜார்ஜ். எனக்கு சீரியஸாய் எதுவும் இல்லை. தயவு பண்ணி உங்களை மாற்றிக் கொள்ளுங்கள்.''

''நானா மாற வேண்டும்? இல்லை, நீங்கள் தான் மாற வேண்டும். இப்படி இன்னும் எத்தனை காலத்துக்கு உங்கள் உடம்பை நீங்களே கெடுத்துக் கொள்ளப் போகிறீர்கள்? இனிமேல் என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது.''

''அப்படியானால் வேலையை விட்டுவிடப் போகிறீர்கள்?



''காலியான ஒரு பெரிய டப்பாவில் எத்தனை ஆப்பிள்கள் வைக்கலாம்.''

அப்படியா?'' என்று மரியம் கேட்டாள். கேட்கும்போதே அவளுக்குச் சிரிப்பு வந்தது.

ஆனால் ஜார்ஜின் முகத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டாள். அவர் சிரிக்கவில்லை.

''ஆமாம். அதையேதான் செய்யப் போகிறேன். நான் ரிடையராகப் போகிறேன்,'' என்றார் அவர் தீர்மானமான குரலில்.

மரியமுக்குத் திருப்தியாயிருந்தது —அவருடைய சோகமான மூடை மாற்றி விட்டோமென்று.

''சரி, சரி. உளறாதீர்கள்...'' என்றாள். ஆனால் வேடிக்கையாகப் பேசி அவர் மனத்தை மாற்ற முடியுமா என்று அவளுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. ஒரு சங்கடமான சிரிப்புடன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள்.

ஜார்ஜ் சொன்னார்: ''நான் உளறவில்லை, மரியம். இந்த இருபது வருடத்தில் நான் புத்திசாலித்தனமாய் எடுத்துள்ள முதல் தீர்மானம் இது தான். இன்னொன்றும் சொல்கிறேன். என்னோடு இன்னொருவரும் ரிடையர் ஆகப் போகிறார். யார் தெரியுமா? நீங்கள்தான்! ஆமாம். நாம் இரண்டு பேரும் சேர்ந்து ரிடையர் ஆகப் போகிறோம். எந்த நோட்டீசும் இல்லாமல் ரிடையர் ஆகப் போகிறோம். நான் மைக்கேலுடன் இதைப் பற்றிப் பேசி விட்டேன்.''

மரியம் ஆச்சரியத்துடன் அவரைப் பார்த்தாள்.

ஜார்ஜ் தொடர்ந்தார்: ''என்னை விமான நிலையத்துக்குக் காரில் அழைத்து வந்தார் மைக்கேல். ஏகப்பட்ட வேலை இருக்கிறதாம், அதனால் அவரால் இங்கே வர முடியவில்லையாம். உங்களிடம் சொல்லச் சொன்னார். விமான நிலையத்துக்கு வரும் வழியில் நாம் இரண்டு பேரும் ரிடையராவது குறித்து அவரிடம் பேசினேன். அருமையான் ஐடியா என்றார். இனிமேல் நீங்கள் என்ன சொன்னாலும் உங்கள் பேச்சை எவரும் கேட்கப் போவதில்லை. முடிவு பண்ணியாயிற்று!''

மரியம் அவரையே வெறித்துப் பார்த்தாள்.

(தொடரும்)



ஆசிரியர்: யானை ஒரு ஸ்டூலில் உட்கார்ந்திருக்கிறது. இது என்ன நேரம்?

மாணவன்: புது ஸ்டூல் வாங்க வேண்டிய நேரம்.

# அமலாவுடன் ஒரு விளையாட்டு



இந்தப் படத்தில் அமலா ஆன்ட்டி போட்டுக் கொண்டிருக்கும் எக்ஸர்சைஸ் டிரஸ் எனக்கு மிகவும் பிடிக்கும் டி.வி.யில் இது போல அடிக்கடி பார்த்திருக்கிறேன்.

டான்ஸ் மூவ்மெண்ட் இருப்பதால் இந்தப் படத்தை நான் செலக்ட் செய்தேன்.

மூன்று நாலு வருஷத்துக்கு முன்பு நிலவே மலரே படப்பிடிப்பில் அமலா ஆன்ட்டியைப் பார்த்தேன். என்னுடன் சிரித்துப் பேசி விளையாடினார். மறுபடியும்



# நான் சொல்ல மாட்டேன் யார் அந்த நடிகை என்று?

ஒரு மேடை நிகழ்ச்சியின் போது, ஒரு நடிகை மேடைக்கு வந்தாங்க. நான் வழக்கம் போல, ''ஏம்மா, உனக்குப் பாடத் தெரியுமா?''ன்னு கேட்டேன்.

''ஊஹூம்! பாடத் தெரியாது. பாத்ரூம்லே தான் பாடுவேன்'ன்னு சொன்னாங்க.

நான் உடனே, ''ஏம்மா, உன் பாட்டைக் கேட்க பாத்ரூமுக்கா வர முடியும்?''ன்னு கேட்டுட்டேன். ஹால்லே ஒரே சிரிப்பாயிருச்சு.

வீட்டுக்கு வந்தப்புறம் என் மனைவிகிட்டே இந்த விஷயத்தைச் சொன்னேன். அவள் உடனே, ''ச்சே! அந்தப் பொண்ணு மனசு எவ்வளவு வருத்தப்படும்? அவங்க வீட்டுக்குப் போன் பண்ணி ஸாரி சொல்லிடுங்க,'' என்றாள். நானும் உடனே அந்த நடிகை வீட்டுக்குப் போன் செய்து, ''ஸாரிம்மா, மேடையிலே தப்பா பேசிட்டேன்,''ன்னு சொன்னேன்.

யார் அந்த நடிகைன்னு கேட்கிறீங்க? வேணாங்க, பேர் கேட்காதீங்க.

—கங்கை அமரன்

ஙீ ஙீ ஙீ ஙீ ஙீ ஙீ

அந்த நடிகை யாரென்று கங்கை அமரன் சொல்லாவிட்டாலும், மேலே சில படங்கள் வெளியிட்டிருக்கிறோம். அவர்களில் ஒருவராக அந்த நடிகை இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம்.



மூலம்: டேனியல் ஸ்டீல்

40

# காதல் மேல் ஆணை

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

இரண்டு பேரும் ரிடையராக வேண்டியதுதான் என்று ஜார்ஜ் வெகு உறுதியாகச் சொன்னதைக் கேட்டு மரியம் திகைத்தாள். நம்ப முடியாதவளாக அவரை ஏறிட்டு நோக்கினாள்.

''ரிடையராகி என்ன செய்வது? வீட்டில் உட்கார்ந்து கொண்டு ஸ்வெட்டர் பின்னச் சொல்கிறீர்களா?'' என்றாள்.

''அதுவும் நல்ல ஐடியாதான்,'' என்ற ஜார்ஜ் அவளை கூர்ந்து பார்த்தார். ''நீங்கள் செய்ய வேண்டிய முதல் வேலை, என்னைக் கல்யாணம் செய்து கொள்வது. அதற்குப் பிறகு நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். ஒன்று மட்டும்தான் கூடாது.'' அவர் குரல் கண்டிப்புடன் உயர்ந்தது. ''வேலை! அது மட்டும் கூடாது. புரிகிறதா மரியம்?''

மரியம் சிரித்தாள். ''கல்யாணம் செய்து கொள்கிறாயா என்று என்னை ஒரு வார்த்தை சம்பிரதாயத்துக்காவது கேட்கக் கூடாதா? அல்லது இதுவும் மைக்கேலின் உத்திரவா?''

அவளுக்குக் கோபம் வரவில்லை. ஜார்ஜின் அன்பைக் கண்டு அவள் நெஞ்சம் நெகிழ்ந்தது. உள்ளூர அவளுக்கு நிம்மதி ஏற்பட்டிருந்தது. பட்டதெல்லாம் போதும் என்று அவளுக்குத் தோன்றியது.

அன்று மாலை மேரியைச் சந்தித்துப் பேசியது அவள் மனத்தைப் பெரிதும் மாற்றியிருந்தது.

''நம் கல்யாணத்துக்கு மைக்கேல் வாழ்த்துக்கள் தெரிவித்து விட்டார்.'' என்றார் ஜார்ஜ். அவர் குரல் மிருதுவாக மாறியிருந்தது. கட்டிலின் நுனியில் உட்கார்ந்து மரியமின் கைகளைப் பற்றினார். ''மரியம், இப்போது கேட்கிறேன். என்னைக் கல்யாணம் செய்து கொள்வாயா?'' வெகு நாட்களாகக் கேட்க வேண்டுமென்றிருந்ததை இன்று கேட்டுவிட்டார். இத்தனை காலமும் அவருக்குத் தயக்கமாகவே இருந்தது. ஆனால் இங்கே புறப்பட்டு வருவதற்கு முன்பு, மைக்கேல் கொடுத்த தைரியம்தான் அவரை இப்படிப் பேச வைத்தது.

''என்ன மரியம், என்னை மணப்பாயா?'' என்று அவள் கைகளை சற்று இறுக்கியே பிடித்துக் கொண்டு கேட்டார்.

மரியம் மெல்லத் தலையசைத்தாள். அவள் புன்னகையில் கதகதப்பும் சற்றுச் சோர்வும் தென்பட்டன. சிறிது வருத்தம் கூடத் தெரிந்தது. ''பல வருஷங்களுக்கு முன்பே நாம் இந்த முடிவுக்கு வந்திருக்க வேண்டும், ஜார்ஜ்,''

என்றாள். இன்னும் கூட ஏதேதோ சொல்ல வேண்டும் போலிருந்தது அவளுக்கு. மேரியைச் சந்தித்துப் பேசிய பிறகு தன் மனம் பல வகையில் மாறிவிட்டது என்பதைச் சொல்ல நினைத்தாள்.

''இதைப் பற்றி நான் முன்பே நினைத்தேன். ஆனால் நீ என்னை ஏற்றுக்கொள்ள மாட்டாய் என்று நினைத்தேன்,'' என்றார் ஜார்ஜ்.

''உண்மைதான். நான் ஒப்புக் கொண்டிருக்க மாட்டேன். நான் ஒரு முட்டாள்.'' ஒரு பெருமூச்சுடன் தலையணையில் சாய்ந்துகொண்டாள் மரியம். ''என் வாழ்க்கையில் பல முட்டாள்தனமான காரியங்களைச் செய்திருக்கிறேன்.''

அவள் முகத்தில் திடீரென்று ஒரு வேதனை ஏற்பட்டது. மேரியுடன் பேசிக் கொண்டிருந்த போது ஏற்பட்ட வேதனை.

அந்தத் துன்பத்தையும் களைப்பையும் கண்டு ஜார்ஜுக்குத் திகைப்பாயிருந்தது.

''பித்துக்குளித்தனமாய் பேசாதே, உன்னை அறிந்த இத்தனை வருஷங்களில் முட்டாள்தனமாக நீ ஒரு காரியமும் செய்தது கிடையாது.'' அவள் கைகளை மெல்ல வருடிக் கொடுத்தார் அவர். இப்படி அவளிடம் பரிவு காட்ட வேண்டும் என்று எத்தனை காலமாக அவர் நினைத்து வந்திருக்கிறார்! இன்றுதான் அதற்கு நேரம் வந்திருக்கிறது. ''மரியம், கடந்த காலத்தைப் பற்றிக் கன்னாபின்னாவென்று கற்பனை செய்துகொண்டு உன்னைத் துன்புறுத்திக் கொள்ளாதே,'' என்றார்.

மரியம் படுக்கையில் நேராக நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள். அவர் கைகளை மென்மையாகப் பிடித்துக்கொண்டு, நேருக்கு நேராய்



## பாக்யராஜிடம் இளையராஜா என்ன சொன்னார்?



சமீபத்திலே ஒரு பத்திரிகைப் பேட்டிக்காகப் பத்திரிகை ஆசிரியரும் டைரக்டருமான கே. பாக்யராஜ், இளையராஜாவைச் சந்தித்தார்.

பத்திரிகையில அவரைப் பத்தி வந்த ஒரு செய்தியைச் சொல்லி அதற்கு அவரைப் பதில் தருமாறு கேட்டார்.

அதுக்கு இளையராஜா சொன்ன பதில்:

''வேலையில்லாதவங்கதான் ஏதாவது எழுதிக்கிட்டிருப்பாங்க. எனக்கு நெறையா வேலை இருக்கு. இன்னும் பத்துப் பேரைப் பாத்து என்னைப் பத்தித் திட்டி எழுதச் சொல்லு. அதுக்கப்புறமாவது எனக்குப் பட சான்ஸ் குறைஞ்சால் நான் சந்தோஷப் படுவேன்.''

பாக்யராஜ் இதை வெளியிட்டாரான்னு எனக்குத் தெரியலே.

—கங்கை அமரன்

அவர் கண்களைப் பார்த்தாள். ''ஜார்ஜ், கன்னாபின்னாவென்று கற்பனை செய்து கொள்கிறேன் என்கிறீர்களே? எது கன்னாபின்னா? அந்தக் கன்னாபின்னாவினால் சில பேருடைய வாழ்க்கையே அழிந்திருக்கிறதே? அதை நான் எப்படி மறக்க முடியும், ஜார்ஜ்?''

''என்ன மரியம், என்னென்னமோ பேசுகிறாய்? நீயாவது, ஒருத்தரின் வாழ்க்கையை அழிப்பதாவது?'' என்றார் ஜார்ஜ்.

மரியம் மீண்டும் தலையணையில் சாய்ந்து கொண்டு, கண்களை மூடிக்கொண்டாள். ''சொன்னால் உங்களுக்குப் புரியாது, ஜார்ஜ்.''

அவள் கைகளை அவர் விடாமல் பற்றியபடியே இருந்தார். மரியம் கண்களைத் திறந்து நீண்ட நேரத்துக்கு அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு, ''உங்களுக்கு சொல்வதா வேண்டாமா? என்று யோசிக்கிறேன்,'' என்றாள்.

''பரவாயில்லை. சொல்லு.''

''நான் சந்தித்த உண்மைதான் எனக்கு மாரடைப்பு ஏற்படுத்தியது,'' என்றாள் அவள்.

இப்படியொரு தழுதழுத்த குரலை அவளிடம் அவர் கேட்டதே கிடையாது. அவளை நிமிர்ந்து பார்த்தவர், அவள் கண்களில் கண்ணீர் தளும்பிக் கொண்டிருப்பதைக் கண்டார். அவள் கழுத்தை அணைத்துக் கொண்டு 'சரிசரி, ஒன்றும் சொல்ல வேண்டாம்,' என்று கூற வேண்டும் போலிருந்தது.

''இன்று ஏதாவது... முக்கியமான விஷயம் நடந்ததா மரியம்?'' என்றவர், பதிலுக்காக ஆவலுடன் அவள் முகத்தைப் பார்த்தார். ஆனால் அவள் கன்னங்களில் கண்ணீர்தான் வழிந்துகொண்டிருந்தது. கடைசியில் தலையை அசைத்து, ''ஆமாம்'' என்றாள் ரகசியம் சொல்வது போன்ற குரலில்.

''அப்படியா? சரி, அமைதியாக இரு. எதைப் பற்றியும் அலட்டிக் கொள்ளாதே.''

''அந்தப் பெண்ணைப் பார்த்தேன்,'' என்றாள் மரியம் மெதுவாக.

''பெண்ணா? எந்தப் பெண்?'' கடவுளே இவள் என்னதான் சொல்ல வருகிறாள்!

''மைக்கேல் காதலித்தானே அந்தப் பெண்ணை.'' ஒரு நிமிடம் அவள் கண்ணீர் நின்றது. நிமிர்ந்து உட்கார்ந்து அவரை நோக்கினாள். ''உங்களுக்கு அந்த இரவு ஞாபகமிருக்கிறதா? விபத்து நேரிட்ட இரவு



''ஹலோ! 4617?''

''ராங் நம்பர். இருந்தாலும் போனை வெச்சுடாதீங்க!''

''ஏன்?''

'''இன்னிக்குத்தான் எங்களுக்குப் போன் வந்திருக்குது. கொஞ்ச நேரம் பேசிக்கிட்டிருக்கலாம்.''

—ஞா. ஞானமுத்து



—மைக்கேல் என்னைப் பார்க்க வந்திருந்தான். நீங்கள் உள்ளே வந்தீர்கள். அவன் கோபமாக வெளியேறி விட்டான். அந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போவதாக என்னிடம் சொல்வதற்காகவே அன்று வந்திருந்தான். அந்தப் பெண் ஓர் அனாதை என்பது பற்றி நான் சேகரித்து வைத்திருந்த விவரங்களை அவனிடம் காட்டினேன்...''

அவள் குரல் கொஞ்சம் கொஞ்சமாக எங்கோ திரிந்து தேய்ந்துகொண்டிருந்தது. ஜார்ஜ் திகைத்தார். ஏதோ மருந்து சாப்பிட்டதில் இவள் குழம்பிப் போயிருக்கிறாள். அந்தப் பெண்தான் விபத்தில் இறந்துவிட்டாளே? அப்படியிருக்க இவள் அவளைப் பார்த்ததாகச் சொல்கிறாளே?

''மரியம், நீ பார்த்தது அந்தப் பெண்ணாக இருக்காது. எனக்கு நன்றாய் நினைவிருக்கிறது. அவள்தான் அந்த விபத்தில் இறந்து போனாளே...''

இல்லை என்று மரியம் தலையை அசைத்தாள். ஜார்ஜின் கண்களை விட்டு அவள் கண்கள் அகலவேயில்லை.

''இல்லை, ஜார்ஜ். அவள் இறந்து போகவில்லை. இறந்து விட்டாள் என்று நான்தான் சொன்னேன். அந்த ரகசியத்தை வெளியிடக் கூடாது என்று டாக்டர் விக்கியிடம் சொல்லியிருந்தேன். அவரும் யாரிடமும் சொல்லவில்லை. விபத்தில் அந்தப் பெண் உயிர் தப்பிவிட்டாள். ஆனால் அவள் முகம் அடியோடு நாசமாகி விட்டது—கண்களைத் தவிர.''

ஜார்ஜ் மௌனமாக மரியமையே பார்த்தபடி இருந்தார். இவள் உளறவில்லை. துன்பத்தில் துடிக்கிறாள். வேதனையில் தவிக்கிறாள். இவள் சொல்வது யாவும் உண்மை என்று அவருக்குப் புலப்பட்டது.

''அன்று அந்தப் பெண் ஆஸ்பத்திரியில் கிடந்தபோது நான் அவள் அறைக்குப் போனேன். அவளிடம் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டேன்.''

எதுவும் பேசாமல் ஜார்ஜ் காத்திருந்தார். தாளமுடியாத வலியில் சிக்கியவள்போல் அவள் கண்களை மூடிக்கொண்டதும் அவருக்குப் பயம் ஏற்பட்டது. அவள் கைகளை மெல்ல அழுத்தி, ''மரியம், உனக்கு உடம்பு ஒன்றுமில்லையே?'' என்றார்.

அவள் மீண்டும் கண்களை மெதுவே திறந்தாள். ''உங்களிடம் எல்லாவற்றையும் சொன்னால் ஒருவேளை என் மனப்பளு குறைந்து உடம்பும் ஓரளவு சரியாகி விடும். அந்தப் பெண்ணிடம் நான் ஒப்பந்தம் செய்து கொண்டேன். அவள் மைக்கேலைக் கொடுத்தால் நான் அவளுக்கு முகத்தைக் கொடுக்கிறேன் என்றேன். அந்த விஷயத்தை உங்களுக்கு வேறு வார்த்தைகளில் எனக்குச் சொல்லத் தெரியவில்லை. அவள் முகத்தை மிக அழகாக மாற்றக் கூடிய சர்ஜன் ஒரே ஒருவர்தான் இருக்கிறார் என்று டாக்டர் விக்கி சொன்னார். ஆனால் அவருக்காக எக்கச்சக்கமாய்ப் பணம் செலவழிக்க வேண்டியிருக்கும் என்றார். அதை அந்தப் பெண்ணிடம் சொன்னேன்.

வைத்தியம் முடிந்த பிறகுகூட அவளுடைய மற்றச் செலவுகளை நான் ஏற்றுக்கொள்கிறேன் என்றேன். இதுவரை கண்டிராத ஒரு வாழ்க்கையை, புத்தம் புதியதான ஒரு வாழ்க்கையைத் தருகிறேன் என்றேன். ஒரே ஒரு நிபந்தனை போட்டேன். மைக்கேலை அவள் பார்க்கவே கூடாது அவனைத் தேடி வரக் கூடாது என்றேன்.''

''அதற்கு அவள் ஒப்புக் கொண்டாளா?''

''ஆமாம்'' என்று நறுக்கென்று பதிலளித்தாள் மரியம்.

''அப்படியானால் மைக்கேல் மீது அவளுக்கு அப்படியொன்றும் காதல் இல்லை என்று அர்த்தம். அவளுடைய சர்ஜரிக்காக நீ அவ்வளவு தொகை செலவழித்ததே பெரிய காரியம். ஒருத்தர் மேல் ஒருத்தருக்கு அப்படி அளவற்ற காதல் இருந்திருந்தால் இரண்டு பேருமே உன் நிபந்தனைக்கு ஒப்புக் கொண்டிருக்க மாட்டார்களே?''

''புரியாமல் பேசுகிறீர்கள் ஜார்ஜ்,'' என்றாள் மரியம் கசப்பு நிறைந்த குரலில். இப்போது அவளுக்குத் தன்மீதே கோபம் வந்திருந்தது. ''இரண்டு பேரிடமுமே நான் நாணயமாக நடந்து கொள்ளவில்லை. அவள் இறந்துவிட்டாள் என்று மைக்கேலிடம் சொல்லி விட்டேன். அப்படிச் சொல்லியிருக்காவிட்டால் என் ஒப்பந்தம் காற்றில் பறந்து போயிருக்கும். அவன் அவளைத் தேடி ஓடியிருப்பான். சொல்லப் போனால் அப்படி அவன் ஓடி வருவான் என்ற நம்பிக்கையில்தான் அவளும் என் நிபந்தனைக்கு கட்டுப் பட்டாள். என் நிபந்தனையை ஏற்றுக்கொள்வதைத் தவிர அவளுக்கு வேறு வழியில்லை. சைத்தானுடன் ஒப்பந்தம் செய்து கொண்டேன் என்று அவளே இன்று சொன்னாள். உண்மைதான். ஜார்ஜ், உண்மை தெரிந்திருந்தால் மைக்கேல் ஒருநாளும் ஒப்புக் கொண்டிருக்க மாட்டான். ஒரே விநாடியில் அவளிடம் பறந்து போயிருப்பான்.''

மரியமின் உள்ளத்தில் எப்படிப்பட்ட ரணம் ஏற்பட்டிருக்கிறது என்பது ஜார்ஜுக்குப் புரிந்தது. ஆனால் அந்த ரணத்துக்கு என்ன மருந்து போடுவது, எப்படிப் போடுவது என்றுதான் தெரியவில்லை.

(தொடரும்)

# பெரிய எழுத்து கொ

''பெரிய எழுத்துக் கொ'' என்றால் என்ன?' என்று எட்டு வாரங்கள் புரியாமல் தவித்துக் கொண்டிருந்தேன். இறுதியில், பெயருக்கும் கதைக்கும் மிக அழகாக முடிச்சுப் போட்டுள்ளார் கிருஷ்ண குமார்.

—கோ. சுந்தரம், கந்தர்வபேட்டை

புதுமையான க்ரைம் கதை என்றாலும் ரொம்பப் பெரிய எதிர் பார்ப்பை ஏற்படுத்தி சட்டு புட்'டென்று முடித்திருந்தது பெரிய ஏ(மாற்றம்).

—த. சத்தியநாராயணன், அயன்புரம்.

படு பயங்கரமான போர்.

—ஆ. பெரியசாமி, நடுவீரப்பட்டு

ஐந்தாவது அத்தியாயத் தொடக்கத்தில் விக்கிரமாதித்தன் கதையிலிருந்து பத்தி பத்தியாகக் கதையை எடுத்துச் செருகியிருந்தபோது முகம் சுளிக்கத்தான் தோன்றியது. கடைசியில் பார்த்தால் மர்மக் கொக்கியை அங்கேயல்லவா செருகியிருக்கிறார்! எதிர்பாராத முடிவுதான்.

—வி. சுபத்ரா, சென்னை—36

பொதுவாய்க் கதை என்றாலே அதன் கதாநாயகன் தான் ஓங்கி உயர்ந்து நிற்பான். ஆனால் இந்தப் 'பெரிய எழுத்துக் கொ' புதுமையாய், புரட்சியாய் ஒரு கிழவியும் குமரியும் சேர்ந்து கொலைகாரனைக் கண்டுபிடித்து... அசத்தி விட்டார் ஆசிரியர்.

—எம்.கே. சக்திவேல், சேலம்.

# இமமாத வெளியீடு!

வெற்றி பட ஜோடி
**நாகார்ஜுன்**
**அமலா**
நடிக்கும்

**ஆல்பர்ட்** A/C
**கமலா** A/C
} 3 காட்சிகள்

**சக்தி அபிராமி** A/C
4 காட்சிகள்
(மற்றும் தமிழகமெங்கும்)



**லியோ இண்டர்நேஷனல்**

# இதய கீதம்

**R.S. பாபு** D.F.T.,

**ஹம்சலேகா**

பாடல்கள் - வசனம்
**கவியரசு வைரமுத்து**

**J.V. ருக்மாங்கதன்**

S. David

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்

# காதலே மேல் ஆணை காதலே மேல்

## 41

மரியம் எப்படிப்பட்ட மன வேதனையில் இருக்கிறாள் என்பது ஜார்ஜுக்குப் புரிந்தது. தன் மகனுக்கு நன்மை செய்வதாக நினைத்துக் கொண்டுதான் மரியம் எல்லாம் செய்திருக்கிறாள். ஆனால் அவனுடைய வாழ்க்கையில் எத்தனை விபரீதமாக விளையாடி விட்டாள்!

''அனாவசியமாய் மனசை அலட்டிக் கொள்ளாதே, மரியம். மைக்கேல்; நான்ஸி இருவருக்கும் வாழ்க்கை வெவ்வேறு விதமாக அமைந்தாயிற்று. இப்போது அனேகமாய் ஒருவரையொருவர் பிடிக்காமல் கூடப் போயிருக்கும்,'' என்றார்.

மரியம் ஒரு பெருமூச்சுடன் படுக்கையில் சாய்ந்து கொண்டாள். ''எனக்கும் அது புரிகிறது. மைக்கேல் தன் வேலையிலேயே மூழ்கிவிட்டான். அவனிடம் அன்பு இல்லை. காதல் இல்லை. மென்மை இல்லை. எதற்கும் நேரம் இல்லை. எதுவும் கிடையாது. ஆனால் அந்தப் பெண்...''

அன்று மாலை மேரியைச் சந்தித்துப் பேசியதெல்லாம் அவளுக்கு நினைவு வர, அந்த நினைவு அவளைச் சித்திரவதை செய்தது. ''அந்தப் பெண் செதுக்கியெடுத்த சிற்பம் போல் என்ன அழகாக இருக்கிறாள்! என்ன ஒயில்! என்ன லாவண்யம்! ஆனால் அவள் உள்ளம் பூரா கசப்பு, கோபம், வெறுப்பு! மைக்கேலும் அவளும் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் எத்தனை அற்புதமான தம்பதியாக ஆகியிருப்பார்கள் தெரியுமா?''

''அதை நீ கெடுத்து விட்டதாக நினைக்கிறாயா, மரியம்?''

''இல்லையா பின்னே? நடந்ததெல்லாம்தான் உங்களுக்கு இப்போது தெரிந்துவிட்டதே! நீங்களே சொல்லுங்கள்.'' கண்ணீர் விடக் கூடாதென்று அவள் என்ன போராடிய போதிலும், அவளையும் மீறிக் கண்கள் தளும்பிக் கொண்டிருந்தன. ''அவர்கள் இருவருக்கும் குறுக்கே நான் நின்றது ரொம்பத் தப்பு, ஜார்ஜ். இப்போதுதான் அது எனக்குப் புரிகிறது.''

''மரியம், எதுவும் கெட்டுவிடவில்லை. சரிபண்ணி விடலாம். ஆனால் ஒன்றை ஞாபகம் வைத்துக்கொள். அந்தப்

மூலம்: டேனியல் ஸ்டீல்

பெண்ணுக்கு நீ வாழ்வு கொடுத்திருக்கிறாய். முன்னைக் காட்டிலும் சிறப்பான வாழ்வு என்றுகூடச் சொல்லுவேன்!''

''ஆனால் அவள் அந்த வாழ்க்கைக்காக என்னிடம் நன்றி காட்டத் தயாராயில்லையே! என்னை வெறுக்கிறாளே?''

''வெறுத்தால் அவள் ஒரு முட்டாள்!''

மரியம் தலையை அசைத்தாள். ''இல்லை. அவள் என்னை வெறுப்பது நியாயம்தான். அவள் வாழ்க்கையில் குறுக்கிட்டு அவள் காதலைத் தடுக்க எனக்கு என்ன உரிமை? நான் ஒரு கோழை. எனக்கு மட்டும் முதுகெலும்பு இருந்தால் மைக்கேலிடம் எல்லாவற்றையும் ஒப்புக் கொள்வேன்!''

'வேண்டாம், மைக்கேலிடம் ஒப்புக் கொள்ளாதிருப்பதே நல்லது' என்று ஜார்ஜ் எண்ணிக் கொண்டார். மைக்கேலுக்குக் கடும் சினம் உண்டாகும். அந்தச் சினம் இவளைச் சுட்டெரித்து விடும். அம்மாவிடம் பிறகு என்றென்றும் பாசம் ஏற்படாமலே போய்விடும்.

''மைக்கேலிடம் எதுவும் சொல்லாதே, மரியம். இனிமேல் சொல்வதில் எந்த அர்த்தமும் இல்லை.''

அவர் கண்களில் தெரிந்த அச்சத்தை மரியம் கவனித்தாள். புன்னகை செய்தாள்.

''கவலைப் படாதீர்கள். சொல்ல மாட்டேன். அந்த அளவுக்கு எனக்குத் தில் கிடையாது. ஆனால் அவனே கண்டு கொள்வான். கொஞ்ச நாள் போகட்டும். அவன் தெரிந்து கொள்கிற மாதிரி செய்யப் போகிறேன். எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள அவனுக்கு உரிமை உண்டு. அவள் அவனை ஏற்றுக்கொண்டு, நடந்ததையெல்லாம் அவள் வாயாலேயே அவனுக்குச் சொல்லட்டும். அப்போது ஒருவேளை மைக்கேல் என்னை மன்னிக்கக் கூடும்.''



''அதற்கு வாய்ப்பு இருக்கிற தென்றா நினைக்கிறாய்? அவள் அவனைத் திரும்ப ஏற்றுக் கொள் வாளா?''

''அவள் என்ன பண்ணுவாளோ தெரியாது. ஆனால் என்னால் இயன்றதைச் செய்யப் போகிறேன்.''

''மரியம், நீ....''

''நான்தான் இதை ஆரம்பித்து வைத்தேன். நான்தான் இதை முடிக்க வேண்டும். என் முயற்சி பலிக்காமல் போகலாம். ஆனால் முயற்சி செய்யத்தான் போகிறேன்.''

''இத்தனை காலமும் அந்தப் பெண்ணைக் கவனித்துக் கொண்டு வந்தாயா?''

''இல்லை. இன்றைக்குத் தான் முதல் தடவையாக அவளைப் பார்த்தேன்.''

''எப்படி நேர்ந்தது அது?''

''அவளைச் சந்திக்க வேண்டு மென்று சொல்லியிருந்தேன். அந்தப் பெண்தானா இவள் என்று நிச்சய மாகத் தெரியவில்லை. ஆனால் சந்தேகம் இருந்தது. என் சந்தேகம் சரிதான்.'' தன் ஊகம் பலித்ததைப் பற்றி மரியமுக்குச் சந்தோஷம் ஏற் பட்டது. கடந்த அரை மணி நேரத்தில் முதல் தடவையாக அவள் புன்னகை செய்தாள்.

''வேதனையான சந்திப்பு தான்,'' என்றார் ஜார்ஜ். மரிய முக்கு ஏன் மாரடைப்பு ஏற்பட்டது என்று அவருக்கு இப்போது புரிந் தது. நல்லவேளை, உயிர் தப்பினாளே, அதுவே பெரிது.

''அந்தச் சந்திப்பு எவ்வளவோ மோசமாக போயிருக்க வேண்டியது. தப்பினேன்.....'' மரியமின் குரல் மிருதுவாக ஒலித்தது. கண்களில் மீண்டும் கண்ணீர் தளும்பி நின்றது. ''நான் எவ்வளவு பெரிய தப்புப் பண்ணி விட்டேன் என்பதை அந்தச் சந்திப்பு எனக்குப் புரிய வைத்தது. அவள் வாழ்க்கையையும் அவன் வாழ்க்கையையும் பாழடித்து விட் டேன் என்பதை உணர வைத்தது.''

''மடத்தனமாகப் பேசாதே, மரியம். நீ யாருடைய வாழ்க்கையை யும் பாழடிக்கவில்லை. எந்த மனிதனுக்கும் கிடைக்காத மகத் தான தொழில் தலைமையை மைக்கேலுக்குக் கொடுத் திருக்கிறாய்! அந்தப் பெண்ணுக்கும், எவளுக்கும் கிடைக்காத வாழ்க் கையைத் தந்திருக்கிறாய்!''

''என்ன வாழ்க்கை தந்தேன்! விரக்தி வாழ்க்கை! இதயம் தூளா கும் வாழ்க்கை! கசப்பு வாழ்க்கை!''

''அப்படி அவள் நினைத்தால் சுத்த நன்றி கெட்டவள். அந்தப் பெண். புத்தம் புது முகம் ஏற்படுத் தித் தந்திருக்கிறாயே, அது? புத்தம் புது வாழ்க்கை தந்திருக்கிறாயே, அது? புத்தம் புது உலகம் ஏற்படுத் திக் கொடுத்திருக்கிறாயே, அது?''

இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆறு



மரியம் மெதுவே முனகி னாள்: ''சுத்த சூனியமான உலகத்தில் இருக்கிறாள் அவள்! புகைப்பட வேலை என்று ஒன்று இருக்கிறதோ, உயிர் வாழ்கிறாளோ! அந்த வகையில் அவளும் மைக்கேலும் ஒன்று.''

''அப்படியானால் இருவரும் சேர்ந்து தங்களுக்கென்று ஒரு வாழ்க்கையை ஏற்படுத்திக் கொள்வார்கள். கவலையை விடு. நடந்தது நடந்தாயிற்று. உனக்கு நீயே எத்தனை காலத்துக்குத் தண்டனை கொடுத்துக் கொண்டிருப்பாய்? அந்தச் சமயத்தில் உனக்குச் சரியென்று தோன்றியதைத்தான் நீ செய்திருக்கிறாய். அவர்களுக்கு இளமை இருக்கிறது. வாழ வேண்டிய காலம் இன்னும் எவ்வளவோ இருக்கிறது. அதை அவர்கள் வீணாக்கினால் அது அவர்கள் பாடு. அவர்களுக்காக நாம் நம் வாழ்க்கையை வீணடித்துக் கொள்ளக் கூடாது,'' என்று சொல்லி முடித்தார் ஜார்ஜ். 'நமக்கு அதிக காலம் இல்லை' என்று சொல்ல நினைத்தார். சொல்லவில்லை. வாஞ்சையுடன் அவளை நோக்கிக் குனிந்தார். மரியம் தன் இரு கைகளையும் அவர் கழுத்தைச் சுற்றி இறுக்கி அணைத்துக் கொண்டாள். அவளுடைய தேகத்தின் கதகதப்பை ஜார்ஜினால் உணர முடிந்தது. ''ஐ லவ் யூ, டார்லிங்,'' என்றார். ''என்னிடம் சொல்லாமல் எவ்வளவு துன்பத்தை நீ தனியாகத் தாங்கிக் கொண்டு இருந்திருக்கிறாய்! இரண்டு வருஷத்துக்கு முன்பே என்னிடம் நீ சொல்லியிருக்க வேண்டாமா?''

அவர் தோளில் முகம் புதைத்து விம்மினாள் மரியம். ''சொல்லியிருந்தால் என்னை நீங்கள் வெறுத்திருப்பீர்கள்.''

''ஒரு நாளுமில்லை. அன்றைக்கும் வெறுத்திருக்க மாட்டேன். இன்றைக்கும் வெறுக்க மாட்டேன். உன்மேல் பிரியம் காட்டுவதைத் தவிர வேறு எதுவும் எனக்கு தெரியாது. இப்போது நீ இவ்வளவும் சொன்ன பிறகு உன்மீது எனக்கு மதிப்பு அதிகரித்திருக்கிறதே தவிர, குறையவில்லை. மைக்கேல்—நான்ஸி விஷயத்தை நீ என்னிடம் சொல்லியிருக்க வேண்டாமே! மறைத்திருக்கலாமே!''

''என்னால் மறைக்க முடியவில்லை. அத்தோடு நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினேன்.''

ஜார்ஜ் மெல்லச் சொன்னார்: ''எல்லோருக்குமே வேதனை தருவதாக இது அமைந்துவிட்டது. பரவாயில்லை. இந்த விஷயத்தில் உன்னால் செய்யக் கூடியதைச் செய். மற்றதை விட்டு விடு. உன் எண்ணங்களிலிருந்து, உன் உள்ளத்திலிருந்து, உன் மனச்சாட்சியிலிருந்து இந்த நிகழ்ச்சிகளை உதறித் தள்ளு. எல்லாம் முடிந்து போன

...த்தியாசங்கள் உள்ளன. விடை: 66'ம் பக்கம்.



**ஆறு வித்தியாசங்கள் விடை:**

1. விருது
2. மைக்
3. குழந்தை
4. டை
5. பின்னல்
6. பந்தல் கால்



விஷயம். நாம் நமது புது வாழ்க்கையை ஆரம்பித்தாக வேண்டும். நம் வாழ்க்கையை நாம் வாழ நமக்கு உரிமை உண்டு. வேண்டிய வரையில் நீ கஷ்டப்பட்டாயிற்று. இனிமேலும் உனக்குத் தண்டனை கொடுத்துக் கொள்ளத் தேவையில்லை. நாம் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறோம். பழைய வாழ்க்கையை உதறிவிடப் போகிறோம். நமக்கென்று ஒரு வாழ்க்கை அமைத்துக் கொண்டு வாழப் போகிறோம். அவர்களுடைய வாழ்க்கையை அவர்கள் தீர்மானித்துக் கொள்ளட்டும்.''

''புதிய வாழ்க்கை வாழ எனக்குத் தகுதியுண்டா, ஜார்ஜ்?''

அவள் ஏறிட்டு நோக்கிய போது அந்த முகத்தில் இளமையைக் கண்டார் ஜார்ஜ்.

''நிச்சயமாய், டார்லிங்,'' என்று சொல்லி அவளை மென்மையுடன் முத்தமிட்டார். உலகமே மறந்தது அவருக்கு. மைக்கேலும் அந்தப் பெண்ணும் எக்கேடோ கெடட்டும்! மரியம் ஒருத்தி இருந்தால் போதும். நல்ல சுபாவம், கெட்ட சுபாவம், மேதைத்தனம், முரட்டுத்தனம் எல்லாம் கலந்த மரியம்—அவள் ஒருத்தி போதும் உலகத்தில்.

''மரியம், இப்போது எல்லாவற்றையும் மறந்துவிட்டுத் தூங்கு. நாளையிலிருந்து நாம் நமது கல்யாணத்தைப் பற்றித் திட்டமிட வேண்டும். என்ன டிரெஸ் தைத்துக் கொள்ளலாம், எங்கே பூ வாங்கலாம் என்பது போன்ற உபயோகமான விஷயங்களில் மூளையைச் செலுத்து. என்ன, புரிகிறதா?''

அவள் அவரை நிமிர்ந்து நோக்கிச் சிரித்தாள். ''ஜார்ஜ், ஐ லவ் யூ,'' என்றாள்.

''நீ காதலித்தாலும் சரி, காதலிக்காவிட்டாலும் சரி. எப்படியும் உன்னை நான் கல்யாணம் செய்து கொள்ளத்தான் போகிறேன். என்ன, புரிகிறதா?'' என்றார் மறுபடியும்.

''புரிகிறது சார்,'' என்றாள் மரியம்.

மைக்கேலைக் கூப்பிட்டுப் பேசினால் என்ன என்று திடீரென ஓர் எண்ணம் அவளுக்குத் தோன்றியது.

(தொடரும்)




**பி**றக்க போகும் குழந்தை ஆணா, பெண்ணா என்று அறிய ஓர் எளிய பரிசோதனை சொல்கிறார்கள். பிரசவத்திற்குச் சில நாட்கள் முன்னர் பெண்ணின் மார்பகங்களிலிருந்து மஞ்சள் நிறமான நீர் வெளிவரும். இதைத் தண்ணீரில் விட்டால் திரவம் மிதக்குமாயின் ஆண் குழந்தை என்றும், உள்ளே அமுந்திவிடுமாயின் பெண் குழந்தை என்றும் நிச்சயமாகச் சொல்லலாம்.

—ராபுரி ராமநாதன்,
ஆதாரம்: வீட்டுக்குறிப்புகள்.

*பிறக்கப் போவது ஆணா பெண்ணா என்ற சஸ்பென்ஸ் இருந்தால்தான் சுவாரசியமாய் இருக்கும். இதில் கூறப்பட்டுள்ள தகவல் எவ்வளவு தூரம் உண்மை என்று தெரியவில்லை. என் அக்காவுக்கு ஸ்கேன் பண்ணிப் பார்த்த பிறகும், அக்காவிடம் என்ன குழந்தை என்று சொல்லவில்லை. இத்தனைக்கும் அவளே ஒரு டாக்டர்! ஆனால் ஸ்கேன் பண்ணின பிறகு ரிப்போர்ட் சொல்லாததனால் பெண் குழந்தைதான் என்று தெரிந்து கொண்டு விட்டாளாம்!*

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்

42

மரியமும் ஜார்ஜும் ஒருவரையொருவர் விழுங்குகிற மாதிரி பார்த்துக் கொண்டிருந்த போது நர்ஸ் எட்டிப் பார்த்தாள்.

''நீங்கள் டாக்டரிடம் ஸ்பெஷல் பர்மிஷன் வாங்கியிருக்கிறீர்கள், சார். இருந்தாலும் நள்ளிர்வு தாண்டி விட்டது. மணி ஒன்றாகப் போகிறது. தயவு செய்து புறப்படுங்கள்,'' என்றாள்.

புரிகிறது என்கிற மாதிரி ஜார்ஜ் தலையசைத்துவிட்டு, மரியமை மென்மையாக முத்தமிட்டார். மெல்ல அவள் கைகளைப் பரிவோடு குலுக்கினார். உலகத்தில் எதுவும் நம் சந்தோஷத்தைக் கெடுக்க முடியாது என்பதுபோல் ஒரு புன்னகை செய்தார். அரை மனதாக அறையை விட்டு வெளியேறினார்.

மரியம் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டாள். மனத்திலிருந்த பெரும் பாரம் இறங்கின மாதிரி இருந்தது. 'ஜார்ஜுக்கு நம்மீது எத்தனை காதல்!' என்று எண்ணிக் கொண்டாள். அவள் மீது அவளுக்கே நம்பிக்கை திரும்புகிற மாதிரி ஜார்ஜ் பண்ணிவிட்டாரே!

கடியாரத்தைப் பார்த்தாள்.

மணி இரண்டை நெருங்கிக் கொண்டிருந்தது.

மைக்கேலைக் கூப்பிட்டுப் பேசினால் என்ன என்ற எண்ணம் அப்போதுதான் ஏற்பட்டது அவளுக்கு. கோணலாகப் போனதையெல்லாம் உடனே நேர்ப்படுத்த வேண்டும் என்று அவள் மனம் துடித்தது. மணி என்ன ஆனால் என்ன? ஒரு நிமிஷம்கூட இனி வீணாக்கக் கூடாது.

அரை மங்கலான அறையில் டெலிபோனைத் தேடிப் பிடித்து, மைக்கேலின் நியூயார்க் ஜாகைக்கு டயல் செய்தாள்.

மூலம்: டேனியல் ஸ்டீல்

மைக்கேல் நல்ல தூக்கத்தில் இருந்தான். ஐந்தாறு முறை மணியடித்த பிறகுதான் விழிப்பு ஏற்பட்டது. தூக்கக் கலக்கமான குரலில் 'ஹலோ' என்றான்.

''மைக் டார்லிங், நான் தான்!''

''யார்? அம்மாவா? உடம்பு ஒன்றுமில்லையே?'' திடுக்கிட்டவனாக விளக்கைப் போட்டு, தூக்கத்தை விரட்டியடித்து எழுந்து உட்கார்ந்தான் மைக்கேல்.

''நான் நன்றாக இருக்கிறேன், மைக். உனக்கு ஒரு விஷயம் சொல்ல வேண்டும். அதற்குத்தான் கூப்பிட்டேன்.''

''தெரியும், தெரியும். ஜார்ஜ் சொன்னார்,'' என்று போனைப் புன்சிரிப்புடன் நோக்கியவாறு சொன்னான் அவன். கொட்டாவி விட்ட வண்ணம் கடியாரத்தைப் பார்த்தவன் திடுக்கிட்டான். கடவுளே! இங்கே நியூயார்க்கில் காலை ஐந்து மணி ஆகிறது. அப்படியானால் சான்பிரான்ஸிஸ்கோவில் இரவு இரண்டு மணி! இந்த நேரத்தில் எதற்கு விழித்துக் கொண்டிருக்கிறாள் அம்மா? நர்ஸ் எங்கே போனாள் அம்மாவைக் கவனிக்காமல்?

குழப்பத்தை அடக்கிக் கொண்டு, ''ஜார்ஜ் சொன்னார் அம்மா, உங்களைக் கேட்கப் போவதாக. கேட்டாரா? நீங்கள் ஒப்புக் கொண்டீர்களா?'' என்றான்.

''ஓ, எஸ். அவர் இரண்டு விஷயம் சொன்னார். இரண்டையும் ஏற்றுக் கொண்டேன். கல்யாணம் ஆனதும் ரிடையராகப் போகிறேன்—அனேகமாய்!''

'அனேகமாய்' என்ற அந்தக் கடைசி வார்த்தையைக் கேட்டதும் மைக்கேல் சிரித்தான். அம்மா அம்மாதான். அவளை யாரும் அவ்வளவு சுலபமாய் மாற்றிவிட முடியாது. பாவம், ஜார்ஜ். அம்மா



வுடன் நிறையப் போராட வேண்டியிருக்கும்! எனினும், இருவரையும் பற்றிச் சந்தோஷமாகவே இருந்தது அவனுக்கு.

''மைக், நான் இப்போது உன்னைக் கூப்பிட்டது வேறொரு விஷயத்துக்காக,.''

அம்மாவின் குரல் கண்டிப்பும் கறாருமாக இருந்தது. அந்தத் தொனி அவனுக்குப் பிடிப்பதில்லை. ''சொல்லுங்கள்,'' என்றான் முனகலாக.

''மைக், அந்தப் பெண்...''

''எந்தப் பெண்?'' அவன் உள்ளம் களைத்திருந்தது. அன்று பூரா அவனுக்கு ஏகப்பட்ட வேலைகள். மூன்று மீட்டிங்குகள், ஐந்து பேருடன் சந்திப்பு—பிறகு அம்மா தன்னந்தனியே சான்பிரான்ஸிஸ்கோவில் உடம்பு சரியில்லாமல்



போனது —இப்படி ஏராளமான பிரசினைகள்.

''அந்தப் புகைப்படக்காரப் பெண்ணைச் சொல்கிறேன், மைக். கண்ணைத் துடைத்துக் கொண்டு கவனமாய்க் கேள்.''

''ஓ, அவளா! என்ன அவளுக்கு?''

''அவளுடைய புகைப்படங்களை நம் மருத்துவ மனையில் கட்டாயம் வைக்க வேண்டும்.''

''சரி.''

''அவளை என்னால் சரிக் கட்ட முடியவில்லை. இந்த விஷயத்தில் நான் ரொம்ப மெனக்கெட்டேனானால் ஜார்ஜுக்குக் கோபம் வரும். ஆகையால் நீதான் இதைக் கவனிக்க வேண்டும்,'' என்றாள் மரியம்.

''என்னம்மா, விளையாடுகிறீர்களா? எனக்கு நிறைய வேலை இருக்கிறது. இந்த வேலையைப் பென் கவனிக்கட்டும்.''

''ஏற்கனவே அவன் சொல்லி அவள் கேட்கவில்லை. திறமை, புத்திசாலித்தனம், மன உறுதி எல்லாம் உள்ள பெண் அவள். நம் நிறுவனத்தின் பெரிய தலைகள் பேசினால்தான் மதிப்பாள். குட்டி ஆட்களுடன் அவள் பேசத் தயாராயில்லை.''

''போங்கம்மா. அந்தப் பெண் பெரிய பிடிவாதக்காரியாக இருப்பாள் போலத் தோன்றுகிறது.''

''நீதான் இப்போது பிடிவாதம் பிடிக்கிறாய். நான் சொல்வதைக் கவனமாகக் கேள். அவள் நமக்காகப் புகைப்படங்கள் எடுத்துத் தர வேண்டும். நீ என்ன செய்வாயோ எனக்குத் தெரியாது. அவளைப் பார்ப்பதற்காகப் பறந்து வந்தாலும் சரி. தாஜா பண்ணினாலும் சரி. கெஞ்சினாலும் சரி. அவளை டின்னருக்கு அழைத்துச் சென்றாலும் சரி. எதிராளியை மயக்கும் சக்தி உனக்கு உண்டு. அதை இப்போது காட்டு. அவளுக்காக என்ன செய்தாலும் தகும். அவளுடைய புகைப்படங்கள் நம் மருத்துவமனையை அலங்கரிக்க வேண்டும். எனக்காக இதைச் செய். எனக்காக.....'' மரியம் கெஞ்சவே ஆரம்பித்து விட்டாள். இந்த மாதிரி யாரிடமும் எதற்காகவும் நாம் மன்றாடியதில்லை என்று நினைக்கையில் அவள் உதட்டில் புன்னகை பரவியது.

''சரிம்மா, சரி.''

''நிச்சயம்தானே?''

''நிச்சயம், நிச்சயம், நிச்சயம். போதுமா? இனிமேல் நான் தூங்கப் போகலாம், இல்லையா?''

''சரி, இந்த வேலையில் உடனே இறங்குவாய், இல்லையா?''

''அந்தப் பெண்ணோட பெயர் என்ன சொன்னீர்கள்?''

''மேரி.''

''நல்லது. நாளைக்கே கவனிக்கிறேன்.''

''தாங்க்ஸ், மைக்.''

''குட்நைட் அம்மா! நீங்கள் சரியான பைத்தியம்! பார்த்தீர்களா? மறந்து விட்டேன். திருமண வாழ்த்துக்கள்!''

''தாங்க்யூ!''

''கல்யாண ஏற்பாடெல்லாம் நான்தான் செய்யப் போகிறேன். என்ன?''

''எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? குட் நைட்!''

'நாம் செய்யக் கூடிய அனைத்தையும் செய்து விட்டோம்' என்று நினைத்துக் கொண்டாள் மரியம்.

ஒரு சின்னப் பெருமூச்சுடன் தூங்கிப் போனாள்.

மிருதுவான இசை மெல்லத் தவழ்ந்து கொண்டிருந்தது.

## மறைக்காதே!



**வீ**ட்டுக்கு ஒரு மரம்
வளருங்கள்.
வேண்டாமென்று சொல்லவில்லை
சன்னலை மட்டும் மறைக்காதீர்!

—ஆர். ரத்தினசாமி

**எனது சின்னத் திருத்தம். 'தெருவைப் பார்த்த சன்னலை மட்டும்.'**

மரியமின் இல்லத்தில், ஜார்ஜ்–மரியம் திருமணம் சுருக்கமாயும் சிறப்பாயும் நடைபெற்றது.

பிப்ரவரி மாதத்தின் கடைசி நாள். . நியூயார்க் நகரின் குளிர் அற்புதமாக நகரெங்கும் பரவியிருக்க, பக்கத்துப் பெரிய அறையில் பஃபே விருந்துக்கு ஏற்பாடாகியிருந்தது. எங்கு திரும்பினாலும் பூக்களின் குவியல். டைம்ஸ் பத்திரிகையிலிருந்து வந்திருந்த புகைப்படக்காரர், மரியமைப் படமெடுக்க விரும்பினார். இந்தப்புறம் கணவனும், அந்தப் பக்கம் மகனுமாக மரியம் நடுவில் நின்று படமெடுத்துக் கொண்டாள்.

''மிஸஸ் ஜார்ஜ், வாழ்த்துக்கள்!''

—கூறிச் சிரித்தான் மைக்கேல்.

மிஸஸ் ஜார்ஜ்! அந்தப் புதுப் பெயரைக் கேட்டு மரியம் சின்னப் பெண் போல் நாணிச் சிரித்தாள்.

அம்மாவை ஏறிட்டு நோக்கினான் மைக்கேல். நோயின் கொடுமைகள் முற்றிலுமாக நீங்கி, அழகும் ஆரோக்கியமும் பெற்றிருந்த தாயைப் பார்க்க அவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. ஜார்ஜ், மரியம் இரண்டு பேருமே பதவியிலிருந்து ஓய்வு பெற்று, இரண்டு மாத காலம் ஐரோப்பாவுக்குச் சென்று ஓய்வெடுக்கப் போகிறார்கள்.

இப்போது அவன் கார்ட்டர்–ஹிலியர்டு நிறுவனத்தின் பிரசிடெண்ட்.

பிரசிடெண்ட்.... இந்தச் சின்ன வயதில்! நினைத்துப் பார்க்கையில் பெருமையாகத்தான் இருக்கிறது..... டைம் பத்திரிகையின் அட்டையில் அவன் புகைப்படம் பிரசுரமாகியிருந்தது. அதுவும் பெருமைக்குரிய விஷயம்தான்.

விருந்துக் கூடத்துக்கு எல்லோரும் சென்று கொண்டிருந்த

போது, ''நீ இன்றைக்கு ரொம்ப அழகாயிருக்கிறாய், மைக்,'' என்றாள் மரியம்.

மேஜைகளெங்கும் பூக்களும் உணவுப் பதார்த்தங்களும் நிறைந்திருந்தன. ஏராளமான சிப்பந்திகள் கை கட்டிக் காத்து நின்றார்கள்.

வந்திருந்தவர்களிடம் மரியம் இரண்டு வார்த்தை உபசாரமாய்ப் பேசுவதையும், வேலையாட்களுக்கு உத்தரவு இடுவதையும் கண்ட போது, 'அம்மா எவ்வளவு இளமையாக மாறிவிட்டாள்!' என்று மைக்கேலுக்குத் தோன்றியது. சிறுமி மாதிரி என்ன குதூகலம்! எத்தனை சுறுசுறுப்பு! இன்று அம்மா கல்யாணப் பெண்! அதை நினைக்கையில் அவன் உள்ளம் மலர்ந்தது.

''இன்றைக்கு ரொம்பத்தான் ஆனந்தத்தில் முழுகியிருக்கிறீர்கள், மிஸ்டர் மைக்கேல்!''

குரல் பழக்கமாயும் மிருதுவாகவும் இருந்தது.

திரும்பிப் பார்த்தான்.

வெண்டிதான் நின்றிருந்தாள் வெகு அருகே.

முன்பெல்லாம் அவளைப் பார்க்க அவனுக்குச் சங்கடமாக இருப்பதுண்டு. அவளும் பென்னும் மணந்து கொள்வதென்று முடிவான பின் அவனுடைய சங்கடம் அகன்று விட்டது. வருகிற வசந்தத்தில் அவர்கள் திருமணம் நடக்கவிருந்தது. மாப்பிள்ளைத் தோழன் மைக்கேல்தான். நிச்சயதார்த்தத்தின் போது பென் அணிவித்த மோதிரம் அவள் விரல்களில் பளபளத்தது.

''அம்மா ரொம்ப அழகாயிருக்கிறார், இல்லை?'' என்றான்.

வெண்டி தலையை அசைத்து, புன்னகை செய்தாள். இவன்கூட இன்று மகிழ்ச்சியாக இருக்கிறானே என்று அவளுக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. இவனைப் புரிந்து கொள்ள முடியவில்லையே என்று ஒருகாலத்தில் அவள் எண்ணியதுண்டு. பென்னை மணந்து கொள்வது என்று முடிவான பின் இவனைப் பற்றிக் கவலைப் படுவதை விட்டு விட்டாள்.

''என்னப்பா பென், என் காதலியை நீ அடித்துக் கொண்டு போகப் பார்க்கிறாயா?''

கையில் ஷாம்பேயின் கிளாஸ்களுடன் வந்தான் பென்.

மூன்று பேரும் ஒருவருக்கொருவர் பார்த்துச் 'சியர்ஸ்' சொல்லிக் கொண்டு, பானம் அருந்துகையில்—

அடுத்த வாரம் சான்பிரான்ஸிஸ்கோவுக்குச் செல்வது குறித்து மைக்கேலின் சிந்தனை ஓடியது. அம்மா சொன்ன அந்தப் புகைப் படக்காரி... அவள் எப்படி இருப்பாள்?

(தொடரும்)






இந்தியாவிலேயே உள்ள நான்கு அல்லது ஐந்து அற்புத நடிகர்களுள் ஒருவர் மம்முட்டி. அவருடைய படங்களில் மிகவும் பிடித்தவை: யாத்ரா, நியூடெல்லி, ஒரு வடக்கன் வீரகதா. விதவிதமான கேரக்டர்கள் செய்தாலும், அடக்கமான நடிப்பு. அவரோடு நேரிடையாக ஒரே ஒரு வார்த்தைதான் பேசியிருக்கிறேன்.

''ஹலோ!''

# தல் மேல் ஆணை தமிழில்: ரா.கி.ரங்கராஜன்



மூலம்: டேனியல் ஸ்டீல்

## 43

மைக்கேலின் மனம், சான் பிரான்ஸிஸ்கோவில் சந்திக்கப் போகும் பெண்ணைப் பற்றி ஒரு கணம் நினைத்தது. அடுத்த வினாடி பெண்ணின் குரல் அவன் சிந்தனையைக் கலைத்தது.

''மைக், உன் அம்மா இன்று எவ்வளவு அழகாக இருக்கிறார், தெரியுமா?'' என்றான் அவன்.

''அடப் பாவமே! டூ லேட்டுடா தம்பி! இன்று காலை அவருக்குத் திருமணம் ஆகிவிட்டதே!'' என்றான் மைக்கேல் கிண்டலான குரலில்.

''அடாடா!'' என்று விரலைச் சொடுக்கி, ஏமாந்தவன்

போல் பென் நடிக்க, வெண்டியும் மைக்கேலும் கடகடவென்று சிரித்தார்கள்.

சாப்பாட்டுக் கூடத்தில் ஓங்கி ஒலித்தது இசை. ''ஓ! எனக்கு வேலை இருக்கிறதப்பா!'' என்று மைக்கேல் ஓடி மறைந்தான்.

அவன் சென்ற திசையையே பார்த்தபடி வெண்டி, ''இன்று மைக்கேல் ரொம்பச் சந்தோஷமாயிருக்கிறார்,'' என்றாள்.

''ஆமாம், முதல் தடவையாக,'' பென் ஷாம்பேயினை உறிஞ்சியபடி மெதுவாகச் சொன்னான். பிறகு தன் காதலியை நோக்கி, ''நீ கூட இன்று ரொம்பச் சந்தோஷமாயிருக்கிறாய்,'' என்றான்.

''அதற்குக் காரணம் நீ,'' என்றவள், ''அதிருக்கட்டும். அந்த சான்பிரான்ஸிஸ்கோ புகைப்படக்காரி அவள் விஷயத்தில் மேற்கொண்டு என்ன செய்திருக்கிறாய்? கேட்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டேயிருக்கிறேன். மறந்து மறந்து போகிறது,'' என்றாள்.

''அவள் விஷயத்தை மைக்கேல் பார்த்துக் கொள்வதாகச் சொல்லிவிட்டான்.''

''மைக்கா! அவருக்கு அதற்கெல்லாம் நேரம் இருக்கிறதா என்ன?''

''நேரம் இல்லைதான். ஆனால் எப்படியோ சமாளித்துக் கொள்வான். புகைப்படக்காரி வேலை மட்டுமில்லை. இன்னும் ஆயிரம் வேலைகள் இருந்தாலும் எப்படியோ சமாளிப்பான். மைக்கைப் பற்றி உனக்குத் தெரியாதா?''

'தெரியாது' என்று சொல்ல நினைத்தாள் அவள். சொல்லவில்லை. 'மைக்கின் உண்மையான சுபாவம் நமக்குத் தெரியாது. நமக்கென்ன, யாருக்குமே தெரியாது,' என்று எண்ணிக் கொண்டாள். ஒருவேளை பென்னுக்குத் தெரிந்திருக்கலாம். அதுகூடச் சந்தேகம்தான். முன்னொரு காலத்தில் மைக்கை உள்ளும் புறமுமாகப் பென் அறிந்து வைத்திருந்தான். இப்போது எப்படியோ.....

பென் கிளாஸை வைத்துவிட்டு, ''நாம் டான்ஸ் ஆடலாமா?'' என்றான்.

''சந்தோஷமாய்,'' என்றாள் வெண்டி.

இசைக்கேற்ப அவர்கள் ஆடியது ஒரு நிமிடம்தான் இருக்கும். மைக்கேல் திரும்பி வந்துவிட்டான். ''நகரப்பா, இது என் முறை,'' என்றான்.

''பாழாய்ப் போச்சு! இப்பத்தான் நாங்கள் ஆட ஆரம்பித்தோம். நீ போய் உன் அம்மாவுடன் டான்ஸ் ஆட வேண்டியதுதானே?''

# பார்த்த தாசன்



அர்ச்சுனன் போருக்குப் போகிறான். சுபத்திரை அவனையே இமைக்காமல் பார்க்கிறாள்.

அவன் போன பிறகு சுபத்திரையைக் கேலி செய்கிறாள் தோழி:

''போருக்குச் சென்ற பார்த்தனை —நீ வைத்த கண் வாங்காமல் பார்த்தனை.''

கண்ணதாசன் சொல்லிச் சொல்லிச் சுவைத்த பாரதிதாசன்

''முயற்சி பண்ணினேன். என்னைத் தள்ளிவிட்டு ஜார்ஜைப் பிடித்துக் கொண்டு விட்டாள்!'' என்று சிரித்தான் மைக்கேல்.

''மூளையுள்ள பெண்பிள்ளை!''

மூவரும் மாறி மாறிக் கை கோத்துக் கொண்டு டான்ஸ் ஆடலானார்கள்.

பென்னும் மைக்கேலும் கேலியாகப் பேசிக் கொள்வதையும் சிரிப்பதையும் காணக் காண வெண்டிக்கு மனமெல்லாம் மகிழ்ச்சியால் நிரம்பியது. பல வருஷங்களுக்கு முன்பு அந்த நண்பர்கள் அரட்டையடித்துக் கூத்தடித்துக் குதூகலித்த அந்த நாட்கள் அவளுக்கு நினைவு வந்தது. இதுபோல எவ்வளவு சந்தர்ப்பங்களில் அவர்கள் திளைத்திருக்கிறார்கள்.

அப்படி அவள் நினைத்துக் கொண்ட சமயம், மெல்லிசைக் குழு ஒரு காதல் கீதத்தைப் பாடத் தொடங்கியது. பாவம், மைக்கேல். அந்தப் பாட்டு அவனைச் சங்கடப்படுத்துமோ என்னவோ.

''இதோ பாருங்கள், இரண்டு பேருக்கும் டான்ஸ் ஆடத் தெரியவில்லை. என் காலை மிதி மிதி என்று மிதித்து வலி உயிர் போகிறது. சாப்பாடு கூடத்துக்குப் போய்க் கல்யாணக் கேக் சாப்பிடலாமே!'' என்றாள்.

''ஓ!''

பென்னும் மைக்கேலும் ஆளுக்கு ஒரு பக்கம் அவள் கையைக் கோத்துக் கொண்டு நடந்தார்கள். அவள் முதுக்குக்குப் பின்னால் வேண்டுமென்றே மைக்கேல், ''இந்தப் பெண்ணுக்குக் கால் ஒரு நொண்டி! அவள் டான்ஸ் ஆடும்போது கவனித்தாயோ?'' என்று உரக்கவே கிசுகிசுத்தான்.

அவன் நண்பனும் சீண்டலாக, ''ஆமாம், ஆமாம்! சகிக்கலை!'' என்றான்.

வெண்டி அவர்கள் கைகளை உதறித் தள்ளி, ''இரண்டு பேரும் சரியான குடிகாரங்க!'' என்று திட்டினாள்.

''ஆ! நாங்களா குடிகாரங்க?'' என்று பென் சொல்ல, மைக் சிரித்தபடி, பணிப்பெண் கொண்டு வந்த தட்டிலிருந்து மூன்று கேக்குகளை எடுத்துக் கொண்டான். அவைகளைக் கீழே தவற விடுகிற மாதிரி நடித்து, தாவிப் பிடித்தான்.

மூவரும் சுவரில் சாய்ந்தபடி கூட்டத்தினரைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்—பணக்காரக் கிழவர்கள், பளபளப்பான உடை அணிந்த இளைஞர்கள், இளம் பெண்கள், அருவியெனப் பொழியும் முத்து மாலைகள், ஜொலிக்கும் வைரங்கள்—

''இவர்களை அப்படியே துப்பாக்கி முனையில் மடக்கி ஹாண்ட்ஸ் அப் சொன்னால் எப்படி இருக்கும்!'' என்றான் மைக்கேல்.

---

எத்தனை கலகம் குறைந்திருக்கும்!
எத்தனை கௌரவம்
உயர்ந்திருக்கும்!
இதுமட்டும்
சட்டசபை வாசலாயிருந்திருந்தால்.

—வைரமுத்து



அந்த ஐடியாவை நினைக்கும்போதே அவனுக்குக் குஷியாக இருந்தது.

அவன் இவ்வளவு உல்லாசமாக இருந்து வெண்டி பார்த்ததேயில்லை. பென் சொன்னது சரிதான். இவனுக்குள்ளே மனிதத்தனம் இருக்கிறது. தலை கிறுகிறுக்க அவன் பேசுவதையும் சிரிப்பதையும் பார்க்கையில், மூன்று நாலு வருடத்துக்கு முன் பார்த்த மைக்கேலை மீண்டும் இன்று சந்திக்கிற மாதிரி இருந்தது.

''உங்கள் இரண்டு பேராலும் கண்ணையே திறக்க முடியவில்லை! அத்தனை போதை!'' என்று திட்டிவிட்டு வெண்டி அடுத்த அறைக்குப் போய்விட்டாள்.

''பிரமாதமான பெண், மைக்!'' என்றான் பென். ''நாங்கள் இருவரும் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறோம் என்பதைச் சொன்னபோது நீ கோபப்படுவாய் என்று நினைத்தேன்.''

''நான் ஏன் கோபப்படுகிறேன்? அவள் உனக்காகவே பிறந்தவள். அத்தோடு.... எனக்கு இந்தக் காதல் கீதல் சமாசாரங்கள் எப்போதோ விட்டுப் போய் விட்டது! அதற்கெல்லாம் நேரம் கிடையாது!''

இந்த மாதிரி அவன் பலமுறை பேசிக் கேட்டிருக்கிறான் பென். ஆனால் முன்னெல்லாம் அப்படிப் பேசுகையில் ஒரு தீவிரமும் கடினமும் காணப்படும். இப்போது அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. கிளாஸை உயர்த்தி, 'சியர்ஸ்!' என்றான்.

விமானம் சான்பிரான்ஸிஸ்கோவில் மெல்ல மெல்லத் தரை இறங்கியது.

மைக்கேல் தன் ப்ரீஃப் கேஸைப் படக்கென்று மூடிக் கொண்டு இறங்கத் தயாரானான். இந்த வாரத்தில் தான் கவனிக்க வேண்டிய நூறாயிரம் வேலைகள் அவனுக்கு ஞாபகம் வந்தன. டாக்டர்களைப் பார்க்கவேண்டும். கட்டிடங்கள் எழும்பப் போகும் இடங்களைப் பார்வையிட வேண்டும். கட்டிடக் கலைஞர்களை ஒன்று திரட்ட வேண்டும். மீட்டிங்குகளில் கலந்து கொள்ள வேண்டும். ஜனங்கள், திட்டங்கள், கோரிக்கைகள், ஆலோசனைக் கூட்டங்கள்....

இவ்வளவுக்கு மேலே அந்தப் புகைப்படக்காரி வேறே!

எங்கேதான் நேரம் கிடைக்கப் போகிறதோ! எப்படியோ கிடைக்கும். இதுவரை கிடைத்துக் கொண்டுதான் இருக்கிறது. தூக்கத்தையோ சாப்பாட்டையோ ஏதாவதொன்றை விட்டுவிட வேண்டியதுதான்....

தலைக்கு மேலிருந்த தட்டில் மடித்து வைத்திருந்த மழைக் கோட்டை எடுத்துக் கொண்டான். தோள் மீது போட்டுக் கொண்டு மற்றப் பிரயாணிகளைத் தொடர்ந்து இறங்கினான். ஏர்ஹோஸ்டஸின் பார்வை தன் மீது




'கிஸ், முத்தம்' இரண்டில் எது சுவை அதிகம்?

நிச்சயம் முத்தத்தில்தான். 'கிஸ்' என்று சொல்லிப் பாருங்கள். உதடு ஒட்டாது.

'முத்தம்' என்று சொல்லிப் பாருங்கள். தொடங்கும் போதும் ஒட்டும்; முடியும் போதும் ஒட்டும்:

இப்போது சொல்லுங்கள். எது சுவை?''

உதடுகள் ஒட்டாத கிஸ்ஸா? உதடுகள் ஒட்டும் முத்தமா?

—வைரமுத்து

...லைத்திருப்பதைக் கவனித்தான். ...ல்லாப் பணிப் பெண்களும் தன்னை ...ப்படித்தான் கூர்ந்து கவனிக்கிறார் ...ள் என்று அவனுக்குத் தெரியும். ...தை அவன் பொருட்படுத்துவது ...ல்லையாது. அதற்கெல்லாம் ...நரமேது?

கைக்கடியாரத்தைப் பார்த் ...தான். மணி பிற்பகல் இரண்டு ...ருபது ஆகியிருந்தது. விமான ...லையத்துக்கு வெளியே கார் காத் ...க் கொண்டிருக்கும். நியூயார்க்கில் ...றப்படுமுன் ஒரு முழு நாள் ...வலையை அரை நாளில் முடித் ...ருந்தான். இப்போது இங்கேயும் ...ந்தாறு மணி நேரம் வேலையைக் ...வனிக்கலாம்.

நாளைக் காலை ஏழு ...ணிக்கே அலுவலகக் கூட்டம் இருக் ...றது. பரவாயில்லை. இப்படித் ...ான் அவன் வாழ்க்கை ஓடிக் ...காண்டிருக்கிறது. இந்த வாழ்க்கை ...வனுக்குப் பிடித்திருக்கிறது. ...வலை—அது ஒன்றுதான் முக்கியம். ...விர, நாலைந்து பேர்தான் அவன் ...ாழ்க்கையில் முக்கியமான நபர்கள். ...வர்களிலும் இரண்டு பேர்—அம்மா ...ம் ஜார்ஜும் —தேனிலவு கொண் ...ாட வெளியூர் சென்று ...ட்டார்கள். இன்னொரு முக்கிய ...ான நபர் பென். அவனை வெண்டி ...ார்த்துக் கொள்வாள்.

மொத்தத்தில் நமக்கு எந்தக் ...வலையும் இல்லை என்று நினைத் ...க் கொண்டான் மைக்கேல்.

உடனடி வேலை சான்பிரான் ...ஸ்கோ மருத்துவமனை விஷயங் ...ளைக் கவனிக்க வேண்டும். அதுவும் ...துவரையில் பிரமாதமாக உரு ...கிக் கொண்டிருக்கிறது. இது ...ன்னுடைய சாதனை என்று ...னைத்து முகத்தில் புன்னகையுடன் ...மான நிலையத்துக்கு வெளியே ...ந்தான்.

''மிஸ்டர் மைக்கேலா, ...ர்?'' என்றான் பணிவுடன் ...ரைவர். மைக்கேல் ஆமென்று

இலைபோட்டு நேரமாயிற்று
எப்போது பரிமாறுவீர்கள்?
இந்தியாவின் சுதந்திரம்.

தலையாட்டியதும், ''இதோ இந்தப் பக்கம் கார் இருக்கிறது, சார்,'' என்றான்.

காரில் ஏறி உட்கார்ந்து நிம்மதியாகச் சாய்ந்து கொண்டான் மைக்கேல். டிரைவர் லக்கேஜ்களை எடுத்து வந்து வைத்தான்.

சான்பிரான்ஸிஸ்கோ —இனிமையான சான்பிரான்ஸிஸ்கோ! நியூயார்க்கிலிருந்து அவன் புறப்பட்டபோது பனி உறைந்து, குளிர் எலும்பைத் துளைத்துக் கொண்டிருந்தது. மரங்கள் மொட்டையாக வெறுமையாக நின்றன. இன்னும் ஒரு மாதமாவது ஆகும் பச்சையைப் பார்ப்பதற்கு.

இங்கே சான்பிரான்ஸிஸ்கோவில் எந்தப் பக்கம் திரும்பினாலும் பச்சைப் பசேலென்று கண்ணுக்குக் குளிர்ச்சியாக இருக்கிறது.

ஆனால் அந்த இனிமையை மைக்கேலின் மனம் ரசிக்கவில்லை. அடுத்து ஆக வேண்டிய வேலைகளிலேயே மூழ்கியிருந்தது.

திடீரென்று அவன் அம்மாவின் குரல் ஒலிக்கிற மாதிரி இருந்தது.

'அந்தப் பெண்ணைப் பார்த்தாயா, மைக்? அந்தப் புகைப்படக்காரப் பெண்ணை?'

(தொடரும்)




# மேல் ஆணை

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

## 44

மைக்கேலை அவனுக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஓட்டலுக்கு அழைத்துச் சென்றான் டிரைவர். ஏற்கெனவே அவனுடைய நிறுவனச் சிப்பந்திகள் நல்ல ஓட்டல் தானா என்று பார்த்து வைத்திருந்தார்கள். இரண்டு பகுதிகள் அமர்த்தப்பட்டிருந்தன. ஒன்று அவன் தங்குவதற்காக, மற்றது அலுவலகக் கூட்டங்களை நடத்துவதற்காக. தேவைப்பட்டால் இரண்டையுமே அலுவலக விஷயங்களுக்குப் பயன்படுத்தலாம் என்று எண்ணினான் மைக்கேல்.

முந்தின இரவு ஒன்பது மணிக்கு உணவு அருந்தியதுதான். பிறகு ஏதும் சாப்பிடவில்லை. அதனால் களைப்பாக இருந்தது. நியூயார்க்காக இருந்தால் இப்போது நள்ளிரவாக இருக்கும் என்று எண்ணியபடி, உணவு கொண்டு வருமாறு ஆர்டர் தந்தான்.

சோபாவில் சாய்ந்து கொண்டான். டையைத் தளர்த்தி விட்டுக் கொண்டான். கால்களைத தூக்கி டீபாயின் மீது போட்டுக் கொண்டு கண்களை மூடிக் கொண்டான்.

மறுபடியும் அம்மாவின் குரல் காதில் ஒலிக்கிற மாதிரி இருந்தது.

'மைக், அந்தப் புகைப்படக்காரியுடன் பேசினாயா?'

அந்த அறையின் நிசப்தத்தைத் திடீரெனக் குலைப்பது போல அந்தக் குரல் கேட்டதும் திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தான்.

ஏன், இப்போது கூப்பிட்டால் என்ன?

சிப்பந்தி சிற்றுண்டி எடுத்து வர நேரமாகும். அதற்குள் பேசி விட்டால் போச்சு. தூக்கத்தையும் தடுத்த மாதிரி இருக்கும்.

தன் ப்ரீஃப் கேஸைத் திறந்து, ஃபைலிலிருந்து அந்தப் பெண்ணின் எண்ணைக் கண்டுபிடித்தான். உட்கார்ந்த இடத்திலிருந்தே டயல் செய்தான். மூன்று நான்கு முறை மணி அடித்த பிறகு அவள் எடுத்தாள்.

''ஹலோ!''

''குட் ஈவினிங் மிஸ் மேரி. நான் மைக்கேல் ஹிலியார்டு பேசுகிறேன்,'' என்று அவன் சொன்னதும்—

மேரிக்குக் குப்பென்று மார்பை அடைத்த மாதிரி இருந்தது. படபடப்பை அடக்கிக் கொள்ளச் சில வினாடிகள் பிடித்தது. பிறகு நிதானமாக ''ஓ! சான்பிரான்ஸிஸ்கோவிற்கு வந்திருக்கிறீர்களா?'' என்றாள்.

அவள் குரல் நறுக்கென்றும் சுருக்கமாகவும் இருப்பதாக மைக்கேலுக்குப் பட்டது. சிறிது கோபம் கூடத் தொனித்தது. ஒருவேளை அவள் ஏதாவது அவசர வேலையில் இருக்கும்போது கூப்பிட்டு விட்டோமோ என்னவோ. அல்லது பிஸினஸ் விஷயங்களை வீட்டிலிருந்து பேசுவது அவளுக்குப் பிடிக்கவிலையோ என்னவோ. எதுவானால் என்ன?

''ஆமாம், மிஸ் மேரி. சான்பிரான்ஸிஸ்கோவுக்கு வந்திருக்கிறேன். நாம் சந்தித்துப் பேசினால் தேவலை. சில விஷயங்கள் உங்களுடன் பேச வேண்டும்.''

''வேண்டாம். எந்த விஷயமும் நாம் பேசத் தேவையில்லை. முன்பே உங்கள் அம்மாவிடம் சொல்லிவிட்டேனே!'' என்று சொல்கையில் அவள் கைகள் நடுங்கின. போனை இறுக்கிப் பிடித்துக்கொண்டிருந்தாள்.

''அப்படியா? அம்மா என்னிடம் சொல்ல மறந்துவிட்டார் போலிருக்கிறது,'' என்றான் மைக்கேல். அவளைப் போலவே தானும் கறாராகப் பேச வேண்டும் என்று அவன் தீர்மானித்துக் கொண்டான். ''உங்களைப் பார்த்துப் பேசிய பிறகு அம்மாவுக்கு லேசான ஹார்ட் அட்டாக் ஏற்பட்டது. உங்களுடன் பேசியதற்கும் ஹார்ட் அட்டாக்கிற்கும் சம்பந்தமிருக்காது தான். ஆனால் நீங்கள் இருவரும் என்ன பேசிக் கொண்டிருந்தீர்கள் என்பதை அம்மா விவரமாகச் சொல்லவில்லை. நிலைமை அப்படி!''

''ஆமாமாம்,'' என்று கூறி மேரி சிறிது தயங்கினாள். ''உங்கள் அம்மாவுக்கு உடம்பு சரியில்லை என்று கேட்க வருத்தமாயிருக்கிறது. இப்போது தேவலையா?''

''நன்றாகத் தேவலை,'' என்றவன், ஒரு புன்னகையுடன், ''போன வாரம் அவருக்குக்



கல்யாணம் நடந்தது. இப்போது தேனிலவுக்காக வெளிநாடு போயிருக்கிறாள்,'' என்றான்.

'என்ன அக்கிரமம்!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் மேரி. கேடு கெட்ட சிறுக்கிக்குக் கல்யாணம் வேறே! என் வாழ்க்கையை நாசம் பண்ணிவிட்டு இவள் தேனிலவுக்குப் போகிறாள்! பல்லை நறநறவென்று கடிக்க வேண்டும் போலிருந்தது. டெலிபோனைத் தூக்கி எறிய வேண்டும் போலிருந்தது.

''அது போகட்டும். நாம் எப்போது சந்திப்பது?'' என்றான் மைக்கேல்.

''நான்தான் சொல்லிவிட்டேனே? சந்திக்க வேண்டாம்.''

அவள் பேச்சு, டெலிபோனில் காறித் துப்புகிற மாதிரி இருந்தது. மீண்டும் மைக்கேல் கண்களை மூடிக் கொண்டான். அவனுக்குக் களைப்பாக இருந்தது. மேலும் மேலும் அவளுடன் விவாதிக்கப் பிடிக்கவில்லை.




ஆசிரியர்: திருக்குறளை இயற்றியவர் யார்?

மாணவன்: திருவள்ளுவர்.

ஆசிரியர்: கம்ப ராமாயணத்தை இயற்றியவர் யார்?

மாணவன்: கம்பர்.

ஆசிரியர்: சிலப்பதிகாரத்தை இயற்றியவர் யார்?

மாணவன்: சிலம்பரசன்.

—பி. வாசுதேவன்

''நல்லது. விட்டு விடுகிறேன். இப்போதைக்கு நான் ஃபேர்மான்ட் ஓட்டலில் தங்கியிருக்கிறேன். நீங்கள் ஒருவேளை மனம் மாறினால் கூப்பிடுங்கள்.''

''மாற மாட்டேன்.''

''சந்தோஷம்!''

''குட்நைட், மிஸ்டர் மைக்கேல்!''

''குட்நைட், மிஸ் மேரி!''

மேரிக்கு ஆச்சரியமாயிருந்தது. சம்பாஷணையை எவ்வளவு சீக்கிரமாக முடித்து விட்டான்! மைக்கேல் மாதிரியே இல்லை. எது எக்கேடு கெட்டுப் போனால் என்ன என்பது போல்; அலுப்பும் சலிப்புமாய் இருக்கிறானே? இந்த இரண்டு வருடத்தில் என்ன ஆயிற்று இவனுக்கு?

போனை வைத்த பின்னர் வெகு நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள் மேரி.

''என்னம்மா, ஏன் என்னவோ போலிருக்கிறாய்? ஏதாவது பிரசினையா?'' என்று கேட்டார் டாக்டர் பீட்டர். இருவரும் எதிரெதிரே அமர்ந்து உணவருந்திக் கொண்டிருந்தார்கள்.

கோப்பையிலிருந்த ஒயினை உற்றுப் பார்த்தபடி தலையை அசைத்தாள் மேரி. ''ஒன்றுமில்லை. அடுத்து என்ன செய்யலாம் என்பது பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறேன். இன்னொரு கண்காட்சி நடத்தலாம் என்று தோன்றுகிறது. அதைப் பற்றி யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறேன். வேறொன்றுமில்லை.''

அவள் பொய் சொல்கிறாள் என்பது பீட்டருக்குப் புரிந்தது. ஆனால் அவள் கவலைக்கு உண்மையான காரணம் என்னவென்று தெரியவில்லை.

முந்தின இரவு மைக்கேல்

# நனைத்தாலும், துவைத்தாலும் விரைவாக உலரும் பாப்பா மெத்தை



ஜிங்லர்ஸ். மேல்நாட்டுத் தொழில் நுட்பத்துடன் விஞ்ஞான முறையில் வடிவமைக்கப்பட்ட பாப்பா மெத்தை. இது சாதாரண ஃபோம் மெத்தை அல்ல. இதன் உட்புறம் மென்மையான பாலிஃபைபர் நிரம்பியது. வெளிப்புறம் மிருதுவான 100% பருத்தியினால் ஆனது. சரியான பருமனில் அமைந்ததால் பாப்பா எளிதாகப் புரண்டு விளையாடலாம். காற்றுப்புகும் அமைப்பு உள்ளதால் வெப்ப எரிச்சலையும் தடிப்புகளையும் ஏற்படுத்தாது. ஜிங்லர்ஸ் இலேசானது. துவைப்பது எளிது. விரைவாக உலரும். உட்புறம் ஈரத்தினால் கட்டியாகாமல் மென்மையாகவே இருக்கும்.





**Jinglers**



*India's first real washable baby bed*



Available at all leading childrens' readymade shops.

Mfrs: **Utility Textiles** 6, Brahadambal Road, Nungambakkam, Madras – 34 Tel: 864307

Marketing Agent: **M/s West & Harry P Ltd.,** Madras. Tel: 451837

Dealer enquiries solicited

Insight-UT-916



## இன்று ஒரு தகவல்

வானொலியில் தினசரி காலை ஒலிபரப்பாகும் 'இன்று ஒரு தகவல்' நிகழ்ச்சியின் தயாரிப்பாளர் தென்கச்சி சுவாமிநாதனுக்குக் கோபமே வராதாம். பாரோ ஒருவர் இந்த நிகழ்ச்சிக்காக சுவாமிநாதனைக் கடுமையாகப் பேசி விட்டாராம். ஆனால் சுவாமிநாதன் பொறுமை இழக்கவில்லை.

''சாதாரணமாகச் சொல்லியிருக்கலாமே, சார்?'' என்றார்.

மறுநாள் அந்த மனிதர், ''நேற்று நான் அத்தனை கடுமையாகப் பேசிய போது நீங்கள் எப்படி அவ்வளவு அமைதியாகப் பதில் சொன்னீர்கள்?'' என்று கேட்டார்.

சிரித்துக் கொண்டே சுவாமிநாதன் சொன்னார்: ''கோபத்துக்குப் பெயர் போனதுதான் எங்கள் குடும்பம். கிராமத் தகராறு நடந்த ஒரு சமயத்தில் என் தந்தையின் காலை ஒருவன் வெட்டி விட்டான். அந்தக் காட்சியைப் பார்த்துப் பதறிப் போன என் சிற்றப்பா, 'உன் காலை வெட்டியவனின் தலையை வெட்டி நாளை கொண்டு வருகிறேன், பார்,' என்று ஆவேசமாகச் சபதம் போட்டுக் கிளம்பினார். மறுநாள் தான் சொன்னபடியே அந்த ஆளின் தலையை வெட்டிக் கொணர்ந்த பின்னர் போலீஸில் சரணடைந்தார். அப்படிப்பட்ட குடும்பம் என்னுடையது.''

—பால்யூ

*பொதுவாகப் பரம்பரையான குணம்தான் யாருக்கும் வரும். இவருக்கு வாழ்க்கையில் ஏற்பட்ட அதிர்ச்சி தரும் நிகழ்ச்சி, இவருடைய அடிப்படை குணாதிசயத்தை (inherent personality) மாற்றி, சாந்த சொரூபியாய்ச் செய்து விட்டது போலும்!*

*—ஸ்ரீநிதி*

பேசியது முதல், கவண் கல்லில் அடிபட்டு விழுந்த மாதிரி, கடந்த காலத்துக்குள் புகுந்து விட்டாள் அவள்.

மைக்கேலைச் சந்தித்த அந்தக் கடைசி தினம்—இருவருமாகச் சைக்கிள் விட்டுக் கொண்டு சென்றது.... அந்தச் சந்தை.... பளபளப்பான அந்த நீலக் கல் மாலை..... அதைக் கடற்கரையில் புதைத்து வைத்தது.... பிறகு வெள்ளை வெளேரென்ற திருமண உடையும் தொப்பியும் அணிந்து மைக்கேலை மணந்து கொள்வதற்காகக் காரில் பறந்தது.... பிறகு ஆஸ்பத்திரியில் முகம் பூரா கட்டுடன் படுத்திருந்த போது மரியமின் குரல் மட்டும் கேட்டது....

கண் முன்னே திரைப்படம் போல சதா ஓடிக் கொண்டிருக்கிறது இந்தக் காட்சிகள்.... அவள் முயன்றால்கூட அதிலிருந்து தப்ப முடியவில்லை.

''மேரி, உடம்பு ஒன்றுமில்லையே?'' என்று பீட்டர் கேட்டார்.

அவள் எண்ணங்கள் கலைந்தன.

''ஒன்றுமில்லை. கொஞ்சம் களைப்பாக இருக்கிறேன். அவ்வளவுதான். உங்கள் உற்சாகத்தைக் கெடுத்துக் கொண்டிருக்கிறேனா? ஸாரி!''

ஆனால் அவள் கண்கள் பேயறைந்த மாதிரி இருப்பதையும், அவள் உதடுகளில் மெல்லிய சினம் துடித்துக் கொண்டிருப்பதையும் டாக்டர் பீட்டர் கவனித்து விட்டார்.

''மேரி, சமீபத்தில் நீ டாக்டர் அல்லிஸனைப் பார்த்தாயா?''

''இல்லை. இரண்டு பேரும் ஓட்டலில் சாப்பிடலாம் என்று கூப்பிட நினைத்துக் கொண்டிருக்கிறேன். டயம் இல்லை,'' மேரி

புன்னகை செய்தாள். ''குறிப்பாக, அந்தப் புகைப்படக் கண்காட்சிக்குப் பிறகு நேரமே கிடைக்க மாட்டே னென்கிறது. பாதி நேரம் படம் டெவலப் செய்ய இருட்டறையில் இருக்கிறேன். மிச்சம் பாதி நேரம் காமிராவைத் தூக்கிக் கொண்டு ஊர் பூரா சுற்றிக் கொண்டிருக்கிறேன்.''

''அல்லிஸனைச் சாப்பிடக் கூப்பிடுவதை நான் சொல்லவில்லை. டாக்டர் என்ற முறையில் அவளைச் சந்தித்தாயா என்று கேட்கிறேன்.''

''இல்லையே? அவரிடம் மனத்தத்துவ சிகிச்சைதான் எப்போதோ முடிந்துவிட்டதே?''

''சிகிச்சை முடிந்துவிட்டது என்பது உன் அபிப்பிராயமா? டாக்டர் அபிப்பிராயமா?''

''என் அபிப்பிராயம்தான். ஆனால் டாக்டர் அல்லிஸன் அதை ஆட்சேபிக்கவில்லை,'' என்றாள் மேரி. தனக்கு இன்னும்கூட மனத்தத்துவ சிகிச்சை தேவை என்று டாக்டர் பீட்டர் நினைப்பது அவளுக்கு ரோஷமாயிருந்தது. ''எனக்கு ஒன்றுமில்லை, பீட்டர். கொஞ்சம் களைப்பாக இருக்கிறது.''

''எனக்கென்னமோ சந்தேகமாயிருக்கிறது,'' என்றார் டாக்டர் பீட்டர். ''வந்து.... நீ எதையோ நினைத்து மனதை உழப்பிக் கொள்கிறாய் என்று தோன்றுகிறது. அதாவது... இரண்டு வருடத்துக்கு முன்னால் நடைபெற்ற விஷயங்களைப் பற்றி...

அவள் முகத்தைக் கூர்ந்து கவனித்தபடி, எச்சரிக்கையுடன் பேசினார் அவர். தான் அப்படிச் சொன்னதுமே அவள் முகம் கறுப்பதைக் கண்டார். கவலை ஏற்பட்டது.

''கிறுக்குத்தனமாய்ப் பேசாதீர்கள்,'' என்று மேரி சிரிக்க முயன்றாள்.



சாப்பிடுபவர்: பேப்பர் ரோஸ்ட் ஏன் இப்படி ஒரே கருகலா இருக்கு?

சர்வர்: இது கார்பன் பேப்பர் ரோஸ்ட்!

—கரம்

''நீ பழைய விஷயங்களை நினைத்தால் அதில் தவறொன்றுமில்லை, மேரி. சகஜம் தான். சில பேர் அந்த மாதிரி நிகழ்ச்சிகளை நினைத்துப் பத்து இருபது வருடங்களுக்குகூடத் துன் பப்படுவது உண்டு. வாழ்க்கையில் அது ஒரு வேதனையான விஷயம். அந்த விபத்துக்குப் பிறகு நீ நினைவு நீச்சற்றுக் கிடந்தால்கூட, உன் மனத்தின் ஆழத்தில் எல்லாம் புதைந்து கிடக்கும். நடுநடுவே தலை தூக்கும். அவைகளை மற. அவை களிலிருந்து விடுபடு.''

''சரி டாக்டர்.''

''விடுபட்டால்தான் உனக்கு நல்லது, மேரி. இல்லாவிட்டால் கொஞ்ச கொஞ்சமாக அந்த நினை வுகள் உன்னை அரிக்கும். உன் திறமைகளுக்கு விலங்கு போடும். உன் வாழ்வை முடமாக்கும். நான் அதிகம் சொல்லத் தேவையில்லை. நீயே மெதுவாய் யோசனை பண்ணிப் பார். இன்னும் கொஞ்ச நாள் அலிஸனிடம் சிகிச்சை பெறுவது நல்லது.''

அவர் குரலில் கவலை நிரம்பி யிருந்தது.

(தொடரும்)

# காதல் மேல் ஆணை

## 45

டாக்டர் பீட்டர் மறுபடியும் கேட்டார்: ''உனக்கு ஒன்றுமில்லையே, மேரி? டாக்டர் அல்லிஸனைப் பார்க்க வேண்டுமென்று தோன்றினால் பாரேன்?''

''இல்லையில்லை, நான் நன்றாய்த்தான் இருக்கிறேன்,'' என்றாள் மேரி. அவள் உதடுகள் ஒரு பிடிவாதத்துடன் இறுகியிருந்தன. டாக்டர் பீட்டர் அவள் கைகளை மெல்லத் தட்டிக் கொடுத்தார். பழைய விஷயங்களை அவளுக்கு ஞாபகப்படுத்தியிருக்க வேண்டாமோ என்று அவருக்குத் தோன்றியது. ஆனால் அவளுடைய முகத்தில் தென்பட்ட கவலைகள் அவரை என்னவோ செய்தன.

''நல்லது, நாம் புறப்படலாமா?'' என்று கூறி அவளை நோக்கிப் புன்னகை செய்தார்.

அவளும் பதிலுக்குப் புன்னகை செய்ய முயன்றாள். டாக்டர் கவலைப்படுவது சரிதான் என்று எண்ணிக் கொண்டாள். மைக்கேலுடன் பேசியது முதல் நம் மனம் ஆடித்தான் போய்விட்டது....

பில்லுக்குப் பணம் செலுத்திவிட்டு அவளுடைய கோட்டை எடுத்து மாட்டி விட்டார் டாக்டர் பீட்டர். அவளுடைய மெல்லிய நீல நிற பிளவுசுக்கு அந்தக் கோட்டுப் பொருத்தமாக இருந்தது. எப்போதுமே மேரி உடை விஷயத்தில் பளீரென்று இருப்பது வழக்கம். அவளுடன் கூடச் செல்வதில் அவருக்கு அலாதிப் பிரியம்.

''உன்னை வீட்டில் இறக்கிவிட்டுப் போகட்டுமா?'' என்றார்.

''வேண்டாம். புகைப்படக் கூடத்தில் இறங்கிக் கொள்கிறேன். கலைக் கூடத்தின் நிர்வாகியுடன் கொஞ்சம் பேசவேண்டும். சில புகைப்படங்களை மாற்றி வைத்தால் தேவலை என்று நினைக்கிறேன். இப்போது அங்கே என் பழைய படங்கள் அதிகமாகவும், சமீபத்தில் எடுத்த படங்கள் கம்மியாயும் இருக்கிறது. அதை மாற்றி அமைக்கலாமென்று பார்க்கிறேன்.''

''ஆ! இதுதான் புத்திசாலித்தனம்!'' என்று கூறியபடி அவள் தோளை மெதுவே அணைத்தவாறு வெளியே வந்தார் டாக்டர் பீட்டர்.

வசந்த காலத்தின் வெய்யில் பளீரென்று வீசியது. விடிகாலைப் பனி விலகி, அருமையான கதகதப்புடன் இருந்தது பருவ நிலை.

சிப்பந்தி அவருடைய காரைக் கொண்டு வந்து நிறுத்தினான். கதவைத் திறந்து அவளை ஏறச் சொல்லிவிட்டு, அருகில் தானும் அமர்ந்து காரை ஓட்டலானார் டாக்டர் பீட்டர். அவருக்குத் தன் மீது எவ்வளவு அக்கறை என்று அவளுக்குப் புரிந்தது.

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

மூலம்: டேனியல் ஸ்டீல்



புதுப் பெண்ணாக அவளை உருவாக்கியதே தான்தான் என்பதால் அவள்மீது அவருக்கு அத்தனை பிரியம் ஏற்பட்டிருக்குமோ? அல்லது பிடி கொடாமல் விலகியே இருப்பதால் அவளிடம் அவருக்குப் பிரியம் ஏற்பட்டிருக்குமோ? அவரிடம் ஒட்டிப் பழகாமல் இருப்பது ஒருவகை நன்றிகெட்டத்தனம் என்று அவளுக்குள் ஒரு குற்ற உணர்ச்சி ஏற்பட்டது. அவரிடம் அவளுக்குப் பாசம் இருந்த போதிலும், ஏதோ ஒரு சுவர் தனக்கும் அவருக்கும் நடுவே இருப்பது போலவே அவளுக்குத் தோன்றியது. அது தன் குற்றம்தான் என்பதையும் அவள் உணர்ந்தாள். டாக்டர் சொல்வது ஒருவகையில் சரிதான். இரண்டரை ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்ட அந்த விபத்து அவள் மனத்தை முடமாக்கி விட்டது போலும். வாழ்நாள் பூரா அந்த நினைவுகள் அவள் நெஞ்சை அறுத்துக் கொண்டேயிருக்கும் போலும். டாக்டர் அல்லிஸனைப் பார்த்து மனத்தத்துவ சிகிச்சை பெற்றால் நல்லதுதான்....

''ஏனோ இன்றைக்கு நீ அதிகமாய்ப் பேச மாட்டேன் என்கிறாய்? அடுத்த புகைப்படக் கண்காட்சியைப் பற்றிச் சிந்தனையா?''

தர்மசங்கடமாக ஒரு சிரிப்புச் சிரித்து, டாக்டரின் தோளில் மெல்லக் கை வைத்துக் கொண்டாள் அவள்.

''எதற்காகத்தான் என்னை நீங்கள் சகித்துக் கொள்கிறீர்களோ! நினைத்தால் சில சமயங்களில் ஆச்சரியமாயிருக்கிறது டாக்டர்.''

''ஏனென்றால் எனக்கு நீ ரொம்ப ஸ்பெஷல்–ரொம்ப வேண்டியவள், மேரி. உனக்கும் அது தெரிந்ததுதானே?''

இருக்கையில் சாய்ந்து கொண்டாள் மேரி. கண்களை மூடிக் கொண்டு அமைதியாக இருக்க நினைத்தாள். ஆனால் ஒரு நிமிடம்தான். டாக்டரின் சிறிய கார் சடேரென்று ஒரு வளைவு வளைந்ததும் தூக்கிவாரிப் போடக் கண்களைத் திறந்தாள்.

ஐயோ!

ஒரு பிரம்மாண்டமான கார் எதிரே புயலாக வந்து கொண்டிருந்தது—நேரே மேரியின் பக்கமாக, அவளை மோதி விடுகிற மாதிரி!

அந்தக் காரை ஓட்டிக்



(ஒரு லேடி டைப்பிஸ்ட் மற்றொரு கர்ப்பமான லேடி டைப்பிஸ்ட்டிடம்):

''என்னடி வெறும் ரீஃபிலை வச்சிக்கிட்டு எழுதறே? நல்ல பால்பாயிண்ட் பேனா கிடைக்கலையா?''

''என்னை டாக்டர் இப்ப வெயிட் தூக்கக் கூடாதுன்னு சொல்லியிருக்கார்!''

—என். வெங்கடசுப்பிரமணியன்

கொண்டு வந்தவன் ஒரு கணம் நிதானம் தவறிவிட்டான் போலிருக்கிறது. மேரியின் முகத்தில் மோதுகிற மாதிரி, நேர் எதிரில்—

அச்சத்தால் புலன்களனைத்தும் உறைந்து போக, வாய்விட்டுக் கூச்சல் கூடப் போட முடியாமல்—

கண்ணிமைக்கும் நேரம்தான்.

டாக்டர் பீட்டர் தனது காரை ஒடித்துத் திருப்பி, எந்த ஆபத்துமின்றிக் கடந்து விட்டார். அந்த ராட்சசக் கார் அவர்களைத் தாண்டிக்கொண்டு பின்புறச் சிவப்பு விளக்குகள் ஜொலிக்கத் தேய்ந்து மறைந்துவிட்டது.

ஆனால் மேரி சிலையாக ஸ்தம்பித்து, இருக்கையோடு இருக்கையாக ஒட்டிக் கொண்டு விட்டாள். டாஷ்போர்டை அவள் கைகள் இறுகப் பற்றியிருந்தன. அவள் தாடை கடகடவென்று நடுங்கிக் கொண்டிருந்தது. கொட்டத் தயாரான கண்ணீர் அவள் கண் முனைகளில் தளும்பிக் கொண்டிருந்தது.

அவள் உள்ளம் கடந்த காலத்துக்குப் போய்விட்டது.

இருபத்திரண்டு மாதங்களுக்கு முன்பு நடைபெற்ற அந்தப் பயங்கர விபத்தில்—

பறித்து இழுக்க முடியாத அளவுக்குப் பலமாய் ஒட்டிக் கொண்டு விட்டது.

அவளுக்கு ஏற்பட்டிருந்த திகிலை ஒரே கணத்தில் ஊகித்து விட்டார் டாக்டர் பீட்டர். காரை ஓரமாக நிறுத்தினார். அவள் அசையாமல் இருந்தாள். பரிவுடன் அவளை அணைத்தார்.

அவர் அவளைத் தொட்ட மறு கணமே அவள் உணர்வுகள் விழித்துக் கொண்டன.

அப்போது அவள் போட்ட அலறல் அந்தக் காரைக் குலுக்கியது.

அவளுடைய ஆன்மாவின் ஆழத்திலிருந்து வெளிவந்த கூச்சல் எட்டுத் திசைகளிலும் எதிரொலித்தது.

அவளை உலுக்கு உலுக்கென்று உலுக்கி நிதானத்துக்குக் கொண்டு வந்தார் டாக்டர்.

''ஷ்! **ஒன்றுமில்லை**, மேரி. எந்த ஆபத்தும் நடந்துவிடவில்லை. எல்லாம் சரியாகிவிட்டது. இதோ பார், நீ பயப்படுகிற மாதிரி எதுவும் நடக்காது!'' என்றார்.

அவளுடைய விம்மல்கள் மெல்ல மெல்ல அடங்கின. கண்ணீர் பெருகி அவள் கன்னத்தில் வழிந்தது. டாக்டரின் அணைப்பில், அவள் உடம்பின் நடுக்கம் சிறிது சிறிதாக மட்டுப்பட்டது.

அரை மணி நேரமாயிற்று அவள் பதட்டம் குறைய. உள்ளமும் உடம்பும் சோர்வடைந்தவளாக இருக்கையில் சாய்ந்து கொண்டாள்.

டாக்டர் அவளையே பார்த்தபடி மௌனமாக இருந்தார். அவளுடைய முகத்தையும் தலையையும் வருடிக் கொடுத்தார். கைகளைத் தட்டிக் கொடுத்தார். ஆபத்து எதுவுமின்றிப் பத்திரமாகத்தான்



''பந்தியில் பாயசம் போடறவர் பின்னாடியே ஒருத்தர் கிண்ணத்தோட போறாரே எதுக்கு?''

''பாயசத்திலே ஒரு முந்திரி, ஒரு திராட்சைக்கு மேலே இலையிலே விழுந்தா அதிகப்படியா இருக்கிறதைத் திரும்ப எடுத்துப்பார்!''

–கரம்

இருக்கிறோம் என்று அவள் நம்பும் படி செய்தார்.

அவள் அமைதியடைந்த பிறகே அவருக்கும் அமைதி உண்டா யிற்று.

ஆனால் சற்றுமுன் அவள் போட்ட அலறல் அவுரைச் சிந்திக்க வைத்தது.

மைக்கேலின் நினைவுகளி லிருந்து மேரி இன்னும் மீளவில்லை!

உடல் நடுக்கம் நின்று தன்ன ருகே அமைதியுடன் உட்கார்ந் திருக்கும் மேரியைப் பார்த்தார். மெதுவாக, ஆனால் உறுதியான குரலில் சொன்னார்: ''மேரி, நீ டாக்டர் அல்லிஸனைப் பார்த்துப் பேசுவது நல்லது என்று நினைக்கி றேன். நீ இன்னும் உன் பழைய வாழ்க்கையிலிருந்து விடுபடவில்லை. உன் பிரசினையை நேருக்கு நேர் சந்தித்து உன்னைக் குணப்படுத்திக் கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை.''

பொங்கி வரும் அழுகையை அடக்கிக் கொண்டாள் மேரி. பிரசி னையைச் சந்திப்பதாம்! இதற்கு மேல் என்ன சந்திக்க முடியும்? குணப்படுத்திக் கொள்வதாம்! எதைக் குணப்படுத்திக் கொள்வது? மைக்கேலின் மீதுள்ள காதலையா? அதிலிருந்து எப்படிக் குணப்படுத்திக் கொள்ள முடியும்?

டெலிபோனில் மைக்கேலு டன் பேசியதைப் பற்றி டாக்ட ரிடம் அவள் இன்னும் சொல்ல வில்லை. எப்படிச் சொல்லுவது? மைக்கேல் என்னை அணைத்துக் கொள்ள வேண்டும். மைக்கேல் என்னை முத்தமிட வேண்டும். மைக்கேலின் கரங்கள் என் தேகத்தை ஸ்பரிசிக்க வேண்டும் — இப்படியெல்லாம் என் உள்ளம் துடிப்பதை டாக்டர் பீட்டரிடம் எப்படிச் சொல்ல முடியும்?

களைப்புற்ற கண்களால் அவரை ஏறிட்டு நோக்கி, தலை யசைத்தாள். ''டாக்டர் அல்லிஸ னைப் போய்ப் பார்ப்பது பற்றி யோசனை செய்கிறேன், டாக்டர்.''

''பேஷ்! அதுதான் புத்திசாலித்தனம். உன்னை வீட்டில் கொண்டு போய் விடட்டுமா?'' என்று அவர் மெல்லக் கேட்டார்.

அதற்கும் அவள் சரியென்று தலையசைத்தாள். கண்காட்சிக் கூடத்துக்குப் போக இப்போது அவளுக்குத் தெம்பு இருக்கவில்லை.

பிறகு வீட்டை அடையும் வரை இருவரும் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. மேரி காரிலிருந்து இறங்கிய போது, ''நான் வேணு மானால் மாடி வரை துணைக்கு வரட்டுமா?'' என்று பீட்டர் கேட் டார்.

அவள் வேண்டாமென்று மறுத்து அவரை நெற்றியில் முத்த மிட்டாள். 'தாங்க்யூ' என்று ஒரே ஒரு வார்த்தை மட்டுமே சொல்லி விட்டு, திரும்பிப் பார்க்காமல் மெல்ல மாடிப் படிகளில் ஏறினாள்.

இருபத்திரண்டு மாதத்துத் தனிமை மொத்தமும் சேர்ந்து ஒரு பெரும் சுமையாகத் தன் தோளை அழுத்துவது போலிருந்தது

அவளுக்கு.

ஐயோ மைக்கேல்! நீ ஏன் என்னை போனில் கூப்பிட்டாய்?

கூப்பிட்டதாலல்லவா என் வேதனை அத்தனையும் திரும்ப வந்துவிட்டது!

ஆனால் என் வேதனையைப் பற்றி உனக்கு லவவேசமும் கவலை கிடையாது. என் புகைப்படங்கள் உன் ஆஸ்பத்திரிக்குத் தேவை. அவ்வளவுதான். நான் தர முடியாது என்று சொல்லிவிட்டேன். வேறொருத்தரிடம் வாங்கிக் கொள்ளப் போகிறாய். கேடு கெட்டவனே! ஏன் என் நிம்மதியைக் குலைத்து என் தனிமையைக் கெடுக்கிறாய்!

அறையை அடைந்தவள் நேரே படுக்கையில் போய் விழுந்தாள். அவளுடைய செல்ல நாய்க்குட்டியான ஃப்ரெட் உற்சாகமாய் எம்பி எம்பிக் குதித்து, துள்ளிக் கொண்டு படுக்கையில் அவளருகே வந்தது. ஆனால் அதைக் கொஞ்சும் மனநிலையில் அவள் இல்லை. அதைத் தரையில் தள்ளிவிட்டு, படுக்கையில் மல்லாந்து படுத்தபடி விட்டத்தையே பார்த்தவாறு இருந்தாள். அல்லிஸனிடம் போய்ச் சிகிச்சை பெறலாமா? அதிலே என்ன பலன் இருக்கப் போகிறது?....

விழிப்பும் தூக்கமுமாக மாறி மாறி வதைக்க, ஒருவழியாய் அவள் கண்ணயரவிருந்த சமயம்—

டெலிபோன் மணி அடித்தது.

திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள். எடுத்துப் பேச அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் ஒருவேளை டாக்டர் பீட்டர் கூப்பிடுகிறாரோ என்னவோ? 'இப்போது எப்படி இருக்கிறாய்? தேவலையா?' என்று விசாரிப்பதற்காகப் போன் பண்ணுகிறார் போலிருக்கிறது. பாவம், அவருக்கு மேலும் மேலும் கவலை தரக் கூடாது. தருவதற்கு நமக்கு உரிமையில்லை.

மெதுவாகப் போனை எடுத்தாள். ''ஹலோ'' என்று மென்மையாக உச்சரித்தன அவள் உதடுகள்.

''மிஸ் மேரியா?''

கூப்பிட்டது பீட்டரல்ல. அது....

அதிர்ச்சி அவள் உடம்பைக் குலுக்கியெடுத்தது.

''உனக்குப் புண்ணியமாகப் போகட்டும், மைக்கேல்! என்னை விட்டு விடு! விட்டு விடு!'' என்று கத்திவிட்டுப் போனை வைத்தாள்.

மறு முனையில் மைக்கேல் அதிர்ந்து போனான். குழப்பத்துடன் போனையே வெறிக்க நோக்கினான்.

என்ன இதெல்லாம்? ஏன் இந்தப் புகைப்படக்காரப் பெண் இப்படிக் கூச்சல் போடுகிறாள்?

அதிருக்கட்டும்! 'மிஸ்டர் மைக்கேல்' என்று பேசாமல், 'மைக்கேல்' என்று மட்டுமே சொல்கிறாளே! 'நீங்கள்' என்று சொல்லாமல் 'நீ' என்கிறாளே?

ஏன் அப்படி அவள் நம்மைக் கூப்பிட்டாள்?

(தொடரும்)

உன் உள் சக்தி எழும்பி கட்டளையிடும் போது, கடவுள்களெல்லாம் கட்டுப்பட்டு உனக்காகக் காரியமாற்றக் காத்திருக்கிறார்கள்.

சந்தேகத்தையும் பயத்தையும் வென்றவன் தோல்வியை வென்றவன்.

மிருக இச்சைகளின் தூண்டுதல் இருக்கும்போது தெளிவாகச் சிந்திக்கவோ, ஒழுங்காகத் திட்டமிடவோ முடியாது.

உயர்ந்த லட்சியத்தைத் தன் இதயத்தில் ஏந்தியிருப்பவன் ஒருநாள் அதை அடைந்தே தீருவான்.

—உதயமூர்த்தி



மறுநாள் தன் நாய்க் குட்டி ஃப்ரெட்டுடன் புகைப்படக் கலைக் கூடத்துக்குச் சென்றபோது மேரி மிகுந்த களைப்பும் சோர்வுமாக இருந்தாள். அவள் மேனி நிறத்துக்கேற்றாற் போல் பளீரென்று அவள் உடைகள் அமைந்திருந்தன. அப்படியும்கூட அவள் முகத்தில் சோகை படர்ந்திருந்தது. காரணம்—

முந்தின இரவு பூரா அவள் தூங்கவில்லை. ஒரே கனவு நூறாயிரம் தடவை திரும்பத் திரும்ப வந்தது. அந்தக் கனவில்—மைக்கேலுடன் கழித்த அந்தக் கடைசித் தினம், அந்த விபத்து—இதேதான் மீண்டும் மீண்டும்.

இன்னும் ஆயிரம் வருடங்கள் வாழ்ந்தால்கூட இந்த நினைப்பு என்னைவிட்டுப் போகவே போகாதோ? இன்று காலை கண் விழிக்கும்போதே, தான் நூறு வயதுக் கிழவியாக ஆகிவிட்ட மாதிரி ஒரு மூப்பு அவளைப் பிடித்துக் கொண்டது.

கலைக் கூடத்தின் அலுவலக அறையில் மேஜைக்குப் பின்னே அமர்ந்திருந்த ஜாக்விஸ்— கலைக்கூட நிர்வாகி—அவளைக் கூர்ந்து நோக்கினார். ''என்ன மேரி, ரொம்ப அதிகமாய் வேலை செய்கிறாய் போலிருக்கிறதே உன்னைப் பார்த்தால்?'' என்றார். பதவிக்கேற்ற உடையணிந்து கம்பீரமாகத் தோற்றம் தந்தார் அவர். ''அல்லது டாக்டர் பீட்டருடன் ராத்திரியில் ரொம்ப நேரம் கண் விழித்து அரட்டை அடித்துக் கொண்டிருக்கிறாயோ?''

டாக்டரின் பழைய நண்பர் இவர். மேரியையும் அவருக்கு ரொம்பப் பிடித்து விட்டது.

பிளாஸ்க்கிலிருந்து அவர் ஊற்றிக் கொடுத்த காப்பியை உறிஞ்சிய வண்ணம் ஒரு புன்னகையைப் பதிலாக வெளியிட்டாள் மேரி.

ஸ்டிராங்காய், கறுப்பான காப்பி. பிரான்சிலிருந்து அவர் பிரத்தியேகமாய்த் தருவிக்கும் காப்பி இது. காப்பி மட்டுமல்ல, இன்னும் பல பொருள்களைப் பிரான்சிலிருந்து வரவழைப்பது அவர் வழக்கம். அவருடைய ருசிகள் எல்லாமே விலையுயர்ந்தவை. மேரி அதைப் பற்றி அவரைக் கேலி செய்வதுண்டு. அவருடைய பிறந்த நாளின் போது வேண்டுமென்றே

மூலம்: டேனியல் ஸ்டீல்

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

வேடிக்கையான மலிவுப் பொருள் களை வாங்கிப் பரிசளிப்பாள். அதை அவர் ரசித்துச் சிரிப்பார்.

''அரட்டை கிரட்டை யெல்லாம் கிடையாது,'' என்று அவர் கேள்விக்குப் பதில் கூறினாள் மேரி. ''போட்டோ கழுவுவதற்காக இருட்டறையில் அதிக நேரம் இருப்ப தால் களைப்புத் தெரிகிறதோ என்னவோ.''

''நீ ஒரு கிறுக்கு! இந்த வயசில் பார்ட்டி, டான்ஸ் என்று போக வேண்டாமோ?''

''இன்னும் கொஞ்ச நாள் டு கட்டும். சில வேலைகள் பாக்கி இருக்கிறது,'' என்றவள், சான்பிரான்ஸிஸ்கோ வீதிகளில் உள்ள காட்சிகளைப் புகைப்படம் எடுக்க விரும்புவதாகச் சொன்னாள்.

அவர் அவள் ஐடியாவைப் பாராட்டி, ''சீக்கிரமே படங்களை எடுத்து விடு,'' என்று சொல்லிக் கொண்டிருந்தபோது ஜாக்விஸின் செக்ரட்டரி கதவை மெல்லத் தட்டி விட்டுத் தலையை உள்ளே நீட்டினாள். ஜாக்விஸைப் பார்த்து, யாரோ வந்திருக்கிறார் என்று ஜாடை காட்டினாள்.

ஜாக்விஸ் தோள்களைக் குலுக்கிக் கொண்டு அடுத்த அறைக்குச் சென்றார். அங்கே எவருடனோ சில நிமிடங்கள் பேசிக் கொண்டிருந்துவிட்டுத் திரும்பினார். தன் இருக்கையில் அமர்ந்தவர், மேரிக்கு அற்புதமான பரிசு ஒன்று கொடுக்கப் போகிற மாதிரி அவளைப் பெருமிதத்துடன் பார்த்தார்.

''உனக்கு ஒரு ஸர்ப்ரைஸ் வைத்திருக்கிறேன், மேரி,'' என்று அவர் சொல்கையில் கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. ''ரொம்ப பெரிய புள்ளி ஒருவர் உன் புகைப்படங்களை வாங்க விரும்பு கிறார்.''

அவர் சொன்னதன் பொருளை மேரி முழுவதும்



விளங்கிக் கொள்ளுமுன்பு கதவு நன்றாகத் திறந்துவிட்டது.

நிமிர்ந்து பார்த்தவள், நேருக்கு நேராக ம்மக்கேலைச் சந்தித்தாள்.

குபுக்கென்று அவளை யுமறியாமல் ஒரு பெருமூச்சு அவளுள்ளிருந்து எழுந்தது. ஆவி பறக்கக் கையில் பிடித்திருந்த காப்பிக் கோப்பை மெல்ல நடுங் யது.

கருநீல சூட்டும், வெள்ளை ஷர்ட்டும், கறுப்பு டையும் அணிந் திருந்தான் மைக்கேல். ஒவ்வோர் அங்குலத்திலும் பெரிய தொழிலதிபர் என்ற கம்பீரம் ஜொலித்தது.

காப்பிக் கோப்பையை மேஜை மீது வைத்தாள் மேரி. அவனுடைய நீட்டிய கையைக் குலுக்கினாள்.

'இந்தக் கலைக் கூடத்தில் இந்தப் பெண் எவ்வளவு பதவிசாக, பண்பாடோடு இருக்கிறாள்!' என்று மைக்கேல் வியந்தான். முந்தின இரவு காட்டுக் கூச்சலிட்ட பெண்ணா இவள்? 'என்னை விட்டு



விடு' என்று சத்தம் போட்டவளா இவள்!

ஒருவேளை அந்தச் சமயத்தில் வேறு ஏதேனும் பிரசினை இருந்திருக்குமோ என்னவோ. அல்லது ஒருவேளை குடி போதையாக இருந்திருக்கலாம். இந்தக் கலைஞர்கள் என்ன வேண்டுமானாலும் செய்வார்கள். சொல்ல முடியாது.

இவ்வாறு எண்ணிக் கொண்டானே தவிர, மைக்கேலின் முகத்தில் எதுவும் தெரியவில்லை.

மேரியும்தான். அவள் அதிர்ச்சியை அவள் முகம் காட்டக் காணோம்.

''ஒருவழியாய் உங்களைச் சந்திக்க முடிந்ததில் எனக்கு ரொம்ப சந்தோஷம் மிஸ் மேரி,'' என்றான் மைக்கேல். ''என்னை ரொம்பத்தான் அலைக்கழித்து விட்டீர்கள். பரவாயில்லை. புகழ் பெற்ற கலைஞர் நீங்கள். என்னைப் போன்ற சாதாரணமானவர்களை விரட்டுவதற்குப் பூரண உரிமை உண்டு உங்களுக்கு.''

மேரியை நோக்கிப் பரிவோடு புன்னகை செய்தான் அவன்.

மேரி எதுவும் புரியாம[ல்] ஜாக்விஸைப் பார்த்தாள்.

சற்றுமுன் மைக்கேலுட[ன்] பேசியதில் ஜாக்விஸ் மனம் மகிழ்[ந்]தி[ரு]ந்தார்... பிரம்மாண்டமா[ன] தொழில் நிறுவனமான கார்ட்டர் ஹிலியார்டு இங்கே சான்பிரான்ஸி[ஸ்]கோவில் ஒரு மாபெரும் மருத்து[வ]மனை கட்டுகிறதாம். அங்[கே] வைப்பதற்கு மேரியின் புகைப்பட[ங்]கள் வேண்டுமாம். மைக்கேல் அதை[ச்] சொன்னதும், 'எவ்வளவு' பெரி[ய] அதிர்ஷ்டம் மேரிக்கு!' என்[று] நினைத்தார்.

அந்த விவரங்களை அவ[ர்] மேரியிடம் சொல்லிக்கொண்டிருந்[த] போது மைக்கேல் தனக்குள் சிரித்து[க்] கொண்டான். என்னவோ பிரமா[த]மாகப் பிகு பண்ணிக்கொண்டாளே இந்தப் பெண், ஒரு நிமிடத்தி[ல்] எல்லாம் தகர்ந்து விழப் போகிறது!

ஆனால் மேரியின் முகத்தி[ல்] கடுகத்தனை சலனமும் ஏற்பட[]வில்லை. மைக்கேலின் பார்வையை[க்]



ஒருவன்: நம்ம டைப்பிஸ்ட் லதா கிட்ட நான் லவ் லெட்டர் கொடுத்தேன்டா. என்ன ஆச்சரியம்! அவள் என்னை புருஷனாவே ஏத்துக்கிட்டா!

மற்றொருவன்: எப்படிடா?

ஒருவன்: கன்னத்தில் ஓங்கி ஒரு அறை அறைஞ்சு.

—ரகு

# கற்றுக் கொள்கிறேன்



ஏ.ஸ.வி. [illegible] கேள்வி:

சினிமாத் துறையில் இதுவரை என்ன கற்றுக் கொண்டீர்கள்?

பட்டுக்கோட்டை பிரபாகர் பதில்:

ஜஸ்ட் ஆறு மாதங்களாகத் தான் சினிமா என்னும் சுவாரசியமான நாடகத்தை மேடைக்குப் பின்புறம் நின்று பார்த்து வருகிறேன்.

அப்புறம் மனதில் பதிந்த அல்லது அறைந்த முக்கியமான சமாசாரம்: சினிமாவில் தனி மனித சாகசம் என்பது நடிப்புத் துறையில் மட்டுமே சாத்தியம். அத்தனை குதிரைகளின் லகான்களையும் கையில் பிடிக்கும் டைரக்‌ஷன் துறையில் அசாத்தியமான, அசுரத்தனமான திறமையும், உழைப்பும் தேவைப்படுகிறது. படத்தின் வெற்றி [illegible] நிச்சயமாக [illegible]. ஒரு டைரக்டர் தன் மனத்தில் ஒரு நல்ல ஐடியாவை நினைத்து விட்டாலும் அதைத் திரையில் அவர் நினைத்த அளவிற்கே கொண்டு வர எத்தனையோ பேரின் ஈடுபாட்டுடன் கூடிய ஒத்துழைப்பு தேவைப்படுகிறது. மற்றும்....

ஆறு மாத அனுபவத்திற்கு இப்போதைக்கு இது போதுமே.

—பாமா

உங்களின் பதிலில் உங்களுடைய நிச்சயமான வருங்காலம் பற்றித் தெரிகிறது. நகைச்சுவைக் கதாநாயகன் வேண்டுமென்றால் தொடர்பு கொள்ளுங்கள் - 73130. (என் நம்பர்தான்).



சந்திக்காமல் நாற்காலியில் அசைவற்று உட்கார்ந்திருந்தாள். அவள் உதட்டில் உயிரற்ற ஒரு புன்னகை செயற்கையாக ஒட்டிக் கொண்டிருந்தது.

''எங்கள் திட்டம் என்ன என்பதை உங்கள் இருவருக்கும் விளக்கமாகச் சொல்கிறேனே?'' என்றான் மைக்கேல்.

''ஓ! தாராளமாய்,'' என்ற ஜாக்விஸ், அவனுக்கும் காப்பி ஊற்றித் தரும்படி செக்ரட்டரியிடம் சொன்னார்.

மேரியிடம் என்ன மாதிரியான புகைப்படங்களை எதிர்பார்க்கிறோம் என்பதையும் அவைகளை எப்படியெப்படி எங்கெங்கே வைக்கப் போகிறோம் என்பதையும் வெகு விவரமாக எடுத்துச் சொன்னான் மைக்கேல்.

வேறெந்தக் கலைஞனாயிருந்தாலும் ஆனந்தக் கூத்தாடியிருப்பான், அந்தத் திட்டங்களைக் கேட்டு. ஆனால் மேரி சிறிதேனும் கவரப்பட்டதாகத் தெரியவில்லை. அவன் பேசி முடித்ததும் தலையை மெல்ல அசைத்து மைக்கேலை நோக்கித் திரும்பினாள்.

''நான் நேற்று சொன்ன பதிலையேதான் இன்றைக்கும் சொல்ல வேண்டியிருக்கிறது, மிஸ்டர் மைக்கேல்!''

ஜாக்விஸுக்கு இது குழப்பமாக இருந்தது.

''நீங்கள் இருவரும் ஏற்கெனவே இதைப் பற்றிப் பேசி விட்டீர்களா?'' என்றார்.

மைக்கேல் சொன்னான்: ''என் உதவியாளர், என் அம்மா, நான் மூன்று பேருமே மிஸ் மேரியை அவர் வீட்டில் கூப்பிட்டுப் பேசி விட்டோம். எங்கள் திட்டத்தைச் சுருக்கமாகத் தெரிவித்தாயிற்று. மிஸ் மேரி ரொம்பப் பிடிவாதமாய் வேண்டாம் என்கிறார். இவர் மனசை மாற்ற முடியுமென்ற

நம்பிக்கையில்தான் இப்போது வந்திருக்கிறேன்.''

ஜாக்விஸ் மிகுந்த திகைப்புடன் மேரியைப் பார்த்தார். அவளுடைய பிடிவாதத்தின் காரணம் அவருக்குப் புரியவில்லை.

மேரி மறுபடியும் தலையை அசைத்தாள். ''ஐ'ம் ஸாரி! என்னால் உங்கள் திட்டத்துக்கு ஒப்புக்கொள்ள முடியாது.''

''ஏன் மேரி? ஏன் முடியாது?'' என்று ஜாக்விஸ் கத்தியே விட்டார்.

''ஏனென்றால், எனக்குப் பிடிக்கவில்லை. அவ்வளவுதான்.''

''என்ன காரணமென்றாவது நாங்கள் தெரிந்து கொள்ளலாமா?'' என்றான் மைக்கேல். அவன் குரல் மிக மென்மையாக இருந்தது. அத்துடன், தன் அந்தஸ்தின் பெருமையும் அதில் கலந்திருந்தது.

அவன் குரலின் தோரணை மேரிக்குப் பிடித்திருந்தது. பிடித்திருக்கிறது என்பதை நினைத்துக் கோபமும் வந்தது.

எனினும் அவள் தன் மனத்தை மாற்றிக் கொள்ளத் தயாராயில்லை.

''என்னைத் திமிர் பிடித்தவள் என்று நினைத்துக் கொண்டாலும் சரி. அல்லது வேறெப்படி எண்ணிக் கொண்டாலும் சரி. முடியாது என்பதுதான் என் பதில். நீங்கள் எவ்வளவு தடவை கேட்டாலும் அதுதான் என் பதில்.''

காப்பிக் கோப்பையை வைத்தவள் இரண்டு பேரையும் ஒரு முறை பார்த்துவிட்டு எழுந்து கொண்டாள். மைக்கேலிடம் கரத்தை நீட்டி நிதானத்துடன் கைகுலுக்கினாள். ''என் புகைப்பட விஷயத்தில் நீங்கள் அக்கறை காட்டுவதற்கு ரொம்ப நன்றி. உங்கள் திட்டத்துக்கு ஒத்து வருகிற மாதிரி வேறு ஒரு புகைப்படக் கலைஞர் நிச்சயம் கிடைப்பார். ஜாக்விஸே கூட யாரையேனும் சிபாரிசு செய்வார். இந்தக் கலைக் கூடத்துடன் தொடர்பு கொண்டி

---

## Chopsticks CHINESE RESTAURANT



சூடா ஒரு கப் சூப்

'அபஸ்வரம்' ராம்ஜி 'சாப்ஸ்டிக்ஸ்' என்ற பெயரில் சாந்தோம் நெடுஞ்சாலையில் ஒரு சைனீஸ் ரெஸ்டாரெண்ட் துவங்கியிருக்கிறார்.

—பேபி

தெரியாமலே பல விஷயங்களில் ஈடுபட்டிருக்கும் ராம்ஜி தெரிந்து ஈடுபட்டிருப்பது இதில்தான். அவர் ஒரு காட்டரிங் டிப்ளமா ஹோல்டர்.

இந்த ரெஸ்டாரெண்ட்டின் வாசலில் உள்ள (Happy Man) லாஃபிங் புத்தா பொம்மையைப் பார்க்கும்போது எனக்கு ராம்ஜி நினைவு வரும். ஒரு வேளை அவர்தான் மாடல் கொடுத்திருப்பாரோ?



ருக்கும் அற்புதமான கலைஞர்கள் ஏராளமான பேர் இருக்கிறார்கள்.''

''ஆனால் எங்களுக்கு நீங்கள் தான் வேண்டும்,'' என்றான் மைக்கேல். இப்போது அவன் குரலில் பிடிவாதம் இருந்தது.

ஜாக்விஸ் அவளுக்காக மன்னிப்புக் கோருகிற மாதிரி அவனைப் பார்த்தார். ஆனால் மேரி சிறிதும் விட்டுக் கொடுப்பதில்லை என்று உறுதியாக இருந்தாள். வாழ்க்கையில் ஏற்கெனவே நிறைய விட்டுக் கொடுத்தாயிற்று. போதும்.

மறுபடி கூறினாள்:

''நீங்கள்' இப்படிப் பிடிவாதம் பிடிப்பது சரியில்லை, மிஸ்டர் மைக்கேல். இது குழந்தைத் தனம். நிச்சயமாய் உங்களுக்கு வேறு ஆள் கிடைக்கும். என்னால் உங்களுக்கு வேலை செய்ய முடியாது. புரிகிறது என்று நினைக்கிறேன்.''

''என்னுடன் வேலை செய்ய முடியாதென்றால் வேறு யாருடனாவது செய்வீர்களா?''

அவள் மறுபடியும் தலையாட்டி மறுத்துவிட்டு வாசலை நோக்கி நடந்தாள்.

''நான் சொன்னதை யோசனையாவது பண்ணிப் பாருங்களேன்!'' என்றான் மைக்கேல்.

கதவினருகே ஒரு வினாடி அவள் தயங்கி நின்றாள்—மைக்கேலுக்கு முதுகைக் காட்டினாற் போல். அடுத்த கணம், 'ஊகூம்' என்ற அவள் குரல் கேட்டது. நாய்க் குட்டியை அணைத்தவாறு அவள் உருவம் மறைந்தது.

ஜாக்விஸ் அதிர்ச்சியில் சிலையாகி மேஜையடியில் அசையாமல் உட்கார்ந்து விட்டான். ஆனால் மைக்கேல் ஒரு வினாடி கூட வீணடிக்கவில்லை!

''நில்லுங்கள்!'' என்று கூவிய வண்ணம் தெருவில் பாய்ந்தான்.

(தொடரும்)

## மச்சி, குஜிலி பாரு! ரொம்ப உழைச்சிட்டாண்டா! ஹை... தார் டிக்க

காவாஸாக்கி பஜாஜ் என்றால் 'படபட'
என்று வேகமாகப் பேசுபவன்.
பட்லி என்றால் அழகான பெண்.
டிக்கி—பெரிய பின்புறம் உள்ள பெண்
ஹெட்லைட்—(ஊகிக்கவும்)
குல்ஸ்—குள்ளமான பெண்.
கௌபாய் ஜாங்கோ—ஜீன்ஸ் பேண்ட் தோய்க்காமல் மடித்துப் போடுபவர்கள்.
டப்ஸ்—ஒல்லியான உருவம்.

—விஜய்குமார்



சுள்ளி பொறுக்கலாமா—பிகர் தள்ளிக்கினு போகலாமா?
குஜால்ஸ்—ஜாலியாய் இருக்கிறது.
வௌவால்—அதிக மார்க் போடுவதற்கு லெக்சரரிடம் தொங்கும் மாணவன்
ஸ்ப்ரிங்—வகுப்பில் குதித்து, குதித்துப் பாடம் நடத்தும் லெக்சரர்.
ஸ்ப்ரிங்க்ளர்—பாடம் நடத்தும் போது முன் பெஞ்ச் மாணவர்கள் மீது எச்சில் மழை பிரயோகிப்பவர்.

சபை—அரட்டை அடிக்கும் இடம்.
வஜ்ரம்—சபையிலிருந்து துரத்திய பின்னும், மீண்டும் மீண்டும் வந்து ஒட்டிக் கொள்ளும் மாணவன்.

—எஸ். சரவணகுமார்.

படம்: ஸ்படிகா

காலேஜ் அறிவு ஜீவிகளிடமிருந்து திரட்டிய பயனுள்ள தொகுப்பு.



விவாத மேடையைத் தொடங்க வேண்டும் என்பதே அந்த ஆலோசனை. அதற்கு என்ன பெயர் வைப்பது என்று நாங்கள் இருவரும் கூடி ஆலோசித்துப் பல பேர்களைத் தேர்ந்து போர்த்து இறுதியாக, ''வழக்காடு மன்றம்' என்று பெயர் வைத்தோம்.

முதல் வழக்காடு மன்றம் எப்படி, யாரைக் கொண்டு தொடங்குவது என்பது அடுத்த சிந்தனை. திருக்குறளார் முனுசாமி அவர்களை நடுவராகவும், மதுரைப் பேராசிரியர் டாக்டர். நா. பாலுசாமி அவர்கள் ஒரு கட்சி வழக்கறிஞராகவும் இருக்க முடிவாயிற்று. தலைப்பு? 'கோவலன் குற்றவாளி? ஆம், இல்லை,' என்பது. 'இல்லை' கட்சிக்கு வாதிட்டவர் என் கணவர்.

ஜூரிகளும், நடுவரும் சேர்ந்தளித்த தீர்ப்பு, 'கோவலன் குற்றவாளி அல்ல' என்பது. வானொலியில் சில பகுதிகள் ஒலிபரப்பப்பட்டன.

அதுவே முதல் வழக்காடு மன்றம். —செல்ல பாப்பா கீரன்

முத்து படுத்திருப்பது தெரிந்தது. உட்பக்கம் வந்த மாதவி, கதவைச் சாத்திக் கொண்டாள். முத்து இப்போது எழுந்துவிடக் கூடாதே என நினைத்தாள்.

ஜன்னல் வழி பார்த்தபோது, குணசேகரன் வீட்டுக் கதவு திறக்க முயலும் சப்தம் தோல்வியாய் ஒய்ந்தது. இக்கதவு திறந்து மெதுவாய்ப் படியிறங்கி அவ்வீடு நோக்கிச் சென்றாள் மாதவி. செல்லாயி அழும் ஒலி கேட்டது. ஆறுதல் சொல்கிறானா அவன்?

தவ்விக் கடந்து கதவு தாள் திறக்க நெருங்கும்போது ஒரு தப்புக் காரியம் செய்தாள் மாதவி. அவசரத்தில் செல்லாயி தன்னைப் பார்த்தால் துன்புறுவாளே என்ற வியர்வைப் பெருக்கத்தில் தாழ்ப்பாளை 'படாரென' விலக்கிவிட்டு விலக்கியதன் சப்தம் புரிந்து தெரிந்துவிடுமோ என உதறி, விடுவிடுவென ஓடி, முத்துக்குமரன் வீட்டினுள் புகுந்தாள்.

செல்லாயியும், குணசேகரனும் தன்னைப் பார்த்திருப்பார்களோ என பயந்து, முத்து வேறு எழுந்துவிடக் கூடாதே என உணர்ந்து திக்கித் திக்கி நின்றாள் ஜன்னலோரம்.

கதவு திறந்து செல்லாயியும் குணசேகரனும் வெளிப்படுவது தெரிந்தது. செல்லாயி மட்டும் விரைவது புலப்பட்டது. குணசேகரன் உள் சென்றது பார்க்க முடிந்தது.

நிம்மதியாயிருந்தது மாதவிக்கு. சந்தோஷமாயிருந்தது. ஒரு பெண்ணை, அவள் தவறானவளாயிருந்தாலும், காப்பாற்றிவிட்டோம் என்ற நிம்மதி பெருகிற்று.

முத்துவைப் பார்த்தாள். அவன் புரண்டுகூடப் படுக்காமல் தூங்கிக் கொண்டிருக்க, அம்மாவின் நினைவு வந்தது மாதவிக்கு. எழுந்திருந்திருப்பாளோ? அய்யய்யோ....

பயம் வர, மெதுவாய்க் கதவுப் பக்கம் வந்து திறந்த போது, அக்கதவு திறக்க மறுத்தது. சப்தமெழாமல் உலுக்க, இடைவெளியில் வெளிப் பக்கம் பெரிதாய் ஒரு பூட்டுப் போட்டிருப்பது தெரிந்தது.

எக்கிப் பார்த்ததில் விரலில் சாவியைச் சுழற்றியபடி செல்லாயி, பத்தினி மாதிரி நின்றிருப்பது தெரிந்தது.

('நன்றாற்ற லுள்ளும் தவறுண்டு அவரவர்
பண்பு அறிந்து ஆற்றாக் கடை.'

குறள்.

—புலவர் கீரன்)

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்
மூலம்:
டேனியல் ஸ்டீல்




**47**

''நில்லுங்கள்!'' என்று கூவிய வண்ணம் மேரியின் பின்னால் ஓடினான் மைக்கேல். ஏன் இப்படிச் செய்கிறோம் என்று அவனுக்கே தெரியவில்லை. ஆனால் எப்படியும் அவளைத் தடுத்து நிறுத்திப் பேசியாக வேண்டும் என்பது மட்டும் தெரிந்தது.

அவள் நிற்காமல் வேகமாகப் போய்க் கொண்டிருந்தாள். மைக்கேல் அவளுக்குப் பக்கமாக நடந்தபடி ''உங்களுடன் கொஞ்ச தூரத்துக்கு நான் வரலாமில்லையா?'' என்றான்.

''எனக்கு ஆட்சேபணை கிடையாது. ஆனால் அதனால் பலன் ஏதும் ஏற்படப் போவதில்லை,'' என்றாள் மேரி.

அப்படிச் சொன்ன பிறகும், மைக்கேல் விடாமல் அவள் கூடவே நடந்தான். நேர் எதிரே பார்த்தபடி மேரி நடை போட்டாள், அவனுடைய பார்வையைச் சந்திப்பதைத் தவிர்த்த வண்ணம்.

''ஏன் இப்படி மறுக்கிறீர்கள்?'' என்றான் மைக்கேல். ''அர்த்தமில்லாததாக இருக்கிறது உங்கள் பிடிவாதம். ஏதாவது சொந்தக் காரணமா? எங்கள் நிறுவனத்தைப் பற்றி நீங்கள் ஏதோ தெரிந்து வைத்திருக்கிறீர்களா? எங்களிடம் கசப்பான அனுபவம் ஏதேனும் நேர்ந்ததா? அல்லது என்னிடம் ஏதாவது கோபமா?''

''அதெல்லாம் முக்கியமில்லை,'' என்றாள் அவன் முகத்தைப் பார்க்காமலே.

''ஏன் முக்கியமில்லை! முக்கியம்தான்.'' சட்டென்று நின்றான். அவள் கையை இறுக்கிப் பிடித்தான். ''என்ன காரணமென்று எனக்குத் தெரிந்தாக வேண்டும். தெரிந்து கொள்ள எனக்கு உரிமை இருக்கிறது.''

''உரிமையா?'' அவள் நின்று அவனைப் பார்த்தாள். ஒரு நிமிடம்தான். ஆனால் யுகம் யுகமாய் நிற்பது போல் தோன்றியது. இறுதியில் மேரியின் குரலில் ஒரு மென்மை வந்தது. ''சொல்கிறேன்—அது ஒரு சொந்தக் காரணம்,'' என்றாள்.



''அப்பாடா! உங்களுக்குப் பைத்தியம் கியித்தியம் இல்லையென்று தெரிந்துவிட்டது. அந்த அளவுக்குச் சந்தோஷம்தான் எனக்கு,'' என்றான் மைக்கேல்.

அவளுக்குச் சிரிப்பு வந்தது. அவனைப் பார்ப்பதற்கு வேடிக்கையாக இருந்தது. ''எனக்குப் பைத்தியமில்லை என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? உண்மையில் நான் பைத்தியமாக இருக்கலாம்.''

''இல்லை, நான் அப்படி நினைக்கவில்லை. கார்ட்டர்–ஹீலியார்டு நிறுவனத்தை நீங்கள் வெறுக்கிறீர்கள். அல்லது என்னை வெறுக்கிறீர்கள்,'' என்றான் அவன். அப்படிச் சொல்வதே ஒரு மடத்தனம் என்று எண்ணிக் கொண்டான். அவனுடைய ஸ்தாபனத்தைப் பற்றியோ அல்லது அவனைப் பற்றித் தனிப்பட்ட முறையிலோ தப்பாக எந்தப் பத்திரிகையிலும் எந்தச் செய்தியும் வந்ததில்லை. அவர்களுடைய வேலைத் திட்டங்களில் கோளாறு இருந்ததாகவோ, அரசாங்கத்துடன் லஞ்ச ஊழல் தொடர்புகள் இருந்ததாகவோ எந்தப் பத்திரிகையும் எழுதியது கிடையாது. ஆகவே அவர்களைப் பிடிக்காதது சொந்தக் காரணத்தால்தான் என்று இவள் சொல்வது அர்த்தமில்லாமலிருக்கிறது.

திடீரென வேறொரு காரணம் தோன்றியது.

இந்த ஊர்க் கிளை அலுவலகத்தில் எவனாவது இவளிடம் தப்பாக நடந்து கொண்டிருப்பானோ? அதனால் கார்ட்டர் – ஹீலியார்டு ஸ்தாபனமே இவளுக்குப் பிடிக்காமல் போயிருக்குமோ? அப்படித்தான் இருக்கும்.

அதை எப்படிக் கேட்பது' என்று அவன் யோசித்த வண்ணம் நடக்கையில் அவள் திடீரெனச் சொன்னாள்.

''உங்கள் மீது எனக்கு வெறுப்பும் இல்லை மிஸ்டர் மைக்கேல்.''

''அம்மாடி! உங்களுக்குத் தங்கமான மனசு!'' என்றான் மைக்கேல் சிரித்தபடி.

அந்தச் சிரிப்பு!

அவனைப் பழைய இளைஞனாகக் காட்டியது. அவளுடைய அறையில், சினேகிதன் பெண்ணிடம் கிண்டலடித்துக் கலாட்டா செய்து கொண்டிருப்பானே அந்தப் பழைய மைக்கேலை அந்தச் சிரிப்பில் அவள் கண்டாள்.

''என்னுடன் ஒரு கப் காப்பி சாப்பிட நீங்கள் வர கூடாதா?'' என்று அழைத்தான் மைக்கேல்.

'இல்லை, மன்னியுங்கள்,' என்று சொல்லத்தான் முதலில் நினைத்தாள். ஆனால் இந்த விஷயத்தை ஒருவழியாய்ப் பேசி முடித்துத் தலை முழுகி விடுவதுதான் மேல் என்று எண்ணினாள். அதற்கப்புறம் இவன் தொந்தரவு இருக்காது.

''சரி,'' என்றவள் எதிரிலிருந்த ஓர் ஓட்டலைக் காட்டி அங்கே போகலாம் என்றாள்.

நாய்க்குட்டி ஃப்ரெட் துள்ளிக் குதித்தபடி பின்னால் வர, அவர்கள் ஓட்டலை அடைந்தார்கள். உள்ளே



சென்று அமர்ந்ததும் இரண்டு பேருக்கும் காப்பி வரவழைத்தார்கள்.

அவள் சர்க்கரைக் கோப்பையை அவனுக்கு நீட்டினாள். இரண்டு கட்டி எடுத்து அவன் கோப்பையில் போட்டாள். எப்போதும் அவன் கணக்காக இரண்டு கட்டிகள்தான் போட்டுக் கொள்வது வழக்கம். அவன் தாங்க்ஸ் என்று சொன்னானே தவிர, இரண்டு சர்க்கரைக் கட்டிதான் போட்டுக் கொள்வோம் என்பது எப்படி இவளுக்குத் தெரிந்தது என்று ஆச்சரியப்படக் காணோம்.

''உங்களிடம் ஒன்று சொல்லட்டுமா?'' என்றான் மைக்கேல். ''உங்கள் புகைப்படங்களில் என்னவோ ஒரு விசித்திரமான சக்தி இருக்கிறது. அது என்னைத் துரத்துகிறது. அந்தப் படங்களை ஏற்கனவே பார்த்திருக்கிற மாதிரியும், அவைகளைத் தெரிந்திருக்கிற மாதிரியும், அந்தப் புகைப் படங்களின் மூலம் நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள் என்பது என் மனசுக்குப் புரிகிற மாதிரியும் இருக்கிறது. புகைப் படங்களை எடுத்தபோது உங்களுக்கு என்ன தெரிந்ததோ, என்ன தோன்றியதோ அதெல்லாம் எனக்கும் புரிகிற மாதிரி இருக்கிறது.... நான் சொல்வது பைத்தியக்காரத்தனம் போல் உங்களுக்குத் தோன்றக் கூடும்.....''

இல்லை, இல்லை. இது பைத்தியக்காரத்தனமில்லை. முன்பு அவள் வரைந்த ஓவியங்களை எப்போதும் அவன் பிரமாதமாகப் புரிந்து கொண்டதுண்டு. அதுபோல் இப்போது புகைப்படங்கள்.

ஒரு பெருமூச்சுடன் அவள் தலையசைத்தாள். ''நீங்கள் சொல்வது சரிதான். பார்க்கிறவர்களின் மனசில் ஒரு நெகிழ்ச்சி —ஒரு நெருடல் —ஏற்படுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடுதான் நான் புகைப்படம் எடுக்கிறேன். அதனால் தான் உங்களுக்கு அப்படி இருந்திருக்கிறது.''

''வெறுமே ஒரு நெகிழ்ச்சி ஏற்படுத்தியதோடில்லை. அதற்கும் மேலே என்னவோ ஏற்படுத்துகிறது. உங்களை ஏற்கனவே எனக்கு தெரிந்திருக்கிற மாதிரி.... அதாவது உங்கள் படங்களை ஏற்கெனவே தெரிந்திருக்கிற மாதிரி ஒரு எண்ணம்..... எனக்கு இதற்கு மேல் சொல்லத் தெரியவில்லை.......''

அவன் பேசப் பேச அவள் உள்ளம் தவித்தது.

மைக், ஐயோ மைக், என்னை யாரென்று தெரியவில்லையா உனக்கு? என் கண்களைப் பார், அடையாளம் தெரியவில்லையா?

வாய்விட்டு இந்தக் கேள்விகளைக் கேட்டு விட வேண்டும் போல் அவள் மனம் துடித்தது. ஆனால் அந்த எண்ணத்தை அடக்கிக் கொண்டு மௌனமாய்க் காப்பியைப் பருகினாள்.

மைக்கேல் மெதுவாய் மறுபடி




இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆறு

கேட்டான். ''இவ்வளவு பேசுகிறேனே, நீங்கள் எனக்காக இறங்கி வரக் கூடாதா? உங்கள் புகைப்படங்களை எங்களுக்கு விற்பது பற்றி உங்கள் மனசை மாற்றிக் கொள்ளக் கூடாதா?''

வருத்தத்துடன் மேரி தலையை அசைத்தாள், முடியாதென்பதற்கு அடையாளமாக.

''ஏன்? பணம் நிறையத் தர மாட்டோம் என்று நினைக்கிறீர்களா?''

''நிச்சயமாக இல்லை.''

''நீங்கள் பணத்தைப் பெரிதாய் நினைக்கிறவரல்ல என்றுதான் நானும் நினைத்தேன்,'' என்-றான் மைக்கேல். ஒரு பெருந்தொகைக்கு ஒப்பந்தம் எழுதிக் கையோடு எடுத்து வந்திருந்தான் அவன். ஆனால் அதைச் சொல்லவில்லை. பணத்தைப் பற்றிப் பேச்சு எடுத்தால் நிலைமை இன்னும் மோசமாகிவிடுமே தவிர, பலன் ஏற்படாது என்று அவனுக்குத் தெரியும்.




வித்தியாசங்கள் உள்ளன. விடை: 75'ம் பக்கம்.

''நீங்கள் இவ்வளவு பிடிவாதமாக மறுப்பதற்கு என்னதான் காரணம் என்று தெரிந்தால் நன்றாயிருக்கும்,'' என்றான்.

''என்னமோ என்னுடைய கிறுக்குத்தனம்.... என் கடந்த காலத்தில் ஏதோ நேர்ந்ததற்கு இப்போது பழி வாங்குகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்களேன்,'' என்றாள் மேரி. இத்தனை அப்பட்டமாகச் சொல்லிவிட்டோமே என்று அவளுக்கே அதிர்ச்சியாக இருந்தது.

ஆனால் மைக்கேல் அதிர்ச்சியடைந்ததாகத் தெரியவில்லை. ''அப்படி ஏதோ இருக்குமென்றுதான் நானும் நினைத்தேன்,'' என்றான்.

இப்போது இருவர் மனமும் சமாதானமாகிவிட்டாற் போல் இருந்தது. அந்த ரெஸ்ட்டாரெண்டின் ஒரு மூலையில் அவர்கள் அமைதியாக உட்கார்ந்திருந்தார்கள்.

மைக்கேல் யோசனை செய்தான். இந்தச் சந்திப்பில் ஏதோ ஒரு சோகம் இருக்கிறது..... என்ன அது? இனிமை, வேதனை, இரண்டுமே இதில் கலந்திருக்கிறது.... எதனால்? எதனால்?

''என் அம்மாவுக்கு உங்கள் புகைப்படங்கள் ரொம்பப் பிடித்துவிட்டது. இத்தனைக்கும் அவருக்கு எதுவுமே சட்டென்று பிடித்துவிடாது.....'' என்றான்.

எவ்வளவு ஜாக்கிரதையாக வார்த்தைகளை அளந்து பேசுகிறான்! மேரியின் உதட்டில் புன்னகை பிறந்தது.

''ஆமாம், ஆமாம். நான் கேள்விப்பட்டிருக்கிறேன். எதுவும் சுலபமாக அவருக்குப் பிடிக்காதுதான். ரொம்பக் கறாராகப் பேரம் பேசுகிறவராமே?'' என்றாள்.

''உண்மை. ஆனால் அம்மாவின் அந்தக் கண்டிப்புக் கறாரினால் எங்கள் ஸ்தாபனம்

இந்த அளவுக்கு வளர்ந்திருக்கிறது. பின்னால் வருகிறவருக்கு எந்தப் பிரசினையும் இல்லாதபடி ஸ்தாபனத்தைப் பிரமாதமாய் உருவாக்கி வைத்திருக்கிறார்.''

''எவ்வளவு அதிர்ஷ்டக்காரரர் நீங்கள்!'' என்றாள் மேரி.

அந்தக் குரலில் ஒரு வெறுப்பு தொனிப்பதை உணர்ந்தான் மைக்கேல். அது ஏனென்று புரியவில்லை. குழப்பத்துடன் தன் நெற்றிப் பொட்டைத் தடவி விட்டுக் கொண்டான்.

அப்போதுதான் மேரி கவனித்தாள்—அவன் நெற்றிப் பொட்டினருகே இருக்கும் தழும்பை. காப்பிக் கோப்பையை மேஜை மீது வைத்துவிட்டு அவனை ஓரக் கண்ணால் பார்த்தாள்.

''என்ன அது?''

''எது?''

''அந்தத் தழும்பு.'' அதிலிருந்து தன் கண்களை அகற்ற அவளால் முடியவில்லை. அந்தத் தழும்பு எப்போது, ஏன் ஏற்பட்டது என்று அவளுக்குப் புரிந்தது. அது.... அது....

''அது ஒன்றுமில்லை.... ரொம்ப நாளாய் இருக்கிறது...''

''அப்படியா! ஆனால் சமீபத்தில் ஏற்பட்ட தழும்பு மாதிரி தோன்றுகிறதே?''

''ஆமாம், இரண்டு வருஷமாகிறது,'' என்றான் மைக்கேல். அவன் குரலில் ஒரு தயக்கமும் தழுதழுப்பும் ஏற்பட்டன. ''ஒன்றுமில்லை. ஒரு சின்ன விபத்து— இரண்டு ஃப்ரெண்ட்ஸுடன் போய்க் கொண்டிருந்த போது....''

—தொடரும்)

---

# என்கிறது கோட்டை வட்டாரம்...

முதல்வரின் வெளிநாட்டுப் பயணம் எப்போது இருந்தாலும் சரி, அதற்கு முன்னதாகத் தமிழக மந்திரி சபையில் பெரிய மாற்றம் ஒன்று இருக்கிறது என்கிறது கோட்டை வட்டாரம். அது, மத்திய அமைச்சர் ஒருவர் தன் பதவியை ராஜிநாமா செய்துவிட்டு, தமிழக மந்திரி சபையில் அங்கம் வகிக்கப் போகிறாராம். சரி, மத்திய அமைச்சரவையில் தி.மு.க. சார்பாக இடம் பெறப் போகிறவர் யாராம்? வை.கோ. என்று எதிர்பார்த்தால் தவறு. அவர் 'மிசா' கணேசனாகக் கூட இருக்கலாம். என்கிறது கோட்டை வட்டாரம்.

அ.தி.மு.க. உயர்மட்டக் குழுவில் திருநாவுக்கரசு இடம்பெறாமல் புறக்கணிக்கப்பட்டதற்கு என்ன காரணமாம்? திருநாவுக்கரசு அவ்வப்போது நட்சத்திர ஓட்டல்களில் விருந்து ஏற்பாடு செய்து ஜெயலலிதா அதிருப்தியாளர்களை எல்லாம் வரவழைத்து ரகசியப் பேச்சு வார்த்தைகளில் ஈடுபட்டு வருவதாக ஜெயலலிதாவுக்குத் தகவல் கிடைத்ததாம். சாத்தூர் ராமச்சந்திரன் புறக்கணிக்கப்பட்டதற்குக் காரணம் அவர் திருநாவுக்கரசுடன் தொடர்ந்து நெருக்கமாக இருப்பதுதானாம்!

சைதை துரைசாமி சொன்னார்: ''டி.வி.யில் சிவாஜி படத்தை நிறையக் காட்டுகிறார்கள். எங்கள் தலைவி நடித்த படத்தை ஒளிபரப்பவில்லை என்ற குற்றச்சாட்டு எழுந்த பிறகு வேண்டுமென்றே எம்.ஜி.ஆருடன் நடித்த பல படங்கள் இருக்கையில் உள்நோக்கத்துடன் வேறு நடிகர்களுடன் நடித்த காட்சிகளை ஒளிபரப்புகிறார்கள்.''

—விக்ரம் சிங்

# காதல்

## மேல் ஆணை

48

மூலம்: டேனியல் ஸ்டீல்

நெற்றித் தழும்புக்குக் காரணம் ஒரு சின்ன விபத்துதான் என்று மைக்கேல் சாதாரணமாய்ச் சொன்னது மேரிக்குச் சீற்றம் ஏற்படுத்தியது.

சில சினேகிதர்களோடு போய்க் கொண்டிருந்தானாம்! ஒரு சின்ன விபத்து நேர்ந்ததாம்! எவ்வளவு அலட்சியமாகப் பேசுகிறான் அதைப் பற்றி!

கையிலிருந்த காப்பியை அவன் மூஞ்சியில் வீசியடிக்க வேண்டும் போலிருந்தது அவளுக்கு.

அயோக்கிய ராஸ்கல்! சின்ன விபத்தாம், சின்ன விபத்து.

நன்றி, நயவஞ்சகனே, ரொம்ப நன்றி! இப்போதுதான் உன்னைப் புரிகிறது! ஏன் இவ்வளவு நாளும் என்னைப் பற்றி கவலைப் படாமலேயே இருந்திருக்கிறாய் என்பது இப்போதல்லவா விளங்குகிறது!

தன் கைப்பையை எடுத்துக் கொண்டாள். சரேலென எழுந்தாள். ஒரு நிமிடம் அவனை எரித்து விடுகிற மாதிரி பார்த்து விட்டுக் கரம் நீட்டினாள் கைகுலுக்க.

''ரொம்ப நன்றி மிஸ்டர் ஹிலியார்டு! சந்தோஷமாய்ப் பொழுது கழிந்தது. நீங்களும் ஊர் திரும்பும் வரை இங்கே சந்தோஷமாய் இருப்பீர்கள் என்று நம்புகிறேன்.''

அவன் திகைத்தான். ''ஏன் திடீரென்று எழுந்து விட்டீர்கள்? நான் ஏதாவது தப்பாய்ச் சொன்னேனா?'' என்றான்.

கடவுளே! இந்தப் பெண் ஏன் இப்படித் திடீர் திடீரென்று மாறுகிறாள்! என்ன நடந்துவிட்டது இப்போது? என்ன சொல்லிவிட்டோம் அப்படி?

அவள் கண்ணைப் பார்த்தவன் அதில் தெறித்த குரோதத்தைக் கண்டு திடுக்கிட்டுப் போனான்.

''ஆமாம்! தப்பாகத்தான் பேசினீர்கள்!'' என்றாள் மேரி. தன் பேச்சில் தொனித்த கடுமையைக் கண்டு அவளுக்கே அதிர்ச்சியாக இருந்தது. ''அந்த விபத்தைப் பற்றி நான் பேப்பரில் படித்தேன். அதை ஒரு சின்ன விபத்து என்று எவனும் சொல்ல மாட்டான்! எனக்குத் தெரிந்த வரையில் உங்கள் ஃப்ரெண்ட்ஸ் இரண்டு பேருக்கும் படு கோரமான காயம். அதைப் பற்றிக் கடுகத்தனையும் உங்களுக்கு அக்கறை கிடையாதா, மைக்கேல்? உங்கள் பாழாய்ப் போன பிஸினஸ்—வியாபாரம் —இதைத் தவிர எதைப் பற்றியும் துளிகூடக் கவலைப்பட மாட்டீர்களா? சே!''

''என்ன நேர்ந்தது உங்களுக்கு? அந்த விபத்துக்கும் உங்

தமிழில்: ரா.கி. ரங்கராஜன்

களுக்கும் என்ன சம்பந்தம்?'' என்று மைக்கேல் கத்தினான்.

''என்ன சம்பந்தமென்றா கேட்கிறீர்கள்? நான் மனிதப் பிறவி. நீங்கள் மனிதப் பிறவியே அல்ல. அதனால்தான் உங்களிடம் எனக்கு வெறுப்பு!''

''உங்களுக்குப் பைத்தியம்!''

''இல்லை, மிஸ்டர். முன்னே பைத்தியமாக இருந்தேன். இப்போது இல்லை. இனி பைத்திய மாக இருக்கவும் மாட்டேன்.''

சரேலெனத் திரும்பியவள் விடுவிடுவென்று நடையைக் கட்டினாள்.

அவளையே வெறித்து நோக்கியபடி சிறிது நேரம் உட்கார்ந் திருந்தான் மைக்கேல். பிறகு திடீரென ஏதோ ஒரு சக்தி அவனைப் பிடித்துத் தள்ள, குபுக்கென்று எழுந்து கொண்டான். ஐந்து டாலர் நோட்டு ஒன்றை மேஜை மீது விட்டெறிந்துவிட்டு மேரியைத் துரத் திக் கொண்டு ஓடத் தொடங்கி னான்.

அவளிடம் சொல்ல வேண்டும், சொல்லியாக வேண்டும் என அவன் மனம் துடித்தது.

ஆமாம், மேரி! நீ சொன்னது உண்மை. அது ஒன்றும் சின்ன விபத்தல்ல. பயங்கர விபத்து. நான் உயிருக்குயிராய்க் காதலித்த பெண் அந்த விபத்திலே இறந்துவிட்டாள். அதை இவளிடம் சொல்ல வேண்டும்.

ஒரு நிமிடம் நிதானித்தான். யார் இவள்? அந்த விபத்தின் உண்மைகளை அறிந்து கொள்ள என்ன உரிமை இவளுக்கு?

மேரியிடம் கேட்க அவனுக்குச் சந்தர்ப்பம் கிடைக்க வில்லை. காரணம், அவன் தெருவை அடைந்தபோது அவள் ஒரு டாக்ஸியில் ஏறிக்கொண்டு சென்று விட்டாள்.

அன்று மேரி கடற்கரைக்குச் சென்றிருந்தாள். புகைப்படம் எடுப்பதற்காக முக்காலி ஸ்டாண்டில் காமெராவைப் பொருத்திக்கொண்டிருந்த போது—

தூரத்தில் யாரோ தன்னை நோக்கி வருவது






அவன்: இத்தனை நாளும் இல்லாம ஆபீஸ் விட்டுப் போறப்ப பூவெல்லாம் வாங்கிட்டாப்பல...?

இவன். ஹிஹி... வேலைக்காரி புதுசா சேர்ந்திருக்கா.

—ஆர்.ஆர். சாமி

(சே! இழிந்த மனிதர்கள்! —ரா.)

தெரிந்தது. அவருடைய உறுதியான நடையைப் பார்த்துத் திகைத்தாள். அவர் யாரென்பதையும் கண்டு கொண்டாள்.

அவன்தான். மைக்கேல்! சே!

கடற்கரையில் நடந்து வந்தவன், எதிரிலிருந்த மணல் மேட்டில் நின்று கொண்டான்—காமெராவின் பார்வையை மறைக்கும் வண்ணம்.

''உங்களிடம் ஒன்று சொல்ல வேண்டியிருக்கிறது.''

''நான் கேட்கத் தயாராயில்லை.''

''நீங்கள் என்ன முரட்டுத்தனமாகப் பேசினாலும் நான் சொல்லத்தான் போகிறேன். என்னுடைய சொந்த வாழ்க்கையில் நீங்கள் மூக்கை நுழைத்து, நான் மனிதப் பிறவியா அல்லவா என்று சொல்ல உங்களுக்கு எந்த உரிமையும் கிடையாது. என்னை உங்களுக்கு யாரென்று கூடத் தெரியாதே!'' என்றான் மைக்கேல். 'நீ மனிதப் பிறவியல்ல!' என்று அவள் சொன்ன வார்த்தை அன்று ராத்திரி பூரா சித்திரவதை செய்திருந்தது. டெலிபோனில் விசாரித்து அவள் எங்கே இருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொண்டு இங்கே வந்திருக்கிறான். வர வேண்டும் என்று பிடிவாதமாகத் தோன்றியதே தவிர, ஏன் இங்கே வந்திருக்கிறோம் என்று அவனுக்கே தெரியவில்லை. ''என்னைப் பற்றித் தீர்ப்புக் கூற உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது என்பது எனக்குத் தெரிந்தாக வேண்டும்,'' என்றான் மீண்டும்.

''எந்த உரிமையும் இல்லைதான்,'' என்றாள் அவள் அமைதியாக, காமெராவில் லென்ஸை மாற்றி வைத்த வண்ணம். ''உங்களிடம் நான் கவனித்த ஒரு விஷயம் எனக்குப் பிடிக்கவில்லை.''

''என்ன விஷயம் கண்டீர்கள்?''

''நீங்கள் ஒரு காலிக் கிளிஞ்சல் என்பதைக் கண்டேன். தன் வேலையைத் தவிர வேறெதையும் லட்சியம் பண்ணாதவர் என்பதைக் கண்டேன். யாரிடமும் அக்கறையில்லாதவர். யாரையும் நேசிக்காதவர். யாருக்கும் எதுவும் கொடுக்காதவர். சூனியமான மனிதர்!''

''வாயை அடக்கு!'' என்று சீறினான் மைக்கேல். ''நான் யார், எப்படிப்பட்டவன், எனக்கு என்னென்ன உணர்ச்சிகள் உண்டு என்று உனக்கென்ன தெரியும்? சொல்லு!''

அவள் அவனை அலட்சியமாகக் கடந்து சென்று மறுபடியும் காமெரா வழியே ஃபோகஸ் சரி செய்தாள்.

அவனுக்கு ஆத்திரம் மூண்டது.

''ஏய்! எனக்குப் பதில்

அமுதோன்



# டி.வி.க்காரர்கள் இப்படி அநியாயம் செய்யலாமா?

சென்னை தொலைக் காட்சி நிலையம் இரண்டாவது அலைவரிசையில், சென்ற 28.2.90'ம் நாள் இரவு 8.30 மணிக்கு எனது 'நிழல் ஓவியம்' என்னும் நிகழ்ச்சி ஒளிபரப்பாயிற்று. ஆனால் இதுவரை அதற்குரிய காசோலை (ரூ. 650) வரவே இல்லை. நிலையத்திற்குச் சென்று கேட்டால் 'வரும்' என்ற வெறும் பதில்தான்!

என்னைப் போலவே, காசோலை பெறாத கவிஞர்கள், கலைஞர்கள், படைப்பாளிகள் நிலை காண மிகவும் அவலமாயுள்ளது.

—அமுதபாரதி (அமுதோன்)

இவருடைய புகாரில் நானும் சேர்ந்து கொள்கிறேன். எனது படமான 'மீண்டும் ஒரு காதல் கதை' ஒளிபரப்பாகி ஒரு வருடத்துக்கு மேல் ஆகிறது. இன்னும் செக் வரவில்லை. லாயர் நோட்டீஸ் கொடுத்திருக்கிறேன்.

இவ்வளவு சிறிய தொகையைக்கூடக் கொடுக்க முடியாமல் இந்திய அரசு அவ்வளவு ஏழையாகவா இருக்கிறது?

இதுபோன்ற பிரசினையில் பல பேர் சேர்ந்து ஒருமுகமாக எதிர்ப்புத் தெரிவித்தால்தான் நிலைமை சீராகும்.

—ராதிகா.

சொல்லப் போகிறாயா? இல்லையா!'' என்றவாறு அவள் காமெராவைப் பிடிக்கப் போனான்.

சரேலென அவன் பிடியிலிருந்து விலகிக் கொண்டாள் மேரி. கோபம் கொந்தளிக்கும் குரலில், ''போய்விடுங்கள் இங்கிருந்து! என் வாழ்க்கையிலிருந்து விலகிப் போங்கள்,'' என்று கத்தினாள். 'கேடு கெட்டவனே! இந்த இரண்டு வருட காலமாய் என் வாழ்க்கையிலிருந்து விலகிப் போயிருந்த மாதிரி இப்போதும் போய்விடு!' என்று சொல்ல வேண்டும் போலிருந்தது.

''உன் வாழ்க்கையிலிருந்து விலகிப் போவதா? உன் வாழ்க்கையில் நான் குறுக்கிடவேயில்லையே? உன்னிடம் சில புகைப்படங்கள் வாங்கலாமென்று முயற்சி செய்தேன். அவ்வளவுதான் உனக்கும் எனக்கும். மற்றப்படி என் சொந்த வாழ்க்கையைப் பற்றி, என் குணத்தைப் பற்றி, வேறு எந்த விஷயத்தையும் பற்றி நீ பிரசங்கம் செய்வதை நான் கேட்கத் தயாராயில்லை. உன்னோட நாற்றம் பிடித்த போட்டோக்கள் சிலதை வாங்கிக் கொள்ளத்தான் வந்தேன். கொடுத்தால் கொடு! கொடுக்காவிட்டால் போ!'' என்றான். அவனுக்குக் காலோடு தலை உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது கோபத்தினால்.

அவள் அமைதியாக நடந்து சென்று, சற்று எட்டத்தில் மணல் மீது விரித்துப் போட்டிருந்த ஜமுக்காளத்தை அடைந்தாள். அங்கிருந்த ப்ரீப்கேஸைப் பிரித்தாள். ஒரு ஃபைலை எடுத்து, அதிலிருந்து ஒரு புகைப்படத்தை வெளியிலெடுத்தாள். அது ஓர் இயற்கைக் காட்சி.

திரும்பி அவனிடம் வந்து அந்தப் புகைப்படத்தை அவனிடம் கொடுத்தாள்.

''இந்தாருங்கள். இந்தப் படம் உங்களுக்கு. இதை வைத்துக் கொண்டு என்ன இழவு வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். என்னை விட்டுத் தொலைந்தால் சரி.''

அவன் ஒரு வார்த்தையும் பேசவில்லை. படத்தைப் பெற்றுக் கொண்டு சாலையில் நிறுத்தி வைத்திருந்த காரை நோக்கி நடந்தான்.

அவள் அவனைத் திரும்பியும் பார்க்கவில்லை. இனி படம் எடுக்க முடியாது என்ற அளவுக்கு வெளிச்சம் மங்கும் வரையில் தன் வேலையிலேயே கண்ணாக இருந்தாள்.

பிறகு தன் வீட்டுக்குத் திரும்பினாள். லேசாக உணவு அருந்தினாள். காப்பி போட்டுச் சூடாகக் குடித்தாள். பிறகு இருட்டறையில் வெகு நேரம் வேலை பார்த்தாள்.

படுக்கையில் வந்து விழுந்த போது மணி இரண்டு.

மணி அடித்தது எடுக்கவில்லை. டாக்டர் பீட்டராக இருக்கலாம். இருந்தாலும் எடுக்க வேண்டாம் என்று எண்ணிக் கொண்டாள். அவள் யாருடனும் பேசத் தயாராயில்லை.

காலை எட்டு மணிக் கெல்லாம் கடற்கரைக்குச் சென்று சில காட்சிகளைப் படமெடுக்க வேண்டுமென்பது அவள் திட்டம். எனவே எட்டு மணிக்கு அலாரம் வைத்துக்கொண்டு படுத்தாள்.

தன்னை வெகு காலமாக அழுத்தி வந்த ஏதோ ஒரு சுமையிலிருந்து நேற்று விடுதலை பெற்று விட்ட மாதிரி ஒரு நிம்மதி ஏற்பட்டது அவளுக்கு. ஆனால் ஒன்று உண்மை. என்னதான் மைக்கேலை வெறுத்தாலும் அவனைக் கண்ணால் பார்த்தாயிற்று. அது அவளுக்கு ஆறுதல் கொடுத்தது.

காலையில் விழித்துக் கொண்டதும் அரை மணி நேரத்தில் குளித்து டிரெஸ் செய்து கொண்டாள்.

திட்டமிட்டிருந்தபடி, ஒன்பது மணிக்குச் சில நிமிடங்கள் இருந்த போது வெளியே கிளம்பினாள். செய்ய வேண்டிய வேலையை மனத்துக்குள் ஒத்திகை பார்த்த வண்ணம், நாய்க்குட்டி ஃப்ரெட் பின் தொடர, படிகளில் கடகடவென்று கீழே இறங்கி வந்தவள்—

கீழ்ப்படியை அடைந்ததும் நிமிர்ந்து நோக்கியவள்—

பிரமித்து நின்றாள்.

(தொடரும்)




லண்டனில் ஒரு வீடியோ படம் பார்த்தேன். சிரித்துச் சிரித்து வயிற்று வலி வராத குறை.

கம்பெனியில் உள்ள காரியதரிசிகள் (பெண்கள்) தான் கதாநாயகிகள் மாதிரி. மேலதிகாரி அறையை விட்டுக் கிளம்புகிறார், கண்ணாடிக் கதவைத் தள்ளிக்கொண்டு. படிகளில் அவர் விழுந்து விடுகிறார்.

அறைக்குள் இருக்கும் காரியதரிசி பதட்டப்படுகிறாள். அவளுடைய ரியாக்ஷன் பிரமாதம். ஒரே பரபரப்பு. குழப்பம். அப்போது டெலிபோன் ஒலிக்கிறது. காரியதரிசி போனை எடுக்கிறாள். மறுமுனையில், ''அதிகாரி எங்கே இருக்கிறார்.

என்னை வரச் சொல்லியிருக்கிறாரே.'

காரியதரிசியின் கண்கள் கண்ணாடிக் கதவுக்கு வெளியே போனில் தயங்கிய படியே, ''ம்... அவர் வெளியே போயிருக்கிறார்.'' என்று சமாளிக்கிறாள். உண்மையில், வெளியே படிக்கட்டுகளில் விழுந்த அதிகாரி, எழுந்து வேறு வழியாய், மாடிக்குச் சென்று தன் அறைக்குப் போய்விடுகிறார்.

காரியதரிசியின் செயல்கள், அறைக்குள் முன்பே ஒளித்து வைக்கப்பட்டிருக்கும் வீடியோ காமெரா மூலம் படமாகி விடுகிறது.

இப்படிப் பல வேடிக்கை நிகழ்ச்சிகள்.

'ஹிடன் வீடியோஸ்' என்ற இந்தப் படத்தை நான் மிகவும் ரசித்தேன்.

—ராதிகா


சூராதி சூரன்
ஸ்பைடர் மேன் 8
STAN LEE




என்ன ஆச்சரியம் பீட்டர்! ஒரு வாரம் போனதே தெரியவில்லை!
சிலந்தி வேலை எதுவும் செய்யாமல் சாதாரண மனிதன் போல் இருக்கிறேன், இல்லையா?
STAN LEE & FLOR DERY 1/14


வாழ்நாள் முழுவதுமே இப்படி இருந்து விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்.
அசிங்கமாக இருக்கும். உடம்பெல்லாம் கன்னங் கரேலென்று ஆகிவிடும்


என்ன, கிண்டலா?


இன்னா சொல்றே, தோஸ்த்?
பொண்ணு படா டக்கர்பா.
ஜேன். சில ரவுடிகளின் கவனத்தைக் கவருகிறார்.


கூட யாரோ பொட்ட பையன் கீறானே?
முண்டாவ காட்டினா ஓடிப்பூடுவான், வா.


ஐயோ பாவம், அந்த ஆளை ரவுடிகள் நொறுக்கிவிடப் போகிறார்கள்.
யார், யாரை நொறுக்குகிறார்களென்று பார்ப்போம்.
LIFEGU

# ஸாபா கிரகத்தில்
# பிளாஷ் கார்டன்

பூமியிலிருந்து லட்சக் கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள ஸாபா கிரகத்துக்குச் சென்ற பிளாஷ் கார்டனின் கோஷ்டி சிறிது காலம் கழித்துப் பூமிக்குத் திரும்ப ஆயத்தமாகிற சமயம்.....




























# காதல் மேல் ஆணை

**49**

தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

வெளியே போவதற்காகப் புறப்பட்டு வாசலுக்கு வந்த மேரி அந்தக் காட்சியைக் கண்டு திகைத்துத் திடுக்கிட்டு நின்றாள். கூடவே சிரிப்பும் வந்தது.

எதிர்ச் சாரியில் ஒரு லாரி நின்றிருந்தது. அதன் திறந்த முதுகில் பிரம்மாண்டமான புகைப்படம். நேற்று அவள் மைக்கேலுக்குக் கொடுத்த இயற்கைக் காட்சி நூறு இருநூறு மடங்குக்கு என்லார்ஜ் செய்யப்பட்டு வைக்கப்பட்டிருந்தது. நகரத்தின் முக்கியமான இடத்தில் மாட்டப்படுவதற்கான விளம்பரப் பலகை போல.

லாரியின் டிரைவர் இருக்கையில் மைக்கேல் உட்கார்ந்திருந்தான். அவன் முகத்தில் ஒரு குறும்புப் புன்னகை பரவியிருந்தது. வேண்டுமென்றே அவள் பார்வைக்காக அதை எடுத்து வந்திருப்பான் போலும்.

மேரி நின்றிருப்பதைக் கண்டவன், லாரியிலிருந்து இறங்கி அவளை நோக்கி வந்தான். அவன் முகத்திலும் சிரிப்புப் படர்ந்திருந்தது.

தன் சிரிப்பை மறைப்பதற்காக வாசல் படியில் அவள் உட்கார்ந்து கொண்டாள். ஆனால் அவள் முகத்தை அவன் கவனித்து விட்டான். அவளுக்குப் பக்கத்தில் தானும் அமர்ந்துகொண்டான்.

''படம் எப்படி? என்ன நினைக்கிறாய்?'' என்றான்.

''நீங்கள் ஒரு அரைக் கிறுக்கு என்று நினைக்கிறேன்.''

''இருந்து விட்டுப் போகிறேன். படம் உனக்குப் பிடித்திருக்கிறதா? இதேபோல் உன் மற்றப் புகைப்படங்களையும் பிரம்மாண்ட பிரம்மாண்டமாய் என்லார்ஜ் செய்து எங்கள் மருத்துவ மனைக் கட்டிடத்தில் அங்கங்கே நிறுத்தி வைத்தால் எப்படி இருக்கும்! நினைத்துப் பார்! பிரமாதமாக இருக்காதா?''

''நீயே ஒரு பிரமாதமான ஆள்தான்!' என்று சொல்லத் தோன்றியது அவளுக்கு. ஆனால் சொல்லவில்லை.

''சரி, சரி. வா. சிற்றுண்டி சாப்பிடப் போகலாம். சாப்பிட்டபடி பேசலாம்,'' என்றான் மைக்கேல்.

மாட்டேன் என்றோ முடியாது என்றோ சொல்வதற்கே

மூலம்: டேனியல் ஸ்டீல்

அவன் இடம் தரவில்லை என்பதை மேரி உணர்ந்தாள். இன்று காலை அவன் உள்ளத்தில் ஒரு புது உறுதி ஏற்பட்டிருப்பது அவளுக்குத் தெரிந்தது. அவளுக்காகவே தன் மற்ற வேலைகளை ஒதுக்கிவிட்டு, வந்திருக்கிறான்.

அந்த உறுதி அவளுக்கு நெகிழ்ச்சியும் அளித்தது. வேடிக்கையாயும் இருந்தது. மீண்டுமொரு முறை அவனுடன் சண்டை போட அவளுக்கு மனம் வரவில்லை.

''உங்களுடன் வர நான் தயாராயில்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் சொல்லப் போவதில்லை,'' என்றாள்.

''அப்பாடா! இப்பத்தான் பரவாயில்லை.'' என்றான் மைக்கேல். ''உன்னை நான் அழைத்துச் செல்லலாமில்லையா?''

''எதில்? அந்த லாரியிலா?'' என்று லாரியைச் சுட்டிக் காட்டிக் கேட்டபோது அவளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

''ஏன் அதற்கென்ன?''

அவளை அழைத்துக்கொண்டு லாரிக்குள் தாவி ஏறினான் அவன். கடற்கரையை ஒட்டினாற் போலிருந்த ஓர் ஓட்டலை அடைந்தான்.

அங்கே எப்போதுமே பல லாரிகள் நிற்பது வழக்கம். அத்துடன் அவ்வளவு பெரிய புகைப் படத்தை யாரும் தூக்கிக் கொண்டு போய்விட முடியாது. எனவே தைரியமாய் லாரியை நிறுத்திவிட்டு உள்ளே சென்றார்கள்.

சிற்றுண்டி வகைகள் சுவையாயிருந்தன. தகராறான விஷயங்களைப் பற்றி இருவருமே பேசவில்லை. காப்பி வந்த பிறகு தான் அவனாகவே ஆரம்பித்தான்.

''என்ன, உன் மனசு மாறிவிட்டது இல்லையா?'' என்றான். காப்பியை உறிஞ்சியபடி அவளை விழிகளை உயர்த்திக் கேட்டபோது அவன் குரல் மிகவும் நம்பிக்கையுடன் தெரிந்தது.

''ஊகூம். ஆனால் உங்களுடன் பொழுது நன்றாகச் சென்றது. தாங்க்ஸ்.''

''சின்ன சமாசாரங்களில் திருப்திப்படுகிறவன் அல்ல நான். என் பாணியே தனி.''

''அப்படியா! தங்கள் பாணி என்ன? தங்கள் வாயினாலேயே சொல்லுங்களேன்?''

''அப்பாடா! இதுவரை நீ தான் என்னைப் பற்றி விமரிசனம் செய்து கொண்டிருந்தாய். முதல் தடவையாக என்னைப் பற்றி நானே சொல்லிக் கொள்ளலாம் என்கிறா யாக்கும்!'' அவன் அவளைச் சீண்டுகிற மாதிரி பேசினான். ஆனால் அவன் குரலில் உண்மையின் தொனியும் தென்பட்டது. நேற்று அவள் கோபமாக வீசிய குற்றச் சாட்டுக்கள் ஓரளவு சரிதான் என்று அவன் உள்ளம் உணர்ந்திருந்தது.

''சரி, என்னைப் பற்றி நானே சொல்லிக் கொள்கிறேன்,'' என்றான். ''நேற்று நீ சொன்னது ஒருவகையில் உண்மைதான். வேலை, வேலை என்று உயிர் வாழ்கிறவன்தான் நான்.''

டேய்!
எப்பப் பார்த்தாலும்
என் முதுகிலே ஏறி
உட்கார்ந்து ஏண்டா
உயிரை எடுக்கறே?

ஊ

—'உ'வின் புலம்பல்



''ஏன்? உங்கள் வாழ்க்கையில் வேறெதற்கும் இடமில்லையா?''

''இல்லையென்று தான் சொல்ல வேண்டும். வெற்றிகரமாக விளங்கும் நபர்கள் எல்லோருமே இப்படித் தான். வேலையைத் தவிர வேறெதற்கும் இடம் இருக்காது.''

''அபத்தம்! தொழிலில் வெற்றியடைவதற்காக மற்றச் சந்தோஷங்களையெல்லாம் விட்டுவிட வேண்டும் என்பதில்லை. சில பேரிடம் இரண்டுமே இருக்கிறது.''

''நீ அப்படியா?''

''இப்போது அப்படியில்லை. ஆனால் என்றாவது ஒரு நாள் நான் வெற்றிகரமாயும் இருப்பேன். வாழ்க்கையின் மற்ற இன்பங்களையும் அனுபவிப்பேன். அப்படி வாழ முடியும் என்று எனக்குத் தெரியும்.''

''இருக்கலாம். நான் கூட ஒரு காலத்தில் அப்படித்தான் இருந்தேன்,'' என்று அவன் சொன்னதைக் கேட்டு அவள் கண்கள் கனிந்தன.

அவன் தொடர்ந்து பேசினான். ''கடந்த சில வருடங்களில் என் வாழ்க்கையில் பெரிய பெரிய மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. ஒரு காலத்தில் நான் மனசில் நினைத்திருந்த திட்டங்களே வேறு. அவ்வளவையும் விட்டு விட்டேன். ஆனால்.... வாழ்க்கையில் வேறு சில நஷ்டஈடுகள் கிடைத்தன!'' என்றான்.

ஆகா! எப்பேர்ப்பட்ட நஷ்டஈடு! மாபெரும் காட்டர்–ஹிலியார்டு ஸ்தாபனத்தின் தலைவர் பதவி! நினைக்கவே எரிச்சலாக இருந்தது அவனுக்கு! ஆனால் அதை வாய்விட்டுச் சொல்லப் பிடிக்கவில்லை.

''உங்களுக்குக் கல்யாணமாகி விட்டதா?''

''இல்லை. அதற்கு நேரம் இல்லை. கல்யாணத்தில் எனக்கு அக்கறையும் இல்லை,'' என்றான் மைக்கேல்.

'அப்படியானால் நாம் கல்யாணம் செய்து கொள்ளாமலிருப்பதும் ஒரு விதத்தில் சரிதான் போலிருக்கிறது!' என்று நினைத்துக் கொண்டாள் மேரி.

''கல்யாணத்தைப் பற்றி ரொம்ப விரக்தியாக இருக்கிறீர்களே?''

''இப்போதைக்கு அப்படித்தான்,'' என்றான் அவன். ''உன் விஷயம் எப்படி? உனக்குக் கல்யாணமாகி விட்டதா?''

''இல்லை. எனக்கும் கல்யாணமாகவில்லை.''

''என் வாழ்க்கை முறையைப் பற்றி அவ்வளவு திட்டினாயே? உன் வாழ்க்கை அப்படியொன்றும் என்னதைவிட வேறு விதமாக இருப்பதாய்த் தெரியவில்லை.'' என்றான் அவன். ''நான் என் தொழிலில் எவ்வளவு வெறியாய் இருக்கிறேனோ



அதேபோல் தான் நீயும் உன் தொழிலில் வெறியாக இருக்கிறாய். நான் எவ்வளவு தனிமை வாழ்க்கை வாழ்கிறேனோ அதேபோல்தான் நீயம் உன்னுடைய சின்ன உலகத்துக்குள்ளேயே சிறைப்பட்டுக் கிடக்கிறாய். அப்புறம் என்னை மட்டும் ஏன் குற்றம் சொல்கிறாய்? கொஞ்சமும் நியாயமில்லை!'' அவன் குரல் மென்மையாக இருந்தாலும் கூட, கண்டனமும் தெரிந்தது.

''ஸாரி, நீங்கள் சொல்வது ஒருவேளை சரிதானோ என்னவோ,'' என்றாள் அவள். அவன் குற்றச்சாட்டுக்குப் பதில் சொல்வது கஷ்டம் என்று அவளுக்குத் தோன்றியது. அவன் சொன்னதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தபோது—

அவன் கை தன் கையைத் தொடுவதை உணர்ந்தாள்.

இதயத்தில் கத்தி செருகுவது மாதிரி இருந்தது.

வேதனையான பார்வையுடன் அவன் கையை விலக்கினாள்.

அதுவரை அவன் முகத்தில் தெரிந்த நிம்மதி உடனே மறைந்தது.

''புரிந்து கொள்ள முடியாத பெண் நீ!'' என்றான்.

''இருக்கலாம். எவ்வளவோ விஷயங்களை விளக்கிச் சொல்ல முடியாது.''

''இப்போது இல்லாவிட்டாலும் வேறொரு நாள் என்னிடம் சொல்லு. நீ நினைக்கிற மாதிரி அரக்கன் இல்லை நான்!''

''உங்களை நான் அப்படி நினைக்கவில்லை,'' என்றாள் மேரி.

அவனை ஏறிட்டு நோக்கினாள். வாய் விட்டு அழ வேண்டும் போலிருந்தது. 'குட்பை' சொல்ல வேண்டிய கட்டம் மறுபடி வந்துவிட்டது என்று தோன்றியது. இழந்தாயிற்று என்று எப்போதோ விட்டு விட்டதை மறுபடி இப்போது அடைந்து மறுபடியும் இழக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள். ஒரு வழியாக எல்லாவற்றுக்கும் முழுக்குப் போட்டு விடலாம். முன்பிருந்த வேதனை இப்போது இருக்காது நிச்சயம்.



''சே! ரிடையர் ஆகாமல் ஆபீஸிலேயே நிம்மதியா இருந்திருக்கலாம், சார்!''

ஒரு சிறிய பெருமூச்சுடன் கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, ''நான் வேலைக்குப் புறப்பட நேரமாகிவிட்டது,'' என்றாள்.

''புகைப்பட விஷயம் நீ ஒப்புக்கொண்டு விட்டதாக நான் எடுத்துக் கொள்ளலாமா?''

''ஊகூம்,'' என்றாள் அவள் பிடிவாதமாக.

அவனுக்கு - ஒரே வெறுப்பாக ஆகிவிட்டது. ஆனால் என்ன செய்வது? விட்டுவிட வேண்டியது தான். மனத்தை மாற்றிக்கொள்ள மாட்டாள். நிச்சயம். எடுத்துக் கொண்ட முயற்சிகள் மொத்தமும் வீண். ரொம்ப முரட்டுப் பிடிவாதம் இந்தப் பெண்ணுக்கு.

இருந்தாலும் அவளை அவனுக்குப் பிடித்திருந்தது. இந்த முரட்டுத்தனமும் பிடிவாதமும் வெளிப்பூச்சு. அவைகளை மறந்துவிட்டு இயல்பாக இருக்கும் சமயங்களில் இவளிடம் ஒரு மென்மை தெரிகிறது. ஒரு கருணை தெரிகிறது. அவை அவனை அவள்பால் ஈர்க்கின்றன. இத்தனை வருடங்களில் யாரும் அவனை இந்த அளவுக்கு ஈர்த்தது கிடையாது.

''இன்று ராத்திரி என்னுடன் டின்னர் சாப்பிட வருவாயா, மேரி? வியாபார விஷயத்தில் தான் நான் தோற்றுப்போய் விட்டேன். எனக்கு ஓர் ஆறுதல் பரிசாவது கொடுக்கக் கூடாதா?''

அவள் அவன் முகத்தைப் பார்த்தாள். மெல்லச் சிரித்துவிட்டு அவன் கைகளைத் தட்டிக் கொடுத்தாள்.

''உங்களுடன் டின்னர் சாப்பிட எனக்கும் இஷ்டம்தான். ஆனால் இன்றைக்கு வேண்டாம். நான் வெளியூருக்குப் போக வேண்டி யிருக்கிறது,'' என்றாள்.

சே! இரண்டாம் தடவையும் தோல்வி! மைக்கேல் நொந்து கொண்டான்.

''எந்த ஊருக்குப் போகிறாய்?''

''கிழக்குப் பக்கம். அங்கே கொஞ்சம் சொந்த வேலை இருக்கிறது.'' சென்ற அரை மணி நேரத்துக்குள் அவள் எடுத்திருந்த முடிவு அது. அடுத்து என்ன செய்யப் போகிறோம் என்று இப்போது தெளிவாகப் புரிந்தது.

கடந்த காலத்தைக் குழிதோண்டிப் புதைப்பதல்ல. குழி தோண்டிப் புதைத்ததை வெளியெடுத்துத் தூக்கி எறிய வேண்டியது. அதுதான் அடுத்த வேலை. டாக்டர் பீட்டர் சொன்னது ஒருவகையில் உண்மைதான். ''ரணத்தை ஆற்றிக் கொள்!'' என்றார். ஆம், ஆற்றிக் கொள்ள வேண்டியதுதான்.

''அடுத்த முறை சான்பிரான்ஸிஸ்கோ வரும்போது உன்னைச் சந்திக்கிறேன். அப்போதாவது அதிர்ஷ்டம் அடிக்கிறதா பார்க்கலாம்,'' என்றான் மைக்கேல்.

'அதற்குள் நான் மிஸஸ் பீட்டர் ஆகியிருப்பேன். என் ரணங்கள் ஆறி எனக்கு அதிர்ஷ்டம் அடித்திருக்கும். அதற்கப்புறம் கவலையில்லை. எந்தக் கவலையும் இல்லவே இல்லை!' என்று மேரி நினைத்துக் கொண்டாள்.

(தொடரும்)

கோபமாய் இருந்த
ஆபீஸ் பையன்
கொண்டு வந்த
கூல்டிரிங்க்
கொதித்ததே!

—சிரிவாசன்




வெண்பாவும் அல்ல வேறு பாவும் அல்ல. இது சிரி—பா.

—கோபுலு

# இதய மேடை இணை



**50**

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்

மைக்கேலும் மேரியும் மேற்கொண்டு எதுவும் பேசாமல் லாரியில் ஏறிக்கொண்டார்கள்.

அவளை அவள் வீட்டு வாசலில் மைக்கேல் இறக்கி விட்டான். பிரியும்போது அவள் இரண்டொரு வார்த்தைதான் பேசினாள். காலைச் சிற்றுண்டி அழைத்துப் போனதற்கு நன்றி கூறிவிட்டு மாடிப்படிகளில் ஏறினாள்.

இவளை இழந்துவிட்டோம் என்று மைக்கேல் எண்ணிக்கொண்டான். அவள் செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்தபோது எல்லையற்றதோர் சோகம் அவன் மனத்தை அழுத்தியது. வாழ்க்கையில் முக்கியமான ஏதோவொன்றை இழந்துவிட்டது போன்ற சோகம். ஆனால் எதை இழந்தோம் என்று அவனுக்குப் புரியவில்லை. ஒரு பிஸினஸா? ஒரு பெண்ணா? ஒரு நண்பனா? எதை இழந்தோம்?

தன்னந்தனியாய் நிற்கிறோம் என்ற எண்ணம் ரொம்ப ரொம்ப நாளைக்குப் பிறகு அவன் மனத்தைச் சூழ்ந்துகொண்டது.

மூலம்: டேனியல் ஸ்டீல்

அந்தத் தனிமை அவனுக்குத் தாளவில்லை.

கியரை மெல்லப் போட்டான். சிந்தனையில் ஆழ்ந்த வாறே லாரியைத் தன் ஓட்டலுக்கு மெதுவே ஓட்டிச் சென்றான்.

மேரி, அறைக்குள் நுழைந் ததுமே போனைத்தான் எடுத்தாள். டாக்டர் பீட்டரைக் கூப்பிட்டு, அன்றிரவே அவரைப் பார்க்க வேண்டும் என்று சொன்னாள்.

''இன்றிரவா? எனக்கு ஒரு மீட்டிங் இருக்கிறதம்மா,'' என்றார் டாக்டர். பல நோயாளிகள் காத்துக் கொண்டிருக்கும்போது பேசுகிறார் என்ற அவசரம் அவர் பேச்சில் தெரிந்தது.

''அப்படியானால் மீட்டிங் முடிந்ததும் வாருங்கள். ரொம்ப முக்கியம். நாளைக்கு நான் வெளி யூருக்குப் புறப்படுகிறேன்.''

''எந்த ஊருக்கு? எத்தனை நாளாகும் திரும்பி வர?'' என்று டாக்டர் கேட்டார். அவர் கேள் வியில் கவலை தொனித்தது.

''நேரில் பார்க்கும்போது சொல்கிறேன். இன்றிரவு வரு கிறீர்கள். சரிதானே?''

''சரி, சரி. பதினொரு மணி சுமாருக்கு வருகிறேன். நீ இப்படி அவசரப்படுவது மடத்தனமாக இருக்கிறது. அப்படி என்ன விஷயம்? கொஞ்சம் தள்ளிப் போட முடியாதா?''

''ஊகூம். முடியாது,'' என்றாள் மேரி. 'ஏற்கெனவே இரண்டு வருஷமாகி விட்டது. இத்தனை நாள் தள்ளிப் போட்டதே மடத்தனம்' என்று நினைத்துக் கொண்டாள்.

''ஆல்ரைட், ராத்திரி வந்து பார்க்கிறேன்,'' என்று அவசரமாகச் சொல்லிவிட்டுப் போனை வைத்தார் டாக்டர்.

அவள் மறுபடியும் போனைச் சுழற்றி, பிரயாணத்துக்கு ரிசர் வேஷன் செய்து கொண்டாள். நாய்க்குட்டி ஃப்ரெட்டைப் பார்த்துக் கொள்ளும்படி ஒரு பிராணி நல சங்கத்தில் ஏற்பாடு பண்ணினாள்.

**அ**ன்று பிற்பகலே டாக்டர் அல்லிஸனைப் பார்க்க நினைத் தாள். நல்ல வேளையாக, ஏற்கெனவே அப்பாயின்ட்மெண்ட் வாங்கியிருந்த ஒருவர் அதை ரத்து செய்துவிட்டதால் அந்த நேரம் மேரிக்குக் கிடைத்தது.

இங்கே வந்து எத்தனை மாதங்களாகிறது! வசதியாக இருந்தது. கணப்பு எரியவில்லை. அதனருகே போட்டிருந்த சாய்வுப் படுக்கையில் சாய்ந்து கொண்டாள். கால்களை நீட்டிக் கொண்டாள். மெல்லிய செருப்பு அணிந்த கால்களை வெறித்துப் பார்த்தபடி படுத்திருந்தாள். அவள் எண் ணங்கள் எங்கெங்கோ பறந்து கொண்டிருந்ததால் டாக்டர் அல்லிஸன் வரும் சத்தம் கூடக் கேட்கவில்லை.

''என்ன, தூக்கமா, தியானமா?'' என்று டாக்டர் அல்லிஸன் கேட்டதும் மேரி விழித்துக்கொண்டு புன்னகை புரிந் தாள். ''சும்மா ஏதோ யோசனை. உங்களை பார்க்க வேண்டு மென்று தோன்றியது. அதுதான் வந்தேன்,'' என்றாள். மறுபடியும் இங்கே வந்ததில் அவளுக்கு ஏதோ ஒருவித மனநிறைவு ஏற் பட்டிருந்தது. தாய் வீட்டில் இருப்பதுபோல ஒரு பத்திர உணர்வு, —பழகிய இடத்தில் இருப்பது போல ஒரு மகிழ்ச்சி.

---

''பக்கத்து நாட்டு மன்னன் படையுடன் வருகிறானா, ஏன்?''

''அவர்கள் நாட்டில் ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட் இல்லையாம், மன்னா.''

—எஸ். மோகன்.

(போர் பற்றி ஒரு bore விக்ரமன்)



இதே அறையில் எவ்வளவோ ஆறுதல்களையும், எவ்வளவோ மனச் சுமைகளையும் பெற்றது அவளுக்கு ஞாபகம் வந்தது.

''நீ இப்ப எவ்வளவு அழகாயிருக்கிறாய் தெரியுமா, மேரி? ஆனால் எல்லாரும் இப்படிச் சொல்வதைக் கேட்டுக் கேட்டு உனக்கு அலுத்துப் போயிருக்கும்!''

பெருமை பொங்க மேரியை அவள் பார்த்ததும் மேரி சிரித்து விட்டாள். ''இல்லை டாக்டர்! எத்தனை தடவை கேட்டாலும் அது அலுக்காது!'' என்றாள். அல்லிஸன் ஒருத்தியிடம்தான் அவளால் மனம் விட்டுப் பேச முடிந்தது. ''நான் எதற்கு இன்றைக்கு வந்திருக்கிறேன் என்று நீங்கள் ஆச்சரியப்படுகிறீர்கள். இல்லையா?'' அல்லிஸனை நேருக்கு நேர் நோக்குகையில் மேரியின் புன்னகை மறைந்து தீவிரம் படிந்தது.

''கொஞ்சம் ஆச்சரியம்தான்,'' என்றாள் அல்லிஸன். ஒரு கணம் இருவரும் மின்னலென ஒரு புன்னகையைப் பரிமாறிக் கொண்டார்கள். ஆனால் மேரி தன்னுள் தானே ஆழ்ந்தவளாக, மெதுவாய், ''நான் மைக்கேலைப் பார்த்தேன்,'' என்றாள்.

''அட! அவன் உன்னைக் கண்டுபிடித்து விட்டானா, என்ன?'' அல்லிஸனுக்கு ஒரே ஆச்சரியம். மேரியுடன் பேசுவதில் ஒரு புது அக்கறை பிறந்தது.

''கண்டுபிடித்தான் என்றும் சொல்லலாம். கண்டுபிடிக்கவில்லையென்றும் சொல்லலாம்.'' என்றாள் மேரி. ''அவன் பார்த்தது நான்ஸியை அல்ல. மேரியை. என்னை மேரி என்று நினைத்துக் கொண்டு பேசினான். அவனுடைய உதவியாளர் ஒருவர் என் புகைப்படங்களை வாங்குவதற்காக என்னைத் துரத்து துரத்தென்று துரத்திக் கொண்டிருக்கிறார். அவர்களுடைய நிறுவனமான காட்டர்—ஹிலியர்டு இந்த ஊரில் ஒரு மருத்துவ மையம் கட்டிக்

## மனதுக்குப் பாடம் சொன்ன

உண்மைதான் பாலகுமாரா! உன்னிடத்தில் என்னைக் கொடுத்தேன்.

கலவை, எஸ். இராஜேந்திரபாபு

'தான்' என்ற 'ஈகோ'வின் மூலம், மனிதன் நிம்மதியையும் – சந்தோஷங்களையும் இழக்கிறான் என்பதை, 'விவேக்'கின் அனுபவங்களில் விளக்கிய விதம் – அற்புதம்!

எம். சம்பத்,
வேலாயுதம்பாளையம்

எங்கள் மனதுக்குப் பாடம் நடத்திய பாலகுமாரனுக்கு நன்றி.

சி. மாணிக்கம்,
கடையாலுருட்டி

அசட்டு, பிசட்டு என்று கற்பனையை வளரவிடாமல் யதார்த்தமாகக் கதை எழுதிய பாலகுமாரனுக்கு நன்றி.



கிருஷ்ணகிரி, ஆர். சரவணன்

அழகான நடை, ஆழமான உணர்ச்சிபூர்வமான சம்பவக் கோவைகள்.

அடியக்கமங்கலம்,
ஏ. ஹாஜா முஹம்மது நத்தர்

'உன்னிடத்தில் என்னைக் கொடுத்தேனில்' சிற்சில இடங்களில்தான் பாலகுமாரன் தலையை காட்டுகிறார். வேஸ்ட்.

விளாத்திகுளம்,
த. பாரத்பிரபு

காரமில்லாத பாப்கார்ன் கொறித்ததுபோல் இருந்தது.

வேடசந்தூர்,
கே. பொம்முசாமி

லைம்

ஸின்த்தா




அனைத்திலும் புத்துணர்ச்சிமிக்க லைம் சோப்

அனைத்திலும் உன்னதமான லைம் சோப்

துர்நாற்றம் அகற்றும் ஒரே லைம் சோப்




இயக்குனர் மணிவண்ணனிடம் நான் உதவி இயக்குனராக இருந்த போது நிறையப் புதுக் கவிதைகள் எழுதுவேன்.

கொண்டிருக்கிறது. என் புகைப் படங்களைப் பிரம்மாண்டமாய் என்லார்ஜ் செய்து அந்தக் கட்டிடத்தில் பல இடங்களில் வைத்து அலங்கரிக்க வேண்டுமாம்.''

''அட! உனக்குப் பிரமாதமான பாராட்டுதான் அது!''

''அந்தப் பாராட்டைத் தூக்கிக் குப்பையில் போடுங்கள்! எனக்குத் துளியும் அதிலே அக்கறை இல்லை. என் படங்களைப் பற்றி மைக்கேல் என்ன நினைத்தால் எனக்கென்ன!'' என்றாள் மேரி. ஆனால் நாம் சொல்வது உண்மையல்ல என்று அவள் மனத்துக்கே தோன்றியது. அவன் அவள் படைப்பைப் புகழ்ந்தபோது மனத்துக்கு எவ்வளவு ஆனந்தமாயிருந்தது! மறுபடியும் அவனுடைய கவனத்தைக் கவர்ந்திருக்கிறோம் —தன் புகைப்படங்கள் மூலம் என்று எண்ணுகையில் மனத்தில் ஒரு திருப்தி உதிக்கிறதே, அது பொய்யா?

''கொஞ்ச நாள் முன்பு மைக்கேலின் அம்மா இங்கே வந்திருந்தாள். அவளிடமும் என் படங்களைத் தருவதற்கில்லை என்று சொல்லிவிட்டேன். ஆமாம்! எனக்கு இதில் கொஞ்சமும் அக்கறையில்லை. அவர்களுக்குப் படம் விற்க போவதில்லை. அவர்களுடன் எந்த வியாபாரத் தொடர்பும் வைத்துக் கொள்ள நான் தயாராயில்லை. அவ்வளவுதான். ஃபுல்ஸ்டாப்!''

''அவர்கள் உன்னை விடாமல் கேட்டுக் கொண்டேயிருக்கிறார்களா?''

''துளைத்தெடுக்கிறார்கள்.''

''சந்தோஷமான விஷயம். நீ யாரென்பது அவர்களில் யாருக்கேனும் தெரிந்திருக்குமா?''

''பெண்ணுக்குத் தெரியாது. ஆனால் மைக்கேலின் அம்மாவுக்குத் தெரிந்துவிட்டது. தெரிந்ததால்தான் என்னைப் பார்க்க வந்திருந்தாள் என்று தோன்றுகிறது,'' என்று கூறிவிட்டு மேரி மௌனமானாள் தன் கால்களையே கண்ணிமைக்காமல் பார்த்தபடி.

பல நாட்களுக்கு முன் மரியமைத் தன் ஓட்டல் அறையில் சந்தித்த காட்சியில் அவள் நினைவு மூழ்கியது.

''மரியமைப் பார்த்தபோது உனக்கு எப்படி இருந்தது?'' என்றாள் அல்லிஸன்.

''ரொம்ப ஆத்திரமாயிருந்தது. என் வாழ்க்கையை எப்படியெல்லாம் அவள் நாசம் பண்ணிவிட்டாள் என்று ஞாபகம் வந்தது, மகா வெறுப்பு ஏற்பட்டது.''

இன்னும் பன்மடங்கு அதிக வெறுப்பு ஏற்பட்டிருந்தபோதிலும் அதைத் தன் குரலில் வெளிப்படுத்தாமலிருந்தாள் என்று அல்லிஸனுக்குத் தோன்றியது.

''அப்புறம்?''

''அப்புறமென்ன?'' ஒரு பெருமூச்சுடன் நிமிர்ந்து உட்கார்ந்தாள் மேரி. ''பழைய ரணமெல்லாம் மறுபடி ஏற்படுகிற மாதிரி இருந்தது. இதே மரியமுக்கு என்னைப் பிடிக்க வேண்டும், அவள் என்னை நேசிக்க வேண்டும், மைக்கேலின் மனைவியாக என்னை

ஒரு நாள் அதையெல்லாம் அவரிடம் காட்டினேன். ''புதுக் கவிதை ஒரு மாயை! அதைப் பத்தியே யோசிச்சுக்கிட்டு இருந்தா அதிலிருந்து மீளவே முடியாது! புதுக்கவிதை எழுதுற நேரத்தில ஏதாச்சும் சீன் பத்தி யோசி. உனக்கு ரொம்ப பிரயோசனமாயிருக்கும்'' என்றார் அவர். அன்றிலிருந்து விட்டேன் கவிதையை. அவர் சொல்லிக் கொடுத்த பாடம் புது வசந்தத்தில் 'மார்க்' வாங்க ரொம்ப உபயோகப்பட்டது.

—விக்ரமன்

ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் ஒருகாலத்தில் நான் எத்தனை ஆசைப்பட்டேன்!''

''இப்போதும் அவளுக்கு உன்னைப் பிடிக்கவில்லையா?''

''நிச்சயமாய்ச் சொல்லத் தெரியவில்லை. இப்போது அவள் ஒரு நோயாளி. அதனால் மாறிய மாதிரி தெரிகிறாள். தான் செய்த காரியத்துக்காக சிறிது வருத்தப் படுகிற மாதிரி தோன்றியது. அத்தோடு, இந்த இரண்டு வருஷம் மைக்கேல் சந்தோஷமாகவே இல்லை யென்றும் தெரிகிறது.''

''அதைப் பற்றி என்ன நினைக்கிறாய்?''

''ஒன்றும் தோன்றவில்லை.'' களைப்பாயிருந்ததால் ஒரு பெரு மூச்சுடன் மேரி சொன்னாள். ''மைக்கேல் சந்தோஷமாயிருந்தால் என்ன, இல்லாவிட்டால் என்ன— எனக்கு எந்தச் சம்பந்தமும் இல்லை. எங்களுக்குள் எல்லாம் முடிந்து விட்டது, டாக்டர். எல்லாம் பழங் கதை. பல வருடங்களுக்கு முன் நடந்த கதை. அவரும் மாறியாச்சு. நானும் மாறியாச்சு. இப்போது அவர் வந்ததுகூட நான் யாரென்று தெரிந்ததால் அல்ல. புகைப்படங்கள் வாங்குவதற்காகத்தான் வந்தார். இன்னும் சொல்லப் போனால், நான் யாரென்பது தெரிந்தால் படங்கள் கூட வேண்டாமென்று சொன்னாலும் சொல்லிவிடுவார். ஆனால் நானும் பழைய நான்ஸி அல்ல. அவரும் எனக்குத் தெரிந்த பழைய மைக்கேல் அல்ல.''

''எப்படி அவ்வளவு நிச்சயமாய்ச் சொல்கிறாய்?''

''நேரில்தான் பார்த்து விட்டேனே? அலட்சியம், அழுத்தம் பிஸினஸே மூச்சு —இப்படி இருக்கிறார். எனக்குச் சொல்லத் தெரியவில்லை. அவரிடம் என்னென்னமோ புதிதாய்த் தெரிகிறது.''

''என்ன புதிதாய்? வேதனையா? எதையோ இழந்து விட்டோம் என்ற உணர்வா? ஏமாற்றமா? துயரமா?''

''இல்லையில்லை. துரோகம்! நம்பியவளை நட்டாற்றில் விடும் நீசத்தனம்! கோழைத்தனம்! அப்படித்தான் இருக்கும்.''

''மைக்கேலைப் பார்த்த போது உனக்கு அப்படித்தான் தோன்றியதா, மேரி?''

''ஆமாம்,'' என்றாள் மேரி. அவள் குரல் மீண்டும் தீவிரப் பட்டது. ''அவரை நான் வெறுக்கிறேன்.''

''அப்படியானால், அவனைப் பற்றி நீ இன்னும் நிறையவே அக்கறைப்படுகிறாய் என்றுதான் அர்த்தம்!'' என்றாள் அல்லிஸன்.

அதை மறுக்க வேண்டுமென மேரி தலையை அசைத்தாளே தவிர, அவள் கண்கள் குளமாகி நின்றன. நீண்ட நேரத்துக்கு எதுவும் பேசாமல் அல்லிஸனையே பார்த்தபடி இருந்தாள்.

அல்லிஸன் மெல்ல அவள் தோளைத் தட்டினாள். ''நான்ஸி, இப்போதும் நீ மைக்கேலைக் காதலிக்கிறாய். இல்லையா?'' என்றாள்.

(தொடரும்)

1. மௌன ராகம் பாடும் வளர்பிறை



2. ரோஜாவைத் தாலாட்டும் தென்றல்



3. வ[illegible]ணா மலராக வந்தாயே செல்லக் கண்ணே
மண[illegible]ளாக செய்வாரோ உன்னை நாளை?



4. வானம் பார்க்கும் பூமி.

ஒளிப்பதிவாளர் பி.சி. ஸ்ரீராமிடம், "தாங்கள் எடுத்த புகைப்படங்களிலேயே தலைசிறந்த புகைப் படம் எது?" என்று கேட் டேன்.

"என் படைப்புகளிலேயே சிறந்த படைப்பு என் மகள் சுவேதாதான்," என்றார் அவர்.

—விக்ரமன்

தமிழில்:
ரா.கி.ரங்கராஜன்




# 51

வேண்டுமென்றே அவளை மேரி என்று கூப்பிடாமல் நான்ஸி என்று அழைத்தாள் டாக்டர் அல்லிஸன்.

ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது மேரியிடமிருந்து. எழுந்து உட்கார்ந்தவள் மீண்டும் சாய்ந்து கொண்டாள். விட்டத்தைப் பார்த்தபடி இருந்தன அவள் கண்கள். ஏற்ற இறக்கமில்லாத, குரலில் பேசினாள்: ''நான்ஸிக்கு— அல்லது நான்ஸி என்ற பெண்ணின் மிச்சசொச்சம் ஏதேனும் இருந்தால் அதற்கு— மைக்கேலிடம் காதல் இருக்கக் கூடும். ஆனால் மேரிக்குக் கிடையாது. இப்போது எனக்குப் புது வாழ்க்கை ஏற்பட்டாகி விட்டது. மைக்கேலைக் காதலிப்பது அர்த்தமற்ற வேலை.'' டாக்டர் அல்லிஸனை ஏறிட்டு நோக்கிய போது மேரியின் முகத்தைச் சோகம் அப்பியிருந்தது.

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

''ஏனா? அவர் என்னைக் காதலிக்கவில்லை. அதுதான் காரணம். காதல் என்ற வார்த்தையே போலியாகிவிட்டது. அதுதான் காரணம். பழசையெல்லாம் நான் விட்டுவிட வேண்டும். அடியோடு, பரிபூரணமாக, முழுக்க முழுக்க விட்டு விட வேண்டும். ஆனால் இன்று நான் இங்கே வந்தது அந்த விஷயத்துக்காக இல்லை. மைக்கேலை இன்னும் நான் காதலிக்கிறேன் என்று சொல்லி உங்கள் தோளில் சாய்ந்துகொண்டு அழுவதற்காக வரவில்லை., என் மனசில் இருப்பதை யாரிடமாவது சொல்ல வேண்டும் போலிருந்தது. என் உள்ளத்திலிருக்கும் பாரத்தை இறக்க வேண்டியிருந்தது. டாக்டர் பீட்டரிடம் சொல்வேன். ஆனால் அவர் ரொம்பக் கவலைப்படுவார்.''

''நீ இங்கே வந்ததைப் பற்றி எனக்குச் சந்தோஷம் மேரி. ஆனால் உன் மன ஆழத்திலிருந்து மைக்கேல் மீதிருக்கும் காதலை அவ்வளவு சுலபமாய் விட்டுவிட முடியுமென்றா நினைக்கிறாய்?''

''ஆமாம்! விட்டுவிட முடியும்! இரண்டு வருஷத்துக்கு முன்பே அது என்னை விட்டுவிட்டுப் போய்விட்டது. நான்தான் பைத்தியக்காரி போல் அதைப் பிடித்துத் தொங்கிக்கொண்டிருந்தேன்,'' என்றாள் மேரி அழுத்தம் திருத்தமாய்.

நிமிர்ந்து எழுந்து உட்கார்ந்தவள் டாக்டர் அல்லிஸனை நேருக்கு நேராகப் பார்த்தாள். ''நாளை பாஸ்டனுக்குச் செல்கிறேன். அங்கே ஒரு காரியம் இருக்கிறது.''

---

மூலம்: டானியேல் ஸ்டீல்

''காரியமா? என்ன காரியம்?''

''உதறி எறிகிற காரியம்!'' கடந்த ஒரு மணி நேரத்தில் முதல் தடவையாக மேரியின் உதட்டில் புன்னகை பூத்தது. ''நான் அரை குறையாய்ச் சில வேலைகளை அங்கே விட்டு வைத்துவிட்டேன். நானும் மைக்கேலும் பகிர்ந்து கொண்ட சில வேலைகள். அவன் ஒரு நாள் என்னிடம் திரும்பி வருவான் என்று நிச்சயமாய் நம்பி யிருந்தேன். அதனால் என் காதலுக்கு நினைவுச் சின்னமாய் ஒன்று விட்டு வைத்திருந்தேன். இப்போது போய் அதை அழித்தாக வேண்டும்.''

''நிஜமாகவே உன் காதலைத் துறக்க முடியுமென்று நினைக் கிறாயா மேரி?''

''ஆமாம்.''

மனோத்தத்துவ டாக்டரான அல்லிஸனுக்குக் கூட அவள்



போலியாகச் சொல்லாமல் நிஜமாகத்தான் சொல்கிறாள் என்று தெரிந்தது.

''உண்மையில் நீ விரும்புவது அதுதானா?''

''ஆமாம்.''

''நீ யாரென்பதை, யாராக இருந்தாய் என்பதை, மைக் கேலுக்குச் சொல்லிப் பாரேன்? என்ன நடக்கிறது என்று பாரேன்? அது உனக்குப் பிடிக்கவில்லையா?''

மேரியின் உடல் ஒரு முறை குலுங்கி அடங்கிற்று. ''வேண்டாம், வேண்டாம். அந்தக் கதை முடிந் தாகி விட்டது. என்றைக்குமாக முடிந்துவிட்டது. அத்துடன்... அத்துடன்...'' ஒரு பெருமூச்சு விட்டவள், தலை குனிந்து, தன் கைகளைப் பார்த்த வண்ணம் சிறிது நேரம் இருந்த பிறகு, மெதுவே சொன்னாள். ''நான் டாக்டர் பீட்டருக்கு உண்மையாக இருக்க வேண்டும்.''

''உனக்கு உண்மையாக இருக்க வேண்டாமா? அதை முதலில் பாரேன் மேரி!''

---



கல்யாண வீட்டில் சாப்பிடுபவர்: ''என்னங்க, பாயசத்துல நிறைய புளியங் கொட்டை?''

பாயசம் ஊற்றுபவர்: ''முந்திரிப் பருப்புன்னா ஆளுக்கு ஒண்ணு, ரெண்டுன்னு எண்ணித் தானே போட முடியும்... புளியங் கொட்டைன்னா எண்ண வேண்டாம் பாருங்க. அதான்!

ஜி. குருசாமி

என் கமெண்ட்:

''ஐய்ய்யோ...''



''ஆமாம். நான் பாஸ்டனுக்குப் போவதே அதற்காகத்தான். போய் வந்த பிறகு என் மனசில் ஒரு நிம்மதி இருக்கும். டாக்டர் பீட்டரை மணந்து கொள்ள எந்தச் சங்கடமும் இருக்காது. அவர் எவ்வளவு நல்ல மனிதர்! என் பொருட்டு அவர் எவ்வளவு செய்திருக்கிறார்!''

''அதெல்லாம் சரி. ஆனால் அவரை நீ காதலிக்கவில்லை, மேரி!''

அந்தச் சொற்களைக் கேட்ட மாத்திரத்தில் தூக்கி வாரிப் போட்டது. அவள் மனசுக்குள் இருந்ததை வேறு யாரோ சொல்கிற மாதிரி ஒலித்தது. அவளைப் பயம் பிடித்தாட்டியது. ''இல்லை, இல்லை! நான் டாக்டர் பீட்டரைக் காதலிக்கிறேன்!'' என்று கூறினாள்.

''பின்னே ஏன் ஏதோ சங்கடம் இருக்கிற மாதிரியும் அதை நீக்கிக் கொள்கிற மாதிரியும் பேசுகிறாய்?''

''எனக்கும் பீட்டருக்கும் குறுக்கே மைக்கேல் நின்று கொண்டிருக்கிறானே?''

''அது சும்மா, நீயாகக் கற்பனை பண்ணி வைத்திருக்கிற சாக்கு!''

''என்னவோ எனக்குத் தெரியவில்லை.'' ரொம்ப நேரத்துக்கு மேரி எதுவும் பேசாமலே இருந்தாள். பிறகு, ''ஏதோ ஒன்று என்னைத் தடுத்துக் கொண்டே இருக்கிறது. அல்லது தடுக்கிற மாதிரி ஒரு பிரமை. ஒரு சமயம் மைக்கேலுக்காகவே நான் காத்துக் கொண்டிருக்கிற மாதிரி தோன்றுகிறது. ஒரு சமயம் அவனைப் பற்றி நமக்கென்ன என்று தோன்றுகிறது. அதனால் தான் டாக்டர் பீட்டரைப் பற்றி நினைக்கிறபோது என்னவோ ஒன்று சரியில்லை என்பது போலத் தோன்றுகிறது.''

''என்ன சரியில்லையென்று?''

''நிச்சயமாய்ச் சொல்லத் தெரியவில்லை. உண்மையான என்னை டாக்டர் பீட்டருக்குத் தெரியாதே என்று நினைக்கிறேன். மேரி என்கிற என்னைத்தான் அவருக்குத் தெரியும். ஏனெனில் இந்த மேரியைப் படைத்தவரே அவர்தான். ஆனால் அதற்கு முன்னிருந்த என்னை, விபத்துக்கு முன்பு எனக்கிருந்த உணர்ச்சிகளை, என் மனத்தை, பீட்டருக்குத் தெரியாது.''

''நீ சொன்னால் புரிந்து கொள்வார் இல்லையா?''

''கொள்ளலாம். ஆனால் அவருக்கு அவ்வளவு தூரம் அக்கறை இருப்பதாகத் தெரியவில்லை. என்னை எனக்காகவே காதலிக்கிறார் என்று சொல்ல முடியவில்லை.''

''சரி, விடு. உலகத்தில் வேறு ஆணே இல்லாமலா போய் விட்டார்கள்?''

''இருக்கலாம். ஆனால் பீட்டர் நல்லவர். எனக்கென்னவோ அவரை மணந்துகொண்டால் வாழ்க்கை நன்றாக அமையும் என்று




ஆசிரியர், சக ஆசிரியரிடம்:

''பேட்டை ரவுடியோட மகன் கிட்டே 'மாதம் மும்மாரி'ன்னா என்னன்னு கேட்டா 'மொள்ளமாறி, கேப் மாறி, சோமாறி'ன்னு சொல்றான்.''

—டி.என். பாலகிருஷ்ணன்

என் காமெண்ட்::

''ஹ... ஹ... ஹ...!'' —பூ.

தோன்றுகிறது.''

''ஆனால் அவரிடம் உனக்குக் காதல் இருக்க வேண்டுமே?'' என்றாள் அல்லிஸன் மீண்டும்.

''இருக்கிறது. நான் அவரைக் காதலிக்கிறேன்,'' என்றாள் மேரி. திரும்பத் திரும்ப அல்லிஸன் இப்படிக் குடைவது அவளுக்கு எரிச்சலாக இருந்தது.

''சரி, அலட்டிக் கொள்ளாமல் இரு. உன் பிரசினை உன் தானாகவே தீர்ந்துவிடும். மைக்கேலைப் பற்றி மட்டும் ஒரு தீர்மானத்துக்கு வா!''

''இப்போது ஊருக்குப் போவதே அதற்காகத்தான். திரும்பியதும் சுதந்திரம்! விடுதலை!''

''ஆல்ரைட், அப்படியே செய். ஊரிலிருந்து திரும்பியதும் என்னை வந்து பார். பார்ப்பாயில்லையா?''

''நிச்சயமாய், டாக்டர்!'' மேரியின் உள்ளம் சற்றே அமைதி அடைந்திருந்தது.

டாக்டர் அல்லிஸன் கைக்கடியாரத்தைப் பார்த்துவிட்டு எழுந்து கொண்டாள். பல்கலைக் கழகத்தில் ஒரு வகுப்பு நடத்த வேண்டியிருந்தது. ஏற்கெனவே ஒன்றரை மணி நேரம் ஓடிவிட்டது. ''வந்ததும் என்னைக் கூப்பிடுவாய் இல்லையா?''

''வந்த நிமிஷமே.''

''ரைட். அங்கே போனதும் சும்மாவானும் உன்னை நீயே போட்டு வதைத்துக் கொள்ளாதே. பழசை நினைத்து அலட்டிக் கொள்ளாதே. என்ன? ஏதாவது பிரசினையானால் என்னைக் கூப்பிடு.''

மேரி புறப்பட்டபோது, காலையிலிருந்து மனத்தை அடைத்துக் கொண்டிருந்த சுமைகள் நீங்கிவிட்ட மாதிரி இருந்தது.

அடுத்து, டாக்டர் பீட்டரைச் சந்திக்கப் போகிறோம், நம் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்தப் போகிறோம், அதில் எந்தக் கஷ்டமும் இருக்காது என்றெல்லாம் எண்ணியவாறு மேரி புறப்பட்டாள்.

டாக்டர் பீட்டர் அவருடைய வழக்கத்துக்கு விரோதமாக அலுப்பும் சலிப்புமாயிருந்தார். புதிய மருத்துவ மையம் பற்றிய கமிட்டியில் அவரை ஓர் உறுப்பினராகப் போட்டிருந்தார்கள். அதுவே அவருக்குப் பிடிக்கவில்லை. அது சம்பந்தமாக ஆர்க்கிடெக்டுகளுடன் நாள்பூரா விவாதம் பண்ணிப் பண்ணி அவருக்குக் களைப்பாகி விட்டது. 'எதற்காக இவர்கள் நம் பிராணனை எடுக்க வேண்டும்? வேறு எவ்வளவோ வேலைகள் நமக்கு இருக்கின்றன!' என்று அவர் முணுமுணுத்துக் கொண்டிருந்த சமயம் மேரி அவரைப் பார்க்க வந்தாள்.

பாஸ்டனுக்குப் போகப் போகிறேன் என்று அவள் சொன்னது அவருக்குப் பிடிக்க

உதவி இயக்குனர்கள் புரொடக்ஷன் மானேஜர் மேக்கப் மேன்கள் உட்பட பதினாறு சினிமா டெக்னீஷியன்கள் சேர்ந்து எடுத்து வரும் படம், 'புது வாரிசு'. இந்தப் படத்தில் கதாநாயகியாக நடித்து வரும் ரோகிணிக்குச் சம்பளம் கொடுத்தபோது வாங்க மறுத்துவிட்டாராம். ''தொழிலாளர்களுக்காக இதுகூட நான் செய்யக் கூடாதா? முன்பு இதே மாதிரி பல டெக்னீஷியன் சேர்ந்து தயாரித்த 'தென்பாண்டி சீமையிலே' படத்திற்கு இசையமைத்த பாக்யராஜ் பைசா வாங்கவில்லை என்று கேள்விப்பட்டேன். அதேப்போல் நாமும் ஏன் உதவி செய்யக் கூடாது என்று நினைத்துத்தான் வேண்டாம் என்றேன். ஆனால் தயாரிப்பாளர்கள் விடவில்லை. நியாயமான ஒரு தொகையை கொடுத்து நான் வாங்கிக் கொண்ட பிறகுதான் நடிக்க அழைத்தார்கள்,'' என்கிறார் ரோகிணி.



—ரா.

வில்லை. ''பாஸ்டனுக்கா? எதற்காக அங்கே போகிறாய்? புரியவில்லையே? உனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா என்ன?''

''நல்ல அறிவோடுதான் பேசுகிறேன், டாக்டர். நான் போய்த்தான் ஆக வேண்டும். இத்தோடு சரி. எல்லாம் முடிந்து விடும். என் கடந்த கால வாழ்க்கைக்கு முழுக்குப் போட்டு விடுவேன்!''

டாக்டர் கேலியாகச் சிரித்தார். ''கடந்த காலத்துக்கு முழுக்குப் போடப் போவதாகவாச் சொல்கிறாய்? அதனால்தான் அன்றைக்கு நம் மீது ஒரு லாரி மோத வந்ததும் அப்படியொரு கத்தல்—ஹிஸ்டீரியா பிடித்த மாதிரிக் கத்தினாயாக்கும்! இல்லை மேரி! கடந்த காலம் இன்னும் உனக்கு மறந்து போகவில்லை.''

''தயவு செய்து என்னை நம்புங்கள் டாக்டர்,'' என்றாள் மேரி. அவள் குரல் தழுதழுத்தது. ''அங்கே ஒரு வேலையைப் பாதியில் விட்டுவிட்டு வந்துவிட்டேன். முடித்துவிட்டு வந்தேனானால் பிறகு நான் சுதந்திரமானவள். நாளை மறுநாள் நான் திரும்பி வந்து விடுவேன்.''

''சுத்தக் கிறுக்குத்தனம்!''

''இல்லை டாக்டர்,''

மென்மையான ஆனால் உறுதியான குரல் அவரை நிமிர்ந்து உட்கார வைத்தது. இருக்கையில் சாய்ந்துகொண்டு அவளை நோக்கினார்.

''நல்லது. அங்கே என்ன காரியம் என்பது எனக்கு விளங்கவில்லை. ஆனால் என்ன செய்கிறோம் என்பதை உணர்ந்துதான் நீ செய்கிறாய் என்று நினைக்கிறேன். அங்கே போய் ஒன்றும்...''

''ஜம்மென்று போய் வரேன். என்னை நம்புங்கள் டாக்டர்.''

''நிச்சயமாய் நம்புகிறேன், டார்லிங். உன்னை நம்பவில்லை என்று அர்த்தமில்லை. எதற்காகவும் உன் மனம் கஷ்டப்படக் கூடாது. அவ்வளவுதான். வந்து... உன்னை ஒரு கேள்வி கேட்கிறேன். தப்பாக நினைக்க மாட்டாயே?''

கடவுளே! என்ன கேட்கப் போகிறார்? அவளுக்கு ஏனோ பதைப்பு ஏற்பட்டது. ஆபரேஷனுக்குக் காத்துக்கொண்டு படுத்திருப்பவள் போல், ''கேளுங்களேன்,'' என்றாள் மெல்லிய குரலில்.

(தொடரும்)



## கமலிடம் ஒரு ஆச்சரியம்!

(58'ம் பக்கம் பார்க்க)

'மைக்கேல்
மதன காமராஜன்'
படத்தில்
கமலஹாசன்—ஊர்வசி

# என்னுடைய காதலை உதறி எறியப் போகிறேன்



52

என்ன கேள்வி கேட்கப் போகிறாரோ என்று திகைத்தவாறு டாக்டர் பீட்டரின் முகத்தையே பார்த்தாள் மேரி.

''மைக்கேல் தற்சமயம் இந்த ஊரில்தான் இருக்கிறார் என்பது உனக்குத் தெரியுமா, மேரி?'' என்றார் அவர்.

''தெரியும்.'' அவள் குரலில் விசித்திரமான அமைதி நிரம்பியிருந்தது.

''அவரைப் பார்த்தாயா?''

''பார்த்தேன். என் புகைப்படக் கண்காட்சி வைத்திருக்கும் கலைக் கூடத்துக்கு வந்திருந்தார். அவர்கள் கட்டிக் கொண்டிருக்கும் மருத்துவ மையத்தில் என்னுடைய புகைப்படங்களை வைக்க வேண்டுமாம். கேட்டார். ஆனால்—

## காதல் மேல் ஆணை

மூலம்: டானியேல் ஸ்டீல் தமிழில்: ரா.கி.ரங்கராஜன்

நான் கொடுப்பதற்கில்லை என்று சொல்லிவிட்டேன்.''

''நீ யாரென்று அவர் கண்டு பிடித்தாரா?''

''இல்லை.''

''நீ ஏன் சொல்லவில்லை?''

மைக்கேலின் அம்மாவுடன் தான் செய்து கொண்ட ஒப்பந்தத்தைப் பற்றிச் சொல்ல இதுதான் சரியான தருணம் என்று அவளுக்குத் தோன்றியது. இதுவரை அதைச் சொல்லவில்லை. மரியமும் அந்த விஷயத்தைச் சொல்லாமலேதான் அவளுடைய சிகிச்சைக்கு ஏற்பாடுகள் செய்திருந்தாள். மைக்கேலுக்கும் அவளுக்கும் காதல் ஏற்பட்டு முறிந்திருக்கிறது என்பது வரையில் தான் டாக்டர் பீட்டருக்குத் தெரியும்.

ஆனால் இனிமேல் சொல்லி என்ன பிரயோசனம்? காலம் கடந்தாகிவிட்டது.

''இல்லை டாக்டர். அவரிடம் சொல்வதாலோ சொல்லாமல் இருப்பதாலோ எந்தப் பயனும் ஏற்படப் போவதில்லை. எல்லாம் பழைய கதை. முடிந்துவிட்டது.''

''நிச்சயமாய்த்தான் சொல்கிறாயா?''

''ஆமாம், டாக்டர். அதற்காகத்தான் நான் பாஸ்டனுக்குப் போகிறேன்.''

''சரி, சந்தோஷம்,'' என்றார் பீட்டர். ஆனால் அப்படியும்கூட ஒரு வினாடி அவர் கண்களில் கவலை குடியேறியது. ''ஏன் மேரி, மைக்கேலைப் பார்ப்பதற்குத்தான் பாஸ்டனுக்குப் போகிறாயா?'' என்றார். அப்படி இருக்க முடியாது என்று அவருக்குத் தெரிந்திருந்தது. ஏனெனில் மறுநாள் காலை அவர் இந்த ஊரிலேயே மைக்கேலைச் சந்திப்பதாக ஏற்பாடு.

மேரி உறுதியாகத் தலையசைத்து மறுத்தாள். ''இல்லை, டாக்டர். நீங்கள் நினைக்கிற மாதிரி இல்லை. இது என் கடந்த காலத்தைப் பொறுத்த விஷயம். அதுவும் என் ஒருத்திக்கு மட்டுமே சம்பந்தப்பட்ட விஷயம். இதற்கு மேல் நான் எதுவும் சொல்ல விரும்பவில்லை.''

''சரி, மேரி. உன் உணர்ச்சிகளை நான் மதிக்கிறேன்.''

''தாங்க்யூ!''

மென்மையாக அவளை முத்தமிட்டுவிட்டு டாக்டர் புறப்பட்டார்.

விமானத்தைப் பிடித்து மேரி பாஸ்டனை அடைந்த போது, அந்த ஊர் நேரப்படி மணி இரவு ஒன்பது ஆகியிருந்தது.

படுத்துக் கொண்ட போது, ஒரு புனிதமான காரியத்தை நிறைவேற்றப் போகிற மாதிரி அவள் மனம் தூய்மையாக இருந்தது. ஊரைச் சுற்றவோ யாரையும் பார்க்கவோ, எங்கேயும் போகவோ அவளுக்கு விருப்பமில்லை.

அசலாக இந்த ஊரில் தங்கியிருக்கிற மாதிரியே இல்லை. எல்லாம் கனவு போல இருந்தது. இரண்டு வருடமாக நெஞ்சுக்குள் புதைந்திருக்கிற கனவு.

ஒரே ஒரு முறை அந்தக்

(தொடர்ச்சி 54'ம் பக்கம்)



''ஏன் டாக்டர், நான் மூணு மாசமா பெட்ல இருக்கேன். ட்ரீட்மெண்ட் எப்ப ஆரம்பிப்பீங்க?''

''அட ராமா! நான் கிளினிக்கை போர்டிங் அண்ட் லாட்ஜிங்கா மாத்தியாச்சே, தெரியாதா?''

—எம். பூங்கோதை.

கனவை மீண்டுமொரு முறை வாழ்ந்து பார்த்துவிட வேண்டும்.

''டாக்டர் பீட்டர்,'' என்று சொன்னபடியே உள்ளே வந்தாள் அவருடைய நர்ஸ்.

''என்னம்மா?'' என்றார் சற்றே சலிப்புடன்.

''மைக்கேல் என்று ஒருவர் வந்திருக்கிறார். உங்களைப் பார்க்க வருவதாகச் சொல்லியிருந்தாராமே? அவருடன் கூட இன்னும் மூன்று பேர் வந்திருக்கிறார்கள்,'' என்றாள் நர்ஸ்.

''வரச் சொல்,'' என்றவர், 'கடவுளே, இப்ப இது வேறயா!' என்று நினைத்துக் கொண்டார். பரவாயில்லை. இந்தப் பையன் எப்படி என்று பார்க்கலாம். சின்னப் பையன். 'எனக்கு மகன் இருந்தால் இவன் வயதுதான் இருப்பான்,' என்று அவர் எண்ணம் ஓடியது. அப்படி நினைக்கையில் ஏனோ அவருக்குச் சங்கடமாயிருந்தது. நம் வயதை மேரியும் எண்ணிப் பார்த்திருப்பாளோ?

மைக்கேலும், அவனுடன் வேலை பார்க்கும் இன்னும் மூவரும் உள்ளே வந்தார்கள். கை குலுக்கி விட்டு உட்கார்ந்தார்கள். புதிய மருத்துவ மையத்துக்கு அவர் ஒத்துழைப்புக் கொடுத்து வெற்றிகரமாக நடைபெற உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். ஏற்கனவே புகழ் பெற்ற டாக்டர்கள் பதினைந்து பேர் அவர்களுடைய குழுவில் இருக்கிறார்களாம். கட்டிடங்களும் அதற்கான இடமும் பிரமாதமாக உருவாகியுள்ளன என்று தெரிவித்தார்கள்.

அவர்களுடைய வேண்டுகோளை ஏற்றுக் கொள்வதில் டாக்டர் பீட்டருக்கு எந்தக் கஷ்டமும் இருக்கவில்லை. புதிய பொறுப்புக்களை ஒப்புக் கொள்ளச் சம்மதித்தார். தன்னுடைய மற்றச் சகாக்கள் சிலரிடமும் அதுபற்றிப் பேசுவதாகச் சொன்னார்.

அவருடைய கண்கள் மைக்கேலின் மீதே நிலைத்திருந்தன. அவனிடம் அவருக்கு ஒருவகை ஈடுபாடு ஏற்பட்டது.

இவன்தான் மைக்கேலா! இளமையாயும் அழகாயும் இருக்கிறான். தன்னம்பிக்கையுடன் பேசுகிறான்.

பல விஷயங்களில் மேரிக்கும் இவனுக்கும் ஒற்றுமை இருப்பதைக் கண்டார் டாக்டர். அவளைப் போலவே இவனிடமும் தெம்பு, மன உறுதி, ஏன், நகைச்சுவை உணர்வு கூட இருக்கிறது.

இருவருக்குமுள்ள ஒற்றுமைகளை நினைக்கையில் அவருக்கு ஏனோ மனசில் சுமை ஏற்பட்டது. வெகு நேரம் வரை அமைதியாக ஏதும் பேசாமல் அவனையே கவனித்தபடி இருந்தார்.



மற்றவர்கள் பேச்சில் அவர் கவனம் செல்லவில்லை. ரொம்ப நாளாக எதிர்நோக்காமல் தவிர்த்துக் கொண்டிருந்த யதார்த்த உண்மையை இப்போது அவர் மனம் புரிந்து கொண்டது. மேரி இன்று காலையில் பாஸ்டனுக்குச் சென்றது எதற்காக என்று யோசனை செய்தார். கடந்த காலத்தின் கடைசி நினைவுகளை அழித்து ஒழிப்பதற்காக என்று சொன்னாளே, அது உண்மைதானா? மாறாக, அந்த நினைவுகளைப் புதுப்பித்துக் கொள்வதற்காகப் போயிருப்பாளோ?

மேரியின் விஷயத்தில் குறுக்கிடுவதற்கு நமக்கு என்ன உரிமை இருக்கிறது என்று முதல் தடவையாக எண்ணினார். இப்போது மைக்கேலைப் பார்க்கப் பார்க்க, மேரியின் இன்னொரு பக்கத்தை — இதுவரை பார்த்து அறிந்திராத பக்கத்தை—பார்ப்பது போலிருந்தது. இந்த இளைஞன் மேரியின் வாழ்க்கையில் பிரிக்க முடியாத ஒரு பகுதி. இந்தப் பகுதியைப் பற்றி அவருக்கு எதுவும் தெரியாது. தெரிந்துகொள்ள விரும்பவில்லை.

அவள் மேரியாக இருப்பதைத்தான் இதுவரை அவர் விரும்பி வந்திருக்கிறார். நான்ஸி என்ற பெண்ணாக அவளை நினைத்துப் பார்க்கவேயில்லை. அவளைப் புத்தம் புதியவளாக, தன் கையால் படைக்கப்பட்ட புதுப் பெண்ணாக நினைத்து வந்திருக்கிறார். ஆனால் அவளுக்குள் வேறொருத்தியும் இருந்து வந்திருக்கிறாள். என்று இப்போது புரிகிறது.

புதிரின் பல பகுதிகள் ஒன்றோடொன்று பொருந்தி முழு வடிவம் உருவெடுத்தன.

அவருக்குள் ஒரு விரக்தியும் இழப்பு உணர்வும் ஏற்பட்டன. தோற்றுப் போய்க் கொண்டிருக்கும் ஒரு போராட்டத்தை நாம் நடத்தி வந்திருக்கிறோம் என்று தோன்றியது.

தன்னுடைய கடந்த காலம் அவருக்கு நினைவு வந்தது. அவர் உயிருக்கு உயிராய் நேசித்த மனைவி லிவியா இறந்து போய் வெகு காலமாகிறது. மேரியிடம் அந்த மனைவியைக் கண்டார். தான் படைத்த பெண் என்பதால் அவளிடம் இப்படி உரிமை எடுத்துக் கொண்டது தப்பு.... வேறெந்தப் பேஷண்ட்டிடமும் அவருக்கு இப்படிப்பட்ட எண்ணம் தோன்றியதில்லை. மேரிக்கு வேறு யாருமே இல்லாமல், நம்மையே சார்ந்திருந்ததால் நாம் அதிகப்படி உரிமை எடுத்துக் கொண்டு விட்டோம்...

இப்போது மைக்கேலைப் பார்க்கையில், மேரியின் வாழ்க்கையில் தான் ஒரு தகப்பனாராகத்தான் இருக்க முடியும் என்பதை உணர்ந்தார். அதை மேரி இன்னும் உணரவில்லை. ஆனால் என்றாவது ஒரு நாள் உணர்ந்து கொள்வாள்...

கொஞ்ச நேரத்தில் பேச்சு வார்த்தை முடிந்தது. கை குலுக்கிவிட்டு மைக்கேலின் தோழர்கள் முன்னறைக்குச் சென்று அவனுக்

காகக் காத்திருந்தார்கள்.

டாக்டர் பீட்டரும் மைக்கேலும் ஓர் மரியாதைக்காகச் சில வாரத்தைகள் பரிமாறிக் கொண்டார்கள்.

திடீரென்று மைக்கேலின் விழிகள் குத்திட்டு நின்றன.

டாக்டரின் முதுகுக்குப் பின்னால்.... சுவரில் மாட்டி யிருப்பது....

அந்த ஓவியம்! இரண்டு வருடத்துக்கு முன்னால் நான்ஸி வரைந்து கொண்டிருந்த ஓவியமல்லவா அது! அவனுக்குத் திருமணப் பரிசாகத் தருவதற்காக வரைந்து கொண்டிருந்த ஓவியம்!

நான்ஸி இறந்ததும் அவள் அறையிலிருந்து அந்த நர்ஸ்கள் பல பொருள்களைத் திருடிப் போனார்களே, அப்போது இந்த ஓவியத்தையும் திருடியிருக்க வேண்டும்.

இப்போது இந்த டாக்டரின் வரவேற்பறைக்கு வந்திருப்பது அதே ஓவியம்தான். நிச்சயம்.

ஆனால் இரண்டு வருடத்துக்கு முன்னால் அவள் இந்த ஓவியத்தைப் பூர்த்தி செய்யாமல் விட்டிருந்தாளே? இப்போது பூர்த்தியாயிருக்கிறது. எப்படி?

மந்திரத்துக்குக் கட்டுப் பட்டவன் போல் அவன் அடிமேலடி வைத்து அந்தப் படத்தை நோக்கி நடந்தான்.

படத்தின் அடியில் என்ன கையெழுத்து இருக்கிறது என்பதைப் பார்க்கும் ஆவலுடன் இன்னும் அருகில் சென்றான்.

நிச்சயமாக நான்ஸியின் கையெழுத்துதான் இருக்குமென்று நம்பினான். ஆனால்... ஆனால்.... இதென்ன?

மேரி என்று கையெழுத்துப் போட்டிருக்கிறதே?

'தெய்வமே! ஐயோ தெய்வமே! என்ன இதெல்லாம்? எப்படி... எப்படி...'

இந்த வார்த்தைகளையே திரும்பத் திரும்ப அவன் சொல்லிக் கொண்டிருந்தான்.

டாக்டர் பீட்டர் அவனையே பார்த்துக் கொண்டு நின்றார்.

(தொடரும்)



# கமலிடம் ஒரு ஆச்சரியம்!

அந்த நடுப்பக்கப் படத்தை அதிலுள்ள இனிமையான பாவத்துக்காக நான் தேர்ந்தெடுத்தேன்.

கமலிடம் எப்போதும் எனக்கு ஓர் ஆச்சர்யம்— எப்படி இவ்வளவு நன்றாய்ப் பாடுகிறார் என்று.

ஏனெனில், தீவிரமாய்த் தேகப் பயிற்சிகள் செய்து, உடம்பைக் கட்டு மஸ்தாக வைத்திருக்கும் ஆணழகர்களுக்குக் குரல் கட்டையாகிவிடும். சங்கதிகள் பேசாது. ஆனால் கமல் உடம்பையும் இப்படி வைத்துக்கொண்டு நன்றாய்ப் பாடவும் முடிகிறதே, எப்படி? அதுதான் ஆச்சர்யம். அதுவும் 'ராஜா கைய வெச்சால்' பாட்டை அவ்வளவு மேல்சஸ்தாயியில் பிசிறில்லாமல் எத்தனை பிரமாதமாகப் பாடியிருக்கிறார்! என்னால் நம்பவே முடியவில்லை.

இன்னொரு விஷயம்: தன் கதாபாத்திரத்தின் முழு ஆழத்தையும் கமலினால் கொண்டுவர முடிகிறது. காரணம், பாத்திரத்தின் தன்மையில் அவ்வளவு involvement அவருக்கு இருக்கிறது.

—யே.

# காதல் மேல் ஆணை

53

நான்ஸி வரைந்த அந்த ஓவியத்தையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான் மைக்கேல். அவன் நெஞ்சு அலறியது.

''எப்படி..... எப்படி இது இங்கே வந்தது? கடவுளே, கடவுளே! ஏன் யாருமே எனக்கு எதுவும் சொல்லவில்லை? ஏன் சொல்லவில்லை?'

ஆனால் அவனுக்கு இப்போது புரிந்து விட்டது. எல்லோரும் பொய் சொல்லியிருக்கிறார்கள். நான்ஸி உயிருடன் இருக்கிறாள். அவள் முகமும் உடலும் தோற்றத்தில் மாறியிருக்கின்றன. ஆனால் அவள் இறக்கவில்லை. உயிருடன்தான் இருக்கிறாள். அவள்தான் மேரி! நான்ஸிதான் மேரி!

அவள் என்னிடம் வெறுப்புக் காட்டுவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

ஏன் எனக்கு இது தோன்றாமல் போயிற்று? ஆனால் ஏதோ ஓர் உறுத்தல் ஏற்பட்டது இதனால்தான் போலிருக்கிறது. அந்தப் புகைப் படங்களைப் பார்த்தபோது என் மனத்தைப் பிசைந்ததே, அதற்குக் காரணம் இப்போதல்லவா புரிகிறது?

டாக்டர் பீட்டரைத் திரும்பிப் பார்த்தான். அவன் கண் முனைகளில் கண்ணீர் தளும்பி நின்றது.

டாக்டர் பீட்டருக்குப் புரிந்தது. வருத்தத்துடன் அவனைப் பார்த்தார், என்ன செய்வது, என்ன சொல்வது என்று தெரியாமல் அவருக்குச் சிறிது பயம்கூட ஏற்பட்டது.

''விடுங்கள், மிஸ்டர் மைக்கேல்! அவளைப் பொறுத்த வரையில் எல்லாம் முடிந்துவிட்டது. மேலும் அவள் பட்ட துன்பமெல்லாம் போதும்,' என்றார். அப்படிச் சொல்லும்போது, தான் சொல்வதெல்லாம் போலியான சொற்கள் என்று அவர் மனத்துக்குத் தோன்றியது. இதோ எதிரில் நிற்கும் மைக்கேலைப் பார்க்கும்போது, மேரியை இவன் ஒரு நாளும் விடப் போவதில்லை என்று புரிந்தது. அவள் இப்போது எங்கே இருக்கிறாள் என்பதைச் சொல்ல வேண்டும் போல் அவர் உள்ளத்தின் ஆழத்தில் ஓர் எண்ணம் தோன்றியது.

மைக்கேல் மீண்டும் அந்த ஓவியத்தை நோக்கினான். எல்லையற்ற வியப்பு அவன் கண்களில் பளபளத்தது. ''டாக்டர், என்னிடம் பொய் சொல்லியிருக்கிறார்கள், டாக்டர்! உங்களுக்கு அது தெரியுமா? என்னிடம் பொய் சொல்லியிருக்கிறார்கள். நான்ஸி இறந்து விட்டாள் என்று பொய் சொல்லியிருக்கிறார்கள்!'' அவன் கன்னத்தில் கண்ணீர் வழிந்தது. ''இந்த இரண்டு வருஷமாக நான் நடைப் பிணமாக நடமாடி வந்திருக்கிறேன், டாக்டர்! [illegible]திர மனிதனாக வேலை பார்த்து வந்திருக்கிறேன். அவள் போனதற்குப்

தமிழில்: ரா. கி. ரங்கராஜன் மூலம்: டேனியல் ஸ்டீல்

பதில் நான் போயிருக்கக் கூடாதா என்று எவ்வளவு முறை எண்ணி யிருக்கிறேன், தெரியுமா? ஆனால் அவள்...' அவள்.....'' அவனால் பேச முடியவில்லை. தொண்டை அடைத்தது. டாக்டரைப் பார்க்கா மல் தலையைத் தாழ்த்திக் கொண் டான். ''டாக்டர்..... இரண்டு நாள் முன்பு அவளைப் பார்த்தேன். ஆனால் அவள்தான் என்று எனக்குத் தெரியவில்லை. அதுவே அவ ளைக் கொன்றிருக்கும், டாக் டர். அதனால்தான் அவள் என்னை வெறுக்கிறாள்! இல்லையா, டாக்டர், என்னை அவள் வெறுக்கிறாள்தானே?''

அந்த ஓவியத்தைப் பார்த்த படியே பொத்தென்று ஒரு நாற்காலி யில் விழுந்தான் அவன்.

''இல்லை, அவள் உங்களை வெறுக்கவில்லை,'' என்று மென்மையாகச் சொன்னார் டாக்டர் பீட்டர். ''ஆனால் நடந் ததை எல்லாம் மறந்துவிட்டுப் புது வாழ்வு வாழ வேண்டுமென்று நினைக்கிறாள். அப்படி வாழ அவளுக்கு உரிமை உண்டு,'' என்றார்.

'எனக்கும் அந்த உரிமை உண்டு,' என்று சொல்ல நினைத்தார். சொல்ல மனம் வரவில்லை.

ஆனால் அவருடைய உள்ளத் தில் ஓடும் எண்ணங்களை அவன் புரிந்து கொண்டான். மேரியின் புகைப்படக் கண்காட்சிகளை நடத்தி வரும் பிரமுகர் ஒருவர் இருக்கிறார் என்றும், அவர் ஒரு பிளாஸ்டிக் சர்ஜன் என்றும் கேள்விப் பட்டது சட்டென்று இப்போது ஞாபகம் வந்தது அவனுக்கு. அந்த நினைவு அவன் முகத்தில் அறைந்து அவனை நிமிர்ந்து உட்கார வைத் தது. சென்ற இரண்டு வருடமாய்த் தவித்த தவிப்பு! பட்ட வேதனை! அவன் உள்ளத்தில் சினம் மூண்டது!

குபுக்கென்று எழுந்தவன்,



டாக்டரின் கோட்டுக் காலர்களைப் பிடித்து உலுக்கினான். ''என்ன சொன்னீர்கள்? நடந்ததையெல்லாம் மறந்துவிட வேண்டுமென்று அவள் விரும்புகிறாளா? அதைச் சொல்ல உங்களுக்கு என்ன உரிமை? உங்களுக்கு எப்படித் தெரியும்? நாங்கள் இருவரும் வாழ்ந்த வாழ்க்கையைப் பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்? எனக்கு அவளும் அவளுக்கு நானும் எப்படி உயிராக இருந்தோமென்று உங்களுக்கு எப்படித் தெரியும்? இருக்கட்டும். அவளைச் சந்தித்து ஒரு வார்த்தைகூடப் பேசாமல் நான் போய்விட வேண்டுமென்று விரும்புகிறீர்கள்? அப்படித்தானே? ஆனால் ஒன்று தெரியுமா உங்களுக்கு? நீங்கள் என் உயிரோடு விளையாடுகிறீர்கள், மிஸ்டர்! ஏற்கெனவே பல பேர் விளையாடியாகி விட்டது. நீங்களும் விளையாடி விட்டுப் போங்கள்! ஆனால் நடந்ததை மறந்துவிட்டாள் என்று நீங்கள் சொல்வதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். அதை அவளே தன் வாயால் சொல்லட்டும்.''

மைக்கேலின் கண்களை நேருக்கு நேராய்ப் பார்த்து, அமைதியான குரலில் சொன்னார் டாக்டர் பீட்டர். ''தன்னைத் தொந்தரவு செய்ய வேண்டாமென்றுதான் அவளே உங்களிடம் சொல்லி விட்டாளே?''

அவருடைய கோட்டுக் காலரை விட்டுவிட்டுப் பின்வாங்கினான் மைக்கேல். குழப்பமும் கோபமும் நம்பிக்கையும் போட்டியிட்டுக் கொண்டு அவன் உள்ளத்தை ஆட்டுவிப்பது அவன் முகத்தில் பிரதிபலித்தது. இருந்தாலும் கூட, கடந்த இரண்டு ஆண்டுகளில் முதல் முறையாக அவன் முகத்தில் ஒரு ஜீவன் பிறந்திருந்தது. ''நீங்கள் தப்பாய்ச் சொல்கிறீர்கள், டாக்டர். தன்னைத் தொந்தரவு செய்யாமல்







இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 106'ம் பக்கம்



தமிழ் எழுதப் படிக்கத் தெரியாத இவர் ஒரு கன்னடத்துப் பைங்கிளி. ஆனால் இந்தக் கிளி, தமிழ், தெலுங்கு, கன்னடம், இந்தி மௌனம் (பேசும் படம்) என்ற பஞ்ச வர்ணங்களையும் இயக்கிப் பறந்து கொண்டிருக்கிறது.

அவர்தான் சிங்கிதம் சீனிவாஸ ராவ்.

காமெடியில் கண்ணியத்தைக் கண்டிப்பாக வலியுறுத்துவார். மிகவும் நேர்மையான நகைச்சுவையை விரும்புகிறவர்.

'மைக்கேல் மதன காமராஜன்' படத்தில் மகா பாரத பீமன் (பிரவீண் குமார்), மதன் கமலுக்கு அசிஸ்டெண்டாக வருகிறார். சாதாரணமாக நகைச்சுவை எழுதும் எனக்கு, 'பீமன்' கிடைத்தால்? அவரது உருவத்தை நையாண்டி செய்து ஓரிரு நகைச்சுவைக் காட்சிகள் எழுதினேன். அதைப் படித்த சிங்கிதம் சீனிவாச ராவ், நேர்மையான நகைச்சுவையை விரும்புகிறவர் ஆதலால், நான் வசனம் எழுதிய அக் காட்சிகளை ஒதுக்கி விட்டு, மறுபடியும் வேறு எழுதச் சொன்னார். உருவத்தைக் கிண்டல் பண்ணும் காமெடி வேண்டாம் என்பதே அவர் நோக்கம்.

—கிரேஸி

---

விட்டு விடும்படி சொன்னவள் மேரி. நான்ஸி அல்ல. இந்த இரண்டு வருடத்தில் நான்ஸி ஒருவார்த்தை கூட என்னிடம் பேசவில்லை. ஒரு வார்த்தையல்ல ஏகப்பட்ட விளக்கம் அவள் சொல்லியாக வேண்டும். ஏன் அவள் என்னை வந்து பார்க்க வில்லை? ஏன் எனக்குக் கடிதம் எழுதவில்லை? தான் உயிரோடு இருப்பதை ஏன் எனக்குத் தெரிவிக்காமலே இருந்தாள்? அவள் இறந்து விட்டதாக ஏன் எல்லோரும் என்னிடம் சொன்னார்கள்? இதெல்லாம் அவளே செய்ததா? அல்லது வேறு யாரேனும் செய்தீர்களா? இன்னும் ஒன்று உங்களைக் கேட்க வேண்டும்....'' அடுத்த கேள்வியைக் கேட்கவே அவனுக்கு வெறுப்பாயிருந்தது. ஏனெனில் அதற்கு என்ன பதில் வரும் என்று அவனுக்குத் தெரிந்தேயிருந்தது. இருந்தும் கேட்டான். ''அவளுடைய சிகிச்சைக்குப் பணம் கொடுத்தவர் யார்?''

அவன் கண்கள் டாக்டரின் முகத்தை விட்டு ஒரு வினாடியும் அகலவில்லை.

''உங்களுடைய சில கேள்விகளுக்கு எனக்குப் பதில் தெரியாது, மிஸ்டர் மைக்கேல்.''

''அதாவது, வேறு சில கேள்விகளுக்குப் பதில் தெரியும் என்கிறீர்கள். இல்லையா, டாக்டர்? அதையாவது சொல்லுங்கள்!''

''அதைச் சொல்ல எனக்கு உரிமை இல்லை,'' என்று அவர் சொன்னவுடன், மீண்டும் அவர் மீது பாய்கிற மாதிரி எழுந்தான் மைக்கேல். ''இப்போது எனக்குச் சொல்லப் போகிறீர்களா, இல்லையா?''

அடிக்கிற மாதிரி வந்த அவன் கையைத் தடுத்தார் அவர். ''மேரியின் சிகிச்சை மொத்தத்துக்கும், அவள் வாழ்க்கை நடத்துவதற்கும் பணம் கொடுத்தவர் உங்கள் அம்மா தான்.''

இந்தப் பதிலை முன்பே ஊகித்திருந்தான் மைக்கேல். ஆகவே பெரும் அதிர்ச்சி ஏற்படவில்லை.

ஒவ்வொரு விளங்காத புதிரும் இப்போது அவனுக்கு விளங்கியது.

அம்மா செய்தது பைத்தியக்காரத்தனம். மடத்தனம். மகனுக்கு நன்மை செய்கிறோம் என்று நினைத்திருக்கிறாள்.

ஆனால் கடைசியில் நான்ஸி இருக்குமிடத்தையாவது காட்டினாளே!

டாக்டரை நோக்கினான். மற்ற எல்லாவற்றையும் புரிந்து கொள்ள வேண்டுமென்று துடிப்பு ஏற்பட்டது. ''சரி, உங்கள் விஷயம் என்ன? உங்களுக்கும் நான்ஸிக்கும் என்ன உறவு?''

''அது உங்களுக்குச் சம்பந்த மில்லாத விஷயம் என்று நினைக்கி றேன்.''

''இதோ பாருங்கள்.....'' என்று அச்சுறுத்தலாக அவன் அவரை மீண்டும் நெருங்கினான்.

தனக்கு இனிமேல் தோல்வி தான் என்று டாக்டருக்குத் தெரிந் தது. ''அனாவசியப் பேச் செல்லாம் நமக்கெதற்கு, மைக்கேல்? உங்கள் கேள்விகளுக்கெல்லாம் பதில் மேரியிடம் இருக்கிறது. என்ன விரும்புகிறாள், யாரை விரும்பு கிறாள் என்பதையெல்லாம் தீர்மானிக்க வேண்டியவள் அவள் தான். உங்களை அவள் உதறலாம். என்னை உதறலாம். ஆனால் ஒன்று. இந்த இரண்டு வருடமாய் நீங்கள் அவளுடன் எந்தத் தொடர்பும் கொள்ளவில்லை. அவளும் உங் களுடன் தொடர்பு கொள்ள வில்லை. என்னைப் பொறுத்த மட்டில், அவளைப் போல இரண்டு மடங்கு வயதானவன் நான். அத்து டன் எனக்குத் தாழ்வு மனப்பான்மை உண்டு.....'' தன் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டார் அவர். சிந்தனை நிறைந்த ஒரு புன்னகை அவர் முகத்தில் தவழ்ந்தது. ''எனக்கு என்ன தோன்றுகிறதென்றால் நம் இரண்டு பேரையுமே அவள் தலைமுழுகி விடலாம். அதுதான் அவளுக்கு நல்லது.''

''இருக்கலாம். ஆனால் அதை அவள் வாயிலிருந்தே நான் கேட்க வேண்டும்.'' கைக் கடியாரத்தைப் பார்த்துக் கொண் டான். ''இப்போதே அவளுடைய வீட்டுக்குப் போகிறேன்.''

''போய்ப் பிரயோசன மில்லை,'' என்றார் டாக்டர். தாடியை நீவிக் கொண்டு, அவனை நோக்கினார்.

'பாவம் இந்தப் பையன்! அதிர்ஷ்டம் இருந்தால் பிழைத்துக் கொள்ளட்டும்' என்று எண்ணிக் கொண்டார். ''இன்று காலை, நீங்கள் வருவதற்குச் சற்று முன்னர் தான் அவள் போன் செய்தாள்— விமான நிலையத்திலிருந்து.''

மைக்கேல் மறுபடி அதிர்ச்சிக் குள்ளானான். ''விமான நிலையத்தி லிருந்தா! எங்கே போகிறாள்?''

ஒரு நீண்ட நிமிடத்துக்குத் தயக்கமாக அவனைப் பார்த்தவாறு மௌனமாக இருந்தார் டாக்டர் பீட்டர். இவனிடம் சொல்ல வேண்டிய கட்டாயம் ஒன்று மில்லை..... சொல்ல வேண்டிய தில்லை....

ஆனால் அவரால் பொய் சொல்ல முடியவில்லை.

''பாஸ்டனுக்குப் போயிருக் கிறாள்,'' என்றார்.

மைக்கேல் எதுவும் பேசாமல் அவரைப் பார்த்தான்.

திடீரென்று அவன் கண்களில் ஒரு மின்னல் பூத்தது. வாசலை நோக்கிப் பாய்ந்தான். ஒரு கணம் நின்றான். டாக்டரைப் பார்த்தான். அவன் முகம் முழுதும் புன்னகை மலர்ந்து பரவியிருந்தது.

''தாங்க்யூ டாக்டர்! [illegible] நன்றி!'' என்று சொல்லிவிட்டுப் புயலென வெளியேறினான்.

(தொடரும்)



ஆறு வித்தியாசங்கள் விடை:

1. அரிவாள்மனை
2. சாய்வு நாற்காலி
3. தரை
4. எலி வால்
5. புடவை பார்டர்
6. தலையணை

# காதல் டே[illegible] ஆணை

## தமிழில்: ரா கி. ரங்கராஜன்

விடிகாலை
யிலேயே எழுந்து
கொண்டு விட்
டாள் அவள்.

முழு விழிப்புடன்,
முழு ஜீவனுடன்.

பல வருடங்
களுக்குப் பிறகு
இன்று புத்துணர்வு
ஏற்பட்டிருப்ப
தாகத் தோன்றி
யது.

இனி ஏறத்தாழச்
சுதந்திரம்தான்.

இன்னும் சில மணி நேரங்
களில் விடுதலை கிடைத்து
விடும். அன்றொரு நாள்
செய்து கொண்ட குழந்
தைத்தனமான சத்தியம்
இவ்வளவு நாளும் அவளைச்
சிறைப் பிடித்து வைத்திருந்
தது போலவும், இன்று
இதனிடமிருந்து விடுபடுவது
போலவும் உணர்ந்தாள்.
அந்தச் சத்தியத்துக்கு
இத்தனை காலம் இடம்
கொடுத்தது நான்தான்.
நான் அத்றக்குக் கொடுத்த
சக்தியை வைத்து அது
என்னையே ஆட்டிப்
படைக்கிறது.

காலைச் சிற்றுண்டிக்காக
அவள் காத்திருக்கவில்லை.

இரண்டு கப் காப்பி
மட்டுமே சாப்பிட்டாள்.
வாடகைக்குக் கார் அமர்த்

திக் கொண்டாள்
பத்து மணிக்கு-
இன்னும் இரண்டு
மணி நேரத்தில்-
அங்கே இருக்கலாம்
பகலுக்குள் ஒட்ட
லுக்குத் திரும்ப
விடலர்ம். சான்
பிரான்ஸிஸ்கோவுக்கு
உடனே விமானப்
பிடித்து, இரவுக்குள்
போய்ச் சேர்ந்துவிட
லாம்.

ஏன், டாக்டர்
பீட்டரை அவருடைய
அலுவலகத்தில்
சந்திக்கக் கூட நேரம்
இருக்கும். நம்மைப்
பார்த்து ஆச்சரியப்படு
வார். பாவம், நல்ல
மனிதர். என்ன வேலையாக
இப்போது போகிறாய்
என்று குடைந்தெடுக்காமல்
பொறுமையாக இருந்
திருக்கிறார்.

கார் ஓடிக் கொண்
டிருந்த போது அவள்
சிந்தனைகள் டாக்டர்
பீட்டரைப் பற்றியே
ஓடிக் கொண்டிருந்தன.
அவரிடம் நாம் அதிகம்
ஒட்டிப் பழகாமல்
இருந்து வந்திருக்கி
றோம். இனி அப்படி
இருக்கக் கூடாது.
ஒருவேளை அவரிடம்
நமக்கு.... கேள்வியைக்

---

மூலம்: டேனியல் ஸ்டீல்

கேட்கு முன்பே, 'இல்லையில்லை. அவரிடம் நமக்குக் காதல் இருக்கிறது,' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

நகரப் பகுதியை விட்டுக் கிராமப்புறத்தில் ஓடியது கார். வழியில் எந்த இடத்தையும் அவள் கவனிக்கவில்லை. வானம் இன்னும் தெளிவடையாமல் இருட்டினாற் போலவே இருந்தது. மரங்களில் புது இலைகள் முளைக்கவில்லை.

காரிலிருந்து இறங்கிக் கொண்டாள்.

அவள் உடல் விறைத்தாற் போலிருந்தது. ஆனால் களைப்பாக இல்லை. படபடப்பும் பதைபதைப்புமாக இருந்தாள்.

இந்தக் காரியத்தைச் செய்யத் தான் வேண்டும். செய்தேயாக வேண்டும்.

அவள் நின்றிருந்த இடத்திலிருந்து பார்த்த போது அந்த மரம்



சென்ற இரண்டு வருட காலமாக இந்த இடங்கள்கூடப் புதையுண்டு கிடந்தனவா என்ன?

மணி ஒன்பதரை.

அன்று சந்தை நடைபெற்றுக் கொண்டிருந்த இடத்தை அடைந்தாள். அதை அடையாளம் கண்டு கொண்ட போது நெஞ்சை எதுவோ அடைக்கிற மாதிரி இருந்தது.

கடற்கரையை நோக்கிச் செல்லும் ஒரு பழைய சாலையில் காரை ஓட்டச் சொன்னாள். ஓர் இடம் வந்ததும் நிறுத்தச் சொல்லிக்

தெரிந்தது.

எல்லா ரகசியங்களையும் அறிந்தது போல, அவளுடைய காதல் முற்ற முழுக்க அதற்குத் தெரிந்திருப்பது போல, அவள் திரும்பி வருவதற்காகவே காத்துக் கொண்டிருப்பது போல.....

அந்த மரம்.....

ஒரு பழைய சினேகிதனைப் பார்க்கப் போகிறவள் மாதிரி அதை நோக்கி மெல்ல நடந்தாள். இல்லையில்லை, அது என் சினேகிதன் அல்ல. அன்னியமானது. நான்

நேசித்த எல்லாம், எல்லோரும் அன்னியமாகிவிட்ட மாதிரி இதுவும் அன்னியம்....

நான்ஸி என்ற பெண்ணின் கல்லறைக்கு இது இன்னோர் அடையாளம். அவ்வளவுதான்.

மரத்தை நெருங்கியதும் சற்றே நின்றாள். பின்பு, மணல் பரப்பைக் கடந்து அந்தப் பாறையை அடைந்தாள்.

பாறை அப்படியே இருந்தது. அகன்று விடவில்லை. எதுவுமே அகலவில்லை. அகன்றது அவளும் மைக்கேலும்தான்—எதிரெதிரான திசைகளில், வேவ்வேறான உலகங்களுக்கு.

மனத்தில் நினைத்திருப்பதைச் செய்து முடிப்பதற்கான தைரியத்தையும் வலிமையையும் வரவழைத்துக் கொள்ள முயலுகிறாள் போல ரொம்ப நேரம் சும்மாவே நின்றிருந்தாள்.

கடைசியில், பாறையிடம் குனிந்தாள். தள்ளினாள். சில நிமிட முனற்சிக்குப் பின் பாறை இடம் பெயர்ந்தது. உடனே வேகமாக ஒரு குச்சி எடுத்து வந்து அந்த இடத்தைத் தோண்டினாள்—தரின் தேடி வந்ததை வெளியிலெடுப்பதற்காக. ஆனால்—

இல்லை! அங்கே எதுவுமே இல்லை!

அவளுக்கு மூச்சு நின்றது. பாறையை இன்னும் கொஞ்சம் நகர்த்தினாள்.

புதிய பலத்துடன் மறுபடி தோண்டினாள்.

இல்லை.

அந்தப் பவழ மாலை அங்கே இல்லை. யாரோ எடுத்துப்போய் விட்டார்கள்!

பாறையைத் திரும்ப அதன் இடத்தில் வைத்த போது பின்னால் குரல் கேட்டது.

''அது உனக்குக் கிடைக்காது.

**2 பேரை ஏங்குகிறேன்**

எல்லா ஹீரோக்களுடனும் நடிச்சிட்டேன்—ரெண்டே ரெண்டு பேர் தவிர. அவங்க ரஜினியும், பாக்யராஜும் தான். சமீபத்தில ரஜினி கிட்டே நேரேவே பேசிட்டேன். அநேகமா விரைவில் நடிப்பேன்னு நினைக்கிறேன். இந்த இண்டஸ்ட்ரியை விட்டுப் போறதுக்குள்ளே இரண்டு பேரோடவும் நடிச்சுடுவேன்னு நினைக்கிறேன்.

—ரேகா

அது வேறு ஒருத்தருக்குச் சொந்தம். நான் காதலித்தேனே அந்தப் பெண்ணுக்குச் சொந்தம். நான் என்றென்றும் மறக்க முடியாத ஒரு பெண்ணுக்குச் சொந்தம்!''

மைக்கேல்!

அவன் கண்களிலிருந்து கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது.

நேற்று இரவு முதல் அவன் இங்கே காத்திருக்கிறான்.

அவள் இங்கேதான் வருவாள் என்பதை ஊகித்து, ஒரு பிரத்தியேக விமானம் அமர்த்திக் கொண்டு, அவள் வருவதற்கு முன்பே இங்கே வந்துவிட்டான். பிரத்தியேக விமானம் கிடைத்திராவிட்டால் இறக்கை கட்டிக் கொண்டு பறந்து வந்திருப்பான்.

கையை நீட்டினான் மைக்கேல்.

நீட்டிய கையில் அந்தப் பவழ மாலை இருந்தது. பாறைக்கடியிலிருந்து எடுத்ததால் மணல் ஒட்டிக் கொண்டிருந்தது அதன் மீது.

அதைப் பார்த்த போது அவள் கண்களிலும் நீர் நிரம்பியது. ''ஒரு போதும் குட்டை சொல்ல மாட்டேன் என்று அன்றைக்கு நான் சத்தியம் செய்தேன். இன்றுவரை குட்டை சொல்லவில்லை.''

அவன் கண்கள் அவள்

ண்கள் மீதே நிலைத்து நின்றன.

''என்னை நீ தேடவே இல்லையே?'' என்றாள் அவள்.

''நீ இறந்துவிட்டதாக சொல்லிவிட்டார்கள். நீயும்தான் என்னைத் தேட முயற்சி செய்ய இல்லை?''

''எனக்கு... எனக்குச் சிகிச்சையளித்து ஒரு புதுமுகம் கொடுக்கச் சம்மதித்தால் உன்னை நானாக வந்து பார்க்க மாட்டேன் என்று வாக்குக் கொடுத்திருந்தேன். எப்படியும் நீ என்னை, என் இருப்பிடத்தைத் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வந்துவிடுவாய் என்கிற தைரியத்தில் அப்படி வாக்குத் தந்தேன். ஆனால் நீ.... நீ வரவே இல்லை.''

''உன் இருப்பிடம் தெரிந்திருந்தால் ஓடி வந்திருப்பேன். அதிருக்கட்டும். நீ எனக்குச் செய்து கொடுத்த சத்தியம் நினைவிருக்கிறதா?''

அவள் கண்களை மூடிக் கொண்டு சொன்னாள். கள்ளங் கபடமில்லாமல் குழந்தை போலச் சொன்னாள்.

வெகு வெகு நாட்களுக்குப் பிறகு முதல் தடவையாக அது நான்ஸியின் அசல் குரலாகத் தொனித்தது. புதிதாகக் கற்றுக் கொண்டிருந்த சில்க் குரல் அல்ல. அவன் நேசித்த, அவள் காதலித்த பழைய குரல்.

''நாம் இங்கே புதைத்திருக்கும் மணிமாலையை ஒருநாளும் நான் மறக்க மாட்டேன். சத்தியம். உன்னை ஒரு நாளும் பிரிய மாட்டேன் என்று சத்தியம் பண்ணுகிறேன். காதல் மேல் ஆணை....''

''மறக்க மாட்டேன் என்று சொன்னாயே? மறந்தாயே?'' அவன் கண்களிலிருந்து கண்ணீர் மெல்ல மெல்ல வழிந்து கொண்டிருந்தது. டாக்டர் பீட்டரின் நினைவும், இரண்டு வருடங்கள் ஓடிவிட்டன




என்ற எண்ணமும் அவனை வதைத்தன.

அவள் மிகப் பலமாய்த் தலையை அசைத்தாள். ''இல்லை. மறக்கவில்லை. ஆனால் மறக்க வேண்டுமென்று ரொம்ப ரொம்ப முயற்சி செய்தேன்.''

''இனிமேல் மறக்க மாட்டாயே, நான்ஸி. என்னை..... என்னை நீ.....'' அதற்கு மேல் அவனால் பேச முடியவில்லை. அவளை நெருங்கிச் சென்றவன், அவளைத் தன் கைகளுக்குள் இறுக்கி அணைத்துக் கொண்டான். ''நான்ஸி, என் கண்ணே, ஐ லவ் யூ! எப்போதும் காதலித்துக் கொண்டிருக்கிறேன். நீ இறந்து விட்டாயென்று அவர்கள் சொன்னபோது எனக்கு உடனே உயிர் போய்விடாதா என்றிருந்தது. உயிர் போய்விட்டது. ஆமாம், நான்ஸி! நீ இறந்துவிட்டதாகச் சொன்ன அன்றைக்கே நானும் இறந்தாயிற்று!''

நான்ஸி பேசவில்லை. பேச முடியவில்லை. அழுது கொண்டே இருந்தாள். அவனை நினைத்து நினைத்துக் காத்திருந்த எண்ணற்ற நாட்கள், எண்ணற்ற மாதங்கள், எண்ணற்ற வருடங்கள்—அவ்வளவும் அவளுக்கு ஞாபகம் வந்தன.

எப்போ கல்யாணம்? யாரை யாவது காதலிக்கிறீங்களான்னு என்னை நிறையப் பேரு கேட்கறாங்க. நான் 'லவ்' பண்றதுக்கு தடை எதுவும் இல்லை. சில ருடைய வீட்டில மாதிரி அப்பா, அம்மா தொந்தரவு எல்லாம் எனக்கு இல்லை. உண்மை என்னன்னா இதுவரைக்கும் என்னைப் புரிந்து கொண்டு அனுசரணையா நடந்துக்குவார்னு நினைக்கற வரை நான் சந்திக்கவே இல்லை. அதனால 'லவ்' வரவேயில்லை. இன்னிக்கு இல்லை. நாளைக்கு வரலாம். வராமலும் போகலாம். காதல் ஏற்பட்டால் காதல் திருமணம். வராவிட்டால் 'அரேஞ்ச்டு திருமணம்!' அதுகூட மூன்று வருஷம் கழித்துத்தான்.

—ரேகா

அவனைக் கெட்டியாக அணைத்துக் கொண்டாள்—எங்கே தன் பொம்மை தன்னை விட்டுப் போய்விடுமோ என்று பயப்படுகிற குழந்தையைப் போல. மெல்ல மெல்ல அவள் மூச்சு சீரடைந்தது. உதட்டில் புன்னகை பரவியது. ''டார்லிங், நானும் உன்னைக் காதலிக்கிறேன். என்றாவது ஒரு நாள் நீ என்னைத் தேடிக் கொண்டு வந்துவிடுவாய் என்று எனக்குத் தெரியும்.....''

''நான்ஸி—இல்லை —மேரி.... என்ன பெயராக வேண்டுமானாலும் இருந்து தொலையட்டும்!''

கண்ணீர் வழிய வழிய இருவரும் சிரித்தார்கள், குழந்தைகள் மாதிரி.

''அன்பு கூர்ந்து என்னைக் கணவனாகத் தாங்கள் ஏற்றுக் கொண்டு கௌரவிப்பீர்களா அம்மணி? இம்முறை திருட்டுக் கல்யாணமல்ல. மேள தாளத்தோடு பகிரங்கமான, நாகரிகமான கல்யாணம்!'' என்றான் மைக்கேல். சில வாரங்களுக்கு முன்பு சிறப்பாக நடைபெற்ற அம்மாவின் கல்யாணம் அவனுக்கு நினைவு வந்தது. ஏன் அம்மாவை நினைக்கும் போது கோபம் வரவில்லை? ஆச்சரியம் தான். அவள் செய்த காரியத்துக்காக அவள் மீது எத்தனை வெறுப்பு ஏற்பட்டிருக்க வேண்டும்! ஏற்படவில்லையே! மாறாக, அவளை மன்னிக்க அல்லவா தோன்றுகிறது!

காரணம், நான்ஸி கிடைத்து விட்டாள். அவளை அவன் திரும்ப அடைந்துவிட்டான். அது ஒன்று தான் முக்கியம்.

தன் கைகளுக்குள் சிறைப்பட்டிருக்கும் அவளை நோக்கி முறுவலித்தான். தன் திருமணத்தைப் பற்றிய ஏற்பாடுகளில் அவள் சிந்தனை லயித்தது.

ஆனால் அவள் பலமாகத் தலையை அசைத்து அவன் சொன்னதை மறுத்துக் கொண்டிருந்தாள்.

அவன் இதயமே நின்று விடும் போலிருந்தது.

அவள் சொன்னாள்: ''நம் கல்யாணத்துக்காக அவ்வளவு நாள் காத்திருக்க வேண்டுமா, மைக்? மேள தாளம், கூட்டம் இதெல்லாம்.....''

''அதுதானே! எதற்கு அதெல்லாம்? மறுபடியும் காத்திருக்க நான் தயாராயில்லை! என்னால் தாள முடியாது. முன் மாதிரி ஏதாவது நேர்ந்துவிடப் போகிறதே என்று ஒவ்வொரு நிமிடமும் நான் பயப்படுகிறேன். நாம் காத்திருக்க வேண்டாம்......''

அவள் மௌனமாகத் தலையை அசைத்து, அவனை இறுகத் தழுவிக் கொண்டாள்.

அலைகள் கரையில் மோதி மெல்லக் கர்ஜித்தன. கிழக்குத் திசையில் சூரியன் மேகக் கூட்டத்தினின்று வெளிப்பட்டு எட்டிப் பார்த்தான்.

முற்றும்